டாஸ்வெல் - லாங்மீட் எழுதிய

# ஆங்கில அரசியலமைப்பின் வரலாறு - IV

(Taswell-Langmead's English Constitutional History-IV)

(டியூடானியர் வெற்றி முதல் இன்றுவரை)

*பதிப்பாசிரியர் (11ஆம் பதிப்பு)*

தியோடர் எஃப். டி. பிளக்னெட்

*தமிழாக்கம்*

பா. மாணிக்கவேலு




தமிழ் வெளியீட்டுக் கழகம்

தமிழக அரசு

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—175

டாஸ்வெல் - லாங்மீட் எழுதிய

# ஆங்கில அரசியலமைப்பின் வரலாறு-IV

**(Taswell-Langmead's English Constitutional History-IV)**

**(டியூடானியர் வெற்றி முதல் இன்றுவரை)**


பதிப்பாசிரியர் (11ஆம் பதிப்பு)

**தியோடர் எஃப். டி. பிளக்நெட்**

தமிழாக்கம்

**பா. மாணிக்கவேலு,** எம்.ஏ.,

உதவிப் பேராசிரியர்,

வரலாற்றுத்துறை,

அரசினர் கலைக்கல்லூரி, கோவை






தமிழ் வெளியீட்டுக் கழகம்

தமிழக அரசு

First Edition — December 1968

B.T.P. No. 175



Taswell-Langmead's English Constitutional History—IV

THEODORE F. T. PLUCKNETT

*Translation*
P. MANICKAVELU

**Price Rs. 7—00**

This translation of the work "Taswell-Langmead's English Constitutional History" 11th edition by T. F. T. Plucknett is published by arrangement with Messrs. Sweet & Maxwell Limited, 11, New Fetter Lane, London, E.C.-4.

*Printed by*
Giridhar Art Printers,
17 - 19, Badrian Street,
Madras-1.

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வி-தொழில் அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்லமெல்ல மறைந்துவருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழி பெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான **டாஸ்வெல் - லாங்மீட் எழுதிய 'ஆங்கில அரசியலமைப்பின் வரலாறு—IV'** என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 175ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 210 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலு வீற்றிருக்கிறாள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின் உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# பொருளடக்கம்

# 18. பாராளுமன்றம்

**புதுமைப் பாங்கின் போக்கு :** நாட்டின் பொது அமைப்புகள் மெள்ள மெள்ள மாற்றமடைந்து, புதுமைப் பாங்கினைப் பெறுவதற்கான நீண்ட, ஆனால், மெதுவான போக்கின் முதற் படியே 1688, 1689ஆம் ஆண்டு மாரிக்காலத்தில் தோன்றிய புகழ் பெற்ற புரட்சி என்ற கருத்து வேரூன்றியுள்ளது. அந் நாளி லிருந்து, இடைக்கால நினைவுச் சின்னங்களால் சூழப்பெற் றிருந்த ஆங்கிலேயர் மன நிம்மதியற்றிருந்தனர். இந் நிலை முடியாட்சியையே முதலில் பாதித்தது. புரட்சிக்குப் பிறகு, விளக்கங்களில் வேற்றுமைகள் இருந்தபோதிலும், கரோலின் அல்லது எலிசபெத் அரசியார் காலத்தில் இருந்ததைவிட நவீன அமைப்புப் பெற்றது கோனாட்சி என்பது திண்ணம்.

பல துறைகளிலும் வெவ்வேறான நடையில் எச்சரிக்கை யுடனான மாற்றியமைக்கும் இயக்கமானது வளர்ந்துவந்தது. சிறிய அளவில் சட்டமும் இவ்வியக்கத்தின் செல்வாக்கிற்குட் பட்டது. அப்படியும் ஆண்டுக் குறிப்பு நூல்களில் உள்ள பெரு மளவிலான இடைக்கால வழக்குகளின் தொகுப்பினை 1679ஆம் ஆண்டில்தான் இறுதியாக அச்சிட்டனர். ஆயின், மற்றொரு புறத்தில் நாட்டின் சட்ட முறையை நவீனமாக்குவதில் சிறந்த வழியாக அமைந்த நீதி ஒப்புரவுப் பண்பு முறைக்கான அஸ்தி வாரத்தினை, 1673-லிருந்து 1682வரை உயர் முறைமன்ற முதல் வராக இருந்த நாட்டிங்காம் பிரபு நாட்டினார். 1679ஆம் ஆண்டிலேயே தற்செயல் இணைவாக லிண்ட்வுட் எழுதிய 'Provinciale' என்னும் நூலின் கடைசித் தொகுப்பு வெளிவந்தது. பண்டைய அரசியல் வரலாற்றினைத் திருச்சபையும் கைவிட்டது. வரையறை, நீதிநெறி விளக்க இறையியல் வாதத்தில் 1660ஆம் ஆண்டில் ஜெரிமி டெய்லர் (Jeremy Taylor) எழுதிய 'Ductor Dubitantium' என்பதே இறுதி ஆங்கிலக் கட்டுரையாகும்,

எஞ்சியிருந்த சுய ஆட்சிப் பண்பினையும் திருச்சபையாளர் 1664 ஆம் ஆண்டில் இழந்தனர்.[1]

விரிவான செயல்முறைகளினால், பழமையோடு அதிகமாகக் கட்டுண்டு இல்லாத அரசியல் அமைப்புகளில், புதிய செல்வாக்கு விரைவாகப் புகுந்தது இயற்கையே. இடைக்காலத்திலும், அதற்குப்பின் நீண்ட காலமாகவும் நன்கு அறிந்த, மாற்ற முடியாத செயல்முறையானது மாற்றத்தின் மாறாத தடையாக இருந்ததே இதற்குக் காரணம். ஏனெனில், முறையான சட்டத்தினால் அன்றி வேறெதனாலும் இவ்விதச் செயல்முறையை அழிக்கமுடியாது. இங்ஙனம் உறுதியான அமைப்பினைப் பெறாத பிரிவி கவுன்சில் சபையானது விரைவாக வந்த அரசியல் மாற்றங்களை எளிதாக ஏற்றது. வழக்கு வாயிலாகவே பதினெட்டாம் நூற்றாண்டில் காபினெட் சபை உருவெடுத்தது. அதே போன்று அண்மைக் காலத்தில் எழுந்த பல பணித்துறைகள் நன்கு வளர்ச்சி அடைந்ததால், அவைகள் 1784ஆம் ஆண்டில் சட்டத்தின் மூலமாக மாற்றியமைக்க வேண்டிய நிலையில் இருந்தன. ஆயின், மற்றொரு புறத்தில் பாராளுமன்றமும் தல ஆட்சி அமைப்புகளும் அவைகளுடைய கடந்த கால வரலாற்றுடன் மிகுதியாகத் தொடர்பு கொண்டிருந்ததால், தீவிரச் சட்டங்கள் மூலமாகவே மாறுதல் செய்யமுடியும். முக்கியமாக நகர ஆட்சியில் இருந்த குறைபாடுகளின் காரணமாகப் பாராளுமன்றம் கட்டுண்டு கிடந்தது எனினும், வலிமை வாய்ந்த வாழும் அமைப்பு என்னும் வகையில் அது பதினெட்டாம் நூற்றாண்டு முழுவதிலும் உண்மையான அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தது. பல முறை அது தன்னையே சீர்திருத்திக்கொள்ள முயன்றது என்பதைவிட அந் நிலையை விளக்க வேறு சான்று தேவையில்லை.

பாராளுமன்றம் முழுவதற்குமான செய்திகள் பற்றி முதலிலும், தனித்தனியாக இருசபைகள் சம்பந்தமான செய்திகளை அடுத்தபடியாகவும் இவ்வதிகாரத்தில் கவனிப்போம்.

## பாராளுமன்றத்தின் காலவரையறை

புரட்சிக்குப்பின் வந்த காலத்து முக்கியமான சட்டங்களில் பாராளுமன்றத்தின் காலவரையறையும் இடைநிறுத்தமும் பற்றிய செய்திகள் இடம் பெற்றன. அரசரின் ஆணைக்கிணங்கவே பாராளுமன்றம் கூடவேண்டுமென்பதும், அவ்வாறு

அழைக்கப்பெறும்போது மன்னரின் விருப்பம் உள்ளவரையில் தான் அது கூடவேண்டுமென்பதும், அதனைக் கூட்டிய அரசர் இறந்தால் அதன் காரணமாக அது கலைந்துவிடவேண்டுமென் பதும் அரசியல் அமைப்பின் பழைய சட்டக் கோட்பாடு. 1399ஆம் ஆண்டில் இரண்டாம் ரிச்சர்டு மன்னரைப் பதவியி லிருந்து நீக்கிய பாராளுமன்றம், ரிச்சர்டு அரசராக இல்லாது போனதால்[2] கலைந்துவிட்டது என அக்கால அரசியல் சட்ட வல்லுநர் கொண்டனர். ஏறக்குறைய மூன்று நூற்றாண்டு களுக்குப்பின் அரசரின் ஆணையின்பேரில் அழைக்கப்பெறாத தால் இரண்டாம் சார்லஸ் மன்னரின் ஆட்சியை மீட்ட பிரத்தி யேகப் பாராளுமன்றத்தை ஐயக்கண் கொண்டே நோக்கினர். அப் பிரத்தியேகக் கூட்டம் (Convention) உண்மையில் பாராளு மன்றம் போலவே செயலாற்றியது. 'அரசருடைய அழைப்பு ஆணை இல்லாதிருப்பினும்' 'பாராளுமன்றக் கூட்டத் தொடக் கத்தில் மன்னரே நேரில் வந்ததைப்போலத்' தான் இரு சபை களும் கொண்ட பாராளுமன்றமே என்று அறிவிக்கும் சட்ட மொன்றையும் அது செய்தது.[3] ஆயினும், முறையாக அழைக்கப் பெற்று அடுத்து வந்த பாராளுமன்றங்களில் பிரத்தியேகப் பாராளுமன்றத்தின் சட்டங்கள் யாவற்றையும் உறுதி செய்தல் அவசியம்என்றும், அதுவே எவ்வகையிலும்அறிவுடைமையாகும் என்றும் கருதப்பட்டது. 1688ஆம் ஆண்டுப் புரட்சியின்போது சட்டரீதியான நுண்ணயங்கள் வலிமை வாய்ந்திருந்தபோதிலும் திடமாகவே காரியங்கள் நடந்தன. இரண்டாம் ஜேம்ஸை அரியணையிலிருந்து விலக்கி, அதற்குப் பதிலாக வில்லியத்தையும் மேரியையும் கொண்டுவந்த பிரத்தியேகப் பாராளுமன்றம், 1660ஆம் ஆண்டின் அரசருடைய அழைப்பின்றிக் கூடிய பாராளுமன்றத்தைப் போலவே ஒரு சட்டம் செய்தது. அதன்படி அழைப்புண்ட வகையிலோ அல்லது வேறு விதத் திலோ குறைபாடு இருந்தபோதிலும், தான் முறையான பாராளு மன்றமே என அறிவித்தது.[4] ஆயினும், மற்றொரு பாராளு மன்றம் அதனுடைய சட்டங்களை உறுதி செய்யவேண்டும் அவசியம்பற்றிய எண்ணமே எழவில்லை.

**மூவாண்டுச் சட்டங்கள்** (Triennial Acts): ஆண்டுதோறும் பாராளுமன்றங்கள் கூடவேண்டுமென்று[5] விதித்த இரண்டாம் எட்வர்டு, மூன்றாம் எட்வர்டு காலச் சட்டங்களினாலும், முதலாம் சார்லஸ் காலத்தில் 1641ஆம் ஆண்டில் நீண்ட பாராளுமன்றம் செய்த மூவாண்டுச் சட்டத்தினாலும்,[6] பாராளுமன்றத்தைக் கூட்டும் அரசரின் தனிச் சிறப்பதிகாரம் குறைக்கப்பட்டது என்பதை முன்னரே கண்டோம். ஏறத்தாழப் பதினெட்டாண்டு

கள் கூடிய இரண்டாம் சார்லஸ் கால 'ஓய்வூதியப் பாராளு மன்றம்' (Pensionary Parliament) 1664ஆம் ஆண்டில் இச் சட்டத்தை ரத்து செய்தது. ஆயினும், 'மூன்றாண்டுகளுக்கு மேல் பாராளுமன்றத்தைத் தடை செய்யவோ, இடையில் நிறுத்திவிடவோ கூடாது'[7] என அதே சட்டம் வகுத்தது. 'பாராளுமன்றம் அடிக்கடி கூடவேண்டுமெ'ன்று[8] 1689ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் உரிமைகள் விண்ணப்பம் அறிவித்தது. மூவாண்டுப் பாராளுமன்றங்களை நிறுவும் மசோதா ஒன்று பிரபுக்கள் சபையில் வந்து, இரு சபைகளிலும் 1692ஆம் ஆண்டில் நிறைவேறியது. ஆனால், அதற்கு இசைவுதர வில்லியம் மறுத்துவிட்டார். 1693ஆம் ஆண்டில் மீண்டும் அதனைக் கொண்டுவந்தபோது காமன்ஸ் சபை தள்ளிவிட்டது.

**1694ஆம் ஆண்டின் மூவாண்டுச் சட்டம்:** எனினும், அடுத்த ஆண்டே கொண்டுவரப்பெற்ற அதனை ஒத்த மசோதா ஒன்று, 1694ஆம் ஆண்டு டிசம்பர் திங்களில், வில்லியம், மேரி கால மூவாண்டுச் சட்டமாக நிறைவேறியது. முந்தைய பாராளு மன்றம் கலைந்த மூன்றாண்டுகளுக்குள் புதிய பாராளுமன்றம் கூடவேண்டுமென வகுத்த அச்சட்டம், எந்தப் பாராளுமன்றமும் மூன்றாண்டுக் காலத்திற்குமேல் பணியாற்றக்கூடாது என்ற புதுமைக் கருத்தையும் புகுத்தியது.[9] அடுத்த இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு அச் சட்டம் அமலிலிருந்தது. ஆயின், 1715ஆம் ஆண்டுப் புரட்சிக் கலகம் ஒடுக்கப்பெற்றபிறகு, யாகோபியருடைய சூழ்ச்சிகள் தொடரும் என்னும் அச்சம் காரணமாகவும், புதிய அரசகுலத்தின் உறுதிப்பாட்டினைப் பொதுத் தேர்தல் குலைத்துவிடுமோ என்ற பயத்தினாலும் முதலாம் ஜார்ஜின் விக்கு (Whig) மந்திரிசபை, ஏழாண்டுச் சட்டத்தைக் (Septennial Act) கொண்டுவந்து 1716-ல் நிறை வேற்றியது.[10] பாராளுமன்றத்தின் காலத்தை ஏழாண்டுக் காலத்திற்கு நீடிக்க இச் சட்டம் வகைசெய்தது.

**ஏழாண்டுச் சட்டம், 1716:** காமன்ஸ் சபையின் அமைப் பினைக் குறிப்பாகப் பாதித்த இம் மசோதாவைப் பிரபுக்கள் சபையில் கொண்டுவந்தது குறிப்பிடத்தக்கது. 1694ஆம் ஆண்டில் பிரபுக்கள் சபையில் கொண்டுவந்து நிறைவேற்றிய சட்டத்தை உருவாக்கியவர்களில் ஒருவருடைய புதல்வரான டிவோன்ஷயரின் இரண்டாம் கோமகன் வில்லியமே இம் மசோதாவை முன்மொழிந்தார். பாராளுமன்றத்தைக் கலைக் காமலேயே இம் மசோதாவை நிறைவேற்றியதால் அது பிற் காலத்திற்கு வேண்டிய வகை செய்ததோடு, பிரதான

நோக்கத்திற்கிணங்க, தேர்ந்தெடுக்கப்பெற்ற காலத்திற்கு நான்கு ஆண்டுகள் அதிகமாக அப்போது கூடியிருந்த காமன்ஸ் சபையின் காலத்தை நீட்டவும் வழியேற்பட்டது.[11] பாராளு மன்றத்தின் அதிகாரத்திற்கு எல்லை இல்லை என்பதால் இத்தகைய செயல்நிகழ்வு முற்றிலும் முறையானதே. அதனோடு ஆளும் குலத்தையும், புரட்சி ஏற்பாடு முழுவதையும் சூழ்ந்து நின்ற உண்மையான, உடனடியான அபாயத்தைப் போக்குதற்கு இச் சட்டம் தேவையாக இருந்தது. நெருக்கடி நேரத்திற்கென்று தாற்காலிகச் சட்டத்தினைச் செய்திருக்கலாம். ஆனால், நிரந்தர மான சட்டம் ஒன்றை நிறைவேற்றுவதே பத்திரமான, அரசியல் சட்டரீதியான நடவடிக்கை என விக்குகள் கருதினர். மேலும், மாற்றம் இன்றியமையாது தேவைப்பட்டது. 'மூவாண்டுச் சட்ட மசோதா நிறைவேற்றப்பட்டதிலிருந்து நாடே சரமாரி யான சச்சரவுகளுக்கு உள்ளாகி விட்டது' என்றும்; 'மூவாண்டுப் பாராளுமன்றத்தின் முதலாண்டு பழிவாங்கும் முடிவுகளிலும், சென்ற தேர்தல்பற்றிய பகைமைகளிலும் கழிந்தது' என்றும்; 'இரண்டாம் தொடரில்தான் செயலாக்கம் தொடங்கியது' என்றும், 'மூன்றும் தொடரிலோ, இரண்டாவது தொடரில் செய்யவேண்டுமென்று எண்ணிய சிறிய முயற்சியிலும் சோர் வுற்றது' என்றும்; 'அடுத்த பொதுத் தேர்தல் நெருங்கும் வேளையில் சபையின்முன் இருந்த பிரச்சினைகளைத் தலைவர்கள் அணுகும் விதத்தில் அடிமை நிலையில் செயலாற்றினர் அங்கத் தினர்'[12] என்றும் காமன்ஸ் சபையில் ஏழாண்டுச் சட்டத்தை ஆதரித்த சர் ரிச்சர்டு ஸ்டீல் குறிப்பிட்டார். இரு சபைகளிலும் இம் மசோதாவை டோரிகள் எதிர்த்தனர். நீண்ட காலமாக நிலைப்படையைத் தாக்கிப் பேசிய அவர்கள், நிலையான பாராளு மன்றமும் அதனை ஒத்தது என வற்புறுத்திக் கூறினர். இயற் கையில் வந்த உரிமையை[13] அழிப்பதற்குப் பாராளுமன்றத்தின் வரம்பற்ற அதிகாரத்தைப் பயன்படுத்தக்கூடாது எனக் கூறி, வாக்காளர் தொகுதிகளுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்யும் சட்டம் இது எனக் கண்டித்தனர். இத்தகைய எதிர்ப்பு இருந்த போதிலும், இம் மசோதா காமன்ஸ் சபையில் மூன்றுவது வாசிப்பைக் கடந்தபோது 122 பேர் அடங்கிய சிறுபான்மை யினரே எதிராக வாக்களித்தனர்.

பாராளுமன்றங்களின் இயல்பான காலவரையறையை நீட்டியதால் ஏற்பட்ட முக்கிய விளைவுகளில், காமன்ஸ் சபையின் உறுதிப்பாட்டிலும் அதிகாரத்திலும் குறிப்பிடத் தகுந்த வளர்ச்சியையும், மந்திரிசபையின் செல்வாக்குப் பெருக்கத்தை யும் குறிப்பிடலாம். ஏறக்குறைய அரை நூற்றுண்டுக் காலத்

திற்கு அசைக்க முடியாத அளவிற்கு விக்கு கட்சியினரை வேரூன்றச் செய்த இம் மசோதாவின் அரசியல் விளைவுகள் அளவிடற்கரியன. பிரபுத்துவ மசோதாவிற்குச் சரிமாற்ருக[14] ஏழாண்டுச் சட்டத்தை மேலும் நீட்டவேண்டுமென்ற முறை கேடான பேரம்பற்றிச் சில ஆண்டுகளுக்குப்பின் பேச்சு எழுந்ததிலிருந்து இச் சட்டம் எத்தகைய ஒழுக்கக்குலேவு தரும் திட்டமென்பது தெரியவரும். 'அரசருக்கும் பிரபுக்கள் சபைக்கும் அடிமைப்பட்டிருந்த பிரிட்டிஷ் காமன்ஸ் சபையின் விடுதலை சகாப்தத்தை'[15] ஏழாண்டுச் சட்டம் உருவாக்கியது என சபா நாயகர் ஆன்ஸ்லோ (Onslow) அறிவித்தார். ஆயின், பிரபுக்களே ஒளிவுமறைவின்றிப் பேசினர். மூன்ருண்டுகளுக்கு அளிக்கப் பெறும் ஆண்டுத் தொகையைவிட ஏழாண்டுகளுக்கு அளிக்கப் பெறும் தொகை மதிப்பு வாய்ந்தது என ஒரு பிரபு குறிப்பிட்டார். 'குடிநலன்களே அழித்தன மூவாண்டுப் பாராளு மன்றங்கள்' என்றும், 'நமது சிறப்பு வாய்ந்த அரசியல் சட்டத்தை மக்கள் கூட்டத்தின் மனம்போன போக்கிற்கு உட்படுத்தின' என்றும் மற்ருெரு பிரபு குறிப்பிட்டார். ஹார்லி (Harley), செயின்ட் ஜான் (St. John) போன்ற ஆன் அரசி கால அரசியல் தலேவர்கள் தங்களது அரசியல் வாழ்வின் இடையிலே பிரபுக்களாக மாறினர். அதற்கு மாருக ஏழாண்டுப் பாராளு மன்றத் திட்டத்தின்கீழ் சர் ராபர்ட் வால்போலானவர் காமன்ஸ் சபையிலேயே இருந்தார். தோல்வி காரணமாக அவரது நீண்ட கால ஆட்சி முடிவிற்கு வந்தபோதுதான் இரண்டாம் ஜார்ஜ் மன்னரிடமிருந்து ஏர்ல் பிரபு பட்டத்தை ஏற்க அவர் முன் வந்தார். இவற்றிலிருந்து, மூவாண்டுப் பாராளுமன்றத் திட்டப்படி அமைந்த காமன்ஸ் சபைக்கும், ஏழாண்டுப் பாராளு மன்றத் திட்டப்படி அமைந்த காமன்ஸ் சபைக்குமுள்ள வேற்றுமை நன்கு வெளிப்படுகின்றது. வால்போலேப் பற்றிய செய்தி உண்மையானதோடு முக்கியமானதுங்கூட. ஏழாண்டுச் சட்டத்தின் விளைவாகவே இது ஏற்பட்டிருக்கவேண்டுமென்பதில்லை. ஆனல், இச் சட்டத்தின் விளைவாக நிரந்தரமான 'செல்வாக்கைத்' தாராளமாகப் பயன்படுத்தித்தான் வால் போலின் நீண்ட கால மந்திரிசபை வாழ்ந்தது. இத்தகைய சமரச ஏற்பாட்டில் அரசரின் இழப்பு மிகுதி என்பது தெளிவு. பிரபுக்களேப் பொறுத்தவரையில், குறிப்பாக பரோ சொந்தக் காரர்களுடைய சொத்துகளின் மதிப்பு உயர்ந்தது.

**ஏழாண்டுச் சட்டத்தை அழிக்க முயற்சிகள் :** இரண்டாம் ஜார்ஜின் காலத்திலிருந்து விக்டோரியா இராணியார் காலம் வரையில் ஏழாண்டுச் சட்டத்தை ரத்து செய்யவும், பாராளு

மன்றங்களின் காலத்தைக் குறைக்கவும் பல சமயங்களில் முயற்சிகள் எழுந்தன. விக்கு கட்சியினரின் அரசியல் கொள்கை விளக்கத்தின் மாதிரியாக அமைந்தது, ஏழாண்டுச் சட்டத்தை ஆதரித்து 1734ஆம் ஆண்டு வால்போல் நிகழ்த்திய உரை.[16] 'நன்றாய் அறிந்து, முறையாகக் கொண்ட பற்றுக்கோளுடன் மூவாண்டுப் பாராளுமன்றக் கொள்கையை ஏற்றதாக'[17] 1771 ஆம் ஆண்டில் சாத்தம் பிரபு (Chatham) அறிவித்தார். பெருத்த செலவினைத் தாங்கக்கூடிய அரசருக்கே அடிக்கடி வரும் பொதுத் தேர்தல்கள் அனுகூலமாயிருக்குமென்று 1780ஆம் ஆண்டில் பர்க் (Burke) வாதாடினார்.[18] எனினும், ஐந்து அதிக ஓட்டுகளுடன் மூவாண்டு மசோதா ஒன்றை டென்னிசன் டி என் கோர்ட் (Tennyson D'Eyncourt) என்பார் 1849-ல் கொண்டு வந்தார். அச் சமயத்தில் காமன்ஸ் சபையையும் பொதுமக்களையும் நெருங்கிய, ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ளும் உறவு நிலைக்குக் கொணர விரிவடைந்த வாக்குரிமை வழிசெய்தது. எனவே, பாராளுமன்றக் காலவரையறைப் பிரச்சினை குறைந்தது.[19] மூன்று அல்லது ஏழு என்னும் எண்களில் கொள்கையேதும் அடங்கவில்லை. இலக்கை அடைவதற்கு ஏற்ற வழியே பாராளுமன்றங்களின் காலவரையறையைக் குறைப்பது என்பது. உள்நாட்டு, வெளிநாட்டு அரசியல் சிக்கல்களின் விளைவாக நாட்டு மக்களின் விருப்பார்வங்கள் அவ்வப்போது மாறுதல் அடைகின்றன. இத்தகைய நாட்டு மக்களின் விருப்பார்வங்களைக் கூடுமானவரை பிரதிபலிப்பதாகக் காமன்ஸ் சபை அமையவேண்டும். நடைமுறையில் பாராளுமன்றமேதும் ஆறு ஆண்டுகளுக்குமேல் தொடர்ந்து பணிபுரியவில்லை.[20] சட்டரீதியாகப் பாராளுமன்றத்தின் காலவரையறை எதுவாக இருந்தபோதிலும், நடைமுறையில் அது குறைவாகவே இருக்க வேண்டியதாயிற்று. காரணம் என்னவென்றால், பாராளுமன்றத்தைக் கலைக்கும் உரிமையை அரசாங்கம் விட்டுக்கொடுப்பதில்லை. மேலும், அசந்தர்ப்பமான காலத்தில் கலைக்கவேண்டிய நிர்பந்தத்திலிருந்து தப்புவதற்காகவும் இவ்வாறு நேர்ந்தது. 1911ஆம் ஆண்டுவரை ஏழாண்டுச் சட்டம் அமலில் இருந்தது. அவ்வாண்டில் நிறைவேறிய பாராளுமன்றச் சட்டத்தின் ஏழாவது வாசகக் கூறு பின்வருமாறு வகுத்தது: '1715ஆம் ஆண்டின் ஏழாண்டுச் சட்டத்தின் கீழ்ப்பாராளுமன்றத்தின் உச்சகால வரையறையை ஏழு ஆண்டுகள் என்பதற்குப் பதிலாக ஐந்து ஆண்டுகள் என மாற்ற வேண்டும்'. சட்ட ரீதியான கால வரையறையை நீட்டிக்க வேண்டிய தேவை, முதல் இரண்டு உலகப் போர்களின்போது

ஏற்பட்டது. ஆயினும், அவ்வாறு செய்வதற்கு ஆண்டுதோறும் புதுப்பிப்புச் சட்டங்கள் இயற்றித் தகுமுறையைக் கையாண்டனர்.

**மன்னரின் மறைவு:** புதிய அரசர் தனியாகக் கலைக்காத வரையில் அல்லது தள்ளிப்போடாதவரையில், பழைய மன்னர் இறக்கும்போது இருந்த பாராளுமன்றத் தொடரானது மேலும் ஆறு மாதங்களுக்குத் தொடர்ந்து வரவேண்டுமென்று வகுத்த சட்டத்தினால், மன்னர் இறந்தால் பாராளுமன்றம் தானாகக் கலையவேண்டுமென்ற பழவிதி ஆன் அரசியாரின் ஆட்சியில் வழக்கொழிந்தது.[21] ஒரு பாராளுமன்றம் கலைந்து, அழைப்பு ஆணைகளுக்கிணங்கப் புதிய பாராளுமன்றம் கூட வேண்டிய நாள் வரும்வரையில் உள்ள இடைக்காலத்தில் மன்னர் மறைவாரானால், முன்பிருந்த பாராளுமன்றமே அது கலைக்கப்படும்வரையில் மீட்சியுற்றுத் தொடர்ந்து ஆறு மாத காலத்திற்குச் செயலாற்ற வேண்டுமென்று மூன்றும் ஜார்ஜ் மன்னரின் 1797ஆம் ஆண்டுச் சட்டம் வகை செய்தது.[22] ஆன் அரசியார் காலச் சட்டம் விதித்த ஆறு மாத வரம்பையும் 1867ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டத்தின் (Reform Act) கூறு ஒன்று நீக்கிவிட்டது. இங்ஙனம் இன்று மன்னரின் மறைவினால் பாராளுமன்றம் தொடர்ந்து பணியாற்றுவதில் எவ்விதத் தடையும் இல்லை.[23]

## அரசியல் குற்றச்சாட்டு

முற்றிலும் சடங்கு சார்ந்த காரியங்களிலன்றிப் பிரபுக்களும் காமன்ஸ் சபையினரும் ஒருங்கிணைந்து செயலாற்றியது, அரசியல் குற்றச்சாட்டில்தான்.[24] எளிதில் கையாள முடியாத பல கூறுகளில் தெளிவற்றதாய் இருந்த அரசியல் குற்றச்சாட்டுப் பதினேழாம் நூற்றாண்டில் சக்தி வாய்ந்த ஆயுதமாக விளங்கியது. பல வகையான நிதி சம்பந்தமான குற்றங்கள் மெள்ளமெள்ளக் குற்றச் சட்டத்தின் வரம்பிற்குள் வந்ததாலும், பழிதரும் அரசியல் நடத்தைக்காக அமைச்சரை ஒறுக்கும் வகையில் அமைச்சர் பொறுப்பு வளர்ச்சியுற்றதாலும் புரட்சிக்குப் பிறகு அரசியல் குற்றச்சாட்டுக் காலத்திற்கொவ்வாததாக மாறியது. கில்ஸ் மாம்பெஸ்ஸனும் பேக்கன் பிரபுவும் 1621ஆம் ஆண்டு அரசியல் குற்றம் சாட்டப்பெற்றதிலிருந்து 1688ஆம் ஆண்டின் புரட்சி வரையில் நாற்பது அரசியல் குற்றச்சாட்டு வழக்குகள் தோன்றின. மூன்றும் வில்லியம், ஆன் அரசியார், முதலாம் ஜார்ஜ் ஆகியோர் ஆட்சிக் காலங்களில் பதினைந்து வழக்குகள்

வந்தன. இரண்டாம் ஜார்ஜ் மன்னர் காலத்தில் கொண்டுவரப் பட்ட ஒரே அரசியல் குற்ற வழக்கில் 1746-ல் லோவட் பிரபு (Lord Lovat) அரசத்துரோகக் குற்றம் சாட்டப்பெற்றார்.

மிடில்செக்ஸ் பிரபுவின்மீது (Earl of Middlesex) 1624ஆம் ஆண்டில் அரசியல் குற்றம் சாட்டிய நாளிலிருந்து தொடரப் பெற்ற அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த பிரதான வழக்குகளைப் பின்னே காணலாம் :

**பக்கிங்காம் கோமகனான ஜார்ஜ் வில்லியர்ஸ்**[25] (George Villiers, Duke of Buckingham) : பிரபுக்கள் சபையில் காமன்ஸ் சபையினர் ஜார்ஜ் வில்லியர்ஸ் மீது சாட்டிய பதின்மூன்று குற்றங்களில் பின்வருபவை முக்கியமானவை: (1) கனைகடல் காவலைப் புறக்கணித்தார். (2) ஹியூக்நோக்களுக்கு (Huguenots) எதிராகப் பயன்படுத்தவென்று ஆங்கிலக் கடற்படை அணி ஒன்றினை அளித்தார். (3) நாட்டில் பல உயர்பதவிகளை விலை கொடுத்து வாங்கி அவற்றின் மீது தனியுரிமை பாராட்டினார். சர் டட்லி டிக்ஸ் (Sir Dudley Digges), சர் ஜான் எலியட் (Sir John Eliot), ஆறு காமன்ஸ் சபை உறுப்பினர் ஆகியோரே பிரபுக்கள் சபையில் குற்றம் சாட்டும் பொறுப்பை ஏற்றிருந்தனர். பக்கிங் காம் பிரபு அளித்த பதிலில் மன்னர் அளித்த பொதுவானவும் சிறப்பானவுமான குற்றக்குறைப்புகளைக் கொண்டாடிக் குறிப் பிட்டபோதிலும், பெரும் பகுதி உண்மைப் பிரச்சினைகளையே விளக்கினார். காமன்ஸ் சபையினர் பதிலைத் தயாரித்து அளிப்ப தற்குள் பாராளுமன்றத்தை முதலாம் சார்லஸ் கலைத்து விட்டார். அதை அடுத்து 1628ஆம் ஆண்டில் பெருங் கண்டனப் பத்திரம் ஒன்றை அரசரிடம் காமன்ஸ் சபையினர் அளித்தனர். பக்கிங்காம் பிரபு தவருகப் பயன்படுத்திய அபரி மிதமான அதிகாரமே நாட்டைப் பீடித்த கேடுகளுக்கெல்லாம் காரணம் என்று கூறி, அதனல் அன்னாரைப் பதவியிலிருந்து நீக்குவதோடு அரசரை அணுகாதிருக்கவும் செய்ய வேண்டு மென்று வேண்டினர். சிறிது காலத்திற்குள் பாராளுமன்றத் தொடரை சார்லஸ் தள்ளிவைத்தார். மறுமுறை பாராளு மன்றம் கூடுவதற்குள் ஃபெல்ட்டன் (Felton) என்பவர் பக்கிங் காம் பிரபுவைக் கொலைசெய்துவிட்டார்.

**அறிஞர் ரோஜர் மெய்ன்வாரிங்** (Dr. Roger Mainwaring): பிற்காலத்தில் 'சமயமும் பற்றுறுதியும்' (Religion and Allegiance) என்னும் தலைப்பில் வெளியான மூன்று அரசியல் விளக்கப் பேருரைகளுக்காகக் காமன்ஸ் சபையினர் அவர்மீது

அரசியல் குற்றஞ் சாட்டினர். அவ்வுரைகளில் இரண்டு அரசர் முன் நிகழ்த்தப்பெற்றவையாகும். 'அரசருக்கான உரிமை எதையும் அளிக்கும் அதிகாரம் பாராளுமன்றங்களுக்கில்லை' என்றும், 'பேரரசர்கள் பிறந்ததிலிருந்து, முறையான மரபுரிமையால், இயற்கைச் சட்டம், நியதி ஆகியவற்றால் அவர்களை வந்தடைந்ததைச் சீராக விதிப்பதற்கும் எளிதாகப் பெறுவதற்கும் உடனுதவி அளிக்கவேண்டுவது பாராளுமன்றங்கள்' என்றும் வலியுறுத்தினர். பாராளுமன்றத்தின் அனுமதியின்றி அரசரின் ஆணைப்படி விதிக்கப்பெறும் வரிகளையும் கடன்களையும் அளிக்க மறுப்பவர் 'சமயச் சட்டத்தையும் மன்னரின் தனிச் சிறப்பதிகாரத்தையும் பழித்தவர்களாக, மதிப்பார்வக்கேடு, விசுவாசம் துறத்தல், புரட்சிக் கலகம் செய்தல் ஆகிய குற்றங்கள் இழைத்தோராவர்' எனவும் விளக்கினர். அவருக்குப் பிரபுக்கள் சபை கடுமையான தண்டனை அளித்தது. சபை விரும்பும்வரை அவர் சிறையிலடைக்கப்பெறுதல் வேண்டும். அவர் ஆயிரம் பவுன்கள் தண்டம் அளித்தல் வேண்டும்; அமைச்சரவையிலிருந்து மூன்றாண்டுகளுக்கு நீக்கிவைக்கப்பெறுதல் வேண்டும்; சமயத் துறையிலோ, பொதுத் துறையிலோ எவ்விதப் பதவியும் வகித்தல் கூடாது. எனினும், உடனடியாக அவரை மன்னித்த சார்லஸ் மன்னர் மேலுமொரு முகவர் ஊர் வட்டகையை வழங்கினர்; சில ஆண்டுகள் கழிந்து செயின்ட் டேவிட் ஆலயத்தின் பிஷப்பாகவும் அவரை நியமித்தார்.[26]

**ஸ்ட்ராஃபோர்டு ஏர்ல் பிரபுவான தாமஸ் வென்ட்வொர்த்[27] (Thomas Wentworth, Earl of Strafford)**: அவர் தீவிர அரசத் துரோகக் குற்றம் செய்ததாகக் காமன்ஸ் சபையினால் பழி சுமத்தப்பெற்றார். வட கவுன்ஸிலின் தலைவராகவும், அயர்லாந்தின் லெப்டினென்ட் பிரபுவாகவும், பிரிவி கவுன்சிலராகவும், இங்கிலாந்தில் மன்னர் படையின் தளபதியாகவும் இருந்த காலத்தில் அவர் நடந்துகொண்ட விதத்தை வைத்து இருபத்தெட்டுக் குற்றவாசகக் கூறுகளை அவருக்கெதிராகக் கொண்டு வந்தனர். ஆயின், அவற்றிலெல்லாம் பதினைந்தாவது குற்றவாசகமே உண்மையான அரசியல் துரோகக் குற்றம் என்று கொள்ளும் நிலையில் உள்ளது. தமது அதிகாரத்தின் பேரிலே அவர் வரி விதித்தார் என்றும், வரித்தொகையை அளிக்க வேண்டுமென்று வற்புறுத்துகின்ற வகையில் படையினரை அயர்லாந்து மக்களின் வீடுகளில் தங்கவைத்தார் என்றும் குறிப்பிட்ட அக் குற்றவாசகம், மூன்றாம் எட்வர்டின் சட்டத்தில் காணப்பெறும் 'மன்னருக்கெதிராகப் போர் விளைத்தல்' என்பதில் அடங்கும். அடுக்கடுக்காகச் சேர்ந்த அரசத்

துரோகம் என்னும் கருத்தினை வலியுறுத்த காமன்ஸ் சபையினர் முயன்றனர். ஆனால், எல்லாக் குறைகளையும் நிரூபிக்க சட்ட ரீதியில் போதுமான சான்றுகள் இருந்தபோதிலும், அரசத் துரோகக் குற்றத்தை நிலைநாட்டுவது அநேகமாக இயலாத ஒன்றாகவே தோன்றியது. வென்ட்வொர்த்தின் நடத்தை அரசத் துரோகக் குற்றமாக அமைந்தது என்று பாராளுமன்றம் அறிவிக்க வேண்டுமென்பதற்காக மூன்றாம் எட்வர்டு காலச் சட்டத்தின் பிரபலியமான சட்டக் கூறினை வரவழைத்தனர். ஆனால், 1399ஆம் ஆண்டில் நிறைவேறிய நான்காம் ஹென்றியின் முதலாண்டுச் சட்டத்தின் பத்தாவது சட்டவாசகமும், 1553ஆம் ஆண்டில் நிறைவேறிய மேரி அரசியாரின் முதலாம் ஆண்டுச் சட்டமும் மேலே வரவழைக்கப்பெற்ற சட்டக்கூறினைத் தள்ளுபடி செய்துவிட்டன என்று எதிர்த்தரப்பினர் வாதாடினர். சட்ட முறைப்படி அன்றாயினும் நடைமுறையில் ஸ்ட்ராஃபோர்டை அரசத்துரோகி என்றும், நாட்டின் வைரி என்றும் நம்பிய சில காமன்ஸ் சபைத் தலைவர்கள், டியூடர் காலக் கேடுபயக்கும் முன்னிகழ்வுகளில் ஒன்றினைச் சாதகமாகப் பயன்படுத்த உறுதி பூண்டனர். பெருந் துரோகத்திற்காக உரிமைகளை இழக்கச் செய்யும் மசோதாவைக் கொண்டுவந்தனர்.[28] அரசியல் குற்றச்சாட்டு கைவிடப்பெற்றது. குற்றவழக்காக அன்றி அரசியல் வழக்காக வரும்போது இச் செயல்முறை பொருத்தமற்றதாயிருந்தது என்பதற்கு இதுவேசான்று. உரிமை இழப்பு மசோதா வழியை பிம்மும் (Pym) ஹாம்டனும் (Hampden) எதிர்த்தனர். சிறிது காலத்திற்குப் பிறகு அரசக் கட்சியின் தலைவர்களாக வந்த ஃபாக்லண்டும் (Falkland) ஹைடும் (Hyde) அம் மசோதாவை ஆதரித்தனர். காமன்ஸ் சபையில் அம் மசோதா வந்தபோது ஐம்பத்தோர் உறுப்பினர் அதனை எதிர்த்து ஓட்டளித்தனர். அதன் காரணமாக 'ஒரு துரோகியைக் காக்க நாட்டைக் காட்டிக்கொடுக்கும் ஸ்ட்ராஃபோர்டினர்' என்று தூற்றும் அட்டைகளைத் தெருக்களில் வைத்தனர். குற்றச்சாட்டின் சில கூறுகள் உண்மையில் அரசத்துரோகக் குற்றம் சார்ந்தவைதாமா என்பதுபற்றிக் கருத்துத் தெரிவிக்க வேண்டுமென்று நீதிபதிகளைப் பிரபுக்கள் வேண்டினர். தெளிவற்ற பதிலே பிரபுக்களுக்குக் கிடைத்தது. அதிலே கைதியானவர் அரசத்துரோகக் குற்றம் இழைத்தவர் எனத் தெளிவாகக் கூறாமல், பிரபுக்கள் ஆதாரம் கோரிய யாவற்றிலும் சட்டப்படியான அரசத்துரோகக் குற்றத்திற்கான தண்டனைகளையும் இழப்புகளையும் அனுபவிக்கத் தகுந்தவர் ஸ்ட்ராஃபோர்டு எனக் கருதுகிறோம் என்று எழுதினர். 1641ஆம் ஆண்டு மே மாதம் ஏழாம் தேதியன்று அம் மசோதா நிறைவேறியபோது மக்கள் கிளர்ச்சிக்கு அஞ்சிய

45 பிரபுக்கள் சபைக்கு வரவேயில்லை. பத்தொன்பது பிரபுக்கள் மசோதாவிற்கு எதிராக வாக்களித்தனர். அதி யார்வமும் பேரச்சமும் பின்னிக் கிடந்த சூழ்நிலையில் குறுகிய நோக்கோடு மெலிந்த தன்மையில் அரச இசைவினை முதலாம் சார்லஸ் அளித்துவிட்டார். இங்ஙனம் எவருடைய தலைமுடி ஒன்றையும் எதுவும் தொடவிடாதவாறு காப்பதாக உறுதி அளித்தாரோ, எவர் நன்றியறிதலுடன் சேவகம் செய்தாரோ, அவரையே பலியாகத் தந்துவிட்டார். 'நாட்டின் எல்லாப் பிரிவினர்க்கும் கறை ஏற்படுத்தியது ஸ்ட்ராப்ஃபோர்டின் மரண தண்டனை. காமன்ஸ் சபையினர் உணர்ச்சியால் உந்தப் பெற்றனர்; பீதியினால் செயற்பட்டனர் பிரபுக்கள்' சபையினர். எப்போதும் முறையற்றதாகவே இருக்கும் ஏதோ ஒரு நோக்குடன் சார்லஸ் செயற்பட்டார். பாராளுமன்ற விவாதங்களை அச்சுறுத்தும் வகையில் மக்கட் கூட்டங்களை அனுமதித்தது, சட்டம் நிலைகுலைவதற்கிருந்தது என்பதற்கான உறுதியான சான்றாக அமைந்தது' என ரஸ்ஸல்[29] பிரபு குறிப்பிட்டார்.

**ஆர்ச் பிஷப் லாட்** (Archbishop Laud): 1940ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் அரசத்துரோகக் குற்றம் சுமத்தப்பெற்ற அவர், டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பப்பெற்றார்; உயிர் நீங்கும் வரை அங்கேயே வதிந்தார். 1643ஆம் ஆண்டு அக்டோபர் திங்களில் குறிப்பிட்ட குற்றவாசகக் கூறுகள் அவர் மீது கொண்டுவரப்பட்டன. அவற்றில் சில சமயச் செய்திகளோடு தொடர்புடையவை. அவர் கவுன்சிலராக இருந்து முக்கியப் பங்கு கொண்ட விண்மீன் மண்டப நீதிமன்றம், உயர் ஆணை நீதிமன்றம் ஆகியவன்றின் வன்முறையான செயல்நிகழ்வுகள் பற்றியனவாக வேறு சிலவும் அமைந்தன. இக் குற்றச்சாட்டுகளை மூன்று தலைப்புகளின்கீழ்த் தரலாம்:

(1) நாட்டின் அடிப்படைச் சட்டங்களை அழித்து யதேச் சாதிகார அரசாங்கத்தை அமைக்க முயன்றது.

(2) உண்மைச் சமயத்தினைக் குலைத்துப் பொய்ச் சமயத் தினைப் புகுத்த முயன்றது.

(3) பாராளுமன்றத்தின் உரிமைகளை அழிக்க முயன்றது. நீண்ட விசாரணைக்குப் பிறகும், 150 சான்றுகளை ஆராய்ந்த பின்பும் சட்ட ரீதியாகக் குற்றம் சுமத்துவது இயலாது எனக் கண்ட காமன்ஸ் சபையினர், அரசியல் குற்றச்சாட்டினைக்

கைவிட்டு உரிமையிழப்பு மசோதாவைக் கொண்டுவந்தனர். நீதிபதிகளிடம் பிரபுக்கள் ஆலோசனை கேட்டனர். 'அரசத் துரோகக் குற்றம் பற்றிய பிரச்சினையில் தாங்கள் கருத்து வெளியிடமுடியாத காரணத்தால் இந்த வழக்கின் சட்டரீதியான பிரச்சினைக்கு ஆலோசனை வழங்க முடியாது' என்றும், 'ஆயின், குறிப்பாக வெளியிடப்பெற்றது மூன்றும் எட்வர்டின் 25ஆம் ஆண்டுச் சட்டத்தில் அரசத்துரோகம் குற்றமாகும்; ஆக, பிரச்சினை முழுவதையும் பிரபுக்கள் சபையே முடிவு செய்தல் வேண்டும்'[30] என்றும் பதில் எழுதினர்கள். குற்றச்சாட்டு களில் சட்ட ரீதியான அரசத்துரோகம் ஏதும் இல்லை என்பதை அறிவித்ததாகக் கொள்ள முடியும் எனினும், வந்திருந்த 21 பிரபுக்களும் மசோதாவை நிறைவேற்றினர். 1645ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பத்தாம் நாளில் ஆர்ச் பிஷப்பின் தலையைக் கொய்தனர்.

**கிளாரண்டன் ஏர்ல் பிரபுவான எட்வர்டு ஹைடு** (Edward Hyde, Earl of Clarendon): அரச முன்னிலை மீட்சியிலிருந்து தமது வீழ்ச்சிவரை இரண்டாம் சார்லஸின் பெருமுத்திரை நாயக மாகவும் பிரதம அமைச்சராகவும் இருந்த கிளாரண்டன் பிரபு 1667ஆம் ஆண்டில் 'பொது நிலையான' அரசத் துரோகக் குற்றம் சாட்டப்பெற்றார். அவருக்கு எதிரான பதினேழு குற்றவாசகக் கூறுகளில்[31] முதலாவது, நான்காவது, பதினொன் ருவது ஆகியவையே மிக முக்கியமானவையாகும். அவை பின் வருமாறு:

(1) 'நிலைப்படை ஒன்றைத் திரட்டத் திட்டமிட்டு அதன் மூலமாக நாட்டை ஆளக் கிளாரண்டன் பிரபு முனைந்தார். கூடி நின்ற பாராளுமன்றத்தைக் கலைக்குமாறும், வருங்காலப் பாராளு மன்றம்பற்றிய எண்ணத்தைக் கைவிடுமாறும், படைபலத்தால் ஆட்சி புரியவேண்டுமென்றும், அப் படையினைப் பொதுமக்கள் வீடுகளில் இலவசமாகத் தங்கவைத்தும், அவர்களிடமிருந்து வசூலித்த நிதிகளைக் கொண்டும் பராமரிக்க வேண்டுமென்றும் மன்னரிடம் ஆலோசனை கூறினர்.' (4) 'அரசருக்கு ஆலோசனை கூறிச் சட்டத்திற்கு விரோதமாக மன்னனின் குடிமக்கள் பலரைத் தொலைத்தீவுகளிலும், படைப்பாசறைகளிலும், பிற இடங்களிலும் சிறைப்படுத்துமாறு செய்தார். அதன் மூலமாக அவர்கள் சட்டத்தின் பயனை அடைய முடியாதவாறு செய்த தோடு, அதே முறையில் பிற குடிமக்களையும் சிறைப்பிடிப் பதற்கான முன்னிகழ்வுகளையும் ஏற்படுத்தினர்.' (11) ஸ்பெயி னிடமிருந்து கிராம்வெல் கைப்பற்றிய டன்கிர்க் (Dunkirk)

நகரத்தை மிகக் குறைந்த விலைக்கு ஃபிரஞ்சு அரசர் பதினான்காம் லூயியிக்கு விற்குமாறு யோசனை கூறியதோடு செயற்படுத்தவும் செய்தார்.

காமன்ஸ் சபையினர் கொண்டுவந்த அரசியல் குற்றச் சாட்டில் 'நாட்டைக் காட்டிக் கொடுக்கும் வகையில்' (traitorously) என்னும் வாசகத்தோடு 'பொது நிலையான' அரசத்துரோகக் குற்றத்தைச் சுமத்த முயன்றனர். ஆனால், இத்தகைய ஸ்ட்ராஃபோர்டு வழக்கு முன்னிகழ்வான 'பொது நிலை' அரசத்துரோகக் குற்றம் என்பதை ஏற்கப் பிரபுக்கள் இணங்கவில்லை. மேலும், கிளாரண்டனை டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பவும் மறுத்துவிட்டனர். இதற்கிடையில் கிளாரண்டனே நீதியிலிருந்து தப்பி ஓடினார். இங்ஙனம் அவர் நாட்டில் இல்லாதபோது இரண்டாம் சார்லஸின் 19, 20ஆம் ஆண்டின் சட்டம் நிறைவேறியது. அதன்படி கிளாரண்டன் பிரபு ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் கோர்ட்டில் சரணடைய வேண்டும். அவ்வாறு செய்யத் தவறினால் நாடு கடத்தப் படுவார். அதன் பிறகு நாட்டிற்குள் புகுவது அரசத்துரோகக் குற்றமாகும். பாராளுமன்றச் சட்டத்தின் மூலமாகவன்றி மன்னிப்புப் பெறமுடியாது. நோய் காரணமாகக் குறிப்பிட்ட காலத்திற்குள் வழக்கு விசாரணைக்குக் கிளாரண்டனால் வர இயல வில்லை. ரூவனில் தங்கியிருந்த அவர் 1674ஆம் ஆண்டு உயிர் நீத்தார்.[31a]

**டான்பி ஏர்ல் பிரபுவான தாமஸ் ஆஸ்போர்ன்** (Thomas Osborne, Earl of Danby): அரசத்துரோகம், பிற கடுங் குற்றங்கள், தீச்செயல்கள் ஆகிய பழிகள் அவர்மீது சுமத்தப் பட்டன.[32] 1678ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 20ஆம் தேதி காமன்ஸ் சபையினர் அவர்மீது அரசியல் குற்றம் சாட்ட முடிவு செய்தனர். ஃபிரான்சுடன் போர்செய்வதற்கென்று நிதி திரட்டு வதற்கான சட்டம் இயற்றி ஐந்து நாள்கள் ஆவதற்கு முன் 6,000,000 லிவர்களுக்காக பிரான்சுக்கும் ஹாலந்திற்குமிடையே நடுநிலைமைக்கு வாய்ப்பளிக்கும் அதிகாரம் அளித்து வெர் செயில்ஸ் அரசவையில் இருந்த மாண்டேகு என்னும் ஆங்கிலப் பொறுப்பாளருக்குக் கிளாரண்டன் எழுதிய கடிதம் அவரது தலையாய குற்றமாகக் கொள்ளப்பட்டது. இத்தகைய பேச்சு வார்த்தைகள் இரகசியமாகவே நடைபெற்றன. அதனால் கவுன்சில் சபையைக் கலக்காமலேயே அன்னிய அரசுகளுடன் பேச்சு வார்த்தை நடத்தியதால், 'அரசு அதிகாரத்தைக்

கைப்பற்ற' முயன்றார் டான்பி பிரபு என்று காமன்ஸ் சபையினரால் குற்றம் சாட்டமுடிந்தது.

அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த பல பெரும் பிரச்சினைகள் டான்பியின்மீதான அரசியல் குற்றச்சாட்டினால் எழுந்தன :

(1) இரண்டாம் சார்லஸ் மன்னரின் ஆணையின் பேரிலேதான் விருப்பமற்ற நிலையில் மாண்டேகுக்கு டான்பி கடிதம் எழுதினார். அவருடைய மனத்திருப்திக்காக மன்னர் கைப்பட பிற்குறிப்பொன்றையும் எழுதினார். அதில் தமது ஆணையின் பேரிலேயே அக் கடிதம் எழுதப்பெற்றதாகக் குறிப்பிட்டுக் கையொப்பமிட்டிருந்தார். அக் கடிதம் அரசருடைய ஆணையின் பேரிலே அனுப்பப்பெற்றது என்பது மறுக்க முடியாத உண்மையாக இருந்தபோதிலும், ஹாலம் கூறியதைப் போல, டான்பி பிரபுவின்மீது காமன்ஸ் சபையினர் அரசியல் குற்றம் சாட்டியபோது, தற்கால அரசியல் அமைப்புக் கோட்பாடு ஏற்கும் கொள்கை ஒன்றினை நிலைநாட்டும் வழியில் வெகுதூரம் சென்றனர். அதன்படி மன்னருடைய ஆணைகட்குப் பணிந்து நடந்ததாகக் கூறி எந்த அமைச்சரும் அரியணையின் பின் பாதுகாப்புப் பெறமுடியாது. அதற்கு மாறாக அரசாங்கத்தின் நடவடிக்கைகளின் சட்டமுறையான தன்மைக்குப் பொறுப்பானவர் என்பதோடு, அச் செயல்களின் நேர்மை நியாயத்திற்கும் பயனுக்கும் அமைச்சரே பொறுப்பேற்க வேண்டும். இங்ஙனம் பெருங் கொள்கை அளவினவான செய்திகளில் பாராளுமன்றத்தின் இரு சபைகளுடைய நடைமுறைக் கட்டுப்பாட்டிற்கு நிர்வாகத் துறையை உட்படுத்தியது.[33] இக் கொள்கை 1388ஆம் ஆண்டில் ஏற்கெனவே காணப்பெற்றது உண்மையே.[34]

(2) கிளாரண்டன் பிரபு வழக்கின்போது நேர்ந்ததைப் போலவே குற்றவாளியை டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பும் விஷயத்திலும் பிரபுக்களுக்கும் காமன்ஸ் சபையினருக்குமிடையேவேற்றுமைதோன்றியது. அரசியல்குற்றச்சாட்டு வாசகக் கூறுகளில் கண்டவாறு, டான்பிக்கு எதிரான பழிகள் அரசத் துரோகக் குற்றம் சார்ந்த சட்டங்களின் நியாயமான விளக்கங்களில் அடங்குமென்று கொள்ளமுடியாது. அவைகள் தீச்செயல்களைக் குறிப்பனவாகவே காணப்பட்டன. தள்ளிப் போடப்பெற்ற விவாதத்திற்குப் பிறகு, அரசத் துரோகக் குற்றத்திற்கான வெளிப்படைச் செயலைக் குறித்துக் குறிப்பான குற்றச்சாட்டு இல்லாத நிலையில், 'நாட்டைக் காட்டிக்கொடுக்கும்

வகையில்' என்னும் வாசகத்தில் அடங்கும் 'பொதுவான பழி' சுமத்தியதன் பேரில் டான்பியை டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பப் பிரபுக்கள் மறுத்துவிட்டனர். சிறிது காலத்திற்குள், அதாவது, 1678ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 30ஆம் நாளில் கெவலியர் பாராளுமன்றம் ஒத்திப் போடப்பட்டது. ஆனால், 1679ஆம் ஆண்டு, மார்ச்சு திங்கள், 6ஆம் நாள் கூடிய அடுத்த பாராளுமன்றத் தொடர் அரசியல் குற்றச்சாட்டினை மீண்டும் கொண்டுவந்து, கிளாரண்டன் பிரபுவை வழக்கு விசாரணைக்கு வரவழைக்க முயன்றபோது நிறைவேற்றிய மசோதா போன்ற மற்றொரு மசோதாவினைக் கொண்டுவந்தனர். அதன் பிறகு பிரபுக்கள் தாங்களாகவே ஒரு தீர்மானம் கொண்டுவந்து, குற்றவாளியைப் பாராளுமன்றக் கருங்கோற்கட்டியரின் (Usher of the Black Rod) காவலில் வைக்கவேண்டும் என்றனர். இங்ஙனம் பிரபுக்கள் முதலிலே கொண்டிருந்த நிலையில் சிறிது விட்டுக்கொடுத்தபோதிலும், 'பொது நிலையான' அரசியல் குற்றச்சாட்டுகள் என்னும் பழக்கம் அவர்களுடைய எதிர்ப்புக் காரணமாகவே நின்றது எனக் கூறுவர். அப் பழக்கம் ஆபத்தான சூழ்நிலையை உருவாக்கிவிடும். 'நாட்டைக் காட்டிக் கொடுக்கும் வகையில் குற்றவாளி நடந்துகொண்டார்' எனக் கூறியே எந்த நடத்தையையும் அரசத்துரோகமானது எனக் கொள்ளலாம்.[35]

(3) பாராளுமன்றத்தின் அரசியல் குற்றச்சாட்டிற்கு எதிராக மன்னர் அளித்த மன்னிப்பை ஆதாரம் காட்டி வாதிடும் பிரச்சினையும் இந்த வழக்கில் எழுந்தது. காமன்ஸ் சபையினர் சுமத்திய குற்றங்களுக்கு எழுத்து மூலமாக பதில் அளிக்க வேண்டிய டான்பி, மன்னரிடமிருந்து இரகசியமாகப் பெற்ற மன்னிப்பை எடுத்துக்கூறி முறையிட்டார். டான்பியின்மீது சாட்டப்பெற்ற குற்றங்களை அது நீக்குவதாக அமைந்தது. 'அரசத்துரோகக் குற்றமோ அல்லது மற்றப் பெருங் குற்றங்களோ சாட்டப்பெற்ற ஒரு நபருக்கு, அக் குற்றங்களை நீக்கும் வகையில், மன்னிப்பு அளிக்கப்பட்டதற்கான முன்னிகழ்வு ஏதும் இல்லை' என காமன்ஸ் சபைக் குழு ஒன்று அறிவித்தது. 'டான்பி பிரபு எடுத்துக்காட்டி முறையிட்ட மன்னிப்பு முறைகேடானது, செல்லாதது' என்றும், 'இங்கிலாந்தின் காமன்ஸ் சபையினர் கொண்டுவந்த அரசியல் குற்றச்சாட்டிற்கு அது தடையாக இருக்கக்கூடாது' என்றும் அதே குழு தீர்மானித்தது.[36] ஆயின், பாராளுமன்றம் தள்ளிப்போடப்பட்டதாலும், மறுமுறையும் அந்த அரசியல் குற்றச்சாட்டுக் கொண்டு வரப்படவில்லையாதலாலும், இம் முறை அந்தப் பிரச்சினைக்கு

முடிவு ஏற்படவில்லை. காமன்ஸ் சபையினர் கொண்ட கொள்கை சட்டரீதியாகவும் அரசியல் அடிப்படையிலும் உகந்ததாகவே காணப்படுகின்றது. முறையார்ந்த குற்றச் சாட்டுடன் அரசு தொடரும் சாதாரணக் குற்ற வழக்குகளில், விசாரணைக்குமேல் மன்னிப்பளிக்கும் தனிச்சிறப்பதிகாரம் மன்னரிடம் இருந்தபோதிலும், அரசு தொடரும் வழக்காக அன்றி பாதிக்கப்பட்டவரோ அல்லது அவருடைய உறவினரோ மேல்முறையாகக் கொண்டுசெல்லும் வழக்குகளிலும் பெருங் குற்ற வழக்குகளிலும் மரண தண்டனையைக் குறைக்கும் அதிகாரம் மன்னரிடம் இல்லை.[37] சட்டத்தின் மூலமாகக் கழிவு காணும் உரிமையைத் தனி மனிதரிடமிருந்து பறிக்கும் அதிகாரமே அரசரிடம் இல்லை என்னும்போது, இங்கிலாந்தின் பொது மக்கள் அனைவரும் கொண்டுவரும் வழக்கான அரசியல் குற்றச் சாட்டில் அது எவ்வாறு இயலும்? ஆரம்ப காலத்தில் எப்படி இருந்தபோதிலும் இச் சமயத்தில் அரசு தொடரும் வழக்கன்று அரசியல் குற்றச்சாட்டு என்பது ஐயத்திற்கிடமின்றித் தெளிவானது. 'அரசியல் அடிப்படையில் பார்த்தாலும், குற்றவாளியின் இத்தகைய முறையீட்டை ஏற்றுக் கொள்வதானால், இருப்பதாகத்தோன்றியஅமைச்சரின் பொறுப்பு இல்லாது ஒழிந்துவிடும்.' ஏனென்றால், பாராளுமன்றத்தின் விசாரணையிலிருந்தும் நீதியிலிருந்தும் அரசருடைய தனிச்சிறப் பதிகாரம் பழியேற்றவரைக் காத்துவிடும். மூன்றும் வில்லியத்தின் 12, 13ஆம் ஆண்டின் வாரிசுரிமைச் சட்டம்தான் இப் பிரச்சினைக்கு ஒரு தீர்வினைக் கொண்டுவந்தது. 'காமன்ஸ் சபையினர் கொண்டுவரும் அரசியல் குற்றச்சாட்டிற்கு எதிராக, இங்கிலாந்தின் அரசப் பெருமுத்திரையுடன் அளிக்கும் மன்னிப்பு எதையும் காட்டி முறையிடுதல் கூடாது' என அச் சட்டம் அறிவித்தது. எனினும், தண்டனை வழங்கப்பெற்ற பின்பு தண்டனையைக் குறைக்கவோ அல்லது மன்னிப் பளிக்கவோ மன்னரின் உரிமை மாறாமல் இருந்தது. பெரு முத்திரை நாயகமான பேகன் (Bacon) மீதான தண்டனை முழுவதையும் முதலாம் ஜேம்ஸ் தள்ளிவைத்தார். 1715ஆம் ஆண்டு புரட்சிக் கலகத்தோடு தொடர்பு கொண்டதற்காக அரசியல் குற்றம் சாட்டப்பெற்று உரிமை இழக்கும் தண்டனை பெற்ற ஆறு ஸ்காட்டிய பிரபுக்களில் மூவருக்கு மன்னர் மன்னிப் பளித்தார். காமன்ஸ் சபையினரின் கோரிக்கையின்பேரில்தான் பிரபுக்கள் தீர்ப்பு வழங்க முடியும்.[38] அதனால் பழிசுமத்தப் பெற்றவரைக் குற்றவாளி எனப் பிரபுக்கள் கண்டவிடத்தும், தீர்ப்பினை அளிக்குமாறு கோர மறுப்பதன் மூலமாகக் குற்ற

வாளிக்குக் காமன்ஸ் சபையினர் மறைமுகமாக மன்னிப்பு அளிக்க முடியும்.

(4) பிரபுக்கள் மீதான மரண தண்டனைக்குரிய வழக்கு விசாரணைகளில் கலந்துகொண்டு வாக்களிக்கும் உரிமை பிஷப்புகளுக்கு உண்டா என்பது டான்பி பிரபுவின் அரசியல் குற்றச் சாட்டில் எழுந்த மற்றொரு பிரச்சினையாகும். திருச்சபையாளர் கொண்டாடிய பழைய உரிமையின் அடிப்படையில் எழுந்த பழைய வழக்கப்படி, மரண தண்டனை அல்லது முடமாக்கும் தண்டனை அளிப்பதில் பிஷப்புகள் கலந்துகொண்டது இல்லை என்பது ஏற்றுக்கொள்ளப்பட்டது. இவ் வழக்கில் குற்றச் சாட்டிற்குத் தடையாக அரச மன்னிப்பைக் காட்டி முறையீடு செய்த டான்பி செயலின் முறைமைத் தகுதி போன்ற பூர்வாங்கச் செயல்நிகழ்வுகளைப் பொறுத்தே இறுதித் தீர்ப்பு அமைவதால், அத்தகைய பூர்வாங்க விசாரணைகளில் பிஷப்புகள் பங்கு கொள்ளக்கூடாது எனக் காமன்ஸ் சபையினர் வாதிட்டனர். எனினும், 'மரண தண்டனைக்குரிய குற்ற வழக்குகளில் குற்ற வாளி அல்லது குற்றவாளியல்லர் என்று தீர்ப்புக் கூற வாக் கெடுக்கும் வரையில் நீதிமன்றத்தில் அமர்ந்து இருக்கும் உரிமை சமயப் பிரபுக்களுக்கு உண்டு' என்னும் தீர்மானத்தைப் பிரபுக்கள் நிறைவேற்றினர். அதிலிருந்து இம் முறையே வழக்கிலிருந்தது. இத் தீர்மானம் இரண்டாம் ஹென்றியின் பதினோராம் ஆண்டின் கிளாரண்டன் சட்டங்களில் (Constitution of Clarendon) 11ஆம் பகுதிக்கு இசைவாக இருந்தது. வழக்கு விசாரணைகளின்போது பிஷப்புகள் இருக்கவேண்டும் என்றும், சமயச் சட்டத்தை மதிக்கும் வகையில் மரண தண்டனை அல்லது முடமாக்கும் தண்டனை அளிக்க நேரும்போது அவர்கள் இருக்கவேண்டுமென்ற கட்டாயம் இல்லை என்றும் கிளாரண்டன் சட்டங்களில் வகை செய்யப்பட்டிருந்தது.[39] முற்றிலும் முறைமன்றச் செயல்நிகழ்வுகளுக்குத்தான் பொருந்தும், பிஷப்புகளை மட்டாக விலக்கிவைத்தல் உரிமை. இழப்பீடு மசோதாவின் எல்லாக் கட்டங்களிலும் வாக்களிக்கும் முழு உரிமையை அவர்கள் பெற்றிருந்தனர். ஏனெனில், குற்றவாளியின் உயிருக்கு ஊறு தேடும் வகையில் அமையும் மசோதாவெனினும், அடிப்படையில் முறைமன்றம் சார்ந்தது என்றாலும், உரிமை இழப்பீடு மசோதாவானது சட்டமியற்றுஞ் செயலேயாகும். 1696ஆம் ஆண்டில் சர் ஜான்

ஃபென்விக் (Sir John Fenwick) என்பாருக்கெதிராக உரிமை இழப்பீட்டு மசோதா வந்தபோது, அம் மசோதா நிறைவேற்றப் படவேண்டுமா என்னும் இறுதிப் பிரச்சினை உள்ளிட்ட எல்லாச் செயல்நிகழ்வுகளிலும் பிஷப்புகள் பங்கு பெற்றனர்.

(5) டான்பி பிரபுவின் வழக்கில் மற்றுமொரு பிரச்சினை முதல் முறையாக எழுந்தது. பாராளுமன்றம் தள்ளிவைக்கப் படுவதாலோ அல்லது கலைக்கப்படுவதாலோ அரசியல் குற்றச் சாட்டு விலகிவிடுமா என்பதே அப் பிரச்சினை. 'பிற நீதிமன்றங் களிலிருந்து பிழைபாட்டு ஆணைமூலமாகவோ அல்லது விண்ணப் பத்தின் மூலமாகவோ பாராளுமன்றத்திற்கு வந்து, ஒரே மன்றத் தொடரில் தீர்க்கப்படாது நிற்கும் வழக்குகள் அடுத்த மன்றத் தொடர் கூடும்வரை பழைய நிலையிலேயே இருக் கின்றனவா' என்பதை ஆராய 1673ஆம் ஆண்டில் பிரபுக்களைக் கொண்ட ஆணைக்குழு ஒன்று அமர்த்தப்பெற்றது. அக் குழுவின் உடன்பாட்டைக் கொண்ட அறிக்கையை சபை அங்கீகரித்தது. 1679ஆம் ஆண்டில் இதையொத்த மற்றுமொரு முடிவையும் பிரபுக்கள் சபை எடுத்தது. மன்றத் தொடர் தள்ளிவைக்கப் படும்போது வழக்குகளின் நிலை மாறுவது இல்லை என்பது போன்றே, பாராளுமன்றம் கலைக்கப்பெறும்போதும் மன்ற விசாரணைக்கு வந்த வழக்குகள் பாதிக்கப்படுவதில்லை எனக் கொண்டனர். டான்பி பிரபுவின் வழக்கைத் தனிப்பட்ட முறையில் குறிக்கும் வகையில் 'ஒரு பாராளுமன்றத்தில் காமன்ஸ் சபையினர் கொண்டுவரும் அரசியல் குற்றச்சாட்டுகள் அப் பாராளுமன்றம் கலைக்கப்பெறுவதால் பாதிக்கப்படுவதில்லை' எனத் தீர்மானம் இயற்றினர்.[40] 1763ஆம் ஆண்டின் விதிப்படி பிற முறைமன்றச் செயல்முறைகளைப் போலவே அரசியல் குற்றச்சாட்டுகளும் ஒரே நிலையில் வைத்து எண்ணப்பெறுதல் வேண்டுமென்று[41] கூறுகின்றவரையில் இத் தீர்மானம் நியாய மானதே. அது 1685ஆம் ஆண்டு வரையில் பாராளுமன்றச் சட்டமாகத் தொடர்ந்து வந்தது. ஆயின், அந்த ஆண்டில் அரசியல் குற்றச்சாட்டுகளுக்கு ஆளான 'போப்பைச் சார்ந்த பிரபுக்களைத்' (Popish lords) தப்புவிப்பதற்காக முந்தைய தீர்மானம் தலைகீழாக மாற்றப்பட்டு நீக்கப்பெற்றது.[42] முதல் தீர்மானத்தின்படி தொடர்ந்து வந்த டான்பி பிரபுவின் வழக்கு இறுதியாக வந்த தீர்மானத்தினால் முடிவுற்றது. 1684ஆம் ஆண்டுவரை பிணையத்தின்மீது விடுதலை பெற டான்பி பிரபுவால் முடியாத காரணத்தால், அவர் ஐந்து ஆண்டுகள் டவர் சிறையில் இடருற்றார். அதன்பின் மூன்றாம் வில்லியம் காலத்தில் பொதுவாழ்வில் பெரும்பங்கு கொண்டார். அவரை

1689ஆம் ஆண்டில் கார்மார்தன் மார்குவிஸ் பிரபுவாகவும் (Marquis of Carmarthen), 1694ஆம் ஆண்டில் லீட்ஸ் கோமகனாகவும் வில்லியம் மன்னர் ஆக்கினார். 1695ஆம் ஆண்டில் கையூட்டு வாங்கிய குற்றத்திற்காக டான்பி பிரபுவின்மீது காமன்ஸ் சபையினர் மீண்டும் அரசியல் குற்றம் சாட்டினர். ஆனால், முதன்மையாக இருந்த சான்றுளர் ஐரோப்பாக் கண்டத்திற்கு ஓடிவிட்டதால் மேற்கொண்டு நடவடிக்கை ஏதும் எடுக்க முடியவில்லை. இந் நிலையில் 1712ஆம் ஆண்டில் டான்பி பிரபு உயிர்நீத்தார். 1791ஆம் ஆண்டு வரையில் அரசியல் வழக்குத் தள்ளுபடியாகும் பிரச்சினை தீராமலேயே இருந்தது. அவ்வாண்டில்தான் வாரன் ஹேஸ்டிங்ஸின் மீதான அரசியல் குற்ற வழக்கு நடந்துகொண்டிருக்கும்போது இடையில் பாராளுமன்றம் கலைக்கப்பட்டது. அதனால் முந்தைய அரசியல் குற்ற வழக்குகளின் முன்னிகழ்வுகளை மறுசீராய்வு செய்து, பிரபுக்கள் சபை எடுத்த மாறுபட்ட முடிவுகளை ஆய்ந்து தீர்ப்பளிக்க வேண்டியது பாராளுமன்றத்திற்கு அவசியமானது. முழு விவாதத்திற்குப் பின் பிரபுக்கள் சபையில் முடிவு செய்யப் பெறாத அரசியல் குற்ற வழக்கில் தீர்ப்பளிக்கும்வரையில், அவ்வழக்கு ஒரு பாராளுமன்றத் தொடரிலிருந்து மற்றொரு தொடருக்கும், ஒரு பாராளுமன்றத்திலிருந்து மற்றொரு பாராளுமன்றத்திற்கும் பழைய நிலையிலேயே தொடர்ந்து வருதல் என்பது பாராளுமன்றச் சட்டப்படியும் மரபாகவும் நிலைநாட்டப் பெற்றது என இரு சபைகளிலும் பெருவாரியான வாக்குகளுடன் தீர்மானம் நிறைவேற்றினர்.[43]

**எட்வர்டு ஃபிட்ஸ்ஹாரிஸ் (Edward Fitzharris)** : அவர்மீது காமன்ஸ் சபையினர் அரசத்துரோகக் குற்றம் சாட்டினர். 'போப்பினர் சதி' பற்றிய உண்மைகளை அவரிடமிருந்து கறந்து யார்க் கோமகனுக்கெதிரான விலக்கு மசோதாவை (Exclusion Bill) விரைவுபடுத்துவதே காமன்ஸ் சபையினரின் நோக்கமாக இருந்தது. விக்குகளுக்கெதிராக அரசரின் இரகசிய ஆளாகவும் உளவாளியாகவும் இருந்த ஃபிட்ஸ்ஹாரிஸ் அதிகமாகவே, ஏன் தேவைக்கு அதிகமாகவே செய்திகளை அறிந்திருந்தார். அதன் காரணமாக இரண்டாம் சார்லஸ் மன்னர் அவரை ஒழித்துவிட விரும்பினர் என்று கருதப்பட்டது. காமன்ஸ் சபையினர் ஃபிட்ஸ்ஹாரிஸ்மீது அரசியல் குற்ற வழக்குத் தொடர்வதைத் தடுப்பதற்காக அவர்மீது அரசத்துரோகமான அவதூறு வழக்கினை அரச நீதிமன்றத்தில் தொடுக்குமாறு சட்டத் தலைமைப் பணிமுதல்வருக்குச்சார்லஸ் ஆணையிட்டார். அதேசமயத்தில் மரணதண்டனைக்குரிய குற்றத்திற்காகச் சாதா

ரணக் குடிமகன்மீது அரசியல் குற்ற வழக்குத் தொடரலாமா என்ற அரசியல் சட்டம் சார்ந்த முக்கியப் பிரச்சினை ஒன்றைப் பிரபுக்கள் எழுப்பினர். நீதிமன்றத்தின் நலன் கருதி, 'ஃபிட்ஸ் ஹாரிஸ்மீது அரசியல் குற்றம் சாட்டாது, பொதுச் சட்ட முறையிலேயே வழக்குத் தொடரவேண்டு'மென்று தீர்மானமும் இயற்றினர். இத்தகைய முடிவிற்கான ஆதாரங்கள் தரப்பட வில்லையாயினும், அவர் ஒரு சாதாரணக் குடிமகன் என்பதையே அதிகமாக வலியுறுத்தியதாகத் தெரிகின்றது. மூன்றும் எட்வர்டு மன்னராட்சியில் நான்காம் ஆண்டு தொடர்ந்த சர் சைமன் டி பெர்ஃபோர்டு (Sir Simon de Bereford) வழக்கில் முற்கோளாகக் கொள்ளப்பெற்ற ஆதாரம் பிரபுக்களுக்கு ஆதரவாக இருந்தது. எனினும், சர் சைமன் மீது காமன்ஸ் சபையினர் அரசியல் குற்றம் சாட்டவில்லை. அதற்கு மாறாக ரோஜர் மார்டிமரின் (Roger Mortimer) அரசத் துரோகக் குற்றத்தில் பங்கு கொண்டதற்காகப் பிரபுக்கள் சபையில் அரசாங்கம் வழக்குத் தொடர்ந்தது. வழக்கில் தீர்ப்பளித்த பிறகு பிரபுக்கள் பேரறிவிப்பு ஒன்றினை விடுத்தனர். முழுப் பாராளுமன்றத்தில் மன்னரது இசைவோடு இப் பேரறி விப்பு செய்யப்பட்டதால் சிலர் அதனைச் சட்டமாகவே கொண் டனர். அதில் 'வருங்காலத்தில் மேலே குறிப்பிடப்பெற்ற தீர்ப்பினை மேற்கோளாகவோ, காரணகாரியத் தொடர்புடைய தாகவோ கொள்ளுதல் கூடாது. அவ்வாறு கொள்வதால் நாட்டுச் சட்டத்திற்கு விரோதமாகப் பிரபுக்களல்லாத மற்றை யோரை விசாரணை செய்யும் பொறுப்பு வருங்காலத்தில் பிரபுக் களுக்கே வந்துவிடும்' என விளக்கினர்.[44] இத் தீர்மானம் சட்டமாக அமைதல் ஐயமே. அப்படியே இருந்தாலும் பெர்ஃபோர்டு வழக்கை ஒத்தனவற்றிற்கே அது பொருந்து வதாக இருந்ததேயன்றி, காமன்ஸ் சபையினர் கொண்டுவரும் அரசியல் குற்றச்சாட்டிற்குப் பொருந்தாது. அடுத்து வந்த வழக்குகளில் சாதாரணக் குடிமக்கள்மீது மரணதண்டனைக்குரிய குற்றத்தை அரசு சுமத்தியபோது விசாரணை செய்ததன் மூலமாகப் பிரபுக்கள் தாங்களே இயற்றிய தீர்மானத்தை மீறினர். ஆயினும், காமன்ஸ் சபையினர் தொடரும் அரசியல் குற்ற வழக்கு முற்றிலும் வேறான தன்மைகொண்டது என்பது ஏற்றுக்கொள்ளப்பெற்றது. சாதாரணக் குடிமக்கள்மீது அரசியல் குற்ற வழக்குத் தொடரப்பெற்றதற்கான முன்னிகழ்வு கள் இரண்டாம் ரிச்சர்டு ஆட்சியில் ஏராளம். அண்மையில் முதலாம் சார்லஸ் ஆட்சிவரையிலும் எவ்வித எதிர்ப்புமின்றி இவ்வுரிமை கொண்டாடப்பெற்றது.[45] மேற்கூறிய பிரபுக்களின் தீர்மானத்தை முறியடிப்பதற்காகக் காமன்ஸ் சபையினர், 'அத்

தீர்மானம் நீதியைப் புறக்கணிப்பது, பாராளுமன்றங்களின் அரசியல் சட்டத்தை மீறுவது, போப்பினர் சதிபற்றி மேலும் உண்மைகளை அறிந்துகொள்ளத் தடையாக இருப்பது' என்றும், 'பாராளுமன்றத்தில் அரசியல் குற்றம் சுமத்தப்பெற்ற எட்வர்டு ஃபிட்ஸ்ஹாரிஸ்மீதோ அல்லது வேறெவர்மீதோ, அதே குற்றத்திற்காகத் தாழ்நீதிமன்றங்கள் நடவடிக்கை எடுப்பது பாராளுமன்றத்தின் சிறப்புரிமைகளை மீறுவதாகும்' என்றும் அறிவித்துத் தீர்மானம் இயற்றினர்.[46] சற்றுப் பின்னர் பாராளுமன்றத்தை மன்னர் கலைத்தார். அரச நீதிமன்றத்தில் குற்றம் சாட்டப்பெற்ற ஃபிட்ஸ்ஹாரிஸின் வழக்குத் தொடர்ந்து நடைபெற்றது. தம் மீது சுமத்தப்பெற்றிருக்கும் அதே குற்றத்திற்காகப் பாராளுமன்றத்தில் அரசியல் குற்ற வழக்கொன்று தீர்க்கப்படாமலே இருப்பதால் இவ் வழக்குப் பாராளுமன்றத்தின் உரிமையில் தலையிடுவதாகுமென்று ஃபிட்ஸ்ஹாரிஸ் முறையிட்டார். ஆனால், அம் முறையீட்டைத் தள்ளுபடி செய்தனர்: அவரைக் குற்றவாளி எனக் கண்டு மரண தண்டனையும் விதித்தனர்.[47]

தனியான ஃபிட்ஸ்ஹாரிஸ் வழக்கில் பிரபுக்கள் கொண்டு வந்த அரசியல் சட்ட முறை சாராக் கொள்கையானது பின் வந்த தீர்மானம் ஒன்றினால் சிதைந்தது. இரண்டாம் ஜேம்சின் தனியுரிமைப் பேரறிவிப்பாணையை வெளியிட்டதற்காக சர் ஆதாம் பிளேர் (Sir Adam Blair), மற்றும் நான்கு சாதாரணக் குடிமக்கள் மீதும் புரட்சிக்குப்பின் 1689ஆம் ஆண்டில் அரசத் துரோகம் செய்தவர்களென அரசியல் குற்றம் சாட்டப்பெற்றது. மேற்கோள்களை ஆராய்வதற்கு என்று ஆணைக்குழு ஒன்று நிறுவப்பட்டது. முழு விவாதத்திற்குப் பின் நீதிபதிகளுடைய கருத்தை அறியவேண்டுமென்ற தீர்மானத்தைத் தள்ளுபடி செய்த பிரபுக்கள், அரசியல் குற்ற வழக்குகளைத் தொடர்ந்து நடத்துவது என முடிவு செய்தனர்.[48]

போர்ட்லண்டின் ஏர்ல் பிரபுவான வில்லியம் பென்டிங்க் (William Bentinck, Earl of Portland), ஆர்ஃபோர்டு ஏர்ல் பிரபுவான எட்வர்டு ரஸ்ஸல் (Edward Russel, Earl of Orford), ஹாலிஃபாக்ஸ் ஏர்ல் பிரபுவான சார்லஸ் மான்டேகு (Charles Montagu, Earl of Halifax), சோமர்ஸ் பிரபுவான ஜான் (John, Lord Somers): 1700ஆம் ஆண்டில் ஸ்பானியப் பிரிவினை உடன்படிக்கைகள் உருவாவதில் பங்கு பெற்றதற்காகவும், குறிப்பிடப்பெற்ற வேறு சில முறைகேடான செயல்களுக்காகவும் மேலே குறிப்பிட்ட நான்கு விக்கு பிரபுக்களின்மீதும்,

டோரிகளின் செல்வாக்கிலிருந்த காமன்ஸ் சபை, அரசத் துரோகக் குற்றம் சாட்டியது. வழக்கு விசாரணையின் முறை பற்றியும் காலம் பற்றியும் இரு சபைகளும் சச்சரவிட்டன. குறித்த நாளில் சான்றுளர்களைக் கொண்டுவரக் காமன்ஸ் சபையினர் மறுத்ததால் அரசியல் குற்றம் சாட்டப்பெற்ற நான்கு அமைச்சரும் விடுவிக்கப்பெற்றனர்.[49] இவ் வழக்குகளில் பல சிறு குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரம் இருந்திருக்கலாம்; எனினும், அரசியல் குற்றம் சாட்டுவதற்கு நியாயமில்லை. இவைகள் 'கட்சி உணர்வின் இழிந்த எடுத்துக்காட்டு எனப் பொதுவாகக் கொள்ளப்பட்டது' என்று ஹாலம் குறிப்பிடுவார்.

**ஹென்றி சச்சிவெரல்** (Henry Sacheverell) : வரையறையற்ற சாத்வீகப் பணிவுக் கோட்பாட்டினை உணர்த்தும் இரு சமயச் சொற்பொழிவுகளை டர்பியிலும் செயின்ட்பால் கோவிலிலும் நிகழ்த்தியதற்காக சௌத்வார்க்கிலுள்ள (Southwark) செயின்ட் சேவியர் கோயில் குருவான ஹென்றி சச்சிவெரல் மீது காமன்ஸ் சபையினர் அரசியல் குற்றம் சாட்டினர். இவ் வழக்கு 'அரசியல் சட்டரீதியில் அதிமுக்கியத்துவம் வாய்ந்தது' என்றும், 'புரட்சியைப் பாதுகாக்கும் கருத்துகளின் உண்மையான விளக்கமாகவும் அதிகாரபூர்வமான அங்கீகாரமாகவும் அமைந்தது' என்றும் ஹாலம் குறிப்பிட்டார்.[50] தீவிர யாகோபியரான லாக்கார்ட் (Lockhart) பின்வருமாறு குறிப்பிட்டார் : 'காமன்ஸ் சபையினர் நியமித்த பொறுப்பாளர்கள் கற்பனையிலடங்கா ஆணவத்துடன் நடந்துகொண்டனர். அரசுரிமை மரபாகவும் மாற்ற முடியாததாகவும் இருக்குமானல், முறையான உரிமை கொண்டவர் கடலுக்கப்பால் இருக்கும் இளவரசரே (அதாவது, வில்லியம் மன்னரே)யன்றி இராணியார் அல்லர் என்றும், இராணியார் பெற்றிருக்கும் உரிமை மக்கள் அளித்ததே என்றும் விவாதத்தின் போது அரசியாரின் முன்னிலையிலேயே அவர்கள் துணிவுடன் வலியுறுத்தினர். மேலும், அரசியல் சட்டத்திற்கு ஆதாரமாகி, நாட்டின் சட்டங்களால் ஏற்றுக்கொள்ளப்பெற்ற புரட்சிக் கருத்துகளின்படி காரணம் இருக்குமாயின், வேந்தரை வெளியேற்றவும் தள்ளி வைக்கவும் மக்களுக்கு உரிமையுண்டு எனவும் வாதாடினர். இத்தகைய வாதங்களில் பெருமளவு உண்மையிருந்தது எனினும், குடிமக்களின் பெருங்கூட்டத்தில் ஆர்ந்தமைந்த முறையில் தமது முன்னிலையிலேயே வலியுறுத்தியதை அரசியார் விரும்பவில்லை எனக் கூறலாம். ஏனெனில், தங்களது பட்டத்து உரிமையை ஆதரிக்கும் வகையில் உதவும் வரையில் இது போன்றகோட்பாடுகளை இளவரசர்கள் போற்றினர்கள் என்று

லும், ஆட்சியைக் கைப்பற்றிய பிறகு, ஐயத்திற்கிடமின்றி மர புரிமையால் ஆட்சியைப் பெற்றவர்களைப் போலவே, அவர்களும் இத்தகைய கோட்பாடுகளை வெறுத்தனர்.[51] 69-க்கு 52 என்னும் விதத்தில் பிரபுக்கள் சச்சிவெரலைக் குற்றவாளியெனக் கண்டனர். ஆயினும், எளிய தண்டனையே விதித்தனர். மூன்று ஆண்டுகளுக்கு அவர் சமயச் சொற்பொழிவு ஆற்றுதல் ஆகாது என்றும், மரண தண்டனை நிறைவேற்றுபவனே அவரது உபன்னியாசங்களைக் கொளுத்தவேண்டுமென்றும் விதித்தனர். அதன் பின் ஹால்போர்னில் (Holborn) செயின்ட் ஆண்ட்ரூ கோயிலில் வசதியான வாழ்க்கையை ஆன் அரசியார் அவருக்கு அளித்தார். 1724ஆம் ஆண்டில் சச்சிவெரல் இவ்வுலக வாழ்வை நீத்தார். அவர்மீது குற்றம் சுமத்திய விக்குகள் அரசியல் ரீதியாக வகுப்பு முறை சார்ந்த பெருந்தவறிழைத்துவிட்டனர் எனலாம். எவ்வாறெனில், அடுத்து வந்த பொதுத் தேர்தலில் டோரிகள் பெரும்பான்மையினராக வரவும், விககு மந்திரிசபை வீழவும் காரணமாக இருந்த டோரிகளுக்கான ஆதரவை இவ் வழக்குத் திரட்டித்தந்தது.[52]

**ஆக்ஸ்ஃபோர்டு ஏர்ல் பிரபுவான ராபர்ட் ஹார்லி** (Robert Harley, Earl of Oxford), **பாலிங்புரோக் வைகவுன்டான ஹென்றி செயின்ட் ஜான்** (Henry St. John, Viscount Bolingbroke), **ஆர்மாண்டு கோமகனுன ஜேம்ஸ் பட்லர்** (James Butler, Duke of Ormond): *1713*ஆம் ஆண்டில் உட்ரக்ட் உடன்படிக்கையைப் (Peace of Utrecht) பேசி முடிப்பதில் பங்கு கொண்ட டோரி அமைச்சர்களாகிய இவர்கள்மீது காமன்ஸ் சபையினர் அரசியல் குற்றம் சுமத்தினர். பாலிங்புரோக்கும் ஆர்மாண்டும் ஃபிரான்சிற்கு ஓடினர். நாட்டில் இல்லாத அவர்களுக்கு எதிராக உரிமை இழப்பீடு மசோதா கொண்டுவரப்பட்டது. தமது செயலுக்கு அரசர்தம் ஆணைகளை ஆதாரமாக எடுத்துக்காட்டி ஆக்ஸ்ஃபோர்டு பிரபு வாதிட்டார். டான்பிக்குப் பாதுகாப்பு அளிக்கத் தவறியதும், இதுபோது பொறுத்துக்கொள்ள முடியாததுமான இவ்வெதிர்த்தரப்பு வாதத்திற்கு, அமைச்சரின் பொறுப்புக் கோட்பாடு நன்கு நிலைநிறுத்தப்படாத அக் காலத்தில் பல ஆதரவாளர் இருந்தனர். செயல்முறைபற்றிப் பிரபுக்களுடன் முரண்பட்டு நின்ற காமன்ஸ் சபையினர் தொடர்ந்து குற்றஞ்சாட்ட மறுத்துவிட்டதால், இரண்டு ஆண்டுகளுக்கு டவர் கோட்டைச் சிறையில் அடைபட்டுக் கிடந்தபிறகு ஆக்ஸ்ஃபோர்டு பிரபு விடுதலையடைந்தார். புதியகட்சியின் வெற்றியைத் தொடர்ந்து, முந்தைய மந்திரிசபையின்மீதான அரசியல் குற்றச்சாட்டு வருமானால் அரசியல் வாழ்வு அஸ்தமித்துவிடும்

என்பதை அமைச்சர்களையும், முன்னாள் அமைச்சர்களையும், பிற்காலத்தில் அமைச்சராக வரக்கூடியவரையும் மிகுதியாகக் கொண்ட பிரபுக்கள் சபை உணர்ந்தது. எனவே, உணர்ச்சியின் வேகம் தணியும்வரை காலங்கடத்துவதற்காகத் தெளிவற்ற செயல்முறைகளைப் பிரபுக்கள் கையாண்டனர்.

முற்றிலும் அரசியல் சார்பான அரசியல் குற்ற வழக்குகளில் இவ் வழக்கே இறுதியானது. அமைச்சர்கள் எப்போதும் பாராளுமன்றத்திற்குப் பொறுப்பானவர் என்பதால் தீவிரமான பெருங் குற்றங்களைச் செய்ய அவர்களால் இயலாது. மேலும், கொள்கையிலோ, நடத்தையிலோ தோன்றும் சிறு சிறு பிழைகளுக்குப் பதவி இழப்பே போதுமான தண்டனையாக இருந்தது.

**வாரன் ஹேஸ்டிங்ஸ்** (Warren Hastings), **மெல்வில் பிரபு** (Lord Melville): 'கடந்த நூறு ஆண்டுகளில் இரண்டே அரசியல் குற்ற வழக்குகள் தோன்றின. ஒன்று இந்தியாவில் மோசமான ஆட்சி நடத்தியதற்காக வாரன் ஹேஸ்டிங்ஸ்மீதும், மற்றொன்று பணித்துறைப் பொறுப்புக்கேடான நடத்தை பற்றி 1804ஆம் ஆண்டில் மெல்வில் பிரபுமீதும் தொடரப்பட்டன. முந்தியவர் அரசாங்க அமைச்சர் அல்லர். பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்ட குற்றங்கள் புரிந்ததற்காகக் குற்றவாளியானார். பிந்தியவர்மீது சுமத்தப் பெற்ற குற்றங்களோவெனின், பொறுப்புவாய்ந்த அமைச்சர் என்னும் வகையில் அவரது அரசியல் கடமைகளோடு எவ்விதத்திலும் தொடர்புகொண்டவையல்ல' இவ்வாறு மே (May) என்பார் தமது நூலில் எழுதினர்.[53]

## பிரபுக்கள் சபை

கியூரியா ரீஜிஸ் (Curia Regis) என்னும் பண்டைய அரச சபையின் வழிவந்த பிரபுக்கள் சபையானது புரட்சிக்குப் பிறகு அளவிலும், அமைப்பிலும், அரசியல் செல்வாக்கிலும் மாற்றமடைந்தது. இந்த மாற்றமானது அதே காலப்பகுதியில் சட்டமியற்றுவதிலும் அரசாங்கத்திலும் அரசருக்கிருந்த நடைமுறையார்ந்த அதிகாரத்தில் ஏற்பட்ட உண்மையான மாற்றத்தைவிடப் பெரிது.

**பிரபுக்களின் எண்ணிக்கை:** ரோஜாப்பூப் போர்கள் தொடங்குதற்கு முன் இறுதியாக 1454ஆம் ஆண்டில் கூடிய

பாராளுமன்றத்திற்கு 56 சமயம்சாராப் பிரபுக்கள் வந்திருந்தனர். ஏழாம் ஹென்றியின் முதல் பாராளுமன்றத்திற்கு 28 பிரபுக்களே 1485ஆம் ஆண்டில் அழைப்பு ஆணைகளைப் பெற்றனர். எட்டாம் ஹென்றியின் ஆட்சியில் அதிகபட்சமாக ஐம்பத்தொருவரே அழைக்கப்பெற்றனர். எலிசபெத் அரசியார் காலத்தில் இவ் வெண்ணிக்கை சிறிது கூடியது. இதற்கிடையில் மடங்களை அழித்த காரணத்தால் ஏறக்குறைய முப்பது ஆபட்டுகளும் (Abbots) திருமடத் தலைவர்களும் பிரபுக்கள் சபையிலிருந்து நீக்கப்பெற்றனர். அதனால் எட்டாம் எட்வர்டு ஏற்படுத்திய ஐந்து மாவட்டச் சமயத் தலைமைக் குருக்களையும் சேர்த்துச் சமயப் பிரபுக்களின் எண்ணிக்கை இருபத்தாறாகக் குறைந்தது. அப்போதிருந்து அதே நிலை தொடர்ந்து வருகின்றது.[54] 193 புதிய பிரபுக்களை நான்கு ஸ்டூவர்டு மன்னர்கள் நியமித்தனர். ஆயினும், அவர்கள் ஆட்சிக் காலங்களில் 99 பிரபுக்கள் மறைந்து விட்டதால், 1688ஆம் ஆண்டுப் புரட்சியின்போது உண்மையில் 150 பிரபுக்களே இருந்தனர். மூன்றும் வில்லியமும் ஆன் அரசியாரும் பிரபுக்களின் எண்ணிக்கையை 168 ஆக உயர்த்தினர்.

**சார்பாளப் பிரபுக்கள்** (Representative Peers) : ஸ்காட்லாந்துடனை ஐக்கியச் சட்டம் (Act of Union) நிறைவேறியதன் பயனாக 1707ஆம் ஆண்டிலிருந்து பிரபுக்கள் சபையின் அளவு மேலும் பெருகியது. ஒவ்வொரு பாராளுமன்றத் தொடக்கத்திலும் ஸ்காட்லாந்து நாட்டிலிருந்து தேர்ந்தெடுக்கப்பெற்ற பதினாறு பிரபுக்கள் சபையில் இடம்பெற்றனர். இத்தகைய முன்பின் அறியப்படாத கூறு, தங்கள் சபைக்கு வருவதைப் பிரபுக்கள் விரும்பினார் இல்லை. வெகு விரைவிலேயே தேர்தல் விண்ணப்பங்களை ஆராய்ந்து முடிவுசெய்யும் விசித்திரமான நிலையில் அவர்கள் இருந்ததோடு, ஸ்காட்டிய, ஆங்கில, பிரிட்டிஷ் பிரபுத்துவங்களுக்கிடையே உள்ள உறவுநிலைபற்றிய கடினமான பிரச்சினையைத் தீர்த்துவைக்க வேண்டியதாயிற்று. ஒரு வகையான பகைமைச் சூழ்நிலையிலேதான் காரியங்கள் நடைபெற்றன. அரசியல் நோக்கங்களின் செல்வாக்கினாலும், முன்னுக்குப் பின் முரணாக இருந்ததாலும் எடுத்த முடிவுகள் மேலும் மோசமாக இருந்தன.[55] இங்ஙனம் ஸ்காட்டிய பிரபு ஒருவர் பிரிட்டிஷ் பிரபுத்துவம் அடைய நேர்ந்ததில் என்னவாயிற்று என்பதைக் கவனிப்போம். குயின்ஸ்பரியின் ஸ்காட்டிய கோமகன் 1708ஆம் ஆண்டில் டோவரின் பிரிட்டிஷ் கோமகனாக மாறியபோது, மரபாக வரும் பிரபுவைப்போல் சபையில் அமர்ந்தார். ஆனால், 1711ஆம் ஆண்டில்

ஹாமில்டனின் ஸ்காட்டிய கோமகன் பிராண்டன் கோமகனுக நியமிக்கப்பட்டபோது சபையில் அமர அனுமதி கிடைக்கவில்லே. 1782ஆம் ஆண்டில் பிற்கால ஹாமில்டன் கோமகன் ஒருவர், பிராண்டன் கோமகனுக அமர அனுமதி பெறும் வரையில் இம் மனப்பான்மையே நிலவியது பிரிட்டிஷ் பட்டங்கள் பெற்றபோதிலும் சட்டப்படியான பதினறு ஸ்காட்டிய சார்பாளப் பிரபுக்களே மட்டுமே பிரபுக்கள் சபை பொறுத்துக் கொள்ள முடியும் என்னும் உணர்வு தோன்றியிருந்தது. ஆயினும், ஸ்காட்டிய பட்டங்களுக்குரிய வாரிசுகளுக்கு பிரிட்டிஷ் பிரபுத்துவம் அளிப்பதன் மூலமாக இவ் விதியைக் கடக்கும் வழியை அரசாங்கங்கள் கையாண்டன. அது போன்ற நிலைமைகளில் ஸ்காட்டிய பட்டத்தை அடைந்த பிரிட்டிஷ் பிரபுவை நீக்குதற்குச் சபை துணியவில்லே.

தேர்தல் விண்ணப்பம் 1709ஆம் ஆண்டில்தான் பிரபுக்கள் சபைக்கு முதல் முறையாக வந்தது. பிரிட்டிஷ் பிரபுத்துவம் பெற்ற ஸ்காட்டிய பிரபுவானவர் ஸ்காட்லாந்து பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்கும் உரிமை அற்றவர் என முடிவு செய்யப்பட்டது. சபைக்கு நேரில் வரும் பிரபுவுக்கு பிரதிநிதி தேவையில்லே என்று குயின்ஸ்பரி வழக்கில் வலியுறுத்தப்பெற்ற விதிப்படி இம் முடிவு நேர்மையானதே. ஆனல், 1711ஆம் ஆண்டில் வந்த ஹாமில்டன் வழக்கிற்குப் பிறகு இவ் விதியினல் ஒரு குறை தோன்றியது. எப்படியென்றல், பிரிட்டிஷ் பிரபுத்துவம் பெற்ற ஸ்காட்டிய பிரபு சபையில் வந்து அமர்வதற்கு முடியாமல், பகராளைத் தேர்ந்தெடுக்கவும் முடியாமல் இக்கட்டான நிலேயில் இருந்தார். 'மிகக் கீழ்த்தரமான அல்லது படுபோக்கிரியான குடிமகனிலும் தாழ்ந்த நிலேயில்' அவர் இருந்தார். 1793ஆம் ஆண்டில் மாற்றியமைக்கும் வரையில் இந்த வாக்குரிமை பறிக்கும் முடிவு நிலேத்து நின்றது.

**ஸ்காட்டிய பிரபு பிரச்சினே :** இவற்றிற்கெல்லாம் அடியில் அரசியல், சமுதாயச் சிக்கல்கள் புதைந்து கிடந்தன. இங்கிலாந்தைக் காட்டிலும் வறுமை மிகுந்த நாடு ஸ்காட்லாந்து. செல்வ வளத்தில் ஆங்கிலப் பெருங்குடியினருக்கு ஸ்காட்டியப் பிரபுக்கள் மிகத் தாழ்ந்தவர்கள். அரசர், அமைச்சவை, வாக்காளர் போன்ற வெளிப்புறச் சக்திகளுக்குட்படாது அரசியல், பொருள் வாழ்வு ஆகியவற்றில் முழுச் சுதந்திரம் பெற்ற உறுப்பினரைக் கொண்டதாகப் பிரபுக்கள் சபை இறுமாந்திருந்தது. அச் சபை சிலவராட்சிச் சின்னம் என்பது உண்மையே. அத்தகைய சிலவ்ராட்சி பெற்றிருக்கும் சில சிறப்புகளே அது

துறந்துவிடவில்லை.[56] இத்தகைய திட்டத்தில் பொருந்தாத தேர்தலேயும் பொருளாதாரத் தளர்வையும் ஸ்காட்டியர் புகுத்தினர். பிரிட்டிஷ் பட்டங்களின் மூலமாக மரபுரிமையால் வரும் இடங்களைப் பிடிக்க அவர்கள் நடத்திய போராட்டத்தின் நிலைமாற்றத்தைச் சற்று முன்னர்தான் பார்த்தோம். அவர்கள் பெரும் பதவி வேட்டைக்காரர்களாகவும் இருந்தனர். தங்களுடைய நலன்களைப் பெருக்கிக்கொள்ளும் நாளுக்காக மன்னரையும் மந்திரி சபையையும் எதிர்நோக்கி நின்றனர். அடிக்கடி ஒரு கூட்டாக வாக்களித்தனர். அதன் காரணமாகச் சபையில் வாக்கெடுப்பு நடைபெறும்போது சமநிலையை அவர்களால் மாற்ற முடிந்தது. அரசாங்கத்திற்கு அரசியல் ரீதியாக அவர்கள் ஆதரவான ஆஸ்தியாகவும் இருக்கலாம் அல்லது அபாயமாகவும் இருக்கலாம். வெகு விரைவிலேயே ஸ்காட்டிய சார்பாளப் பிரபுக்களைத் தேர்ந்தெடுக்கும் அரசியல் அமைப்பினை அரசாங்கம் கைப்பற்றித் தன் பிடியில் வைத்துக்கொண்டது. காமன்ஸ் சபைக்கு வரும் நாற்பத்தைந்து ஸ்காட்டிய உறுப்பினரின் தேர்தலில் ஸ்காட்டிய பிரபுக்கள் பெருமளவில் செல்வாக்குச் செலுத்த முடியும் என்பதையும் கவனித்தல் வேண்டும். அந்த வகையில் அவர்களுடைய ஆதரவு விரும்பத்தக்கது. இவற்றினால் வந்த விளைவு தனித்திறம் வாய்ந்ததாய் இருந்தது. சக்திச் சமநிலையைக் கட்டுப்படுத்துவதன் மூலமாகவும், பதவியிலிருக்கும் எந்த மந்திரி சபைக்கும் தமது ஆதரவை விற்பதன் மூலமாகவும் ஆங்கில விவகாரங்களில் ஸ்காட்டிய பிரபுக்கள் மிகுந்த செல்வாக்கடைந்தனர். ஆயினும், ஸ்காட்லாந்து விவகாரங்கள் பாராளுமன்றத்திற்கு வரும்போது ஸ்காட்டிய பிரதிநிதிகள் இரு சபைகளிலும் எளிதாகத் தோற்றுப்போவது என்பது பலமுறை நடைபெற்ற நிகழ்ச்சியாகும்.[57]

ஆன் அரசியாரின் ஆட்சியில் கட்சி அரசியல் பெருத்த மாறுதல்களுக்கு உள்ளாகியது. பொதுச் செய்திகளில் கட்சி உணர்வு மேலும் மேலும் நிரந்தரக் காரணக் கூறாகியது. அதனால் நாட்டு மக்களின் மனநிலையில் தோன்றும் திடீர் மாற்றங்களுக்கு ஏற்றவாறு மரபுவழியாக வரும் பிரபுக்கள் சபையால் ஈடுகொடுக்க முடியவில்லை. மேலும், சில பெரு நெருக்கடி காலங்களைத் தவிர, மற்றச் சமயங்களில் இரு சபைகளின் பண்புகளிலும் ஒன்றிற்கொன்று மாறுபடும் நிலை இருந்தது. கடந்த காலத்தில் பொதுவாகச் சிறப்புரிமை பொறுத்த செய்திகளிலேயே இரு சபைகளும் முரண்பட்டு நின்றன.[58] ஆனால், இதுபோது பொது அரசியல்பற்றியும்

பூசல் எழுவதற்கான வாய்ப்பு ஏற்பட்டது. இச் சூழ்நிலையில் தங்களுக்கும் தங்களுடைய கொள்கைகளுக்கும் மேல்சபையில் போதுமான பிரதிநிதித்துவம் இல்லை என்று சில சமயங்களில் அமைச்சர்கள் உணர்ந்தனர் எனவே, இந் நிலையை நிவர்த்தி செய்வதற்காகப் புதிய பிரபுக்களை நியமிக்கும் தனிச் சிறப்பதிகாரத்தைப் பயன்படுத்த வேண்டுமென்று மன்னரைக் கேட்டுக்கொண்டனர்.

**கட்சி அடிப்படையில் பிரபுக்களின் நியமனம்:** ஒரு குறிப்பிட்ட தீர்மானத்தை நிறைவேற்றப் போதுமான பெரும்பான்மையைக் கணித ரீதியாக உருவாக்கும் பிரச்சினை அன்று அது. சரியான முன்மதிப்பீடு செய்யப் போதுமான கட்டுப்பாடு கொண்டதாக இல்லை இருகட்சிகளும். ஆயினும், பிரபுக்கள் சபையில் தங்கள் கருத்துகளை முறையாக விளக்கவேண்டியது அவசியம் என்று மந்திரிசபைகள் உணர்ந்தன. அவ்வாறு செய்தாலே போதுமென்று பொதுவாக அவைகள் கருதின. இத்தகைய சூழ்நிலை 1703ஆம் ஆண்டில் தோன்றியது. காமன்ஸ் சபையில் டோரி கட்சியின் பெரும்பான்மையை நம்பியிருந்த கலவை மந்திரிசபை நான்கு டோரி பிரபுக்களை நியமிக்குமாறு செய்தது. ஆயின், விக்குகளுடைய எதிர்ப்புகளுக்குப் பணிந்து ஐந்தாவதாக ஒரு விக்கு பிரபுவையும் நியமிக்கச் செய்ததால் டோரிகளுடைய நிகர இலாபம் மூன்று பிரபுக்கள்தாம்.[59]

1712ஆம் ஆண்டில் தோன்றிய புகழ் பெற்ற 'பன்னிரு டோரிகள்' (tory dozen) நியமனம் இடரார்ந்த ஒன்றாகும். இம் முடிவினை எடுத்த அரசாங்கம் கூட்டு அமைச்சுகளைப் பீடிக்கும் தளர்ச்சியினால் இடருற்றது.[60] அதனுடைய இரு தலைவர்களான ஆக்ஸ்ஃபோர்டின் ஏர்ல் பிரபுவான ஹார்லிக்கும், பாலிங்புரோக் வைகவுன்டாக வந்த செயின்ட் ஜானுக்கும் இடையேயான பூசலும் அரசாங்கத்தைத் தொல்லைக்குள்ளாக்கியது. காமன்ஸ் சபையில் பெரும்பான்மைக் கட்சியாக இருந்த டோரி கட்சியிலும் ஒருமைப்பாடு காணப்படவில்லை. விறுவிறுப்புடைய 'அக்டோபர் சங்கம்' (October Club), அதைக் காட்டிலும் தீவிரமான 'மார்ச் சங்கம்' (March Club), 'மேலே பறப்போர்' (Highflyers), 'மனம் போனபோக்கினர்' (Whimsicals) எனப் பல் பிரிவுகளாகப் பிளவுண்டு கிடந்தது அக் கட்சி. நிதி ஊழல்பற்றிய அவதூறு ஒன்றும் நிலவியது. அயல் நாட்டவர் குடியுரிமைச் சட்டத்திற்கு எதிராகக் கிளர்ச்சி தோன்றியதால் அச் சட்டம் தள்ளுபடி செய்யப்பட்டது.[61] சிலவேளை இணக்க

மசோதாவை நிறைவேற்றுவதற்காகத் தீவிர டோரியாகவும், அதைவிடப் பிடிவாதமான திருச்சபையாளராகவும் விளங்கிய நாட்டிங்ஹாம் (Nottingham) பிரபு, தமது கட்சியிலிருந்து விலகி விக்குகளுடன் இழிவான பேரத்தில் இறங்கினர்.[62] புதிராயிருந்த 'ஸ்காட்டிய புரட்சியினுல்' பிரபுக்களும் காமன்ஸ் சபையினரும் முரண்பட்டு நின்றனர். இவை யாவற்றிற்கும் மேலாகச் சண்டையா, சமாதானமா என்னும் பெரும் பிரச்சினையும், விரைவாக நெருங்கிவந்த வாரிசுரிமைப் பிரச்சினையும் அரசாங்கத்தின் முன் நின்றன. முயன்றிருந்தால் அரசாங்கத்திற்கு எதிராகச் சிறிதளவான விக்குப் பெரும்பான்மையைப் பிரபுக்கள் சபை திரட்டி யிருக்க முடியும். ஆயின், மாறுபட்ட கருத்துகள் வலிமை வாய்ந்திருந்ததால் நிலையான கொள்கை வகுப்பது கடினமாக இருந்தது. சிக்கலான சூழ்நிலையை மேலும் சிக்கலாக்கினர் பதினறு ஸ்காட்டிய பிரபுக்களும்.

1712ஆம் ஆண்டு ஜனவரி மாதம் இரண்டாம் நாளன்று பன்னிரு புதிய பிரபுக்களும் சபையில் சென்றமர்ந்தனர். அன்றே வாக்கெடுப்புப் பிரிவை மாற்றி யமைத்து அரசர் கட்சிக்கு ஆதரவு காட்டினர். பிரபுக்கள் சபையிலிருந்த அமைதிக் கட்சியை வலுப்படுத்தவே அவர்கள் வந்ததாக எல்லோரும் எண்ணினர். ஆயின், உடன் இணைவான மற்ருெரு நோக்கமும் இருந்தது. அரச முத்திரை நாயகமாக இருந்து அழைப்பாணைகளைத்தயார் செய்யும் மனத்திற்கொவ்வாத பணி புரிந்த டார்ட்மவுத் பிரபுவின் (Lord Dortmouth) சொற்கள் இங்கே நோக்கத் தகுந்தன. கொண்ட குறிக்கோளை அடைய குறைவான அதிர்ச்சிதரும் வழிகள் இருக்கும்போது அத்துணை வெறுக்கத்தக்க முறையினைக் கையாள வேண்டிய அவசியம் என்ன என்று பிற்காலத்தில் ஆக்ஸ்ஃபோர்ட் பிரபுவைத் தாம் கேட்டதாகவும், அதற்கு அவர் ஸ்காட்டிய பிரபுக்கள் மட்டு மீறிய கோரிக்கைகள் விடுக்கும் அளவிற்குத் தங்களைப் பெரியோராக நினைத்துக்கொண்டிருக்கின்றனர் என்றும், அவர்கள் அளிக்கும் ஒவ்வோர் ஓட்டிற்கும் பரிசினை எதிர்நோக்க முனைந்துவிட்டனர் என்றும், அவர்கள் நினைப்பதுபோல் அவர்களுடைய உதவி அத்துணை அளவிற்குத் தேவையில்லை என்றும் கூறியதாகவும் டார்ட் மவுத் குறிப்பிட்டுள்ளார்.[63] கட்சி நோக்கத்தோடு பிரபுக்களை நியமித்தலை மக்கள் மிகுதியாக வெறுத்தனர். அடுத்து வந்த மன்னராட்சியில் ஆக்ஸ்ஃபோர்டுமீதான அரசியல் குற்ற வழக்கில் குற்றவாசகக் கூறுகளில் ஒன்ருக இச் செயல் இடம்பெற்றது.

சில நாள்களுக்குப் பிறகு ஸ்காட்டிய பிரபுக்களைத் தேர்ந்தெடுப்பதற்குப் பதிலாக மரபுரிமையால் வரும் பிரபுக்களைக் கொள்ளும் சாத்தியக்கூறுபற்றி ஆராயும் அதிகாரத்தைப் பிரபுக்கள் சபைக்கு அளிக்கும் வகையில் அரசரிடமிருந்து செய்தி வந்தது.[64] ஏனெனில், அதுபோது இந்த இரு கருத்துகளும் ஒன்றிற்கொன்று முரண்பட்டவை என்பது தெளிவாயிற்று. அரசரிடமிருந்து வந்த செய்தியினால் பயன் ஏதும் ஏற்படவில்லை. ஆயினும், அடுத்த ஆட்சியில் வேல்ஸ் இளவரசருடைய அரசியல் நடவடிக்கைகள் காரணமாக இப் பிரச்சினை மீண்டும் எழுந்தது. லீஸ்டர் மாளிகையில் கூடிய கருத்து வேறுபாடு கொண்ட விக்குகளும் டோரிகளும் சேர்ந்த கூட்டத்தின் தலைவராக இருந்த இளவரசர் தமது தந்தைக்கு எதிராகக் கிளம்பியவர்.

**ஸ்டான்ஹோப்பின் பிரபுத்துவ மசோதா, 1719 (Stanhope's Peerage Bill) :** இளவரசர் பட்டத்திற்கு வந்தால் தமது தனிச் சிறப்பதிகாரத்தைப் பயன்படுத்தி டோரி பிரபுக்களை நியமித்து மேல்சபையில் விக்குகளின் பெரும்பான்மை நிலையைக் குலைத்து விடுவாரோ என அஞ்சிய சண்டர்லண்டு, ஸ்டான்ஹோப் ஆகியோரது தலைமையில் இருந்த விக்கு மந்திரி சபையானது பிரபுக்களை உற்பத்தி செய்யும் மன்னர்தம் தனிச் சிறப்பதிகாரத்தைக் கட்டுப்படுத்தும் தீர்மானங்களை 1719ஆம் ஆண்டில் கொண்டுவந்தது. இங்ஙனம் முதலாம் ஜார்ஜ் மன்னரின் இணக்கத்தோடு சாமர்செட் கோமகன், மசோதா ஒன்றினைக் கொண்டுவந்தார். அதில் அரச குலத்தில் உதித்த இளவரசர் நீங்கலாக, அப்போதிருந்த 178 பிரபுக்களுக்குமேல் அறுவரைத் தான் அரசர் நியமிக்க வேண்டும். பழைய பிரபுக்கள் இறந்தால் அவர்களுக்குப் பதிலாகப் புதிய பிரபுக்களை நியமிக்கலாம்; ஸ்காட்லாந்திலிருந்து வந்த பதினாறு தேர்ந்தெடுக்கப்பெற்ற பிரபுக்களுக்கு மாறாக மரபுவழியாக வரும் இருபத்தைந்து பிரபுக்கள் வரவேண்டும் என்பன வகுக்கப்பட்டன. முன்பின் கேட்டறியாத இத் திட்டத்தினால் நாட்டிலும் பத்திரிகைகளிலும் பெருத்த, தீவிரமான விவாதம் தோன்றியது. வாழ்நாள் முழுவதும் நண்பர்களாக இருந்த அடிசனும் ஸ்டீலும் இதனால் பிரிந்தனர். 'அடிப்படையானவை' எனப் பொதுவாகக் கொள்ளப்பெற்ற வாசகக்கூறுகளைக் கொண்ட ஐக்கியச் சட்டத்தை இம் மசோதா எவ்வாறு பாதித்தது என்பதுபற்றித்தான் பிரபுக்கள் கவலையோடு கவனித்தனர். ஸ்காட்டிய பிரபுத்துவத்தில் மாற்றம் செய்வதே இத் திட்டத்தின் மையக் குறிக்கோளாக இருந்தது என்பதையும், பிரபுக்களைத் தோற்றுவிக்கும் வரையறையில்லாத

தனிச்சிறப்பதிகாரம் ஆபத்தானது என்பதையும் பொதுவாக எல்லோரும் உணர்ந்திருந்தனர். எனினும், அரசியல் சட்டத்தில் காணப்பெறும் சக்திகளின் தராதரத்தை இம் மசோதா எவ்வாறு பாதிக்கும் என்ற பரந்த கூறு மெள்ளத் தலைதூக்கியது. வால்போலும் பிறரும் காமன்ஸ் சபையில் இம் மசோதாவைத் தீவிரமாக எதிர்த்தனர். இறுதியில் இம் மசோதா 296-க்கு 177 என்னும் விதத்தில் பெருவாரியான வாக்குகளோடு தள்ளுபடியாயிற்று.[65] இம் மசோதாமட்டும் சட்டமாக நிறைவேறியிருக்குமானால், மன்னருக்கும் மக்களுக்கும் கட்டுப்படாது சுதந்திரமாக நிற்கும் நெருங்கிய செல்வர் குழுவாக மாறியிருக்கும் பிரபுக்கள் சபை. அரசியல் சட்டத்தின் சிக்கல் மிகுந்த செயல் முறையிலிருந்து 'காப்பு ஊடிதழ்' என்று வருணிக்கப்பெற்ற வழியினை அடைந்திருக்கும். எவ்வாறெனில், பொறுப்பு வாய்ந்த அமைச்சரின் ஆலோசனையின்பேரில் புதிய பிரபுக்களை நியமிக்கும் அதிகாரத்தின்மூலமாக நெருக்கடி நேரங்களில், காமன்ஸ சபையில் இருக்கும் பிரதிநிதிகளின்மூலமாக வெளிப்படும் மக்களுடைய விருப்பத்திற்குப் பிரபுக்களைத் தலைசாய்க்க வைக்க முடிந்தது. இங்ஙனமே தற்போதுள்ள பாராளுமன்ற அரசாங்கத் திட்டம் சீராகத் தொடர்ந்து பணியாற்ற முடிந்தது.

**பிட்டும் பிரபுத்துவமும்:** மூன்றும் ஜார்ஜ் மன்னர் பட்டமெய்தியபோது 174 பிரபுக்களே இருந்தனர். ஆயினும், அவரது நீண்ட கால ஆட்சியில் முன்பின் கண்டறியாத அளவிற்குப் பிரபுக்களின் எண்ணிக்கை பல்கிப் பெருகியது. அன்னாரது ஆட்சியின் முதல் பகுதியில், கட்சி அரசாங்கத்தைக் குலைக்கவேண்டுமென்ற உறுதிப்பாட்டினை நிறைவேற்றுதற்கான ஒரு வழியாகப் பிரபுக்களை நியமிக்கும் அதிகாரத்தை அரசரே பயன்படுத்தினர். ஆனால், பிரதமராக வந்த இளைய வில்லியம் பிட், அவ்வதிகாரத்தினை மற்றொரு வகையில் சிறந்த நோக்கத்திற்காகப் பயன்படுத்தினர். அமைச்சர் என்ற வகையில் தமது அதிகாரத்தை உறுதி செய்துகொள்ளவேண்டுமென்பது பிட்டினுடைய நோக்கங்களில் ஒன்று என்றாலும், பிரபுக்கள் சபையைச் சீர்திருத்துவதே அவருடைய பெரு நோக்கமாக இருந்தது. குறுகிய நோக்கத்தோடு தனித்த குலம் போன்றிருந்த பிரபுக்கள் சபையை, அறிவு, அரும்பெரு வெற்றிகள், முக்கியமாக இங்கிலாந்தின் வளரும் செல்வம் ஆகியவற்றின் பிரதிநிதிகளைக்கொண்ட பேரமைப்பாக மாற்ற வேண்டுமென்று அவர் கருதினர். தகுதிக்குப் பரிசளிக்கவும் பெருநிலக்கிழார்களிடையேயிருந்தும் வளங்கொழிக்கும் வகுப்

பாரிடமிருந்தும் பிரபுக்களை நியமிக்கவும் விரும்பினர். அதன் மூலமாக அப்போதிருந்த பிரபுக்களின் இயற்கைக்கு மாறான கூட்டுகளிலிருந்து மன்னரை விடுவிக்கவும் விழைந்தார்.[67] அவருக்குமுன் வந்தவர்களும் ஓரளவிற்கு இக் கொள்கையை நடைமுறையில் கொண்டுவந்தனர். அவர்கள் நியமித்தவர்களில் பலர் பெருந்தகுதி வாய்ந்தவர்கள் என்பது வெளிப்படை.[68] பட்டங்களும் பெருமைகளும் தமக்கு வேண்டா என்று வெறுத்து ஒதுக்கிய பிட், மேலே குறிப்பிட்ட நோக்கத்தோடு பிறருக்கு அவற்றை வரையறையின்றி வாரி வழங்கினர். தமது அரசாங்கத்தின் முதல் ஐந்தாண்டுகளில் 48 புதிய பிரபுக்களை அவர் நியமித்தார்; எட்டாம் ஆண்டு முடிவதற்குள் அறுபது எழுபது பிரபுக்களை நியமித்தார். அதன்பின் 1796–1797 ஆகிய இரண்டு ஆண்டுகளுக்குள் இருபத்தைந்து பேரைப் பிரபுக்களாக்கினர். அவரது 17 ஆண்டு அரசாங்கம் 1801ஆம் ஆண்டில் முடிவடைந்தபோது அவர் நியமித்த பிரபுக்களின் எண்ணிக்கை 141ஆக உயர்ந்திருந்தது.

பின்னல் வந்த அமைச்சர்கள் பிட்டின் உதாரணத்தைப் பின்பற்றினர். மூன்றும் ஜார்ஜ் மன்னரின் அறுபதாண்டுக் கால நீள ஆட்சியின் இறுதியில், ஏற்கெனவே இருந்த பிரபுக்களுக்குப் பதவி உயர்வு கொடுத்தது உட்பட, 388 பேருக்கு உயர்குடிப் பெருமகனர் நிலையை மன்னர் நல்கினர்.

**அயர்லாந்து பிரபுக்கள், 1801:** 1801ஆம் ஆண்டில் அயர்லாந்துடனை ஐக்கியத்தின் விளைவாகப் பிரபுக்கள் சபை மேலும் விரிவடைந்தது. ஸ்காட்டிய சார்பாளப் பிரபுக்களைப் போல் ஒவ்வொரு பாராளுமன்றத்திற்கும் தேர்ந்தெடுக்கப் படாமல் வாழ்நாள் முழுவதற்கும் தேர்ந்தெடுக்கப்பெற்ற இருபத்தெட்டு ஐரிஷ் சார்பாளப் பிரபுக்கள் வந்தனர். பழைய திட்டத்தினல் பெற்ற அனுபவம் காரணமாக இம் மாற்றம் தோன்றியிருக்க வேண்டும். அதே சமயத்தில் பிரிட்டனின் மேல்சபையில் அமர நான்கு ஐரிஷ் பிஷப்புகள் அனுமதிக்கப் பட்டனர் அயர்லாந்து பிஷப்புகளின் பிரதிநிதிகளாகப் பாராளுமன்றத் தொடர்களில், சுற்றிவரு முறையில் நான்கு பிஷப்புகள் இடம் பெற்றனர். ஆனல், 1869ஆம் ஆண்டில் அயர்லாந்து திருச்சபை அமைப்புக் குலைக்கப்பட்டதிலிருந்து பாராளுமன்ற இடங்களை[69] ஐரிஷ் பிஷப்புகள் இழந்தனர். 1921ஆம் ஆண்டிற்குப் பிறகு ஐரிஷ் சார்பாளப் பிரபுக்களுக்கான தேர்தல் நடைபெறவில்லை.

**பிற்காலப் பிரபுத்துவம்:** மூன்றும் ஜார்ஜ் மன்னரின் ஆட்சியில் அதிகப்படியான பிரபுக்களின் நியமனம், பிரபுக்கள் சபையின் எண்ணிக்கையை மட்டுமல்லாது அச் சபையின் பண்பையே பாதித்தது. J. R. கிரீன்[70] என்னும் அறிஞர் பின்வருமாறு விளக்கினர்: 'இங்கிலாந்து வரலாற்றில் முதல் முறையாக நமது அரசியல் அமைப்பின் பிற்போக்குக் கூருகப் பிரபுக்கள் சபை மாறியது. பிட் புகுத்திய மாற்றங்களின் முழுப் பயன் அப்போது இன்னும் வெளிப்படவில்லை யென்ருலும், சில வழிகளில் அவர் எதிர்பார்த்த முடிவிற்கு மாருன விளைவுகள் தோன்றின. மன்னரின் விருப்பத்திற் கிணங்கவே அமைந்த பிரபுக்களின் பெருக்கம், பட்டம் பதவிகளை அளிப்பதன்மூலமாக அரசர் பெறக்கூடிய செல்வாக்கி லிருந்து பிரபுக்கள் சபையை விடுவித்தது. நடைமுறையில் காமன்ஸ் சபையின்மூலமாகவே மன்னர் தமது அதிகாரத்தைச் செலுத்தியதால், அரசியலமைப்போடு இயைந்த ஆட்சியின் முறையான செயற்பாணியோடு பிரபுக்களின் தடையற்ற செயலை இணைப்பதில் இம் மாற்றம் தடையாக நின்றது. மற்ருெருபுறத்தில் பிரபுக்கள் சபை விரிவடைந்ததால், பொதுமக்களுடைய கருத்து உறுதியாக வெளிப்படும்போது அக் கருத்திற்கு அதிக ஆதரவை அச் சபை தந்தது. பெரும் பிரபுக்கள் சபைகளிடம் இயற்கையாக அமையும் சூழ்ச்சித் திறன் காரணமாகக் கீழ்சபையுடன் மோதல் எளிதில் தீர்க்க முடியாத சச்சரவாகாமல் தடுக்கப்பெற்றது. பொதுமக்க ளிடையே பிரபுக்கள் சபை பெற்ற செல்வாக்கு இத்தகைய மாற்றத்தின் நேரடியான விளைவு என்று கொள்ளலாம். உறுப்பினர்களின் பெரும்எண்ணிக்கையும், அநேகமாக எல்லாப் பிரிவுகளிலிருந்தும் உறுப்பினர் தொடர்ந்து சேர்த்துக் கொள்ளப்பட்டதும், ஐரோப்பிய நாடுகளில் இரண்டாவது சட்டமன்றங்களான மேல்சபைகளுக்கு இடையூருக இருந்த சந்தேகமும் வெறுப்பும் இல்லாமற்செய்துவிட்டன.'

பிரபுக்கள் சபையின் பெருக்கமும், மேலே சுருக்கமாகக் கூறிய வகையில் அமைப்பு மாற்றங்களால் அது பெற்றிருந்த பிரதிநிதித்துவப் பண்பும், பழைய அதிகாரத்தின் பெரும் பகுதி யையும் அரசியல் செல்வாக்கையும் அச் சபை பெறுமாறு செய்தன. எனினும், 1832ஆம் ஆண்டைய சீர்திருத்தச் சட்டத் திற்குப் (Reform Act) பிறகு சட்டமியற்றும் இணைச் சக்தி என்னும் நிலையிலிருந்து மேலும்மேலும் அச் சபை தாழ்ந்து, சீராய்வுச் சபையாகவும், தள்ளிவைக்கும் சபையாகவும் மாறத் தொடங்கியது ; காமன்ஸ் சபை அனுப்பிய மசோதாக்களைத்

திருத்தியும் மாற்றியும் அமைத்தது. அத்தகைய மசோதாக்களை முழுமையாக ஆதரிக்கும் மனநிலை மக்களிடம் இல்லாத சில சமயங்களில் அவைகளைத் தள்ளுபடி செய்தது. ஆயினும், நாட்டு மக்களின் எண்ணம் ஐயத்திற்கு இடமில்லாத வகையில் வெளிப்படும்போது அதற்குத் தலைவணங்கியது.[71]

**பிரபுக்களும் 1831, 1832ஆம் ஆண்டுச் சீர்திருத்த மசோதாக்களும்:** 1831ஆம் ஆண்டிலும் 1832ஆம் ஆண்டிலும் பிரபுக்கள் சபையுடன் நடைபெற்ற எளிதில் மறக்க முடியாத போராட்டத்திற்குப்பின் நிறைவேறிய சீர்திருத்த மசோதாவின் விளைவாக அமைச்சரும், காமன்ஸ் சபையினரும், மக்களும் ஆதரித்த மசோதாவை நிராகரித்த பிரபுக்கள் சபையின் அரசியல் அமைப்புச் சார்ந்த நிலை நன்கு உறுதி செய்யப்பெற்றதாகத் தோன்றுகிறது. இம் மசோதா நிறைவேறுவதற்கு அனுசரணையாக இருப்பதற்குப் பதினாறு பிரபுக்கள் நியமனம் செய்யப்பட்ட பிறகும் பிரபுக்கள் சபை எதிர்ப்புத் தெரிவித்தது. ஆயினும், அரசருடைய தனிப்பட்ட அறிவுரைகளினாலும், பெரும்பான்மை கிடைப்பதற்காகப் போதுமான எண்ணிக்கை கொண்ட பிரபுக்களை நியமிக்கவேண்டுமென்ற மந்திரி சபையின் கோரிக்கைக்கு அரசர் செவிசாய்த்தார் என அறிந்ததாலும் அவர்களுடைய எதிர்ப்பு நீங்கியது.[72]

புதிய பிரபுக்களை நியமிக்கப்போவதாக அச்சுறுத்தியது, ‘தனிச் சிறப்பதிகாரத்தைத் தவறான முறையில் பயன்படுத்தியதாகும்’ என்று அப்போது வெல்லிங்டன் பிரபுவும், பொதுவாக டோரி கட்சியினரும் குற்றம் சாட்டினர். ஆனால், இதற்கு கிரே பிரபு (Earl Grey) பின்வரும் பொருத்தமான விடையளித்தார்: ‘இத்தகைய தனிச் சிறப்பதிகாரம் இல்லையென்று வைத்துக் கொண்டால் அல்லது அதனை அரசியலமைப்புக்கு உகந்தவாறு செயற்படுத்த முடியவில்லையென்றால், எத்தகைய விளைவுகள் நேரும்? தீவிரமான சூழ்நிலைகளில் நிதியளிக்க மறுக்கும் சிறப்புரிமையால் அரசரைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தைக் காமன்ஸ் சபை பெற்றுள்ளது. அதேபோன்று காமன்ஸ் சபையைக் கலைக்கும் அதிகாரத்தின்மூலமாக அச் சபையின் புரட்சிகரமானதும் கண்மூடித்தனமானதுமான செய்கையைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் அரசருக்கு உண்டு. ஆனால், மன்னரும் மக்களும் தீர்மானமாக வெளியிட்ட விருப்பங்களைத் தாங்கள் விரும்பியபோது எதிர்க்கும் அதிகாரம் பிரபுக்கள் சபையினருக்கு இருந்து, அவ்வதிகாரத்தினை மாற்றியமைக்கும் வழி இல்லையானால், கட்டிலடங்காச் சிலவராட்சியின் பிடியில்

நாடு அகப்படும். அரசருக்கும் காமன்ஸ் சபையினருக்கும் எதிராகச் செயலாற்றும் அதிகாரத்தைப் பிரபுக்கள் சபையில் பெரும்பான்மையினர் பெற்றிருக்க வேண்டுமானுல், எந்த விதத் தடையோ, கட்டுப்பாடோ இன்றி அவ்வதிகாரத்தைப் பயன்படுத்த அவர்கள் உறுதி கொள்வார்களானுல், அரசியல் அமைப்பு அடியோடு மாறிவிடும். அதனேடு இங் நாட்டு அரசாங்கம் வரையறுக்கப்பட்ட முடியாட்சியாக இராது. காமன்ஸ சபையினரும், பிரபுக்களும், மன்னரும் என்று இல்லாது, இனிப் பிரபுக்கள் சபையென்னும் தனிப்பட்ட சிலவராட்சி ஸ்தாபனமே மற்றையோரைத் தன் விருப்பப்படி ஆளுவதாக அமையும்.'[73]

'பத்தொன்பதாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் பல சமயங்களில் நெருக்கடி குறைவான, ஆனுல், தீவிரப் பூசல்கள் எழுந்திருக்கின்றன. 'ரோமன் கத்தோலிக்கர்களுக்குச் சலுகைகள் அளிப்பதற்கும், குற்றச் சட்டத் திருத்தங்களுக்கும் காமன்ஸ் சபையினர் இணக்கம் தெரிவித்தபோது பிரபுக்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர். அம் மசோதாக்களை ஏற்றுக்கொள்ளுமாறு தூண்டுவதில் மக்களோ அல்லது காமன்ஸ் சபையினரோ பல ஆண்டுகள் வரை போதுமான மெய்யார்வம் காட்டவில்லை. ஆயினும், மக்களுடைய கருத்திற்கு மேலும் மறுப்புத் தரமுடியாது என்று உணர்ந்த பிரபுக்கள், தங்களுக்கு ஒவ்வாத மசோதாக்களுக்கும் இசைவு தருவதன்மூலமாகக் காமன்ஸ் சபையுடனை மோதலைத் தவிர்த்தனர். பொதுமக்களுடைய கருத்துகள் காமன்ஸ் சபையினரால் அதிக சுயேச்சையாக வெளியிடப்பெற்ற காரணத்தால், இரு சபைகளுக்குமிடையேயான மோதல்களினுல் வரும் இடர் அதிகரித்தது. மக்களிடமிருந்து நேரடியாக அதிகாரத்தைப் பெற்ற காமன்ஸ் சபையினர் அதிக சக்தி பெற்றிருந்தனர். முன்பெல்லாம் அவர்களையும் பிரபுக்களையும் சேர்த்து வைக்கவல்லவையாக இருந்த செல்வாக்குகள், இப்போது செல்லாதவைகளாயின'. இங்ஙனம் மே (May) என்னும் அறிஞர் விளக்கினுர்.[74] 1869ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் பன்னிரண்டு பிரபுக்களை நியமிக்குமாறு இராணியாரை மிஸ்டர் கிளாட்ஸ்டன் (Mr. Gladstone) வற்புறுத்தினுர். அதற்குக் காரணம், பெற முடியாத பெரும்பான்மையைப் பெறுவதற்காக அன்று. ஐரிஷ் திருச்சபை விலக்கு மசோதாவைப் பிரபுக்கள் சபையில் நன்கு எடுத்துரைக்கவே இவ்வாறு செய்தார்.[75] 1884ஆம் ஆண்டில் மக்கள் பிரதிநிதித்துவ மசோதாவைப் (Representation of the People Bill) பிரபுக்கள் சபையினர் நிராகரித்தபோது, மோதல்

ஏற்படுவது மயிரிழையில் தப்பியது. இதுபோன்ற நிகழ்ச்சிகள் பல முறை நேர்ந்ததிலிருந்து, தாங்கள் விரும்பியபோது பாராளுமன்றத்தைக் கலைக்குமாறு வற்புறுத்தும் அதிகாரம் பிரபுக்களிடம் இருந்ததாகத் தோன்றியது. இத்தகைய யோசனையை கிளாட்ஸ்டன் உறுதியாக மறுத்தார். வாக்குரிமை மசோதா ஒன்றில் பிரபுக்களின் நிலை சரியா, அல்லது காமன்ஸ் சபையினர் நிலை சரியா என்பதை நிர்ணயிப்பதற்காகப் பாராளுமன்றத்தைக் கலைப்பதில் தாம் பங்குகொள்ள முடியாதென்று அவர் குறிப்பிட்டார். பிரபுக்கள் சபையின் அடிப்படை மாறுதலுக்காக வேண்டிப் பாராளுமன்றத்தைக் கலைப்பதில் தாம் பங்கு கொள்ள முடியும் என்றும் குறிப் பிட்டார்.[76] இந்த நெருக்கடியில் புதிய திருப்பம் ஒன்று தோன்றியது. பிரபுக்கள் சபையில் இருந்த எதிர்கட்சியான பெரும்பான்மை கன்சர்வேடிவ்களுக்குப் பிரதிநிதியாக இருந்த சாலிஸ்பரி மார்குவிஸ் பிரபுவிற்கும், அதுபோது பிரதம மந்திரியாக இருந்த கனம் W.E. கிள்ாட்ஸ்டன் அவர்களுக்கும் இடையேயான கடிதப் போக்குவரத்து மன்னர்மூலமாகத் தொடர்ந்தது. ஆபத்து விளைவிக்கும் அளவினதான அரசியல் நெருக்கடியையும் அரசியல் அமைப்புச் சார்ந்த நெருக்கடியையும் தீர்த்துவைப்பதற்காகக் கட்சி அரசியல் கோதாவிலே மன்னர் இறங்குவதற்கான பிற்கால ஆங்கில வரலாற்றின் அரிய எடுத்துக்காட்டுகளில் இதுவும் ஒன்று. அச் சமயத்தில் இரு சபைகளுக்குமிடையேயான மோதல் தீவிரம் அடையாததற்கு இரு முக்கியக் காரணங்களைக் குறிப் பிடலாம். முதலாவதாக, இரு முரண்பட்ட அரசியல் சக்திகளுக் கிடையே நடுவராக இருக்க இணங்கியதன்மூலமாக மன்னர் ஆற்றிய அரிய சேவையைக் கொள்ளலாம். அடுத்து, இரு அரசியல் தலைவர்களும் காட்டிய நாட்டுப்பற்று மனப் பான்மையைக் குறிப்பிடலாம். அவர்கள் இருவரும் தங்கள் தங்கள் கருத்தை வலியுறுத்தியபோதிலும், இறுதியாக நிலவி நின்ற பொதுமக்கள் கருத்திற்கு இசைவாக உள்ள சலுகைகளை ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்தனர்.

**1907ஆம் ஆண்டுத் தீர்மானங்கள் :** அதிமுக்கியமான தீர்மானங்களைப் பிரபுக்கள் சபை தொடர்ந்து நிராகரித்து வந்தது. எனவே, மேல்சபையின் அமைப்போ அல்லது அதிகாரங்களோ அல்லது இரண்டுமோ திருத்தி அமைக்கப் பெறுதல் வேண்டுமென்பது மிகத் தெளிவாகியது. சர் ஹென்றி காம்ப்பெல்-பானர்மென் (Sir Henry Campbell-Bannerman) தீர்மானம் ஒன்றினைக் காமன்ஸ் சபையினர் கொண்டுவந்தார்.

அதில், 'தேர்ந்தெடுக்கப்பெற்ற பிரதிநிதிகளின் மூலமாக வெளியான மக்களின் விருப்பத்தை நிறைவேற்றவேண்டு மானால் கீழ்சபையில் நிறைவேறிய மசோதாக்களை மாற்றி யமைக்கும் அல்லது நிராகரிக்கும் மேல்சபையின் அதிகாரம் சட்டத்தின்மூலமாக வரையறுக்கப்படுதல் வேண்டும்; ஒரு குறிப்பிட்ட பாராளுமன்றத்தின் வாழ்நாளுக்குள், காமன்ஸ் சபையினரின் இறுதியான முடிவே ஏற்றுக்கொள்ளப்படுதல் வேண்டும்' என்று அவர் விளக்கி யிருந்தார். 1707ஆம் ஆண்டு ஜூன் மாதம் 26ஆம் தேதியன்று காமன்ஸ் சபையில் நிறைவேறிய இத் தீர்மானத்தின் மீதான விவாதத்தினால் பிரபுக்கள் சபையின் அதிகாரங்கள்பற்றிய கொள்கைப் பிரச்சினை ஒருபடி மேலே சென்றது. அச் சமயத்தில் சட்டம் ஏதும் கொண்டுவரப்படவில்லை யென்றாலும், திட்டச் சுருக்கம் ஒன்றைக் காம்பெல்-பானர்மென் கொண்டுவந்தார். அதன்படி, காமன்ஸ் சபையினர் நிறைவேற்றிய மசோதாவைப் பிரபுக்கள் சபையினர் ஏற்க மறுக்குங்காலை இரு சபைகளுக்கும் இடையே அடுத்தடுத்து வரும் மூன்று மாநாடுகளில் உடன்பாடு ஏற்பட வில்லையானால், அம் மசோதா சட்டமாக வேண்டும். அதற்காக இரண்டாவது, மூன்றாவது மாநாடுகளுக்கு முன்னால் காமன்ஸ் சபையினர் அம் மசோதாவை மீண்டும் மீண்டும் நிறைவேற்ற வேண்டும். இத் திட்டம், பிரபுக்கள் சபையின் அமைப்பினைப் பாதிக்கவில்லை; இடையிலே பொதுத்தேர்தல் வந்தால் என்ன ஆகும் என்பதுபற்றிக் குறிப்பிடவில்லை; பன்னிரண்டு மாதங்களுக்கு மேற்படாத காலதாமதம் ஏற்படுவதை ஏற்றுக் கொண்டது.[77]

**பிரபுக்கள் சபையில் பண மசோதாக்கள்:** பொதுச் சட்டங்கள் இயற்றுவதில் இருந்ததைப்போலவே நிதி மசோதாக் களிலும் அரசியல் இடர்ப்பாடுகள் இருந்தன. ஆயினும், வரி விதிப்பு விவகாரங்களில் பிரபுக்களின் நிலை பல நூற்றாண்டு களாகவே நலிந்து காணப்பட்டது. 1640ஆம் ஆண்டு கூடிய பாராளுமன்றத்தில்[78] பிரபுக்கள் சபை தயக்க மின்றி ஏற்றுக்கொண்ட சிறப்பு நிலைமைக்கிணங்கப் பணமசோ தாக்களைக் கொண்டுவரும் ஏகபோக உரிமை காமன்ஸ் சபைக்கே இருந்தது. அதனோடு அத்தகைய மசோதாக்களைப் பிரபுக்கள் திருத்த முடியாது என்றும் காமன்ஸ் சபையினர் வலியுறுத்தினர். 1671ஆம் ஆண்டில் பிரபுக்கள் வரித்தொகையைக் குறைக்கும் உரிமைபற்றிய விவாதத்தில் அவர்கள் வெற்றி பெற்றனர். அந்த ஆண்டிலிருந்து காமன்ஸ் சபையினருடைய வாதத்திற்குப் பிரபுக்கள் உடன்பட்டனர். காமன்ஸ் சபையினர் ஏற்றுக்

கொள்ள உடன்படும் திருத்தங்கள் செய்யப்படும் சமயங்களில், அவர்கள் தங்களுடைய உரிமையைக் காத்துக்கொள்வதற்காக எப்போதும் திருத்தப்பட்ட மசோதாவைத் தூக்கி எறிந்துவிட்டு, பிரபுக்கள் சபையின் திருத்தங்களை உள்ளடக்கிய புதிய மசோதாவை அனுப்பிவந்தனர். நிதியளிப்பில் பிரபுக்கள் நேரடியாகத் தலையிடவில்லையென்றாலும், சில சமயங்களில் வாணிபத்தை வரையறுப்பதற்கும் காப்புவரிகளை விதிப்பதற்கும் நீக்குவதற்குமான வகையிலும் நிதி அளிப்பையும் வரிவிதிப்பையும் ஒருவகையில் பாதிக்கும் மசோதாக்களைத் தடை செய்தனர் அல்லது தள்ளிவைத்தனர். இதனைக் கீழ்சபை தடுக்கவில்லை. எனினும், 1790ஆம் ஆண்டில் வார்விக் சிறைக்கூடக் (Warwick Gaol) கட்டுப்பாடு மசோதா வந்தபோது, நிலச் சொந்தக்காரர் மீது சுமத்தப்பெற்ற வரியை நிலத்தில் வாழ்ந்தவர்மீது மாற்றும் நோக்கோடு பிரபுக்கள் திருத்தம் ஒன்று கொண்டுவந்தனர். அதுபோது அந்த மசோதாவையே தள்ளுபடி செய்து காமன்ஸ் சபையினர் தங்கள் உரிமையைக் காத்துக்கொண்டனர். எவ்விதக் குறைப்போ, மாற்றமோ இன்றி மசோதா முழுவதையும் ஏற்றுக்கொள்ளும் அல்லது தள்ளிவிடும் உரிமை பிரபுக்களுக்கு உண்டு என்பதை 1671ஆம் ஆண்டிலும் 1689ஆம் ஆண்டிலும் காமன்ஸ் சபை வெளிப்படையாகவே ஒப்புக்கொண்டதால், பண மசோதாவை நிராகரிக்கும் உரிமை பிரபுக்களுக்கு உண்டு என்பது தெளிவாகின்றது. ஆயினும், இவ்வுரிமையைப் பயன்படுத்துவதால் மன்னருக்குப் பணமளிப்பதைத் தடைசெய்வதாக அமையும் என்பதால் இதனைப் பயன்படுத்திக்கொள்ளப் பிரபுக்கள் விரும்பவில்லை. மேலும், கட்டுப்பாடு ஏதும் விதிக்க முடியாத நிலையில் பண மசோதாக்களைப்பற்றி விவாதிப்பதைக் கூடப் பிரபுக்கள் அநேகமாக நிறுத்திக்கொண்டனர். 1763ஆம் ஆண்டில் ஒயின், சைடர் மதுவகை மீதான வரிவிதிப்பு மசோதாவின் (Wines and Cider Duties Bill) மூன்றும் வாசிப்பைப் பிரபுக்கள் எதிர்த்தனர். பணமசோதா ஒன்றின்மீது வாக்கெடுப்பதற்காகப் பிரிந்தது அதுவே முதல் தடவை என்று கூறப்படுகின்றது.

**காகிதச் சுங்கவரி மசோதா :** மசோதாக்களை நிராகரிக்கும் சட்டரீதியான உரிமையைப் 'புதுமையான வியப்பூட்டும் வகையில்' 1860ஆம் ஆண்டில் பிரபுக்கள் பயன்படுத்தினர். காகிதச் சுங்கவரி நீக்க மசோதாவை நிராகரித்தனர். அதிலும் அத்தகைய சுங்கவரி நீக்கத்தினால் வரும் இழப்பீட்டைச் சரிசெய்வதற்குச் சொத்து வரியையும் பத்திர முத்திரை வரிகளையும் உயர்த்துவதற்கான மசோதாக்களுக்கும் மன்னர் இசைவுதந்த

பிறகு நிராகரித்தது வியப்பானதோடு, விந்தையான செய்தியாகவும் காணப்படுகின்றது. எந்த மசோதாவையும் நிராகரிக்கும் பிரபுக்களின் உரிமை ஐயத்திற்கிடமில்லாதது. மேலும், மலிவான செய்தித்தாள்களின் நலன் கருதி கிளாட்ஸ்டன் கொண்டுவந்த இந்தக் குறிப்பிட்ட மசோதாவானது கீழ்சபையிலேயே பலமான எதிர்ப்பிற்குள்ளாகியது. ஒன்பது பெரும்பான்மை ஓட்டுகளிலேயே அது நிறைவேறியது. 'எனினும், இருநூறு ஆண்டுகளில் எப்போதுமே கொள்ளாத நிலையில் பணம் அளிப்பதிலும், அதற்கான வழிவகைகளிலும் மாற்றியமைக்கும் உரிமையைப் பிரபுக்கள் கொள்வது அரசியல் அமைப்பு வழக்கினை மீறுவதாகும்; காமன்ஸ் சபையின் தனிச் சிறப்புரிமைகளுக்கு அடிப்படையாக இருக்கும் கருத்துகளுக்கு முரணானதாகும் எனக் காமன்ஸ் சபையினர் வாதிட்டனர்' என்றும், 'சட்ட வாசகம் பிரபுக்களுக்குச் சாதகமாக இருந்த போதிலும் சட்டத்தின் உணர்வு காமன்ஸ் சபையினருக்குத்தான் உதவியாக இருந்தது' என்றும் சர் எர்ஸ்கின் மே (Sir Erskine May) என்பார் குறிப்பிட்டார். முன்னிகழ்வுகளை ஆராய்ந்து சபைக்கு அறிக்கை ஒன்றை அளிக்கவேண்டுமென்பதற்காகக் காமன்ஸ் சபையினர் ஆணைக்குழு ஒன்றை நியமித்தனர். ஆறு வாரங்கள் கழிந்தபின் அரசாங்கத் தரப்பில் நின்று காமன்ஸ் சபையில் பாமர்ஸ்டன் பிரபு உரை நிகழ்த்தினார். அதுபோது பிரபுக்கள் சபையுடனான மோதலைக் குறைகூறியதோடு, காகிதச் சுங்கவரி மசோதாவை நிராகரித்த பிரபுக்கள், காமன்ஸ் சபையினருடைய தனித்தன்மை வாய்ந்த செயல்களில் வேண்டுமென்றே தலையிடவேண்டுமென்ற எண்ணம் ஏதுமின்றிப் பொதுக் கொள்கை நோக்கங்களாலேயே உந்தப்பெற்றனர் என்று தாம் கருதுவதாகவும் குறிப்பிட்டார். மேலும் பேசுகையில், அப்படியே காமன்ஸ் சபையினரின் செயல்களில் தலையிடுவதே பிரபுக்களின் நோக்கமாக இருக்குமானால், அத்தகைய தாக்குதலைச் சமாளித்துத் தங்களுடைய உரிமையைக் காத்துக்கொள்வது எவ்வாறு என்பது காமன்ஸ் சபையினருக்கும் தெரியும்; அவர்களுக்கு மக்களுடைய ஆதரவும் கிடைக்கும் என்பதை வலியுறுத்தினார்.

**1860ஆம் ஆண்டின் பாமர்ஸ்டன் தீர்மானங்கள் :** பாமர்ஸ்டன் இறுதியாக மூன்று தீர்மானங்களைக் கொண்டு வந்தார். அவைகள் 1860ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஆறும் நாளன்று காமன்ஸ் சபையில் நிறைவேறின. அவையாவன : (1) 'உதவி நிதிகளையும் வழங்கீட்டுப் பொருள்களையும் மன்னருக்கு அளிக்கும் உரிமை காமன்ஸ் சபைக்கே உண்டு'; (2) வரி விதிப்பு

சம்பந்தமான மசோதாக்களை நிராகரிக்கும் அதிகாரத்தைச் சில சமயங்களில் பிரபுக்கள் பயன்படுத்தியிருப்பினும், அவ்வாறு 'பயன்படுத்துவதை வழங்கீட்டுப் பொருள்களை அளித்து ஓர் ஆண்டின் தேவைக்கான வழிவகைகளைச் செய்யும் காமன்ஸ் சபையினரின் உரிமை பாதிப்பதாகும் என்று ஒருவகையான காப்பு விழிப்புடன் மனமாரக் கருதினர்;' (3) வரி விதிப்பின் மீது காமன்ஸ் சபையினரின் முறையான உரிமையை நிலைநாட்டு தற்காக 'வரிகளை விதிக்கவும் நீக்கவும், வழங்கீட்டுமசோதாக்களை வரையவும் அதிகாரம் பெற்றிருப்பதால், அத்தகைய மசோதாக் களின் வாசகமும், வகையும், செயல் முறையும், செய்யுங் காலமும் பற்றிய காமன்ஸ் சபையினரின் உரிமை முழுநிறை காப்புடையதாகும்.' அடுத்த பாராளுமன்றக் கூட்டத் தொடரில் பிரபுக்களின் இரண்டாவது தலையீட்டைக் காமன்ஸ் சபையினர் பயனுள்ள வகையில் தடுத்துவிட்டனர். அதுபோது சொத்து வரி, தேயிலை, சர்க்கரை, சுங்கவரிகள் ஆகியவற்றையும் ஓராண்டுக்காலத்திற்கு வேண்டிய வழிவகைகளையும் அளிக்கின்ற பொதுநிதி மசோதாவிலேயே காகிதச் சுங்கவரி நீக்கத்தையும் இணைத்துவிட்டனர். இம் மசோதாவினைப் பிரபுக்கள் ஏற்றுக் கொள்ளவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.[79]

**பண மசோதாக்களை இணைத்தல் :** பண மசோதாவைப் பிரபுக்கள் சபை திருத்தமுடியாது என்ற விதியை அடிப் படையாகக்கொண்டு ஒரு வகையில் முறைகேடான வழியைக் காமன்ஸ் சபையினர் சிறிது காலத்திற்குப் பயன்படுத்தினர். தனி மசோதா ஒன்றின்மூலமாகக் கொண்டுவந்தால் பிரபுக்கள் சபை ஏற்றுக்கொள்ளாது என எண்ணக்கூடிய நிலையில் இருக்கும் பிற புறம்பான விதிகளைப் பண மசோதாவில் புகுத்தினர். பண மசோதாவில் உள்ளவற்றைப் பிரபுக்களால் மாற்ற முடியாதாகையால் அதனை முழுவதுமாக ஏற்கவேண்டும் அல்லது முழுவதுமாக நிராகரிக்கவேண்டுமென்று இங்ஙனம் கட்டாயப்படுத்தப்பெற்றனர். 1667ஆம் ஆண்டில்தான் இம் முறை முதன்முதலாகப் பயன்படுத்தப்பட்டது. அத்தகைய மசோதாக்களைத் தாம் தள்ளிவிடப்போவதாக 1678ஆம் ஆண்டில் இரண்டாம் சார்லஸ் அறிவித்தார். 1692ஆம் ஆண்டிலும் 1698ஆம் ஆண்டிலும் பண மசோதாவுடன் ஒட்டும் முறை வெற்றிகரமாகப் பயன்பட்டது. எனினும், பறிமுதல் செய்யப்பெற்ற ஐரிஷ் நிலங்களை மூன்றும் வில்லியம் வகுத்தமைத்தது சம்பந்தமான நுட்பமான செயல்பற்றிய விதிகள் சிலவற்றை 1701ஆம் ஆண்டில் நிலத்தீர்வை மசோதாவுடன் காமன்ஸ் சபையினர் இணைத்தனர். இது

மிகவும் குறிப்பிடத்தக்க எடுத்துக்காட்டாகும். இத்தகைய ஒரு முக்கியமான நிதி மசோதாவை நிராகரிப்பதால் அரசாங்கம் செயலிழந்துவிடும் என்பதனால் இம் மசோதா முழுவதையும் பிரபுக்கள் சபை நிறைவேற்ற வேண்டியதாயிற்று. மன்னரும் இசைவு தரவேண்டியதாயிற்று.[80] மூன்றும் வில்லியத்தின் மரணத்திற்குப் பிறகு இப் பழக்கம் வழக்கொழிந்தது. ஆன் அரசியார் காலத்தில் பல சமயங்களில் இம் முறைபற்றிப் பேச்செழுந்தது எனினும், அது பயன்பட்டதாகத் தெரியவில்லை.[81] இரு சபைகளின் இயலறிவு காரணமாக இப் பழக்கம் கைவிடப்பட்டது. மேலும், ஏற்றுக்கொள்ளப்பெற்ற அரசியலமைப்புக் கருத்தினைத் தட்டிக்கழிப்பதற்காகச் சட்ட நுணுக்கங்களைப் பயன்படுத்துதல் என்பது விரிந்த பொருளில் 'மாமன்ற இயல்பிற்குப் பொருந்தாது' என்னும் எண்ணமும் வளரத் தொடங்கியது மற்றொரு காரணமாகும். 1888ஆம் ஆண்டில் மெய்ட்லண்டு கூறியதைப்போலக் காமன்ஸ் சபையினர் தம் இச்சையாகத் தடைவிதித்துக்கொள்ளவில்லையானல் இது தீர்க்கமுடியாத பிரச்சினையாகி யிருக்கும். 'இதுபோன்ற பிரச்சினைகளைக் கொண்டுசெல்லக்கூடிய நடுநிலை தவருத தீர்ப்பு மன்றம் ஒன்றும் இல்லை; அதனோடு நடுநிலை தவருத தீர்ப்பு மன்றம் என்று சொல்லிக்கொள்ளக்கூட ஒரு தீர்ப்பு மன்றம் இல்லை' என்று அவ்வறிஞரே எழுதியுள்ளார்.[82] ஆயினும், இதுபோன்ற நுண்ணிய பிரச்சினைகளைச் சமாளிப்பதற்கு ஒரு வகையான தீர்ப்பு மன்றத்தை அமைக்கவேண்டியதிருந்தது என்பதைப் பார்க்கலாம்.[83]

**1910–11 ஆம் ஆண்டு நெருக்கடி:** *1910ஆம் ஆண்டு மே மாதம் ஏழாம் எட்வர்டு மன்னர் இறந்தபோது நாட்டிலே பாராளுமன்ற நெருக்கடி ஒன்று தோன்றியது.* அரசியல் அமைப்பு அடிப்படையில் நோக்கும்போது, அது அரசியல் வரலாறு முழுவதிலும் மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகக் காணப்படுகின்றது. லாய்டு ஜார்ஜின் பட்ஜெட்டிற்கு உயிர் கொடுக்கும் வகையிலான நிதி மசோதா ஒன்றைக் காமன்ஸ் சபை, 1909ஆம் ஆண்டில் பிரபுக்கள் சபைக்கு அனுப்பியது. அது முற்றிலும் பண மசோதா அன்று என்று சொல்லிப் பிரபுக்கள் அதனை நிராகரித்தனர். அதன்பேரில் பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்குமிடையே உள்ள உறவுநிலை பற்றிய முக்கியப் பிரச்சினை குறித்து அரசாங்கம் வாக்காளரிடம் முறையிட்டது. 1910ஆம் ஆண்டில் பொதுத் தேர்தல் நடந்தது.[84] தேர்தலில் லிபரல் கட்சிக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தனர் வாக்காளர்கள். அதன்மூலமாக லிபரல் கட்சியே மீண்டும் அதிகாரத்திற்கு

வந்தது. அடுத்த பிப்ரவரி மாதம் 21ஆம் தேதி புதிய பாராளுமன்றம் கூடியபோது அரியணை உரையில் புதிய நிலைமை தெளிந்த சொற்களால் வரையறுக்கப்பட்டது. பிரபுக்கள் சபையின் மரபுவழி வரும் கருத்தையே தகர்த்து எறியக் கூடியதாக அமைந்த அப் பேச்சுப் பின்வருமாறு வகுத்தது: 'சட்டசபையின் இரு கிளைகளுக்குமிடையே தீவிரக் கருத்து வேற்றுமைகள் மீண்டும் மீண்டும் தோன்றுவதனுல் ஏற்படுகின்ற இடர்களைச் சமீப அனுபவம் எடுத்துக்காட்டுகிறது. நிதி விஷயங்களில் காமன்ஸ் சபைக்கு முழு அதிகாரம் கிடைக்கும் வகையிலும், சட்டமியற்றுவதில் அச் சபைக்கு முதலிடம் அளிக்கும் வகையிலும் பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்குமிடையேயுள்ள உறவுகளை வரையறுப்பதற்காகக் கூடிய விரைவிலேயே தீர்மானங்கள் கொண்டுவரப்படும். கொண்டுவரவிருக்கும் சட்டத்திலும், சட்டங்களைக் கொண்டு வருவதிலும், மாற்றியமைப்பதிலும் நடுநிலைமை வகிப்பதற்கேற்ற முறையில் பிரபுக்கள் சபையை அமைத்து அதிகாரங்களை வழங்கவேண்டுமென்றும், தாமதம் விளைவிப்பதற்கெதிராகப் பாதுகாப்புகளுக்குட்பட்டே அவ்வதிகாரங்கள் அமையவேண்டுமென்றும் மேற்கொள்ளவேண்டிய நடவடிக்கைகள்பற்றி எமது அமைச்சர்கள் கருதுகின்றுர்கள்.'

பிரபுக்கள் சபையும், அச் சபையில் பெரும்பான்மையாக இருந்த கன்சர்வேடிவ் கட்சியின் பிரதிநிதியும், எதிர்கட்சித் தலைவருமான லான்ஸ்டௌன் பிரபுவும் (Lord Lansdowne) இச் சவாலை ஏற்றனர். பிற்போக்குச் சக்திகளுக்கு எதிராகப் போராடுவதற்கு எனத் தங்கள் சபையை வலிமையும் திறனும் படைத்த மேல்சபையாக உருவாக்கும் வகையில் அதனுடைய அமைப்பில் சீர்திருத்தம் கொண்டுவரும் பணியை விரைவில் அவர்கள் துவக்கினர். பிரபுக்கள் சபையை மாற்றியமைக்க வேண்டிய அவசியம்பற்றிய தீர்மானங்களை ரோஸ்பரி பிரபு (Lord Rosebery) அடுத்த மார்ச்சு மாதம் 14ஆம் தேதி கொண்டுவந்தார். 'பிரபுக்கள் சபையில் அமர்ந்து வாக்களிக்கும் உரிமை பிரபுத்துவம் அடைந்திருப்பதொன்றுலேயே இனியும் வராது' என்ற கருத்தினை அவர் வலியுறுத்தினுர். பல பக்கங்களிலிருந்து வந்த எதிர்ப்புகளுக்கு இடையே தயக்கத்துடனே இத் தீர்மானத்தைப் பிரபுக்கள் சபை ஏற்றுக்கொண்டது. அதன்மூலமாக மரபு வழியாக வரும் சபை என்பதை மாற்றும் வரையில் தனது மரண ஓலையில் தானே கையெழுத்திட்டது எனக் கூறலாம். பிரபுக்கள் சபையின் தீர்மானத்தையடுத்துப் பத்திரிகையாளரும் மற்றையோரும் சபையின் அமைப்பை மாற்றுதற்கான பல

வகையான திட்டங்களை அளிக்கத் தொடங்கினர். அவற்றில் முதன்மையானது ரோஸ்பரி பிரபு அளித்த திட்டமாகும். மேல்சபைச் சீர்திருத்தத் திட்டத்தை அடிப்படையாகக் கொண்ட தீர்மானத்தைப்பற்றி ஏப்ரல் மாதம் 13ஆம் தேதி அவர் அறிவித்தார். அதன்படி '(a) வருங்காலத்தில் பிரபுக்கள் சபையானது (1) மரபுவழியாக வரும் பிரபுக்களால் தெரிவு செய்யப்பெற்று மன்னரால் நியமிக்கப்பெற்றவர்கள்; (2) தகுதிகளைப் பெற்றுப் பதவிகள் வகிப்பதனால் அமர்பவர்கள்; (3) வெளியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்று இருக்கின்ற பாராளுமன்றப் பிரபுக்களைக் கொண்டு அமையவேண்டும்; (b) பதவிசார்பாக அமர்பவர்கள், பதவிக் காலம் நீடிக்கும்வரையில் அங்கம் வகிக்க வேண்டியிருக்கும்; அது தவிர மற்றெல்லாப் பாராளுமன்றப் பிரபுக்களின் பதவிக் காலமும் ஒன்றாகவே இருக்கவேண்டும்.'

**பாராளுமன்ற மசோதா கொண்டுவரப்பெறல்:** இதற்கிடையில் நாட்டு மக்களிடமிருந்து பெற்ற உரிமை ஆற்றல்மீது விரைவாகச் செயல்படத் தொடங்கினர் காமன்ஸ் சபையினர். ஏப்ரல் மாதம் 11ஆம் தேதியன்று பிரதமர் மிஸ்டர் ஆஸ்க்வித் (Mr. Asquith), பாராளுமன்ற மசோதாவைச் சமர்ப்பித்தார். அதுபோது பிரபுக்கள் சபைக்குப் பின்வரும் அறைகூவலையும் விடுத்தார்: 'நமது கொள்கையை ஏற்கப் பிரபுக்கள் மறுத்தாலோ அல்லது பிரபுக்கள் சபையில் முறையாகச் சமர்ப்பிக்கப் பெற்ற நமது மசோதாவைப் புறக்கணித்தாலோ வேண்டிய நடவடிக்கைகளை எடுக்குமாறு மன்னருக்கு ஆலோசனை அளிக்க வேண்டியது நமது கடமையாக இருக்கும். இப் பாராளுமன்றத்தில் நமது கொள்கைக்குச் சட்டரீதியான உருவினைக் கொடுக்கும் நிலையில் நாம் இல்லையானால் பதவியிலிருந்து விலகுவோம் அல்லது பாராளுமன்றத்தைக் கலைக்குமாறு காவலருக்கு ஆலோசனை பகர்வோம்.[35]

இத்தகைய அனல் பறக்கும் அரசியல் பூசலுக்கிடையே ஏழாம் எட்வர்டு மன்னர் இறந்தார். அவரது புதல்வரான ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் அரியணையேறினர். அமைதியான சூழ்நிலையில் புதிய அரசருடைய ஆட்சி தொடங்கவேண்டுமென்பதற்காக அரசாங்கமும் எதிர்கட்சியும் பூசலை நிறுத்தி, பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்கும் இடையேயான உறவுநிலை பற்றிய தொல்லைதரும் பிரச்சினையைத் தீர்க்கும் வழிவகைகளைக் காண முற்பட்டனர்.[36] இருதரப்பாரிடையேயும் நல்லெண்ணத்தோடு நடைபெற்ற மாநாடு 1910ஆம் ஆண்டு நவம்பர் மாதம் இறுதியாகக் கூடிப் பிரச்சினைக்கு வழிகாண்பதில் தோல்வியே

கண்டது. போர்நிலை மீண்டும் தொடர்ந்தது. இரு சபைகளிலும் உணர்ச்சி மிக்க வாக்குவாதங்கள் தொடர்ந்தன. மேல்சபையைத் திருத்தியமைப்பதற்கான தமது தீர்மானத்தை ரோஸ்பரி பிரபு விலக்கிக்கொண்டார். பாராளுமன்ற மசோதாவின் இரண்டாவது வாசிப்பின் மீதான விவாதத்தை ஒத்திப்போட வேண்டுமென்று கோரிய லான்ஸ்டௌன் பிரபு, இரு சபைகளுக்குமிடையே தீவிரக் கருத்து வேற்றுமைகள் எழும்போது பிரபுக்கள் சபையின் கொள்கை நிலையை வரையறுக்கும் சில தீர்மானங்களையும் கொண்டுவந்தார். ரோஸ்பரி பிரபுவின் தீர்மானத்தில் ஏற்கெனவே ஏற்றுக்கொண்ட வழியில் பிரபுக்கள் சபையைத் திருத்தியமைக்க வேண்டியதன் அவசியத்தை இத் தீர்மானங்கள் ஏற்றுக்கொண்டபோதிலும், தகராறுகளைத் தீர்த்துக்கொள்வதற்கு மேலும் இரு திட்டங்களைப் புகுத்தின. அவை இரண்டுமே அரசியலமைப்பின் உணர்விற்கும் மரபிற்கும் முரண்பட்டவையாகும் என்பது குறிப்பிடத்தக்கது. முதலாவதாகத் தீவிரக் கருத்து வேற்றுமைகளைப் பொதுமக்கள் வாக்கெடுப்பிற்கு விட்டுவிடவேண்டும்.[87] இரண்டாவதாக அதிக முக்கியத்துவம் இல்லாத செய்திகளை இரு சபைகளும் சேர்ந்த இணைப்புக் கூட்டத்திடம் விட்டுவிடவேண்டும். இவ்விணைப்புக் கூட்டத்திற்குக் காமன்ஸ் சபையின் சபாநாயகரே தலைவராக இருக்க வேண்டும்.[88] பண மசோதாவுடன் 'ஒட்டுதல்' செய்வதற்கெதிரான பாதுகாப்புகள் அளிக்கப்பெறுமானால் அம் மசோதாக்களை நிராகரிக்கும் தங்களது உரிமையை விட்டுக்கொடுக்கவும் பிரபுக்கள் தயாராக இருந்தனர். கன்சர்வேடிவ் கட்சியிலும், ராடிகல் கட்சியில் முன்னேற்றப் பொதுவுடைமைவாதிகளிடையேயும் பலர் பொதுமக்கள் வாக்கெடுப்பை ஆதரித்தனர். இருப்பினும், பொதுமக்கள் வாக்கெடுப்பிற்கு ஆதரவினை எதிர்பார்க்கக்கூடிய லிபரல் கட்சியில் இதற்கு ஆதரவு இல்லை.

1910ஆம் ஆண்டு ஜனவரி மாதம் தேர்ந்தெடுக்கப்பெற்ற பாராளுமன்றம், அதே ஆண்டு நவம்பரில் கலைக்கப்பட்டது. பதினொரு திங்களுக்கு முன்னர் தாங்கள் அதிகாரத்திற்கு வர உதவிய அதே பிரச்சினையை, அதாவது, பாராளுமன்ற அல்லது 'வெட்டதிகார மசோதாவை'யே லிபரல் கட்சியினர் நாட்டு மக்கள் முன்பு வைத்தனர். 1910ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் நடைபெற்ற தேர்தலில் லிபரல் கட்சியே வெற்றிபெற்று மீண்டும் அரசாங்கத்தை அமைத்தது. ஆயின், பாராளுமன்றத்தில் கட்சிகளின் நிலை அநேகமாக மாறாது இருந்தது.

அரசாங்கத்தினர், விரைவிலேயே தங்கள் செயல் முறையைக் கோடிட்டுக் காட்டினர். அதாவது, என்ன நேர்ந்தாலும் பாராளுமன்ற மசோதாவை நிறைவேற்ற வேண்டுமென்று உறுதி கொண்டனர். காமன்ஸ் சபையில் மீண்டுமொரு முறை நிறைவேறிய பாராளுமன்ற மசோதா ஏறக்குறைய பழைய வடிவிலேயே பிரபுக்கள் சபைக்குச் சென்றது. அப்போது பிரபுக்கள் சபையின் அமைப்புப்பற்றிய சுவையான மசோதா ஒன்றினை லான்ஸ்டௌன் பிரபு கொண்டுவந்தார்.[89] ஆங்கில அரசியல் வரலாற்றியேயே எளிதில் மறக்கமுடியாத பூசல்களில் ஒன்று இம் மசோதாபற்றி எழுந்தது. பிரபுக்கள் பல திருத்தங்களைக் கொணர்ந்தனர். அவற்றில் மிக முக்கியமானது, சுய ஆட்சி போன்ற சில அடிப்படையான, அரசியலமைப்புச் சார்ந்த செய்திகளைத் தொகுத்து அவைகள் இம் மசோதாவின் செயலாட்சியிலிருந்து நீக்கவேண்டுமென்று கோரியது. ஆனால், எல்லாத் திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன. இறுதியாக அது வரையில் நினைவளவிலேயே இருந்த ஒன்றைப் பிரதமர் ஜூலை மாதம் 21ஆம் தேதி அறிவித்தார். மசோதாவை நிறைவேற்றுவதற்குப் போதுமான பிரபுக்களை நியமிப்பதற்குத் தமது தனிச் சிறப்பதிகாரத்தைப் பயன்படுத்துமாறு அரசருக்கு ஆலோசனை அளிக்க அரசாங்கம் ஆயத்தமாக இருக்கின்றது என்றும், 'அத்தகைய ஆலோசனையை ஏற்று அதன்படி நடப்பது தமது கடமை என எண்ணுவதாக மன்னர் தயை கூர்ந்து தெரிவித்தார்' என்றும் பிரதமர் அறிவித்தார். 'பிரபுக்கள் சபையை மூழ்கடிப்பதற்கு' நானூறு பிரபுக்களை நியமிக்க வேண்டியிருக்கும். ஆயின், அவ்வாறு புதிய பிரபுக்களை நியமிப்பதற்கு மாறாக, பிரபுக்கள் சபையின் திருத்தங்களை மறுதலித்து மசோதாவை மீண்டும் பிரபுக்களிடமே அரசாங்கம் அனுப்பியது. இறுதிவரையில் எதிர்க்கப்போவதாகச் சில கடும் பிற்போக்காளர் மிரட்டியபோதிலும், அமைதியான அறிவுரைகளே இறுதியில் ஏற்புடையவாயின. இம் மசோதாவில் முக்கியமான பிரச்சினைகள் இணைந்திருப்பதாலும், மன்னர் பயன்படுத்த விரும்பாத சிறப்பதிகாரத்தைப் பிரயோகிக்கும் சங்கடத்திலிருந்து அவரை மீட்கவும் பற்றுறுதிமிக்க வழியாக இருப்பது மசோதாவை வெறுக்கும் பிரபுக்கள் சபைக்கு வராமல் இருந்துவிடுவதுதான் என்று லான்ஸ்டௌன் பிரபு அறிவுறுத்தினர். அவரை ஆதரித்த பல பிரபுக்கள் வராது இருந்ததால் பிரபுக்கள் சபையில் இம் மசோதா 1911ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் பத்தாம் நாள் நிறைவேறியது. சபைக்கு வராது இருந்துவிடுவதாகப் பலர் அளித்த வாக்குறுதியின் அடிப்படையில் நிலைமையைச் சமாளிப்பதற்குப் போதுமான ஒரு சில

பிரபுக்களையே நியமிப்பார்கள் என்று சிலர் எண்ணினர். ஆனால், ஆகஸ்டு மாதம் பத்தாம் நாளன்று இறுதி விவாதம் நடைபெற்றபோது பேசிய பிரபுக்கள் சபையில் அரசாங்கத் தலைவராக இருந்த மார்லி பிரபுவின் (Lord Morley) அறிவிப்பு நிலைமையைத் தெளிவுபடுத்தியது. அப்போது அவர், 'இன்றிரவு இப்பாராளுமன்ற மசோதா தோல்வியுறுமானால், இரண்டாவது முறையும் வீழ்வதற்கு உரிய வகையில் எதிர்த்து நிற்கும் கட்சிகளிடையே தோன்றக்கூடிய கூட்டினைச் சமாளிப்பதற்குப் போதுமான பிரபுக்களை நியமிக்க மன்னர் சம்மதித்துள்ளார்' என்று குறிப்பிட்டார்.[90] பிரபுக்கள் சபையின் திருத்தங்களை வற்புறுத்துவதன்மூலமாக இம் மசோதாவை எதிர்க்கவேண்டுமென்று சமகால வரலாற்றில் புகழ்மிக்க சிலரை உள்ளடக்கியதும், ஹால்ஸ்பரி பிரபுவின் (Earl of Halsbury) தலைமையில் இருந்ததுமான ஒரு பிரிவு விடாப்பிடியாக நின்றது. ஆயினும், மன்னருடைய சிறப்பதிகாரத்தைப் பயன்படுத்த வேண்டிய அவசியம் இன்றியே பாராளுமன்ற மசோதாவானது பதினேழு பெரும்பான்மை வாக்குகளால் நிறைவேறியது.[91]

## பாராளுமன்றச் சட்டம் (1911)

**(ஐந்தாம் ஜார்ஜின் முதல், இரண்டாம் ஆட்சியாண்டுச் சட்டம்)**

பிரபுக்கள் சபைக்கும் காமன்ஸ் சபைக்கும் இடையே அதிகாரங்கள்பற்றிய உறவு நிலையை வகை செய்யவும், பாராளுமன்றத்தின் காலத்தை வரையறுக்கவுமான சட்டம். (1911ஆம் ஆண்டு, ஆகஸ்ட் திங்கள், 18ஆம் தேதி.)

பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்கு இடையேயான உறவு நிலையை ஒழுங்கு செய்தல் தகுமுறையாவதாலும்;

தற்போது இருப்பதைப் போல மரபுரிமை அடிப்படையில் அமைந்த பிரபுக்கள் சபைக்கு பதிலாகப் பொதுமக்கள் சார்பான மேல்சபை அமைக்கும் எண்ணமிருந்தும், உடனடியாக அதனை நடைமுறையில் கொண்டுவரமுடியாது இருப்பதாலும்;

புதிய மேல் சபையின் அதிகாரங்களைக் கட்டுப்படுத்தி வரையறுப்பதன்மூலமாக அத்தகைய மாற்றத்தைக் கொண்டு வரும்வரையில் பாராளுமன்றமானது இனி வகை செய்ய வேண்டியிருக்கும் நிலையில், பிரபுக்கள் சபையின் அதிகாரங்களை இச் சட்டத்தில் கண்டவாறு கட்டுப்படுத்துதல் செயல் முறைமையாவதாலும்;

கூடியிருந்த பாராளுமன்றத்தில் காமன்ஸ் சபையினர், சமயம் சார்ந்த பிரபுக்கள், சமயம் சாராப் பிரபுக்கள் ஆகியோருடைய ஆலோசனையையும் இசைவையும் பெற்று அதன் மூலமாகப் பாராளுமன்றத்தின் அதிகாரத்தோடு பின்வரும் சட்டத்தை மாட்சிமை தங்கிய மன்னர் நிறைவேற்றினர்.

1.—(1) காமன்ஸ் சபை நிறைவேற்றி, மன்றத்தொடர் முடிவதற்குக் குறைந்தது ஒரு திங்களுக்குமுன் பிரபுக்கள் சபைக்கு அனுப்பப்பெற்ற பண மசோதாவை, அது வந்த ஒருமாத காலத்திற்குள் எவ்வித மாறுதலும் இன்றி அச் சபை நிறைவேற்றவில்லையானல், காமன்ஸ் சபை வேறு விதமாக அறிவிக்காத வரையில், அம் மசோதா மன்னரிடம் சமர்ப்பிக்கப்பெற வேண்டியது. அதனைப் பிரபுக்கள் சபை ஏற்காதபோதிலும், மன்னரின் இசைவினைப் பெற்றவுடன், அது பாராளுமன்றச் சட்டமாகும்.

(2) கீழ்வரும் செய்திகள் அனைத்தையுமோ அல்லது அவற்றில் யாதானும் ஒன்றையோபற்றிய வழிவகைகளைக் கொண்டுள்ளது எனக் காமன்ஸ் சபையின் நாயகர் கருதும் அரசாங்க (பொது) மசோதாவே பண மசோதாவாகும். வரி விதித்தல், தள்ளுபடி செய்தல், குறைத்தல், மாற்றியமைத்தல், அதனை வரையறுத்தல் ஆகியனவும்; மொத்த நிதியிலிருந்து செலவிடும் நிதிசார்ந்த செயல்களுக்கான அல்லது கடனை அடைப்பதற்கான விதிப்பும்; பாராளுமன்றம் அளிக்கும் நிதி அல்லது செலவினங்களைத் தள்ளிவைக்கவும் மாற்றியமைக்கவுமான வழிகளும்; நிதியளிப்பும்; பொதுப் பணத்தைக் கொள்ளுதல், காத்தல், ஒதுக்குதல், அளித்தல் அல்லது தணிக்கை செய்தல் ஆகியவையும்; கடன் எழுப்புதல், அதற்கான உறுதி அளித்தல், அல்லது அதனைத் திருப்பியளித்தலும்; இவை யாவற்றுடனே அல்லது ஒன்றுடனே தொடர்பு கொண்ட இரண்டாந்தரமான விஷயங்களும் அச் செய்திகளில் அடங்கும். இந்தத் துணைப் பிரிவிலே வரும் 'வரிவிதிப்பு,' 'பொதுநிதி,' 'கடன்' என்பவை உள்ளூர் ஆட்சியாளரால் கொள்ளப்பெற்ற அல்லது தல காரியங்களுக்கு என்று இருக்கும் குழுக்களால் கொள்ளப்பெற்ற வரி, நிதி, கடன் ஆகியவற்றைக் குறிப்பனவல்ல.

(3) பண மசோதாவைப் பிரபுக்கள் சபைக்கு அனுப்பும் போதும், மன்னரது இசைவிற்காகச் சமர்ப்பிக்கும்போதும் அது பண மசோதாதான் என்ற சான்றிதழ் அளித்துக் காமன்ஸ் சபையின் நாயகர் கையெழுத்திட வேண்டும். பொறுக்கு குழு

விஞல் மன்றக் கூட்டத்தொடரின் தொடக்கத்தில் நியமிக்கப் பெறும் சபைத் தலைவர் பட்டியலில் கண்ட இருவரைக் கூடுமான வரை கலந்த பிறகே சபாநாயகர் அத்தகைய சான்றிதழை அளிக்க வேண்டும்.

2.—(1) பண மசோதா அல்லது ஐந்து ஆண்டுகளுக்கு மேல் பாராளுமன்றத்தின் காலத்தை நீட்டிக்க வகைசெய்யும் மசோதாவல்லாத அரசாங்க மசோதாவை, ஒரே பாராளு மன்றத்திலோ அல்லது அதற்கு மேற்பட்டதிலோ மூன்று (இரண்டு) அடுத்தடுத்துவரும் கூட்டத்தொடரில் காமன்ஸ் சபை நிறைவேற்றி, கூட்டத்தொடர் முடிவதற்கு ஒரு மாதத்திற்கு முன்பே பிரபுக்கள் சபைக்கு அனுப்புமாஞல், அதனைப் பிரபுக் கள் மூன்ருவது (இரண்டாவது) முறையும் நிராகரித்தபோதிலும் காமன்ஸ் சபை வேறு விதமாகக் குறிப்பிடாத வரையில், அம் மசோதாவை அரசரிடம் அனுப்பி அவரது இசைவு பெற்றுப் பாராளுமன்றச் சட்டமாக்க வேண்டும். பிரபுக்கள் சபை அம் மசோதாவை ஏற்றுக்கொள்ளாதபோதிலும் அது சட்டமாக வரும். ஆயின், முதல் கூட்டத்தொடரில் அம் மசோதாவின் இரண்டாம் வாசிப்பின் தேதிக்கும் மூன்ருவது (இரண்டாவது) கூட்டத் தொடரில் அது நிறைவேறும் தேதிக்கும் இரண்டு ஆண்டுகள் இடைவெளியிருந்தால்தான் இவ் வழிவகை பயன் படும்.

(2) இந்தச் சட்டப் பிரிவில் உள்ள வழி வகைகளின் அடிப் படையில் மன்னரின் இசைவிற்காக மசோதாவைச் சமர்ப் பிக்கும்போது இந்தச் சட்டப் பிரிவின் வழிவகைகளுக்குப் பொருத்தமாக இருக்கின்றது என்று காமன்ஸ் சபையின் தலைவர் சான்றிதழ் அளித்துக் கையொப்பமிட வேண்டும்.

(3) திருத்தங்கள் அல்லது இரு சபைகளும் ஏற்றுக் கொள்ளும் திருத்தங்கள் மட்டிலும் அல்லாது வேறு எதையும் கொண்டு மசோதாவைப் பிரபுக்கள் சபை நிறைவேற்றுமாஞல், அதனை அது நிராகரித்ததாகவே கொள்ளவேண்டும்.

(4) பிரபுக்கள் சபையின் முந்திய கூட்டத் தொடரில் வந்த அதே மசோதாவென்று கருதப்பெறுவதற்கு அது பின்வருமாறு அமையவேண்டும். பிரபுக்கள் சபைக்குச் செல்லும்போது அது முந்திய மசோதாவை ஒத்ததாக இருக்கவேண்டும்; அல்லது முந்திய மசோதா வந்த நாளுக்குப் பிறகு, கழிந்த காலத் திற்குத் தேவையானது எனக் காமன்ஸ் சபையின் நாயகர்

உறுதியளித்த மாற்றங்களைமட்டுமே கொண்டிருக்க வேண்டும்; அல்லது முந்திய கூட்டத் தொடரில் பிரபுக்கள் சபை செய்த திருத்தங்களைப் பிரதிபலிக்கும் மாற்றம் மட்டும் பெற்றிருக்க வேண்டும். மேலும் இச் சட்டப் பிரிவிற்கிணங்க அரச அங்கீகாரத்திற்காக அம் மசோதா சமர்ப்பிக்கப்படும்போது, பிரபுக்கள் சபையின் மூன்றும் (இரண்டாம்) கூட்டத்தொடரில் செய்த திருத்தங்களைக் காமன்ஸ் சபை ஏற்றுக்கொண்டது என சபா நாயகர் எழுத்து வடிவில் அளித்த திருத்தங்களையே கொண்டிருக்க வேண்டும். ஆயின், அத்தகைய மசோதாவானது காமன்ஸ் சபையின் இரண்டாவது அல்லது [மூன்றுவது 'விடுக'] கூட்டத் தொடரில் நிறைவேறும்போது அதனோடு திருத்தங்களை இணைக்காது ஏதாவது திருத்தங்களை எடுத்து இயம்புவது ஏற்புடைத்து எனக் கண்டவிடத்து, அத்தகைய திருத்தங்களைப் பிரபுக்கள் சபை ஆராயவேண்டும். அச் சபை அவற்றிற்கு இணங்குமானல், அவை காமன்ஸ் சபை ஏற்றுக்கொண்ட பிரபுக்கள் சபையின் திருத்தங்கள் எனக் கொள்ளப்படும். ஆனல், மசோதாவைப் பிரபுக்கள் சபை நிராகரிக்குமானல், காமன்ஸ் சபையின் இவ்வதிகாரம் இச் சட்டப் பிரிவின் செயல் திறனைப் பாதிக்காது.

3. இச் சட்டத்தின் கீழ் காமன்ஸ் சபையின் நாயகர் அளிக்கும் சான்றிதழே யாவற்றிற்கும் இறுதியானது; முறை மன்றம் தட்டிக் கேட்க முடியாத ஒன்று.

4.—(1) இச் சட்டத்தின் வழிவகைகளில் முன்னல் வந்த அடிப்படையில், மாட்சிமை தங்கிய மன்னரிடம் கொண்டு செல்லும்போது சட்டமியற்றுதற்கான வாசகங்கள் பின்வருமாறு அமையவேண்டும். அதாவது:

> '1911ஆம் ஆண்டின் பாராளுமன்றச் சட்டத்தின் வழிவகைகளுக்கிணங்க, கூடியிருக்கும் பாராளுமன்றத்தில் காமன்ஸ் சபையின் இசைவோடும் ஆலோசனையின் பேரிலும் மிகுமாட்சிமை தங்கிய மன்னர்பிரானல் சட்டமாக்கப்பெற்றது; அதே அதிகாரத்தினல் பின்வருமாறு சட்டமாயிற்று.'

(2) இச் சட்டப் பிரிவினைப் பயனுள்ளதாகச் செய்வதற்கான மாற்றம் ஏதும், இம் மசோதாவின் திருத்தமாகாது.

5. தாற்காலிகமான ஆணையை உறுதி செய்யும் மசோதா எதையும் இச் சட்டம் குறிப்பிடும் 'பொது மசோதாவில்' சேர்க்க முடியாது.

6. காமன்ஸ் சபையின் தற்போதைய உரிமைகளையோ அல்லது சிறப்புரிமைகளையோ இச் சட்டம் குறைக்கவோ அல்லது வரையறுக்கவோ முடியாது.

7. 1715ஆம் ஆண்டின் ஏழாண்டுச் சட்டப்படி பாராளுமன்றத்தின் அதிகப்படியான காலம் ஏழாண்டிற்கு பதிலாக ஐந்தாண்டாக இருக்க வேண்டும்.

8. இச் சட்டம் 1911ஆம் ஆண்டின் பாராளுமன்றச் சட்டம் என்று குறிப்பிடப்பெறும்.

1947ஆம் ஆண்டு தோன்றிய அரசியல் நெருக்கடியின் விளைவாக, 1949ஆம் ஆண்டைய பாராளுமன்றச் சட்டம் உருவானது. மேலே குறித்தவாறு, 1911ஆம் ஆண்டின் சட்டத்தில் மாற்றங்களைச் செய்த அச் சட்டம், சிறிது காலத்திற்கே முக்கியமானதாக இருந்த சிக்கல் மிகுந்த வாசகக் கூறோடு தொடர்ந்து வருகின்றது.[92]

**பயன்கள்:** பாராளுமன்றச் சட்டத்தின்[93] விளைவாகப் பண மசோதாக்களைப் பொறுத்தமட்டில் சட்டமியற்றும் அதிகாரம் முழுவதையும் பிரபுக்கள் சபை இழந்தது எனலாம். பண மசோதாக்கள் நீங்கலாக உள்ள பிற பொது மசோதாக்களைச் சிறிது காலத்திற்குத் தள்ளி வைக்கலாமே ஒழிய இறுதியாகத் தள்ளுபடி செய்துவிடும் அதிகாரம் அச் சபைக்கு இல்லை. பேராசிரியர் டைசி (Professor Dicey), இச் சட்டத்தின் பொது விளைவைப் பின்வருமாறு சுருக்கித் தந்துள்ளார்:[94] 'பாராளுமன்றச் சட்டம் பிரிவு இரண்டில் காணப்பெறும் நிபந்தனைகட்குட்பட்டு எப்போதும் எந்த ஒரு மசோதாவையும் இயற்றும் அதிகாரத்தைக் காமன்ஸ் சபைக்கு அல்லது தெளிவான மொழியில் பேசுவதானால், அதிலுள்ள பெரும்பான்மையினருக்குப் பாராளுமன்றச் சட்டம் அளித்தது என்பது தெளிந்த உண்மை. எனினும், ஒரு மசோதா, பாராளுமன்றத்தின் சட்டமாக ஆவதை நிச்சயமாக இரு ஆண்டுகளுக்கு மேலும், அநேகமாக அதற்கு அதிகமாகவும் தடுத்து வைக்கும் தள்ளுரிமை அதிகாரத்தை, அவ் வாசகக் கூறுகள், பிரபுக்கள் சபையிடம் விட்டுவைத்தன.'

பின்வரும் பக்கங்களில் காணப்படுவதுபோல மேல் சபையின் அமைப்பு, அதிகாரங்கள்பற்றிய பிரச்சினைகளைப் பிரபுக்கள் சபைக்கும் காமன்ஸ் சபைக்குமிடையே தோன்றிய

சில திடீர் திருப்பமுடைய சச்சரவுகள் தோற்றுவித்தன. அவைகள் அச் சபையைச் சீர்திருத்துவதற்கான பல திட்டங்கள் உருவாவதற்கும் காரணமாயிருந்தன. பிற காரணங்களும் இப் போக்கையே வலியுறுத்தின. வெளிநாடுகளில் இருந்த இதை ஒத்த சுவைமிக்க பயனுள்ள செய்திகளை ஒப்பு அரசியல் பாடம் அளிக்கின்றது. அதே சமயத்தில் மேல் முறை வழக்குகளில் சபை, தனது கடமைகளை ஆற்றுவதற்குத் தலைசிறந்த சட்ட நிபுணர்களின் துணை மேலும் இன்றியமையாததாகியது.

**வின்ஸ்லிடேல் பிரபுத்துவம், 1856 :** மேல்சபையின் பழங் காலத்து மேல் முறையீட்டு அதிகார எல்லையைச் செம்மை செய்யும் நோக்கத்தோடு, அரசருடைய தனிச் சிறப்பதிகாரத்தின் மூலமாக வாழ்நாள் பிரபுத்துவத்தைத் திரும்பவும் கொண்டு வருவதற்கான முயற்சி 1856ஆம் ஆண்டில் தோன்றியது. இரண்டாம் ரிச்சர்டின் ஆட்சிக்கும் நான்காம் ஹென்றியின் ஆட்சிக்குமிடையே கோமகன்கள், ஏர்ல் பிரபுக்கள் போன்ற பல சாதாரண பிரபுக்கள் ஆயுள் காலம்வரை மட்டுமே[95] அமர்த்தப்பெற்றதுண்டு. ஆயின், அதன் பிறகு நானூறு ஆண்டுகளுக்கு மேலாக ஒருவர்கூட ஆயுள் காலம்வரை மட்டும் பிரபுவாக இருந்து பிரபுக்கள் சபையில் அமர அனுமதிக்கப்பட்டதாகத் தெரியவில்லை.[96] எக்ஸ்செக்கர் நீதிமன்றத்தில் நடுவராக இருந்தவர் சர் ஜேம்ஸ் பார்க் (Sir James Park). அவர் 'ஆயுள் காலம் வரையில்' வென்ஸ்லிடேல் பிரபுவாக (Baron Wensleydale) அமர்த்தப்பெற்றார். இதற்கான உரிமைப் பத்திரத்தைப் பிரபுக்கள், சிறப்புரிமைக் குழுவின் ஆய்விற்கு விட்டனர். அக் குழு அளித்த அறிக்கையை ஏற்று, 'பாராளுமன்றத்தில் அமரவும் வாக்களிக்கவும் ஆன உரிமையைக் காப்புரிமைப் பட்டயமோ அல்லது அதற்காக விடப்பெறும் அழைப்பு ஆணையுடனான காப்புரிமைப் பட்டயமோ ஒருவருக்கு அளித்து விட முடியாது' எனக் கொண்டனர். இத்தகைய முடிவின் விளைவாக, வென்ஸ்லிடேல் பிரபுவை நாட்டில் மரபு வழியாக வரும் பிரபுவாகச் செய்வதற்கான புதிய உரிமைப் பட்டயம் அளிக்கப்பட்டது. 'பிரபுக்கள் சபையின் இத் தீர்மானம் அரசியல் அமைப்புச் சட்டத்தின் சிறந்த விளக்கம் என்பதாகப் பொதுவாகப் பின் வந்தோரால் ஏற்றுக்கொள்ளப்பட்டது' என்று சர் எர்ஸ்கின் மே என்னும் அறிஞர் குறிப்பிட்டார். மேலும் அவர் 'பழைய மரபுகள் அடிப்படையில் அமைக்கப்பெறும் அமைப்புகளில், பாராளுமன்றத்தின் சட்டமியற்றும் உயர்தனி அதிகாரத்தின் மூலமாகவன்றி மரபுகளை மாற்றாது இருப்பது பாதுகாப்பளிக்கிற விரும்பத்தக்க கொள்கையாகும்'

என்றும் கூறிப்போந்தார்.[97] முறை மன்ற ஆயுள் பிரபுக்கள் இருவரை அமர்த்த அதிகாரம் அளிக்கும் மசோதா ஒன்றை அரசாங்கம் கொண்டுவந்தது. பிரபுக்கள் சபையில் நிறை வேறிய அம் மசோதா காமன்ஸ் சபையில் தோல்வியுற்றது. தலைசிறந்து விளங்கிய இருபத்தெண்மரை ஆயுள் பிரபுக்களாக அமர்த்த அதிகாரம் அளிக்கும், 1869ஆம் ஆண்டில் ரஸ்ஸல் பிரபு கொண்டுவந்த மசோதா, பிரபுக்கள் சபையில் நிறைவேற வில்லை.

வின்ஸ்லிடேல் விவகாரத்திற்குப் பின், இருபது ஆண்டுகள் இடைக்காலத்தில் இங்கிலாந்தைப் பொறுத்தவரையில்[98] பிரபுக்கள் சபையின் மேல் முறையீட்டு அதிகார எல்லை ஒரு சமயம் அநேகமாக அழிக்கப்பட்டது. ஆயின், 1876ஆம் ஆண்டின் மேல் முறையீட்டு மன்ற அதிகார எல்லைச் சட்டம் இறுதியாக இரு முறையீட்டுப் பிரபுக்களை அமர்த்த வழி வகுத்தது. அவர்கள் ஆயுள் பிரபுக்களாக இருக்கவேண்டும்; பதவிக் காலம் வரையில்தான் சபையில் அமர்ந்து வாக்களிக்க வேண்டும்.

**ஆயுள் பிரபுக்கள்:** அரசியல் அமைப்பு வரலாற்று அடிப் படையில் முக்கியத் திருப்பத்தை ஏற்படுத்திய ஆயுள் பிரபுத்துவத்தைப்பற்றி மேலும் விளக்குவது பொருத்தமான தாகும். பிரிவி கவுன்சிலின் முறை மன்றக் குழுவில் ஊதியம் பெறும் இரு நீதிபதிகள் இறந்தாலோ அல்லது பதவியிலிருந்து விலகினாலோ மூன்றாவது மேல் முறையீட்டுப் பிரபுவை அமர்த்தும் அதிகாரத்தை மேலே குறிப்பிட்ட சட்டம் அளித்தது. மேலும் அது பிரிவி கவுன்சிலர் முறை மன்றக் குழுவிலுள்ள மற்ற இரு நடுவரும் பதவியிலிருந்து விலகினாலோ அல்லது ஓய்வு பெற்றுச் சென்றாலோ நான்காவது மேல் முறையீட்டுப் பிரபுவை நியமிக்கும் அதிகாரத்தையும் அளித்தது. இதனால் பழைய கருத்து ஒன்றை ஏற்றதோடு புதிய கருத்து ஒன்றையும் புகுத்தினர். ஹே பிரபுவைப் (Lord Hay) போன்று ஆயுள் காலம்வரையில்தான் பிரபுத்துவம் பெற்ற ஒருவர் அப் பதவியை அனுபவித்தபோதிலும், பாராளுமன்றத்தில் அமர்ந்து வாக்களிக்கும் உரிமை பெற்றவரல்லர் என்று இருந்ததை அப்படியே மீண்டும் வலியுறுத்தியது. ஆயின், பாராளுமன்றத்திற்கான அழைப்பைப் பெற்று, அதில் அமர்ந்து வாக்களிக்கும் உரிமையோடு கூடிய பிரபுக்களை அமர்த்தியதும், அவர்கள் ஆயுள்வரைக்கும்கூட அன்றிப் பதவிக் காலம் வரையிலேயே இவ்வித உரிமையைப் பெற்றிருந்ததும், அதிலும்

சாதாரணப் பொதுமக்கள் இந் நிலையை அடைந்தது முற்றிலும் புதிய ஒன்றாகும். எப்படியென்றாலும், பண்டைய உயர் முறை மன்றத் தலைவர்கள் காலத்திருந்து முன்னிகழ்வு ஏதும் இல்லாத ஒன்று.[99] 1887ஆம் ஆண்டின் மேல் முறையீட்டு மன்ற அதிகார எல்லைச் சட்டம் இத்தகைய மாற்றத்தை மேலும் விரிவு படுத்தியது. அதன்படி ஆயுள் பிரபுக்கள் பதவியிலிருந்து ஓய்வு பெற்ற பின்பும் பிரபுக்கள் சபையில் உறுப்பினராக அமர்ந்து வாக்களிக்கலாம். மேலும் அதனுடைய முக்கிய இரண்டாவது வாசகக் கூறு பின்வருமாறு வகுத்தது: "1876ஆம் ஆண்டின் மேல் முறையீட்டு மன்ற அதிகார எல்லைச் சட்டத்தின்படி அமர்த்தப்பெற்ற மேல் முறையீட்டுப் பிரபுக்களையும், இனி அமர்த்தப்படவிருக்கும் பிரபுக்களையும் பொறுத்தவரையில் அச் சட்டத்தின் ஆறும் பிரிவு உய்த்துணரப்படுவதோடு, நடை முறையில் கொண்டுவரப்பெறுதல் வேண்டும். அவ்வாறு செய்யும்போது, 'மேல் முறையீட்டு பிரபுவானவர் பதவிக் காலம் வரையில் மட்டுமன்றி அதற்கு மேலும், சபையில் அமர்ந்து வாக்கு அளிக்கும் உரிமை கொண்டவரல்லர் என்னும் வாசகங்கள் அப் பிரிவில் இல்லாதது போலவே உய்த்துணர்ந்து, மேல் முறை யீட்டுப் பிரபுக்கள், பிரபுக்கள் சபையின் உறுப்பினராக ஆயுள் முழுவதும் அமர்ந்து வாக்களிக்கும் உரிமை கொண்டவராகக் கருதப்படுதல் வேண்டும்." இங்ஙனம் மேல் முறையீட்டுப் பிரபுக்கள் வாழ்நாள் முழுவதற்குமான பாராளுமன்றப் பிரபுக்களாக விளங்கினர். ஆயினும், அப் பிரபுவின் அந்தஸ்து வழிவழியாக வரக்கூடியது அன்று. 1897ஆம் ஆண்டில் விக்டோரியா மகாராணியாரின் வைர விழாவின்போது அவரது ஆணையின்பேரில் மரபாக வரும் பிரபுக்களின் இளைய மக்களுக்கு அடுத்தபடியாக மேல் முறையீட்டுப் பிரபுக்களின் மக்களுக்குத்தான் முன்னுரிமை அளிக்கப்பட்டது. இதற்கான அழைப்பாணை 1898ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் வரையில் அரசாங்க அறிக்கையில் இடம் பெறவில்லை என்பது உண்மையே.[1]

**மற்றுஞ் சில சீர்திருத்தத் திட்டங்கள்:** 1876ஆம் ஆண்டின் மேல் முறையீட்டு மன்ற அதிகார எல்லைச் சட்டத்தைத் தொடர்ந்து, பிரபுக்கள் சபை அமைப்பைப்பற்றி ஆய்வதற் கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினரைக்கொண்ட ஒரு குழுவை நியமனம் செய்யவேண்டி 1888ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் ரோஸ்பரி பிரபு ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். இத் தீர்மானம் தோல்வியுற்றாலும், இதைத் தொடர்ந்து அதே ஆண் டில், மேல்சபையை மீண்டும் கூட்டுவதற்கும் திருத்தி அமைப்

பதற்குமான திட்டங்களை டன்ரேவன் கோமானும் சாலிஸ்பரி கோமானும் கொண்டுவந்தனர். இத் திட்டங்கள் திரும்பப் பெறப்பட்டன.[2]

அடுத்தபடியாகத் தேர்தலில் வெற்றி பெற்ற பெருமிதத்தில் காமன்ஸ் சபையில் இருந்த ராடிகல் கட்சியினர், மேல் சபையைத் தீவிரமாகத் திருத்தி அமைக்கவேண்டுமென்று கிளர்ச்சி செய்தனர். நார்த்தாம்டனின் உறுப்பினரும், ராடிகல் கட்சியினரின் சார்புரிமைப் பேச்சாளருமான லாபொச்ரே (Labouchere) என்பார், அரியணை சொற்பொழிவிற்கு 1894ஆம் ஆண்டு மார்ச்சு திங்கள் 13ஆம் தேதி திருத்தம் ஒன்று கொண்டு வந்தார். அதனுடைய வாசகங்கள் பிரபுக்கள் சபையை அடியோடு ஒழித்துவிடவேண்டுமென்று கோருவதுபோல் அமைந்தது. அவரது திருத்தம் சபையில் நிறைவேறியது. ஆனால், அதே நாளில் அரசாங்கத்தின் வேண்டுகோளின் பேரில், திருத்தப்பெற்ற அரியணைச் சொற்பொழிவு நிராகரிக்கப்பட்டது. இங்ஙனம் ஓர் ஆபத்து நிறைந்த அரசியல் அமைப்புச் சார்ந்த நெருக்கடி தவிர்க்கப்பட்டது. எதிர்க் கட்சித் தலைவரான மிஸ்டர் பால்ஃபோர் (Mr. Balfour) குறிப்பிட்டவாறு 'மாட்சிமை தங்கிய மாகாராணிக்கான உரையை முதலில் முன்மொழிந்தவருடைய தீர்மானத்தின் பேரிலேயே அது திரும்பப் பெறப்பட்டது.'

எவ்வாறெனினும், இம்முறை பிரபுக்கள் சபையின் அமைப்பு அல்லாமல், அதனுடைய அதிகாரங்களே சட்டத்தின் மூலமாக வரையறுக்கப்பெற்றன. அவ்வாறு செய்வதற்கான உடனடிக் காரணமாக இருந்தது. 1909ஆம் ஆண்டின் பண மசோதாவை நிராகரித்த பிரபுக்களின் செயலேயாகும். 1911ஆம் ஆண்டு நிறைவேறிய பாராளுமன்றச் சட்டத்தோடு புயல்வீசிய அந் நிகழ்ச்சி முடிவுற்றது. 'மரபுரிமை அடிப்படையில் அல்லாது பொதுமக்கள் சார்ந்த' மேல் சபை இருக்கவேண்டுமென்பதை இச் சட்டத்தின் முன்னுரை வலியுறுத்துகின்றது.

**பிரைஸ் ஆணைக் குழுவின் அறிக்கை :** கூடியவரையில் கால தாமதம் இன்றி மேல் சபையின் அமைப்பைச் சீர்திருத்தவேண்டுமென்று எங்கும் வலுவடைந்துவரும் கருத்தினை அரசாங்கம் கைவிட்டுவிடவில்லை. ஆயினும், 1914ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் முதல் உலகப் பெரும்போர் மூண்டதனால், இப் பிரச்சினையை ஆராய்வதை ஒத்திப்போட்டனர். இச் செய்தியைப் பரிசீலனை செய்யவேண்டுமென்று பிரைஸ் (Bryce)

என்பாரின் தலைமையிலான ஆணைக் குழுவினை 1917ஆம் ஆண்டு ஆக்ஸ்டு மாதம் 17ஆம் தேதிதான் பிரதமர் நியமித்தார். அக் குழுவின் ஆய்வுக்குரிய பொருள் எல்லை வருமாறு :

'(1) சீர்திருத்தப்பெற்ற மேல் சபையின் சட்டமியற்றும் அதிகாரத்தின் தன்மையும் கட்டுப்பாடுகள்பற்றியும் ;

(2) பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்குமிடையே யுள்ள வேற்றுமைகளைச் சரிசெய்வதற்கான சிறந்த வழி பற்றியும் ;

(3) மேல் சபைக்குரிய கடமைகளைச் சரிவர ஆற்றுதற்கு உகந்த வழியில் வருங்காலத்தில் அச் சபையை அமைப்ப தற்குத் தேவையான மாற்றங்கள் பற்றியும்; ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிக்க வேண்டும்.

1917ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் இரண்டாம் நாள் தொடங்கிய மாநாடு, ஆறு மாதங்களுக்குமேல் 48 முறை கூடி விவாதித்தது. 1918ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம்தான் அது தனது அறிக்கையை வெளியிட்டது.[3]

மேல் சபைக்குரிய பணிகளைப் பொறுத்தவரையில் பின்வரும் செய்திகளை மாநாடு ஏற்றது :

'(1) கடந்த முப்பது ஆண்டுகளில் பலமுறை காமன்ஸ் சபையில் விவாதங்களைக் கட்டுப்படுத்தும் சிறப்பு விதிகள் தோன்றிய நிலையில், காமன்ஸ் சபையிலிருந்து வரும் மசோதாக் களை ஆராய்ந்து மாற்றியமைக்கும் பணி, மிகுதியாகத் தேவைப் படுகிறது.

'(2) அதிக முரண்பாடு இல்லாத செய்திகளைப் பொறுத்த மசோதாக்களைக் கொண்டுவந்து அவற்றை முழுவதும் விவாதித்து, நன்கு அமைந்த வடிவிலே காமன்ஸ் சபையில் சமர்ப்பிக்கப்படுமானால், அவைகள் எளிதாகச் சட்டங்களாகி விடும்.

'(3) ஒரு மசோதாவின்மீது நாட்டு மக்கள் கொண்டிருக்கும் கருத்தைப் போதுமான அளவிற்கு வெளியிட வாய்ப்பளிக்கும் வகையில் அம் மசோதாவைச் சட்டமாக இயற்றுவதில் ஏற்படும் காலதாமதம் (அதிகமாக இல்லாதவரையில்) அனுசரணையாக இருந்தது.

'(4) காமன்ஸ் சபையானது வேலை மும்மரத்தில் அயல் நாட்டுக் கொள்கை போன்ற முக்கியமான பிரச்சினைகளைக் கவனிக்கப் போதுமான காலம் கிடைக்காது தவிக்கும் சமயங் களில் அப் பிரச்சினைகளை முழுதுமாகத் தடையேதுமின்றி ஆராய்வது நல்லது. விவாதங்களும் வாக்குப் பிரிவும் நிர்வாக அரசாங்கத்தின் தலைவிதியை நிர்ணயிக்காத சபையில் இத் தகைய விவாதங்கள் நடைபெறுதல் மிகுந்த பயனுள்ளதாக அமையும்.'[4]

பலவகையான பொதுப்பணிகளில் பட்டறிவு கொண்டவர் களும், நாட்டு மக்கள் வாழ்க்கையின் பல துறைகளிலும், பேரரசு பிரச்சினைகளிலும் தனிப்பட்ட அறிவு பெற்றோரும், தீவிர கட்சிக் கொள்கை இல்லாதவர்களும் விரும்பத்தக்க உறுப்பினர்கள் என்பதை மேல் சபையில் இடம்பெறவேண்டிய கூறுகள்பற்றிக் குறிப்பிடும்போது ஏற்றனர்.[5]

நமது அரசியல் அமைப்புத் திட்டத்தில் மேல் சபையின் நிலை என்பதைப்பற்றிக் கீழ்வரும் முடிவுகளை அறிவித்தனர்: 'காமன்ஸ் சபையினை ஒத்த அதிகாரங்களைப் பிரபுக்கள் சபை கொண்டிருத்தலாகாது. மேல் சபையானது மற்ற மன்றத் திற்குப் போட்டியாக வர எண்ணக்கூடாது. முக்கியமாக, மந்திரி சபைகளை அமைக்கவும் நீக்கவுமான அதிகாரம் அதற்குத் தகாது. நிதி சார்ந்த செய்திகளில் அது சம உரிமை பெற்றிருக்கக் கூடாது. சீர்திருத்தப்பட்ட மேல்சபையில் ஒரே வகையான அரசியல் கருத்துகள் குறிப்பிடத்தகுத்த முறையில் நிரந்தர மான செல்வாக்குப் பெற்றுவிடாது இருப்பதற்கான எல்லாவித எச்சரிக்கைகளையும் கொள்ளவேண்டும். கட்சி எண்ணங்களின் செல்வாக்கில் வழக்கமாகச் செயலாற்றும் பொறுப்பினை ஏற்க வேண்டாத வகையில் அச் சபையின் அமைப்பு இருக்க வேண்டும்.

'நாட்டு மக்கள் அனைவருடைய மனப்பாங்கையும் கருத்து களையும் அறிந்துகொள்ள மேல் சபை முயலவேண்டும். மக்க ளுடைய விருப்பத்திற்கு எதிராக இல்லாது, அதனைப் புரிந்து கொண்டு அது நன்கு வெளிப்படும்போது அதற்கு உயிர் ஊட்டி, மக்களுக்கு முழு அளவில் பொறுப்பான சபை என்பதை அது உணரவேண்டும்.

'முக்கியமான பொதுப் பணிகளை நிறைவேற்றுவதற்கென்று தனிப்பட்ட முறையில் அதனுடைய உறுப்பினர்கள் தேர்ந் தெடுக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதால் மட்டுமன்றி, அவர்

களுடைய சொந்தவன்கையிலான தனிச்சிறப்பு, நாட்டிற்குச் சேவை செய்வதில் அவர்களிடம் காணப்பெற்ற தகுதி, அவர் தம் குணநலங்களும், கொண்டிருக்கும் வாழ்க்கையும் தூண்டக் கூடிய நம்பிக்கை ஆகியவற்றின் மூலமாகவும் வரும் அறமுறை யான அதிகாரத்தை அது பெற்றிருக்க வேண்டும். கூடுமான வரையில் பண்டைய பிரபுக்கள் சபைக்கும் புதிய மேல்சபைக்கு மிடையே இருக்கும் தொடர்புநிலையைப் பாதுகாக்கவேண்டும். புதிய சபையின் பெருமையை உயர்த்தவும், அச் சபையில் அங்கம் வசிக்கவேண்டுமென்ற முறையான ஆசையைத் தூண்டவும் பண்டைய பிரபுக்கள் சபை தனது உயர்ந்த மரபு களையெல்லாம் புதிய சபையிடம் ஒப்படைக்கவேண்டும்.''[6]

மேலே கண்ட அடிப்படைக் கருத்துகள் பொதுவாக ஏற்றுக்கொள்ளக்கூடியவையாக இருந்தமையால், மாநாட்டின் ஒருமித்த ஆதரவினைப் பெற்றன. எனினும், மேல் சபையின் அமைப்பு பற்றிய பிரச்சினை கடினமானதாகவும் வாதத்திற்கு அதிக இடம் கொடுப்பதாகவும் இருந்தது. ஆரம்பநிலை ஆய்வுகளில், புதிய சபையின் ஒரு பகுதி ஏற்கெனவே இருந்த பிரபுக்களில் இருந்துவந்ததாக இருக்கவேண்டுமென்பது முதல் தேவையென்பதும், உறுப்பினரில் பெரும் பகுதியினர் பொது மக்கள் சார்ந்த அதிகாரத்தை அனுபவிக்கும் வகையில் தெரிவுசெய்யப்படுதல் வேண்டுமென்பது இரண்டாவது தேவை என்பதும் வெளியாயின. வாக்காளருக்கோ அல்லது வேட்பாளருக்கோ உள்ள சொத்து மதிப்பு அடிப்படையில் தேர்தல் அமையவேண்டுமென்ற கருத்து நிராகரிக்கப்பட்டது. அதைப்போலவே சில குறிப்பிட்ட பிரிவினரிலிருந்து தேர்ந்தெடுக்க வேண்டுமென்ற கருத்தும் கைவிடப்பெற்றது. பொதுமக்கள் சார்ந்த கூறினை முதன்மையுறச் செய்வதற்காக, சபையின் அமைப்பில் ஐந்து மாற்று வழிகள் ஆராயப்பட்டன. அவைகளாவன: (a) நியமனம், (b) நேரடித் தேர்தல், (c) உள்ளூர் ஆட்சி அமைப்புகளால் தெரிவு, (d) இரு சபைகளின் நிரந்தர இணைக் குழுவினால் தெரிவு, (e) காமன்ஸ் சபையினால் தேர்ந்தெடுக்கப்பெறல்.[7] பின்வரும் முறையே சிபாரிசு செய்யப்பட்டது: மேல் சபையில் இரு பிரிவுகள் இருக்க வேண்டும். அவற்றில் ஒன்று ஒருவகையான நிலப் பிரிவு அடிப்படையில் காமன்ஸ் சபை உறுப்பினரைக்கொண்ட சிறு சிறு பிரிவுகளினால் தேர்ந்தெடுக்கப்பெற்ற 246 உறுப்பினரைக் கொண்டதாக இருக்க வேண்டும். அவர்களின் பதவிக் காலம் பன்னிரண்டு ஆண்டுகள். நான்கு ஆண்டுகளுக் கொருமுறை அவர்களில் மூன்றில் ஒரு பகுதியினர் ஓய்வுபெற

வேண்டும். இரண்டாவது பிரிவு இரு சபைகளின் நிரந்தர இணைக் குழுவினால் தேர்ந்தெடுக்கப்பெற்ற 81 உறுப்பினரைக் கொண்டது. அவர்களுடைய பதவிக்காலமும், ஓய்வுபெறும் முறையும் முந்திய பிரிவில் கண்டவாறே.[8] மேலும் பிரபுக்கள் சபையானது அதுவரை கொண்டிருந்த முறை மன்றப்பணிகளைப் புதிய மேல் சபையும் நிறைவேற்ற வேண்டியிருக்குமானால், உயர் முறை மன்றத் தலைவரும், முன்னாள் உயர்முறை மன்றத் தலைவர்களும், மேல் முறையீட்டு மன்ற அதிகார எல்லைச் சட்டத்தின்படி நியமனம் பெற்ற சட்டப் பிரபுக்களும் பதவி சார்ந்த முறையில் உறுப்பினர்களாக இருக்க வேண்டும்.[9] அறிக்கையின் எஞ்சிய பகுதியில் புதிய பிரபுக்கள் சபையை அமைப்பதற்கான பொதுவான சிபாரிசுகளைக் காணலாம். மேலும், நிதி மசோதாபற்றிய அதிகாரங்களும், இரு சபைகளுக்கும் இடையே ஏற்படும் சச்சரவுகளை நீக்கி சந்து செய்வதற்கான வழிகளும் இடம்பெற்றன.[10] இத் திட்டம் நிறைவு பெறவில்லை. மேல் சபையைத் திருத்தி அமைப்பதற்கான திட்டவட்டமான நடவடிக்கை ஏதும் மேற்கொண்டு எடுக்கப்படவில்லை.

'பிரபுக்களின் வழக்கு விசாரணை' என்பது பிரபுக்களின் பண்டைய, வரலாற்றுப் புகழ் பெற்ற முக்கியச் சிறப்பதிகாரங்களில் ஒன்று. அச் செயல்முறை செலவு மிக்கதாக இருந்ததால், 1948ஆம் ஆண்டில் நீக்கப்பெற்றது.[11]

இத்தகைய நீக்கத்திற்கான நடவடிக்கை எடுக்கப்பட்ட போது ஆயுள் பிரபுத்துவ கருத்திற்கும், பிரபுக்கள் சபையில் பெண்களை அனுமதிப்பதற்கும் சட்டரீதியான உறுதியீடு கிடைத்தது.[12]

## காமன்ஸ் சபை

பிரபுக்கள் சபையைப்போலவே, உறுப்பினரின் எண்ணிக்கை, அமைப்பு, அரசியல் செல்வாக்கு ஆகியவற்றில் காமன்ஸ் சபையும் பெருத்த மாறுதல்களுக்குட்பட்டது.

**உறுப்பினரின் எண்ணிக்கை :** முதலாம் எட்வர்டு மன்னரின் ஆட்சியில் பொதுமக்கள் பிரதிநிதிகளின் எண்ணிக்கை அதிகம் மாறுபட்டிருந்தது. முழுப் பாராளுமன்றத்தில் டர்ஹாம், செஸ்டர் ஆகிய இரு நிலப்பரப்புகள் நீங்கலாகவுள்ள 37 கவுண்டிகளில் இருந்து இரண்டு என்னும் வீதத்தில் வந்த 74 நைட் வீரர்களும், ஏறத்தாழ இருநூறு நகரமாந்தரும், வணிகரும்

இடம் பெற்றனர். மூன்றும் எட்வர்டு மன்னர் காலத்திலும் அவரை அடுத்து வந்த மூன்று மன்னர்களின் ஆட்சியிலும் வணிகர்களின் எண்ணிக்கை ஏறக்குறைய 180 ஆக இருந்தது. முன்பு பிரதிநிதிகளை அனுப்பிய பகுதிகளை, அலட்சியம் காரண மாகவோ அல்லது ஒரு பக்கமாகச் சாய்வதாலோ, மாவட்ட அதிகாரிகளான ஷெரீஃப்கள் (Sheriffs) நீக்கிவிடுவதால், ஒவ்வொரு பாராளுமன்றத்திலும் உறுப்பினரின் எண்ணிக்கை மாறு பட்டது. நகரங்களின் செல்வாக்கு அதிகரிப்பதாலோ அல்லது கீழ் சபையில் அரசரின் அதிகாரத்தைப் பெருக்குவதற்காகவோ பிரதிநிதிகளை அனுப்புமாறு புதிய பரோக்கள் அழைப்பு ஆணைகளைப் பெற்றன. பாராளுமன்றத்தில் 224 நகர மாந்தரையும் வணிகரையும் பிரதிநிதிகளாகக் கொண்ட 111 நகரங்களையும் பரோக்களையும் எட்டாம் ஹென்றி அரசு எய்தியபோது காணமுடிகிறது. 1832ஆம் ஆண்டின் சீர்திருத்த மசோதா நிறைவேறும் வரையில் அவற்றின் நிலை மாறாமல் இருந்தது. ஹென்றியின் ஆட்சியில் வேல்ஸிலிருந்து பிரதிநிதிகள் பலர்[13] வந்ததால், பாராளுமன்ற உறுப்பினரின் எண்ணிக்கை பெருமளவில் உயர்ந்தது. காமன்ஸ் சபையில் மன்னரின் செல்வாக்கை வளர்ப்பதற்காக சிறப்பற்ற பரோக்களை[14] உருவாக்கும் கொள்கையை டியூடர் மன்னர்கள் பின்பற்றினர்.[15] எட்டாம் ஹென்றியின் ஆட்சிக்கும் இரண்டாம் சார்லஸின் ஆட்சிக்கும் இடையில் அரச உரிமைப் பத்திரங்களின் மூலமாக மட்டும் 180-க்கும் குறையாத உறுப்பினர் அதிகமாயினர்.[16] இரண்டாம் சார்லஸ் ஆட்சியில் அரச உரிமைப் பத்திரத்தின்மூலமாக பாராளுமன்ற வாக்குரிமை பெற்ற நிவார்க் (Newark) பரோதான் இவ்வகையில் வந்த இறுதி பரோ. அதன்பின் அழைப்பு ஆணைகளை விடுக்கும் பணியை காமன்ஸ் சபையே மேற்கொண்டது. 1832ஆம் ஆண்டைய சீர்திருத்த மசோதா வரும் வரையில் இங்கிலாந்திலோ அல்லது வேல்ஸிலோ புதிய பரோ தொகுதி தோன்றவில்லை. ஸ்காட்லாந்துடனான ஐக்கியம் ஏற்பட்டபோது 513 உறுப்பினர் இருந்தனர். ஐக்கியச் சட்டத்தினால், அந் நாட்டிலிருந்து 45 பிரதிநிதிகள் வந்தனர். 1800ஆம் ஆண்டில் நிறைவேறிய அயர்லாந்துடனான ஐக்கியச் சட்டத்தின் விளைவாக மேலும் 100 ஐரிஷ் உறுப்பினர் கூடினர். அதன் பிறகு ஸ்காட்லாந்திலிருந்து 72 உறுப்பினரும் அயர்லாந்திலிருந்து 103 உறுப்பினரும் வந்ததால், மூன்று நாடுகளுக்கும் இடையேயான பிரதிநிதித்துவ வீதத்தில் சிறிது மாறுதல் தோன்றியிருக்கின்றது.[17]

கொள்கையளவில் குறைவற்றதாக அமைக்கப்பெறாத பிரதிநிதித்துவ முறையானது சிறிது காலத்திற்கு நடைமுறையில் செவ்வனே செயற்பட்டது. பதின்மூன்றும், பதினான்காம் நூற்றாண்டுகளில் பாராளுமன்றங்களில் அமர்ந்த ஷயரின் நைட் வீரர்களும் வணிகரும், கவுன்டிகளிலும் பரோக்களிலும் அவர்களைத் தேர்ந்தெடுத்த உரிமைக் குடியினரில் பெரும்பான்மையினரின் எண்ணங்களை உண்மையில் பிரதிபலித்தனர்.

**பிரதிநிதித்துவ முறையின் குறைபாடுகள்:** பதினான்காம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து 1832ஆம் ஆண்டில் சீர்திருத்த மசோதா நிறைவேறும் வரையில் எண்ணிக்கையில் பெருகிய காமன்ஸ் சபை உண்மையான பிரதிநிதித்துவப் பண்பை மேன்மேலும் இழந்துவந்தது. ஒரேசமயத்தில் பழைய நகரங்கள் சிதைந்ததனாலும், ஒரு காலத்தில் வெறும் விவசாய கிராமங்களாக இருந்தவை வாணிப முக்கியத்துவம் பெற்று வளர்ந்ததனாலும், காலப்போக்கில் இயல்பாக வளர்ந்த பிரதிநிதித்துவ ஏற்றத்தாழ்வு கவனிக்கப்படாமலே இருந்தது. நாம் முன்பே கண்டதைப்போல எட்டாம் ஹென்றியின் ஆட்சிக்கும் இரண்டாம் சார்லஸின் ஆட்சிக்கும் இடையே பல புதிய பரோக்கள் அரச உரிமைப் பத்திரங்களின் மூலமாக வாக்குரிமை பெற்றன. ஆனால், அவைகளில் பல அளவிலோ சிறப்பிலோ பெரியவை அல்ல. நியமன பரோக்களாக, காமன்ஸ் சபையில் அரசருடைய அதிகாரத்தை வளர்க்கும் வெளிப்படையான நோக்கத்துடனேயே பல பரோக்கள் பாராளுமன்றத்திற்குப் பிரதிநிதிகளை அனுப்பும் உரிமை அளிக்கப்பெற்றன. இவ்வித ஊழலை ஒழிப்பதற்காக 1653ஆம் ஆண்டில் அரசியல் மேதகைமைசான்ற முயற்சியில் கிராம்வெல் (Cromwell) ஈடுபட்டார். மான்செஸ்டர், லீட்ஸ், ஹாலிஃபாக்ஸ் போன்ற நகரங்களுக்கு உறுப்பினரை ஒதுக்குதல், கவுன்டி உறுப்பினர்களின் எண்ணிக்கையை உயர்த்துதல் போன்றவற்றைக் கொண்டுவந்தார். ஆயினும், தேவையான 'மாற்றங்கள்' என்றும் 'நல்ல காலங்களில் செய்யத் தகுதிவாய்ந்தவை' என்றும், கிளாரண்டனால் வர்ணிக்கப்பெற்ற கிராம்வெல்லின் சீர்திருத்தங்கள் அரச முன்னிலை மீட்சியின்போது (Restoration) தள்ளுபடியாயின. அதற்கப்புறம் மூன்றாம் ஜார்ஜ் மன்னரின் ஆட்சிக் காலம் வரையிலும் பிரதிநிதித்துவ முறையில் வளர்ந்துவந்த ஊழல்களை ஒழிக்கும் முயற்சி ஏதும் மேற்கொண்டு நடைபெறவில்லை,

**பரோ ஸ்தானங்களின் விற்பனை:** பிரதிநிதித்துவ முறையானது, முற்றிலும் பண அவாவுள்ளதாகவும் ஊழல் மலிந்ததாகவும் ஆகியது.[18] பொதுவாகக் குறுகிய கூட்டுரிமைக் குழுக்கள் அல்லது அத்தகைய அமைப்புகளுக்கு, அவற்றால் நியமிக்கப் பெற்ற உரிமைக் குடிமக்களுக்கு[19] மட்டிலும் வாக்குரிமை அளிக்கப்பெற்ற ஆங்கில பரோக்களில், பெரும்பாலானவற்றை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். நிலச்சொந்தக்காரர்களான 'காப்பாளர்' விற்ற பரோக்கள் என்றும், தங்களைத் தாங்களே விற்றுக்கொண்ட பரோக்கள் என்றும் இருவகைப்படும். மீதமுள்ளவற்றில் பல, அரசரின் செல்வாக்கிற்குட்பட்டு அவருடைய ஆட்களைப் பணிவிணக்கத்தோடு அனுப்பிவைத்தன. மற்றவை உறுப்பினரை நியமிக்கும் அதிகாரத்தை நேர்மையுடனும், மனச்சாட்சிக்கு உகந்த வகையிலும் பயன்படுத்திய காப்பாளருக்குச் சொந்தமானவை. ஆற்றல் மிகுந்த, முன்னுக்கு வரக்கூடிய வாலிபரை காமன்ஸ் சபைக்கு அனுப்பியதன் மூலமாக இக் காப்பாளர்கள் நாட்டிற்கு நல்ல தொண்டு செய்தவர்களாயினர். ஏனெனில், பணமோ பயனுள்ள உறவுகளோ இல்லாத இவ் விளைஞர்கள் மற்றபடி பாராளுமன்றத்தில் இடம்பெற முடியாது. ஆயினும், பெருமளவினவான பரோக்கள் பண அவா உள்ளவையாகவே இருந்தன. சில குடியிருப்பு மனைகளைப் பெற்றிருப்பதே வாக்குரிமை பெறுவதற்கான தகுதியாக இருந்ததால், ஒரு பரோவில் தேர்தலைக் கட்டுப் படுத்த அந்த பரோவில் போதுமான சொத்துகளை வாங்கினால் போதும். அக்காலத்திருந்த அரசரும் அமைச்சர்களும் ஒன்றாக இணைந்தோ அல்லது மூன்றாம் ஜார்ஜ் மன்னரின் ஆட்சிக்காலத்தில் பலமுறை நடந்ததைப்போல, ஒருவருக்கொருவர் எதிராகவோ, காப்பாளர்களிடமிருந்தும், தொகுதிகளிலிருந்தும் ஸ்தானங்களை வாங்கினர். இதற்கென பலரைத் திருப்தி செய்வதற்காகப் பதவிகளும், பணமும், ஓய்வு ஊதியங்களும் வழங்கப்பெற்றன. வளம்மிக்க வணிகர்கள் போட்டியிட்டதால், மன்ற உறுப்பினர் பதவியின் வாணிகம் பெருகியதோடு அதன் விலையும் உயர்ந்தது. குறிப்பாக, இந்தியாவிலிருந்து பெரும் பொருளோடு திரும்பி வந்த 'நவாப்' களின் போட்டி இங்கிலாந்துக்குக் காரணமாக அமைந்தது. காமன்ஸ் சபையில் இடம்பெறுவதை, அவர்கள் வாணிப நலன்களைப் பெருக்கிக்கொள்வதற்கும் சமுதாயத்தில் தனிச்சிறப்புப் பெறுவதற்கும் உள்ள வழியாகக் கருதினர். வெட்கக்கேடான முழு அளவில் லஞ்சம் தாண்டவமாடியதற்கும், பரோக்களை அடகு வைத்ததற்கும் அக்கால மக்களுடைய நினைவுக் குறிப்புகளும், வெளிவந்த கடிதங்களும் சான்று பகர்கின்றன. இங்கிலாந்தை சில

குறிப்பிடத்தக்க மேற்கோள்களால் விளக்கலாம். லட்கர்ஷெல் பரோவின் (Ludgershall) சொந்தக்காரரான ஜார்ஜ் செல்வின் (George Selwyn), அப் பரோவை 1767ஆம் ஆண்டில் 9,000 பவுன்களுக்கு[20] விற்ருர். 1807ஆம் ஆண்டில் வெஸ்ட்பரியின் (Westbury) இரு மன்ற உறுப்பினர் பதவிகட்கு 10,000 பவுன்கள் தருவதாகக் கூறப்பட்டது. ஆனால், அப் பரோவின் மறைந்த உரிமையாளரான அபிங்டன் பிரபுவின்(Abingdon) கடன்காரர் களின் பொறுப்பாளர்கள் அத் தொகை குறைவானதென்று கூறி அதனை மறுத்துவிட்டனர்.[21]

**கூட்டுரிமைக் குழுக்களின் ஊழல் :** மன்ற உறுப்பினர் பதவி யைக் காப்பாளர்கள் விற்றபோது பொதுவாகக் கண்டனங்கள் எழவில்லை. ஆனால், கூட்டுரிமைக் குழுக்களும் தொகுதிகளும் தங்களிடமுள்ள மன்ற உறுப்பினர் பதவிகளை விற்கும் முயற்சி யில் ஈடுபட்ட சில சமயங்களில் சினம் பொங்கியது. சிறிதளவு தண்டனைகூட விதிக்கப்பட்டது. மன்ற உறுப்பினர்களாக இருந்த சர் தாமஸ் ஸ்டேபில்டன் (Sir Thomas Stapleton), கனம் பொருந்திய ராபர்ட் லீ (Hon. Robert Lee) ஆகியோரை மீண்டும் தேர்ந்தெடுப்பதற்காக 5,670 பவுன்கள் தருமாறு, பொதுத் தேர் தலை சாதகமாகக்கொண்டு, ஆக்ஸ்ஃபோர்டு நகராண்மைக் கழகம் 1768ஆம் ஆண்டில் அவர்களைக் கேட்டது. இத் தொகை நகராண்மைக் கழகக் கடன்களை அடைப்பதற்காகத் தேவைப் பட்டது. இத்தகைய வேண்டுகோளை நிராகரித்ததோடு, இதைப்பற்றி காமன்ஸ் சபையிடம் புகாரும் செய்தனர். அதன் பேரில் நகரத் தலைவரையும், நகர ஆட்சிக் குழுவினரையும் காமன்ஸ் சபை நியுகேட் சிறைக்கு அனுப்பியது. சபாநாய கரிடம் குற்றக் குறைப்பு பெற்ற அவர்கள் சீக்கிரத்திலேயே சிறையிலிருந்து விடுதலை பெற்றனர். எனினும், தங்களது பணத்திலிருந்து அல்லாமல், பிறரது பணத்தைக் கொண்டே நகராண்மைக் கடன்களை அடைக்க வேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்ட நகரத் தலைவரும், நகர ஆட்சிக் குழுவினரும், நியுகேட்டில் இருந்தபோதே மார்ல்பரோ கோமகனுருக்கும் அபிங்டன் ஏர்ல் பிரபுவிற்கும் இரு பதவிகளை விற்பதற்கு ஏற்கெனவே தொடர்ந்த பேச்சுவார்த்தையை வெற்றிகரமாக முடித்தனர். இதற்கிடையில் இத்தகைய வாணிபச் செயல்முறை அம்பலமாகாது தடுப்பதற்காக நகராண்மைக் கழக ஏடுகளை யெல்லாம் நகரக் கணக்கர் கொண்டுசென்றுவிட்டார்.[22] ஆயின், சட்பரி (Sudbury) பரோவே அக்கால அரசியல் நாண யத்திற்கு மிகச்சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. அது எவ்விதத் தயக்கமோ அல்லது பண்பார்ந்த வகையில்

மறைப்பதற்கான முயற்சியோ இன்றி அதிகப் பணம் கொடுப்பவருக்குத் தன்னை விற்பதாக வெட்கமின்றி விளம்பரம் செய்தது.[23]

**வாக்காளரின் ஊழல் :** பெரிய பரோக்களிலும் துறைமுகப் பட்டினங்களிலும் பணமாகக் கையூட்டு வழங்குவதோடு அரசாங்கத்தினர் நின்றுவிடவில்லை. சுங்கத் துறையிலும் கலால் துறையிலும் பெருமளவில் பதவிகளைக் கொடுத்துத் தங்களுக்கு வேண்டிய வேட்பாளரின் வெற்றிக்கு வழி செய்துகொண்டனர். நிதித் துறையிலுள்ள அதிகாரிகளிடமிருந்து வாக்களிக்கும் உரிமையை நீக்குவதற்காகத் தீர்மானம் ஒன்றை ராக்கிங்காம் பிரபு 1782ஆம் ஆண்டில் நிறைவேற்றியபோது, அவர்களில் 11,500 அதிகாரிகளுக்கு மேற்பட்டவர் வாக்காளர்களாகக் காணப்பட்டனர். அவர்களுடைய வாக்குகளைப் பொறுத்தே பெரும்பாலும் எழுபது தேர்தல்களின் முடிவுகள் இருந்தன எனக் கூறப்பட்டது.[24]

**கவுன்டி தேர்தல்கள் :** நாற்பது ஷில்லிங் உரிமை மானியதார் கவுன்டித் தொகுதிகள் சரிசமமாக இல்லாது இருப்பினும், குறுகிய எல்லை கொண்டவையாக இருந்தபோதிலும், பரோ வாக்காளர்களைக் காட்டிலும் அதிக உரிமை கொண்டவைகளாகவும் ஊழல் குறைந்தவையாகவும் இருந்தன எனலாம். ஆனால், உள்ளூர் நிலக்கிழார்களுடைய செல்வாக்கிற்கும் பெருஞ் செல்வர்களுடைய செல்வாக்கிற்கும் அவை உட்பட்டிருந்தன. தேர்தல் போட்டியில் பெரும் பொருள் செலவிடவேண்டியிருந்ததால், தலத்துப் பெருமக்கள் அன்றி வேறு யாரும் அவற்றினை அணுகுவது என்பது அநேகமாக இயலாத ஒன்றாகும். உதாரணமாக, வழக்குமீறிய பெரிய அளவினதான யார்க்ஷயரில் 1807ஆம் ஆண்டில் போட்டியிட்ட வேட்பாளர்களான மில்டன் பிரபுவும் மிஸ்டர் லாசெல்லஸூம் (Mr. Lascelles) சேர்ந்து 200,000 பவுன்களுக்குமேல் செலவிட்டனர்.[25]

**ஸ்காட்டிய பிரதிநிதித்துவம் :** ஸ்காட்லாந்திய கவுன்டிகளின் பிரதிநிதித்துவமும் பரோக்களின் பிரதிநிதித்துவமும் இங்கிலாந்தில் இருந்ததைவிட மோசமாக இருந்தன. ஸ்காட்லாந்தின் எல்லா பரோக்களிலும் தன்னைத்தானே தேர்ந்தெடுத்துக் கொண்ட கூட்டுரிமைக் குழுக்களே வாக்குரிமை பெற்றிருந்தன. கவுன்டிகளிலோவெனில், ஆண்டொன்றிற்கு 400 பவுன்கள் மதிப்புள்ள நிலமானிய 'மேலுரிமைகள்' பெற்றிருந்தோருக்கே வாக்குரிமை அளிக்கப்பெற்றது. அவர்கள் நிலக்கிழார்களாக

இருக்க வேண்டுமென்பதோ, தங்கள் தங்களுடைய கவுன்டிகளில் வாழ்பவராக இருக்க வேண்டுமென்பதோ இல்லை. 2,000,000 மக்களைக்கொண்ட ஸ்காட்லாந்தில் 1823ஆம் ஆண்டில் 3,000-க்குக் குறைவான கவுன்டி வாக்களர்களே இருந்தனர். கிரோமார்ட்டி (Cromarty) என்னும் கவுன்டி ஒன்பது வாக்காளர்களையே கொண்டிருந்தது. 1831ஆம் ஆண்டில், வழக்கறிஞப் பிரபு, அப்போது மக்கள் நினைவிலிருந்த ஒரு சுவையான நிகழ்ச்சியைப்பற்றிக் குறிப்பிட்டார். இருபத்தொன்றிற்கு மேற்படாத வாக்காளரைப் பெற்றிருந்த பூட் (Bute) கவுன்டியில் நடைபெற்ற தேர்கல் ஒன்றில், அக் கவுன்டியில் தங்கிய வாக்காளர் ஒருவர் மட்டுமே இருந்தார். தேர்தல் கூட்டத்தில் அவரும், மாவட்ட அதிகாரியான ஷெரீஃப்பும், தேர்தல் அதிகாரியும் மட்டிலுமே இருந்தனர். தலைமை தாங்கிய அந்த வாக்காளர் தமது பெயரைத் தாமே முன்மொழிந்து, அதனை வழிமொழியவும் செய்தார். அதனை வாக்கெடுப்பிற்கு விட்டுத் தம்மைத் தாமே தேர்ந்தெடுத்துக்கொண்டார்.[26]

**ஐரிஷ் பிரதிநிதித்துவம்:** இங்கிலாந்திலும் ஸ்காட்லாந்திலும் பரோக்களைப் பாதித்த அதே காரணங்களினால் அயர்லாந்தின் பெரும்பான்மையான பரோக்கள், செல்வர்கள், நிலக்கிழார்கள் ஆகியோரின் ஆதரவிற்குட்பட்டிருந்தன. பரோக்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது தாராளமான வாக்குரிமையைக் கவுன்டிகள் பெற்றிருந்தன என்பது உண்மையே. நாற்பது ஷில்லிங் உரிமை மானியதார்கள் வாக்காளர்களாக இருந்தனர். அயர்லாந்தின் நிலச் சட்டங்களின் செயலாலும், தங்களுடைய அரசியல் செல்வாக்கை வளர்த்துக்கொள்வதற்காக பிராடஸ்டென்ட் நிலக்கிழார்கள் ஆதரித்த உட்பிரிவுகளாலும் வாக்காளர்களின் எண்ணிக்கை பெருகியது. எனினும், ஆங்கிலக் கவுன்டி வாக்காளர்களைவிட எண்ணிக்கையில் அயர்லாந்தின் வாக்காளர்கள் அதிகமாக இருந்தபோதிலும், அவர்கள் சுயேச்சை குறைந்தவர்களாகவே இருந்தனர். இங்ஙனம் 1801ஆம் ஆண்டில் கிரேட் பிரிட்டனுடன் ஏற்பட்ட ஐக்கியத்தின் விளைவாக மேலும் பெருவாரியான நியமன உறுப்பினர்களே ஐக்கியப் பாராளுமன்றத்தை நிரப்பினர்.[27]

1793ஆம் ஆண்டில் காமன்ஸ் சபையில் இருந்த உறுப்பினரில் பெரும்பான்மையினரான 354 உறுப்பினர்கள் பெயரளவில் '15,000-க்கு மேற்படாத வாக்காளரால்' தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்றாலும், உண்மையில் அரசாங்கம், 197 தனிப்பட்ட காப்பாளரின் நியமனத்தின் பேரிலோ அல்லது சிபாரிசின் பேரிலோதான் வந்தவர்கள்.[28] 1801ஆம் ஆண்டில்

அயர்லாந்துடனுன ஐக்கியத்தின் விளைவாகக் காமன்ஸ் சபைக்கு வந்த கூடுதலான 100 உறுப்பினர்களில் எழுபத்தோர் உறுப்பினர்கள் ஐம்பத்தாறு நபர்களால் நியமிக்கப்பெற்றவர்கள். 1816ஆம் ஆண்டில் இருந்த 658 அங்கத்தினர்களில் 487 பேர்கள் அரசாங்கத்தால் அல்லது தனிப்பட்ட காப்பாளர்களால் நியமன மானவரே என்பதை டாக்டர் ஓல்ட்ஃபீல்டு (Dr. Oldfield) என்பார் தாம் எழுதிய 'Representative History' எனும் நூலில் தெளிவாக விளக்கியுள்ளார்.[29] கிரேட் பிரிட்டனின் மக்களைப் பிரதிபலிப்பதாக இல்லை காமன்ஸ் சபை என்றும், பெயரளவில் உள்ள பரோக்கள், சிதைந்து அழிந்த நகரங்கள், பெருமக்கள், குடிகள், பெருஞ் செல்வர்கள், அந்நிய ஆளுநர்கள் ஆகியோரையே பிரதிபலித்தது என்றும் இளைய பிட் (Pitt) சரியாகச் சொன்னர்.

**பாராளுமன்றத்தின் பொதுநிலை** : இவையெல்லாம் உண்மை யெனினும், பாராளுமன்றமானது கலப்படமில்லாத அரசியல் அமைப்பு என்பதும் உண்மையே. அதனுடைய செயல் நிகழ்வுகளில் பொதுமக்கள் ஆழ்ந்த கவனம் செலுத்தினர். தங்களது உணர்ச்சிகளைக் காமன்ஸ் சபைக்குள் உணருமாறு செய்தனர். தீவிரப் போட்டி இருந்ததே ஒருவகையில் தேர்தல் செலவு மிக்கதாக இருந்ததற்குக் காரணமெனலாம். கவுன்டி களில் பெரும் பொருள் செலவிட்டுப் பெருநிலக்கிழார்கள் போட்டியிட்டனர். இவைகள் உண்மையில் கடுமையான போட்டிகளே. ஒருசில பரோக்களிலாவது இதுபோன்ற தீவிரத் தேர்தல் போராட்ட ஏற்பாடுகள் நடைபெற்றன. அவை இரு உறுப்பினர் தொகுதிகளாக இருந்ததால், ஒரு ஸ்தானத்தைக் காப்பாளர் வைத்துக்கொண்டு, மற்றதைப் போட்டிக்கு விடுவது என்ற ஒருவகை சமரச ஏற்பாடு செய்துகொள்வது எளிதாயிற்று.[30] நடைமுறையில் காமன்ஸ் சபையில்கூட ஒரு வலிமை வாய்ந்த மரபுரிமைக் கூறு அழிந்துவிடாது இருந்து வந்தது.[31] வழிவழியாக வந்த பகையை வைத்திருந்த இரு குடும்பங்களுக்கிடையே பல முறைகளில் தேர்தல் போட்டிகள் நடைபெற்றிருக்கின்றன. உண்மையில் ஏதோ ஒரு சில தொகுதிகள்தாம்[32] தேர்தலை நடத்தின. வாய்ப்புகள் குறைவு எனக் கண்டபோது வேட்பாளர்கள் விலகிக்கொள்ளுதல் என்பது பல சமயங்களில் நடைபெற்றது. ஆயினும், அதுவும் அக்கறையின்மையைவிடச் செலவையே அதிகம் சுட்டுவதாக அமைந்தது. காப்பாளரின் ஆதரவு, 'செல்வாக்கு', ஊழல் ஆகியவற்றை எளிதாக மிகைபடுத்திக் கூறிவிடமுடியும். ஆயின், இவற்றின் மூலமாகவெல்லாம் உறுதிவாய்ந்த உண்மையான அரசியல் திட்டத்தின் மையமாகப் பாராளு

மன்றம் திகழ்ந்தது என்ற முக்கிய உண்மையை மனத்தில் கொள்ளவேண்டியது அவசியமாகும். இங்ஙனம் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியிலும் பாராளுமன்றம் மனமாரப் போற்றக்கூடிய நிலையில் இருந்தது. அதாவது, பாராளுமன்றமானது குறைபாடுகளும் ஊழல்களும் மலிந்ததாக இருந்தபோதிலும், சிறந்த அமைப்பாக இருந்தது. ஆனால், அதற்குச் சீர்திருத்தம் தேவைப்பட்டது. அத்தகைய சீர்திருத்தத்திற்கு அது தகுதிவாய்ந்ததாகவும் இருந்தது.

**பதவியாளரை விலக்குதல்:** பாராளுமன்றத்திலிருந்து பதவியாளரையும் உபகாரச் சம்பளம் பெறுவோரையும் நீக்கிய அரசுரிமை நிர்ணயச் சட்டத்தின்[33] ஆறும் வாசகம் நேரடியாக காபினெட் முறைக்கு எதிராக வந்ததன்று. ஆயின், சட்டசபை உறுப்பினர்களுக்குப் பதவிகளும் உபகாரச் சம்பளங்களும் தாராளமாக வழங்கி, ஆபத்தான செல்வாக்கினைப் பெற்ற அரசருக்கெதிராகவே இவ் வாசகம் அமைந்தது. கடைசி இரண்டு ஸ்டூவர்டு மன்னர் காலத்திலும் மக்களுடைய பிரதிநிதிகளை ஒழுக்கம் கெடுமாறு செய்ய இவ் வழி மிகுதியாகப் பயன்படுத்தப்பெற்றது. தம்மைச் சூழ்ந்திருந்த இடர்களிலிருந்து விடுபடப் பாராளுமன்றங்களைக் கட்டுப்படுத்துவதற்காக, வில்லியம் மன்னர், கேடு பயக்கும் இவ் வழியினைக் கடைப்பிடித்ததோடு அதனை விரிவுபடுத்தவும் செய்தார். இத்தகைய ஊழலைத் தடை செய்ய வேண்டுமென்று எண்ணிய காமன்ஸ் சபையினர் 1693ஆம் ஆண்டில் ஒரு மசோதா கொண்டுவந்தனர். அதிலே, சட்டம் வந்தபிறகு தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர் எவரும் அரசாங்கப் பதவி எதையும் ஏற்றுக்கொள்ளக்கூடாது என்று வகுத்தனர். பிரபுக்கள் சபையில் சிறு பெரும்பான்மை வாக்குகளால் இம் மசோதா தோல்வியுற்றது. அடுத்த ஆண்டில் மீண்டும் அதனைக் கொண்டுவந்தபோது இரு சபைகளும் அதனை ஏற்றுக்கொண்டன. ஆனால், அதற்கு இசைவு தர மூன்றும் வில்லியம் மறுத்துவிட்டார். எனினும், சில ஆண்டுகளுக்குப் பின்னர் புதிதாக நியமனம் பெற்ற கலால்வரி உயர் ஆணையாளர்களைப் பாராளுமன்றத்திலிருந்து நீக்கிவைக்கவேண்டுமென்று வெளிப்படையாகக் கூறியதனால், பதவியாளரைப் பாராளுமன்றத்திற்குத் தகுதியற்றவர்களாகச் செய்யும் கொள்கைக்குச் சட்ட வடிவிலே உறுதி கிடைத்தது.[34] அரசுரிமை நிர்ணயச் சட்டம் வகுத்ததைப்போலக் காமன்ஸ் சபையிலிருந்து அரசாங்க ஊழியர் அனைவரையும் நீக்குவது என்பது, அச் சட்டம் போக்க வேண்டுமென்று நினைத்த தனிப்பட்ட கேட்டினைக் களைவதற்கான மிகத்தீவிரமான பரிகாரம் ஆகும். அது மட்டுமன்று; அது

நடைமுறையிலே கொண்டுவரப்படுமானால் அரசரின் அமைச்சருக்கும் காமன்ஸ் சபைக்குமிடையே மோசமான மோதல் நேர்ந்திருக்கும். மேலும், சட்டமியற்றும் அதிகாரமும் நிர்வாக அதிகாரமும் ஒன்றாய் இணைவதைத் தடுப்பதன்மூலமாக நாம் இப்போது அனுபவித்துவருகின்ற பாராளுமன்ற அல்லது காபினெட் அரசாங்கமுறை வளர்ச்சியடைவதை நிச்சயமாகத் தடை செய்திருக்கும். ஆன் அரசியார் ஆட்சியின் ஐந்தாம் ஆண்டில், அதாவது, 1706-ல் நடைமுறைக்கு வருவதற்கு முன்பே இச் சட்ட வாசகம் தள்ளுபடியாகியது. ஆயினும், அது மாறிய உருவில் மீண்டும் நிறைவேற்றப்பட்டது.[35] இரண்டாண்டுகள் கழிந்து 1708ஆம் ஆண்டில் நிறைவேறிய 'அரசியாரையும் அரசாங்கத்தையும் பாதுகாப்பதற்கெனவும், கிரேட் பிரிட்டனின் அரசுரிமை பிராட்டஸ்டென்ட் வழியினருக்கே செல்லவேண்டுமென்பதற்காகவுமான சட்டத்தில்' ஊழலான செல்வாக்கினைத் தடை செய்வதற்கான நியாயமான வாசகக் கூறுகள் இடம் பெற்றன.[36] அவற்றின்படி, (1) 1705ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 25ஆம் தேதிக்குப் பிறகு தோன்றிய பதவியோ அல்லது பயன்தரும் நிலையோ பெற்றவரும், அரசரின் விருப்பிற்கிணங்க ஓய்வூதியம் பெறுபவரும் காமன்ஸ் சபையில் அமரும் தகுதியற்றவர்கள். (2) படையில் உயர் அதிகாரி பதவியைத் தவிர ஏற்கெனவே இருக்கின்ற அரசாங்கப் பதவிகளை ஏற்கின்ற உறுப்பினர்கள் மன்றத்திலிருந்து விலக வேண்டும். ஆயின், அவர்கள் மறுதேர்தலில் நிற்கும் உரிமை பெற்றவர்களாவர். காமன்ஸ் சபைக்குக் கட்டுப்பட்ட அமைச்சர்களின் ஆட்சி முறையானது முழுதுமாக நிலைநாட்டப்பெறுதவரையில், ஊழலான செல்வாக்கிற்குட்பட்டுக் குறுகிய வாக்குரிமை அடிப்படையில் மக்களின் உண்மைப் பிரதிநிதியாக இருப்பதற்குப் பாராளுமன்றமே தவறிய நிலையில், பிந்தையதைப் போன்ற வாசகக் கூறு பயனுள்ளதாக அமையும். எவ்வாறெனில், பதவியை ஏற்றுக்கொண்ட பிரதிநிதி வாக்காளர்களுடைய அங்கீகாரத்தைப் பெறவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அதனால் அரசர்மீதும், முன்னிலையில் நின்ற உறுப்பினர்மீதும் பயனுள்ள கட்டுப்பாடு ஏற்பட்டது. ஆனால், இப்போதோவெனில், சீர்திருந்திய வாக்குரிமை இருப்பதாலும், மரபாக வந்த அல்லது எழுத்து வடிவில்லாத அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி மறைமுகமான செயல்முறையில் அரசர் தம் அமைச்சரைத் தேர்ந்தெடுக்க வேண்டியது காமன்ஸ் சபையினரின் முக்கியப் பணிகளில் ஒன்று என்ற நிலையிலும் அத்தகைய சட்டம் தோன்றுவதன் காரணம் மறைந்துவிட்டது. இக் கொள்கையை மாற்றியமைப்பதற்கான பல

முயற்சிகள் எழுந்தனவெனினும், ஒன்று தவிர மற்ற யாவையும் வெற்றி பெறவில்லை. அரசாங்கத்தின் ஒரு பதவியிலிருந்து மற்றொன்றிற்கு அமைச்சரை மாற்றும்போது அவர் மறு தேர்தலுக்கு நிற்கவேண்டுமென்று வற்புறுத்திய ஆன் அரசியாரின் ஆறும் ஆண்டுச் சட்டத்தை 1867ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டம் தள்ளுபடி செய்தது.[37] எவ்வாறாயினும், இருபதாம் நூற்றாண்டில் இப்போதிருக்கும் அமைச்சர் பதவிகளை விரைவாக மாற்றியமைப்பதில் இவ்விதக் கட்டுப்பாடுகள் தடங்கலாக இருந்ததால் அவைகள் நீக்கப்படவேண்டியவை யாயின. புதிய பாராளுமன்றம் அமைப்புப் பெற்றதிலிருந்து ஒன்பது மாதங்களுக்குள் பதவி ஏற்றுக்கொண்ட அமைச்சர்கள் மறுதேர்தலுக்கு நிற்கவேண்டுவதில்லை என 1919ஆம் ஆண்டில் நிறைவேறிய 'மந்திரிகளின் மறுதேர்தல் சட்டம்' வகை செய்தது. மறுதேர்தல் நடைபெறவேண்டுமென்பதை முற்றிலும் நீக்கியது 1926ஆம் ஆண்டுச் சட்டமொன்று.

1705ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 25ஆம் தேதிக்கு முன்னால் இருந்த பதவிகளுக்கு ஆன் அரசியாரின் ஆறும் ஆண்டின் சட்டம் விதிவிலக்கு அளித்ததைப் பயன்படுத்திப் பல பதவிகளை அளித்து ஊழலை வளர்க்க அரசர்களால் முடிந்தது. 1741ஆம் ஆண்டில் காமன்ஸ் சபை உறுப்பினர்கள் இருநூறுக்கும் மேற்பட்ட பதவிகளை வகித்தனர்.[38] எனினும், காமன்ஸ் சபை மும் முறையும், பிரபுக்கள் சபை இரு முறையும் நிராகரித்த பதவி மசோதா அடுத்து வந்த ஆண்டில் சட்டமாகியது. பெருமளவினரான அதிகாரிகளை, முக்கியமாகப் பொதுப்பணித் துறைகளில் இருந்த கணக்கர்களையும், பிற கீழ்நிலை அதிகாரிகளையும் அச் சட்டம் காமன்ஸ் சபையிலிருந்து விலக்கியது.[39] பொதுவாகப் பாராளுமன்ற உறுப்பினர்கள் வகித்துவந்த பல்வேறு பதவிகளை ராக்கிங்காம் பிரபுவின் 'அரசர் செலவுப் பட்டியல் சட்டம்' (Civil List Act) அறவே ஒழித்தது.[40] மேலும், பாராளுமன்றச் சட்டங்களின்மூலமாகப் புதிய அதிகாரிகள் நியமனம் பெற்றபோதெல்லாம் பதவியாளருக்கு வாக்குரிமை மறுக்கும் கொள்கை அநேகமாகத் தவறாது பின் பற்றப்பட்டது.[41]

**இரகசிய உபகாரச் சம்பளங்கள் (Secret Pensions):** மன்னரின் விருப்ப காலம்வரையில் உபகாரச் சம்பளம் பெறுவோர்மீது ஆன் அரசியாரின் ஆறும் ஆண்டுச் சட்டம் விதித்த தடையானது அடுத்து வந்த மன்னரின் ஆட்சித் தொடக்கத்தில் குறிப்பிட்ட ஆண்டுகளுக்கு[42] ஓய்வூதியம் பெறுவோர்க்கும்

பொருந்துமென்றுனபோதிலும், இரகசிய உபகாரச் சம்பளங்கள் அளிப்பதன்மூலமாக இத் தடை பயனற்றதாகியது எனலாம். 'இரகசியப் பணிநிதி' என்று ஆண்டுதோறும் அரசருக்கும் அளிக்கப்பெற்ற பெருந்தொகையிலிருந்து இரகசிய ஓய்வூதியங்கள் அளிக்கப்பெற்றமையாலும், இத் தொகையின் செலவு பொதுக் கணக்கிற்கு வராததாகையாலும், சட்டத்தின் வாசகங்களை மீறுவது எளிதாக இருந்தது. ஆயின், ஏற்கெனவே குறிப்பிட்ட ராக்கிங்காம் பிரபுவின் சட்டமானது, அரசர் செலவுப் பணப் பட்டியலிலிருந்து உபகாரச் சம்பளம் அளிக்கும் அதிகாரத்தை வெகுவாக மட்டுப்படுத்தியது. மேலும், வருங்காலத்தில் ஓய்வூதியங்கள் அனைத்தும் பொதுக் கருவூலத்தி லேயே அளிக்கப்பெறுதல் வேண்டுமென்று வகுத்து இரகசிய ஓய்வூதியங்களையே ஒழித்தது. அதே ஆண்டில் பொதுப் பணித் துறைகளில் கான்ட்ராக்டர்களாக இருப்பவர் காமன்ஸ் சபையில் அமரும் தகுதியற்றவர் என்பதை வகுத்த சட்ட மொன்று மற்றொரு வகையான பாராளுமன்ற ஊழலுக்கு முற்றுப்புள்ளி வைத்தது.[43]

**நீதிபதிகளை விலக்குதல்** : ஆரம்ப காலத்திலேயே காமன்ஸ் சபையில் அமரும் தகுதி பொதுச் சட்ட நீதிபதிகளுக்கு இல்லை. இரண்டாம் ஜார்ஜ் மன்னர் காலத்தில் ஸ்காட்டிய நீதிபதி களுக்கும், நான்காம் ஜார்ஜ் மன்னர் காலத்தில் ஐரிஷ் நீதிபதி களுக்கும் இவ் விலக்குப் பொருந்துவதாயிற்று. 1840ஆம் ஆண் டில் கடற்படை நீதிமன்ற நடுவருக்கும் இவ்விதி செயற்பட்டது. சட்டங்கள்மூலமாகத் தோன்றிய புதிய முறைமன்றப் பதவி களை வகித்தவர்கள், அதே சட்டங்களினால் பொதுமக்கள் மன்றத்தில் அமரும் தகுதி அற்றவர்களாகச் செய்யப்பட்டனர். அதுவரையில் காமன்ஸ் சபையில் அமரும் தகுதிபெற்ற ஒரே நீதிபதியான ஆவணப் பொறுப்பு மேல்முறைமன்ற நடுவரும் (Master of the Rolls) 1873ஆம் ஆண்டின் தனித்தலைமை நீதி மன்றச் சட்டத்தின்படி காமன்ஸ் சபையில் அமரும் தகுதியை இழந்தார். தலைமை நீதிமன்ற நடுவரோ அல்லது மேல்முறை யீட்டு மன்ற நடுவரோ காமன்ஸ் சபைக்குத் தேர்தெடுக்கப் பெறவும், அச் சபையில் அமரவும் தகுதியற்றவர் என மேலும் அச் சட்டம் வலியுறுத்தியது.[44]

**உறுப்பினர்களின் இலஞ்ச ஊழல்**: இங்ஙனம் தோற்றுவாயி லேயே கறைப்பட்ட காமன்ஸ் சபையானது தனியான முறையில் அரசியல் ஊழல்களுக்கு ஆளாகியது. பாராளுமன்றத்தை ஆட்டிப்படைத்து, அரசரை அதிகாரமன்ற அலங்கார பொம்மை

யாக்குவதற்கு இச் சிக்கல்வாய்ந்த முறையைப் பயன்படுத்திய விக்கு ஆட்சிக் குழுவைக் குலேக்க முயன்ற மூன்ரும் ஜார்ஜ் மன்னர், விக்குகளுடைய முறையையே கையாண்டு அவர்களைத் தாக்கவேண்டியிருந்தது. வால்போலேப் போலவும் நியூகாசிலேப் போலவும் வாக்களிப்புப் பட்டியலே அவர் நேரடியாக ஆராய்ந்தார். தனிப்பட்ட உறுப்பினர் வாக்குகள் அளித்த விதத்தினை ஆதாரமாகக்கொண்டு பட்டங்கள், பதவிகள், ஓய்வூதியங்கள் ஆகியவற்றை வழங்கினர். தமது சினத்தை வெளியிடுவதற்கான பல வழிகளைக் கையாண்டபோதும் அவற்றையே ஆதாரமாகக் கொண்டார். பாராளுமன்ற உறுப்பினர் வகிக்கக்கூடிய பெரும் எண்ணிக்கையிலான பதவிகள், குலுக்கு சீட்டில் விழுந்த பரிசுகளே போன்று வழங்கப்பெற்றன. ‘குலுக்கு சீட்டினை வாங்குபவரைப்போலவே, அக்கறை கொண்ட ஒருவர் பாராளுமன்றப் பதவியை வாங்கினர் என்று ராக்கிங்காம் பிரபு கூறினர்.[45] ஆனல், அமைச்சர்கள் உறுப்பினர்களுக்குப் பணமாகவும் பரிசுகள் வழங்கினர். ‘காமன்ஸ் சபையை மேலாண்மை செய்வதற்கு என இரண்டாம் சார்லஸ் காலத்தில் தொடங்கிய இம்முறை மூன்ரும் வில்லியம் காலத்திலும் தொடர்ந்து வந்தது. சர் ராபர்ட் வால்போலின் நீண்ட பதவிக் காலத்தில் அது ஒரு திட்டமாகவே மாறியது. இரண்டாம் ஜார்ஜ் ஆட்சியில் மீதமுள்ள ஆண்டுகளில் அது தொடர்ந்து வளர்ந்தது. மூன்ரும் ஜார்ஜ் மன்னரின் ஆட்சியில் அதனைப் பின்பற்றி விரிவடையச் செய்ததோடு பூட் பிரபு (Lord Bute) நின்றுவிடவில்லே. பொதுக் கடன்களை வழங்குதல், ஆதரவாளர்களுக்கு அதிகச் சலுகைகளோடு குலுக்கல் சீட்டுகளை அளித்தல், பொது விற்பனைக்கு வந்தபோது மிகைவட்டத்திற்கு (premium) விற்கக்கூடிய பங்குகளை அரசாங்கம் விநியோகித்தல் ஆகியவற்றின்மூலமாகப் புதுவகையான பேராபத்தினை விளைவிக்க வல்ல நிலே ஒன்றையும் உருவாக்கினர்.[46] பாரிஸ் உடன்படிக்கைக்கான முன்னேற்பாடுகளை நிறைவேற்றுதற்காகக் கையூட்டு வழங்குவதற்கென்றே வெளிப்படையாகவே கருவூலத்தில் ஓர் அலுவலகம் 1762ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் தோன்றியது. 25,000 பவுன்கள் ஒரு நாளைக்கு இலஞ்சம் அளித்த பிறகு 200 பவுன் வங்கிச் சீட்டு மட்டிலும் மீதம் இருக்கும் அளவிற்குக் குறைந்துவிட்டது எனக் கருவூலச் செயலர் பின்னுளில் குறிப்பிட்டார்.[47]

**செல்வாக்கு முறை:** ஏராளமான முக்கிய ஆதாரங்கள் கிடைப்பதைக்கொண்டு விரிவான முறையில் நிலேமையை விளக்கமுடியும். எனினும், வால்போல், பிட்டுகள் (The Pitts),

கார்ட்டரட் (Carteret), ஸ்டான்ஹோப்புகள் (Stanhopes), ஃபாக்ஸ் (Fox), மற்றும் பல தலைசிறந்த அரசியல் அறிஞர்களைப் பெற்றிருந்த பாராளுமன்றம், முக்கியமாகப் பதவி வேட்டையும் பணப்புரட்டுகளும் நிறைந்த சூழ்நிலையில் இயங்கிவந்தது என்பதை நம்புவது கடினமாக இருக்கின்றது. ஏராளமான ஆதாரங்கள் இன்று கிடைப்பதிலிருந்தே இத்தகைய இழி தொழில் நடைமுறைகளை எழுத்து வடிவிலே வைத்துக்கொள்ள யாரும் தயங்கவில்லை என்பதும், கறைப்படுத்தும் கடிதங்களை வைத்திருக்க அஞ்சவில்லை என்பதும் வெளியாகின்றன. இம் முறையானது காலமறிந்து கையாளப்பெற்று இருக்கலாம்; ஆனால், ஒளிவுமறைவாகச் செயல்படுத்தப்பெறவில்லை. சமகால அரசியல் அமைப்புக் கருத்துகளின் பின்னணியில் 18ஆம் நூற்றாண்டில் இருந்த 'செல்வாக்குப்'பற்றிய அறிவொளி படரும் ஆராய்ச்சியினை, சர் லிவிஸ் நேமியர் (Sir Lewis Namier) எழுதிய 'Structure of Politics at the Accession of George III' என்னும் நூலில் காணலாம். அவர் பின்வருமாறு எழுதினார்:[48] 'பதினெட்டாம் நூற்றாண்டுக் கோட்பாட்டின்படி, நாட்டின் அரசாங்கத்தை நடத்தவேண்டிய நிர்வாகத்தில் அரசரும் அவர்தம் அமைச்சர்களும் இடம் பெறவேண்டும். அரசருக்கு ஆலோசனை கூறுவதும், அவருடைய 'ஊழியரை'க் கட்டுப்படுத்துவதும் சட்ட சபையின் வேலை. தனது பணியினை சரிவரச் செய்வதற்காக அரசாங்கத்திற்குப் பயனுள்ள ஆதரவு தரவேண்டுமென்பதே நல்லெண்ணம் படைத்த உறுப்பினரின் உண்மை நோக்கமாக இருக்கவேண்டும். நன்கு வேரூன்றிய அமைப்பிடம் உள்ள பற்றினை அறுப்பதற்காகவே யாகோபியர் போன்ற முறைபாக, கூட்டுக் கழகமாக அமைந்த எதிர்க்கட்சி தோன்றியது. மன்னருடனும் அவர்தம் மந்திரிகளுடனும் பணிவிணக்கமாக ஒத்துழைப்பதன்மூலமாகப் பெறக்கூடிய பதவிகளுக்கும், உயர்ந்தவற்றை வலுக்கட்டாயமாகப் பெறுவதற்கும் அரசியல்வாதிகள் செய்த தன்னலமும் கட்சியார்வமும் கொண்ட சதியாகவே எதிர்க்கட்சி தோன்றியது. தனது மனச்சாட்சி வேறுவிதமாக வாக்களிக்கத் தூண்டாதவரையில் நலம் சார்ந்த உறுப்பினர் ஒருவர் அரசாங்கத்தோடு ஒத்துழைப்பது முறையானது என்று சொன்னால், நாட்டு நடப்புகளைக் கவனிப்பது என்பது ஊதியம் பெறத்தகுந்த வேலையாகும். மன்றப் பதவியை அடைவதற்காக அவசியமாகச் செய்யவேண்டிய செலவினையும் பரிவுடன் கவனித்தல் வேண்டும். 'அரசாங்கத்தின் ஊழியத்தில் தங்களது காலத்தையும் பொருளையும் அர்ப்பணிப்பவர்கள் அவ்வரசாங்கத்தின்வசமுள்ள நலன்களில் பங்குகொள்ளும் உரிமை பெற்றவர்கள் என்பது நியாயமானது எனத் தாம் உணர்ந்ததாகப் பதி

னேழு ஆண்டுகள் பாராளுமன்றத்தில் இருந்தும் பதவியோ, ஓய்வூதியமோ பெருதவிக்கு ஒருவர் 1757ஆம் ஆண்டில் எழுதினர். அத்தகைய 'பங்கு' உறுப்பினரின் உரிமையைப் பிரிக்கவேண்டுமென்பதில்லை. 1750ஆம் ஆண்டளவில் காபினெட் அமைச்சரும் அரசாங்க நடவடிக்கைகளுக்கு எதிராகப் பேசி வாக்களிக்க முடிந்தது என்பது நன்கு அறியப்பெற்ற ஒன்றே. பட்டமோ அல்லது பதவியோ ஒன்றை விலக்கியது என்ருல் அது கூட்டுக் கழகமாக அமைந்த எதிர்க்கட்சிதான். அது அருவருக்கத்தக்கது என்ற கருத்து இருந்தது. இந் நாளில் தமது தொகுதியில் செலவழித்த தொகையை உறுப்பினர் ஒருவர் தமது கட்சியிலிருந்து கொள்ளலாம். நிதிநிலையில் நெருக்கடி தோன்றும்போது சில உறுப்பினர் கட்சிக் கொரடாவிடம் விண்ணப்பித்து உதவி பெறுகின்றனர். ஆயின், தமது கட்சியுடனேயே உறுப்பினர் வாக்களிக்க வேண்டும். தமது கட்சியை நெறிதவருது பின் பின்பற்றுவதன்மூலமாகத் தனிப்பட்ட உறுப்பினர், தமது நலனைச் செவ்வையாகப் பேணமுடியும் என்பதும், அவ் வழியில் தான் தமது நலனைப் பேணிக்கொள்ளும் உரிமை கொண்டவர் என்பதும் நம் காலத் தனிச்சிறப்பு நிலையாகும். ஆனல், 1750ஆம் ஆண்டு அளவில் நாம் கொள்ளும் பொருளில் அமைந்த கட்சிகள் இருக்கவில்லை; அதிலும் கட்சியமைப்புகள் ஏதும் இல்லை என்பது திண்ணம். கொள்கையளவில் நலம்சார்ந்த உறுப்பினர்களையெல்லாம் கொண்ட கட்சியே மாட்சிமை தங்கிய மன்னரின் அரசாங்கமும் அரசும் ஆகும். அமைச்சர்கள் மாறியபோதும் அவர்களைப் பின்பற்றி நிற்பது என்பது கட்சி மாற்றம் என்றிருக்கவேண்டுமென்பதில்லை. மேலும், அவர்களிடம் பரிசுகளைப் பெறுவது கையூட்டு வாங்குவதற்கு ஒப்பாகும் என்பதும் இல்லை. மறு எல்லையிலிருந்து இச்செய்தியை நோக்கும்போது, கட்சி அமைப்பு, கட்சிப் பயிற்சி பெற்ற வாக்காளர் ஆகியோரின்மூலமாகத் தனிப்பட்ட உறுப்பினரைக் கட்டுப்படுத்த முடியாத பதினெட்டாம் நூற்ருண்டில் வாழ்ந்த அரசாங்கங்கள், புகழ்தரும் பதவிகள், பணம்தரும் இடங்கள், வணிக ஒப்பந்தங்கள், ஓய்வூதியங்கள் ஆகியவற்றை அளித்துத் தான் பின்பற்றிய உறுப்பினரைக் கட்டுப்படுத்த வேண்டியிருந்தது.

அம் முறையானது பிறவற்றைக் காட்டிலும் எவ்வளவு தூரம் இழிவானது என்பதை இங்கு விளக்கத் தேவையில்லை. அது மோசமானது என்பது வெளிப்படை. அதனைத் திருத்த வேண்டுமென்று அக் காலத்தவர் முயன்றனர்.

**சாத்தம் பிரபுவின் யோசனைகள்:** சிதைந்த பரோக்களைக் கணக்கில் சேர்க்கவேண்டா என்று 1604ஆம் ஆண்டிலேயே மாவட்ட அதிகாரிகளான ஷெரீஃப்புகளிடம் முதலாம் ஜேம்ஸ் மன்னர் இடித்துரைத்திருந்தார்.[49] பிரதிநிதித்துவ முறையில் வெளிப்படையாக இருந்த குறைபாடுகள் காரணமாக, ஒன்றரை நூற்றாண்டுகள் கழிந்த பிறகு, 1766ஆம் ஆண்டில் பாராளு மன்றச் சீர்திருத்தம் வேண்டுமென்று சாத்தம் பிரபு வலியுறுத்திக் கூறினார். சிதைந்து, சீர்குலைந்த பரோக்கள்; பிரபுக்களின் தனியார் சொத்து; தங்கள் வசமுள்ள மன்றப் பதவிகளை விற்ற குறுகிய கூட்டுரிமைக் குழுக்கள்; பாராளுமன்ற வாக்குகளை விலைபேசிய உறுப்பினர்கள்; செல்வ வளமும், தொழில் வளமும், அறிவு வளமும் பெற்று விளங்கிய பெருந்தொழில் நகரங்களாக இருந்தும் பாராளுமன்றத்திற்கு உறுப்பினரை அனுப்பும் உரிமை பெற்றிராத பெருநகரங்கள் ஆகியவை சில குறைபாடுகளாகும். 'இந்த நூற்றாண்டின் இறுதிக்குள் பாராளு மன்றம் தன்னைச் சீர்திருத்திக்கொள்ளவில்லை யென்றால் வெளியிலிருந்து பழிவாங்கும் வகையில் சீர்திருத்தம் வரும்' என்று புகான் ஏர்ல் பிரபுவிடம் (Earl of Buchan) சாத்தம் பிரபு குறிப்பிட்டார். பரோ பிரதிநிதித்துவத்தைக் காமன்ஸ் சபையில் பழித்துப் பேசிய அவர், அது 'நமது அரசியலமைப்பில் அழுகிய பகுதியாகும்; ஒரு நூற்றாண்டிற்கு அது தொடர்ந்து நிற்க முடியாது; தானாக அது அழியவில்லையென்றால் அதனை அறுத்து எறியவேண்டுமென்று' வன்மையாகக் கண்டித்தார்.[50]

**வில்க்ஸின் (Wilkes) யோசனைகள்:** பத்து ஆண்டுகள் சென்றபின்னர் 1776ஆம் ஆண்டில் அகல்விரிவான சீர்திருத்தத் திட்டமொன்றை மசோதா வடிவில் பேர்பெற்ற வில்க்ஸ் கொண்டுவந்தார். மாநகரங்களுக்கும், மிடில்செக்ஸ், யார்க்ஷயர், மற்றுமுள்ள பெரிய கவுன்டிகளுக்கும் கூடுதலான உறுப்பினரை அளிக்கவேண்டுமென்று அம் மசோதா கூறியது. அதனோடு சிதைந்த பரோக்களின் பிரதிநிதித்துவத்தை நீக்கிக் கவுன்டி தொகுதிகளில் வாக்காளரின் எண்ணிக்கையைக் கூடுதல் ஆக்கவேண்டுமென்றது. மேலும், மான்செஸ்டர், லீட்ஸ், ஷெஃபீல்டு, பர்மிங்காம், 'மற்றுமுள்ள வளமான மக்கள் நிறைந்த வணிக நகரங்களுக்கு' வாக்குரிமை வழங்க வேண்டு மென்றது. 'அடுத்த ஐம்பது ஆண்டுகளில் வெற்றியேதும் இன்றி எடுத்துரைக்கப்பெற்றதும், நமது காலத்திற்குள் சட்ட ஆதரவு அளிக்கப்பெற்றதுமான பாராளுமன்றச் சீர்திருத்தத்திற்கான முக்கியக் கருத்துகளை எல்லாம் அவருடைய (வில்க்ஸினுடைய) திட்டம் கொண்டிருந்தது' என சர்

எர்ஸ்கின் மே குறிப்பிடுகின்ருர்.[51] மேலும், பல சீர்திருத்த முயற்சிகளும், இம் முறைக்கு எதிரான மறுப்புகளும் எழுந்தன. உதாரணமாக, 'மன்னருடைய செல்வாக்கு மிகுந்துவிட்டது; மிகுந்துகொண்டே வருகின்றது. அது குறைக்கப்படுதல் வேண்டும்'[52] என்ற புகழ்பெற்ற தீர்மானத்தினை 1780ஆம் ஆண்டில் டன்னிங் (Dunning) என்பார் கொண்டுவந்தார். இத்தகைய சீர்திருத்த முயற்சிகளிலெல்லாம் எல்லைகடந்த தீவிர வாதம் காரணமாக மிகவும் குறிப்பிடத்தகுந்ததாக இருப்பது, ஓராண்டுப் பாராளுமன்றங்களையும், வயது வந்தோர் வாக்குரிமையையும், சமமான தேர்தல் தொகுதிகளையும் நிறுவுவதற்காக 1780ஆம் ஆண்டில் ரிச்மாண்டு கோமகன் கொண்டுவந்த மசோதா எனக் கொள்ளலாம். ஆயின், இம் முயற்சிகளெல்லாம் விழலுக்கிறைத்த நீராயின. அதன் பிறகு தான் 1782–83ஆம் ஆண்டுகளில் இச் செய்தியில் இளைய பிட் தீவிரமாக ஈடுபட்டார்.

**பிட்டின் யோசனைகள் :** பிரதிநிதித்துவத்தின் நிலையை ஆராய்வதற்கென்று ஆணைக்குழு ஒன்றை அமர்த்தவேண்டுமென்ற தீர்மானத்தை, ராக்கிங்காம் பிரபுவின் அரசாங்கத்தில் நிதியமைச்சராக இருந்த பிட், 1782ஆம் ஆண்டு மே மாதம் ஏழாம் தேதி கொண்டுவந்தார். ஆனால், 161-க்கு 141 என்ற வாக்கு வீதத்தில் அத் தீர்மானம் நிராகரிக்கப்பெற்றது. சரியாக ஓர் ஆண்டிற்குப்பின், கூட்டு மந்திரிசபைக்கு எதிராக இருந்த அவர் மூன்று தீர்மானங்களை 1783ஆம் ஆண்டு மே மாதம் ஏழாம் தேதியன்று சமர்ப்பித்தார். அவற்றில் (1) இலஞ்ச ஊழலையும், தேர்தல்களுக்காகும் செலவினையும் தவிர்க்கவேண்டும் ; (2) ஒரு பரோவில் பெரும்பாலான வாக்காளர்கள் ஊழல் காரணமாகக் குற்றம் சாட்டப்பெற்ருல் அந்த பரோவின் வாக்குரிமையைப் பறிப்பதோடு, கையூட்டு வாங்காதிருந்த சிறுபான்மையினரைக் கவுன்டி தொகுதிக்கு மாற்றவேண்டும் ; (3) கவுன்டி உறுப்பினர் எண்ணிக்கையையும் மாநகர உறிப்பினர் எண்ணிக்கையையும் அதிகரிப்பது விரும்பத்தக்கது என்பனவற்றை உறுதி செய்தது. எனினும், இந்தத் தீர்மானங்களை 293-க்கு 149 வாக்குகள்[53] என்ற வீதத்தில் மறுதலித்துவிட்டனர். பிட் பிரதமராக வந்தபோது இப் பிரச்சினையை இரண்டாண்டுகள் கழிந்து மீண்டும் முன் கொண்டுவந்தார். இம் முறை 'இங்கிலாந்தின் பாராளுமன்றத்தில் மக்களுடைய பிரதிநிதித்துவத்தைச் சீர்திருத்தி அமைப்பதற்கான' மசோதா ஒன்றைக் கொண்டுவர அனுமதி கோரும் தீர்மானத்தை 1785ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பதினெட்டாம் நாளன்று கொண்டுவந்தார். முப்பத்தாறு

சிதைந்த பரோக்களின் பிரதிநிதித்துவ உரிமையை நீக்கி, அவற்றிற்கான எழுபத்திரண்டு உறுப்பினரைக் கவுன்டிகளுக்கும் தலைநகருக்கும் அளிக்க வேண்டுமென்று எடுத்துரைத்தார். அதே சமயத்தில் படியுரிமையாளரையும் சேர்த்துக் கொள்வதால் கவுன்டி வாக்காளர் எண்ணிக்கையைப் பெருக்க வேண்டுமென்றும் எடுத்துரைத்தார். மற்றும், நான்கு சிறிய பரோக்களின் ஸ்தானங்களை விலை கொடுத்து வாங்கி அவற்றை மக்கள் நிறைந்த நகரங்களுக்கு அளிக்கவேண்டும். அதே போன்று பத்துக் குறுகிய கூட்டுரிமைக் குழுக்களைத் தூண்டி, சகநகர மாந்தரின் நன்மைக்காக, அவைகள் தங்களுக்கே உரிய உரிமைகளை விட்டுக்கொடுக்கச் செய்யவேண்டும். எனினும், இம் மசோதாவானது கட்டாய வலியுறுத்தல் தன்மை பெற்றதன்று. உரிமையாளரின் இசைவின்றி எந்த பரோவையும் உரிமையிழக்குமாறு செய்தல் கூடாது. அவற்றிற்கு இழப்பீடு அளிப்பதற்கு என உடனடியாக 1,000,000 பவுன்களை ஒதுக்கி, தள்ளமுடியாத தூண்டிலாக மாறும் வரையில் தொடர் வட்டியையும் அதனுடன் சேர்த்தல் வேண்டும்.[54] பரோ தொகுதிகளில் விற்பனைக்குரிய சொத்தாக மன்றப் பதவி இருந்ததை அரசாங்கத்தை ஏற்றுக்கொள்ளச் செய்யும் வகையில் அமைந்த வழக்கு மீறிய இம் மசோதாவைப்பற்றி 'நோய்வான பகுதி' யென்றும், 'சீர்திருத்தம் ஏற்பட வேண்டுமாஞல் அவசியமான கேடு' என்றும் தீர்மானத்தின் சொந்தக்காரரே கருத்துத் தெரிவித்தார். ஆயின், அதில் காமன்ஸ் சபை ஆர்வம் காட்டவில்லை ; மக்கள் பொதுவாக அக்கறை காண்பிக்கவில்லை; மூன்றும் ஜார்ஜ் மன்னரோவெனில் அதனை அறவே வெறுத்தார்.[55] இச் சூழ்நிலையில் எழுபத்து நான்கு பெரும்பான்மை வாக்குகளால் பிட்டினுடைய சீர்திருத்த மசோதா வீழ்ச்சியுற்றது. அதனேடு அப்போதைக்கு அச் செய்தி கைவிடப்பட்டது. சில ஆண்டுகளுக்குப் பின் ஃபிரெஞ்சு புரட்சியின் காரணமாகத் தோன்றிய அச்சமே சீர்திருத்தத்திற்கான முயற்சிகள் அனைத்தையும் பயனற்றவையாகச் செய்தது.

1815ஆம் ஆண்டில் போர் முடிவுற்ற பிறகு சீர்திருத்தப் பிரச்சினை மீண்டும் எழுந்தது. அதன் பிறகு சர் ஃபிரான்ஸிஸ் பர்டெட் (**Sir Francis Burdett**), ஜான் ரஸ்ஸல் பிரபு (**Lord John Russell**) போன்ற பலர் இம் மசோதாவை மீண்டும் மீண்டும் பாராளுமன்றத்தில் கொண்டுவந்தனர். நாற்பது ஆண்டுகளாகச் சீர்திருத்தத்தை வலியுறுத்திவந்த கிரே பிரபுவின் (**Lord Grey**) மந்திரி சபை வந்தபோது இம் மசோதா இறுதியில் நிறைவேறியது. ஆனல், அதற்குமுன் பாராளுமன்ற இரு சபை

களிலும் அது முரியடிக்கப்பெற்றது. அதற்காக ஒரு முறை பாராளுமன்றம் கலக்கப்பட்டது; மந்திரி சபை ராஜினமா செய்தது; மீண்டும் திரும்ப அழைக்கப்பெற்றது. மேலும், பிரபுக்களை அமர்த்துவதாக அரசர் அச்சுறுத்தவேண்டியிருந்தது.[56] இவையெல்லாம் நடந்த பின்னர்தான் மக்களுடைய பேராரவாரத்திற்கிடையே நிறைவேறிய அம் மசோதா, 1832ஆம் ஆண்டு ஜூன் மாதம் ஏழாம் தேதி சட்டமாக வந்தது.[57]

**1832ஆம் ஆண்டுச் சீர்திருத்தச் சட்டம்:** '1832ஆம் ஆண்டின் பேருரிமைப் பத்திரம்' எனத்தக்க முறையில் இம் மசோதா அழைக்கப்பெற்றது. அது பின்வருமாறு வகுத்தது: இரண்டாயிரத்திற்கும் குறைந்த மக்கள் தொகையைக் கொண்டவையும், 111 உறுப்பினர்களை அனுப்பும் உரிமை கொண்டவையுமான ஐம்பத்தாறு நியமன பரோக்கள் அல்லது சிதைந்த பரோக்கள் ஒழிக்கப்பெற்றன. நாலாயிரத்திற்கும் குறைவான மக்கள்தொகையைக்கொண்ட முப்பது பரோக்கள் ஒவ்வொன்றும் ஓர் உறுப்பினரை இழந்தன. வேமவுத்தும் (Waymouth) மெல்கோமும் (Melcome) மேலும் இரண்டு உறுப்பினரை இழந்தன. இவ் வழியில் கிடைத்த 143 ஸ்தானங்களைக் கூடுதலான பிரதிநிதித்துவம் தேவைப்பட்ட கவுன்டிகளிடையேயும் பரோக்களிடையேயும் பகிர்ந்தளிக்க வேண்டும். புதிதாகத் தோற்றுவிக்கப்பெற்ற பரோ தொகுதிகளில் மாநகர வட்டங்கள் உள்ளிட்ட இருபத்திரண்டு தொகுதிகள் தலா மூன்று உறுப்பினரை அனுப்பும் உரிமை பெற்றவை; மற்ற இருபத்தொன்று ஒற்றை உறுப்பினர் தொகுதிகள். இங்கிலாந்திலும் வேல்ஸிலும் உள்ள கவுன்டி உறுப்பினரின் எண்ணிக்கை 94-ல் இருந்து 159 ஆக உயர வேண்டும். அதற்காகப் பெரிய கவுன்டிகளைப் பிரிப்பதோடு, முக்கியக் கவுன்டி தொகுதிகளுக்கு மூன்றாவது பிரதிநிதியை அளிக்க வேண்டும். பரோக்களில் இருந்த குறுகிய உரிமைகளெல்லாம் தள்ளுபடியாயின. அவற்றிற்குப் பதிலாகத் தலத்தில் வாழவேண்டும், வரிகளைச் செலுத்த வேண்டும் என்ற கட்டுப்பாடுகளுக்குட்பட்ட, ஆண்டுக்குப் பத்துப் பவுன்கள் வாடகை வரக்கூடிய குடியிருப்பு மனைகளைக் கொண்டவர்கள் வாக்குரிமை பெறவேண்டும். அதே சமயத்தில் கவுன்டிகளில் முன்பிருந்துவந்த முறைப்படி ஆண்டுக்கு நாற்பது ஷில்லிங் வரும்படி தரக்கூடிய சொந்த நிலமுடையாரோடு பத்திர உரிமை மானியதாரர்களும், சில ஆண்டுகளுக்குக் குத்தகை நிலம் வைத்திருப்போரும் வாக்களிக்கும் உரிமை பெற்றனர். மேலும், ஆண்டுக்கு ஐம்பது பவுன் செலுத்தும் குத்தகையாளரும் வாக்குரிமை பெற்றனர்.[58]

ஸ்காட்லாந்திற்கும் அயர்லாந்திற்குமான சீர்திருத்தச் சட்டங்கள் அதே பாராளுமன்றத் தொடரில் நிறைவேறின. ஐக்கியச் சட்டப்படி நாற்பத்தைந்தாக இருந்த ஸ்காட்டிய வகையாள்களின் எண்ணிக்கை ஐம்பத்துமூன்றாக உயர்ந்தது. அவர்களில் கவுன்டிகளுக்கு முப்பது பகர ஆள்களும், நகரங்களுக்கும் பரோக்களுக்குமென இருபத்துமூன்று பேரும் ஒதுக்கப்பெற்றனர். ஆண்டுக்குப் பத்துப் பவுன்கள் வரும்படி வரும் நிலங்கள், வீடுகள், மானியங்கள், மரபுரிமையால் வந்த பிற பொருள்கள் போன்றவற்றின் உரிமையாளருக்கும்; சிலவகையான குத்தகைக்காரர்களுக்கும் கவுன்டிகளில் வாக்குரிமை அளிக்கப்பெற்றது. பரோக்களில் பத்துப் பவுன்கள் வாடகை தரும் குடியிருப்பு மனைகளில் வாழ்வோர் வாக்களிக்கும் உரிமை பெற்றனர்.[59]

ஐக்கியம் ஏற்பட்ட காலத்திலேயே பல சிதைந்த பரோக்கள் அயர்லாந்தில் வகையாள்களை இழந்தன. சீர்திருத்தத்திற்குப் பின் பரோவின் கூட்டுரிமைக்குழுக்களிடமிருந்த வாக்குரிமையை எடுத்து, ஆண்டொன்றிற்குப் பத்துப் பவுன்கள் வாடகை வரும் குடியிருப்புகளில் வாழ்வோருக்கு அளித்தனர். 1829ஆம் ஆண்டில் ரோமன் கத்தோலிக்க விடுதலைச் சட்டம் நிறைவேறிய போதே, ஏழைமையான உரிமை மானியதார்கள்மீது பிராடெஸ்டென்ட் நிலக்கிழார்கள் கொண்டிருந்த அரசியல் செல்வாக்கைக் குலைத்த ரோமன் கத்தோலிக்க குருமார்கள், கிளர்ச்சியாளர் ஆகியோருடைய செல்வாக்கிற்கு எதிராகக் காப்புச் செய்ய வேண்டுமென்ற நோக்கத்தோடு 40 ஷில்லிங் வருமானம் கொண்ட உரிமை மானியதாரராக இருந்தவர் கவுன்டியில் வாக்குரிமை பெற்றவர் என்பதை மாற்றிப் பத்துப் பவுன்கள் வருமானம் கொண்டவர்தாம் வாக்களிக்கும் உரிமை பெற்றவர் என வகுத்த சட்டம்[60] ஒன்று நிறைவேற்றப்பட்டது. ஆயின், சில வகையான குத்தகைக்காரருக்கும், ஆண்டுக்குப் பத்துப் பவுன்கள் வருமானமுள்ள படியுரிமை நிலங்கொண்டோருக்கும் வாக்குரிமை அளித்த இந்தச் சீர்திருத்தச் சட்டம், கவுன்டி தொகுதிகளில் வாக்காளர்களின் எண்ணிக்கையைப் பெருமளவில் பெருக்கியது. ஐக்கியச் சட்டத்தின்மூலம் அயர்லாந்தின் வகையாள்கள் எண்ணிக்கை 100 என இருந்தது 105 ஆக உயர்ந்தது.[61]

**இலஞ்ச ஊழல் தொடர்ந்து வந்தது:** இங்ஙனம் பெரு முயற்சிகளுக்குப் பின்னரே சட்டப் புத்தகத்தில் ஏறியதும், இறுதியில் பெரும் பயன்களைப் பயந்ததுமான சீர்திருத்தச்

சட்டத்தில், உண்மையில் பிரதிநிதித்துவம் பற்றிய பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான வழிதோன்றவில்லை. அதிகமாகப் போனால், தீர்வுகள் காணக்கூடிய வழியினை அது காட்டியது எனக் கொள்ளலாம். சிறு பரோக்கள் (pocket boroughs) வகையாள் அனுப்பும் உரிமையை இழந்தன எனினும், பல பரோக்கள் செல்வாக்கிற்குட்பட்டே இருந்தன. இயல்பிற்கு மாறான பழைய விதிகளின்படி வாக்காளர்களாக இருந்தவர்களின் வாக்குரிமையைப் பறிக்கச் சீர்திருத்தச் சட்டத்தை வரைந்தவர்களே விரும்பவில்லை. நெடுங்காலமாக பரோ வாக்காளர்கள் கொண்டிருந்த ஊழல் மலிந்த பழக்கங்களை விரைவில் உணர்ந்த சிறு கூட்டமாகத் திகழமுடியும், புதிதாக வந்த பரோ வாக்காளர்கள். 1841ஆம் ஆண்டிலிருந்து பல சட்டங்கள் அத்தகைய கேட்டினைப் போக்க முயன்றிருக்கின்றன. பல பரோக்கள் வாக்களிக்கும் உரிமையைத் தாற்காலிகமாக இழந்தன ; ஒரு சில நிரந்தரமாகவே அவ் வுரிமையைப் பறிகொடுத்தன.

**மேலும் வந்த சீர்திருத்தத் திட்டங்கள் :** அதே சமயத்தில் பாராளுமன்றத்தல் கொண்டுவரப்பெற்ற தானியச் சட்டங்கள், தொழிற்கூடச் சட்டம், தொழிற் சங்கங்களுக்கும் பொருந்துவதான கூட்டு நிறுவனங்கள் சட்டம் போன்ற பல வாத எதிர்வாதங்களில் பொதுமக்கள் மேலும் மேலும் ஆர்வம் காட்டினார்கள். மேலும், வாக்குரிமையை விரிவு செய்வதற்கான கோரிக்கைக்கு விரைவிலேயே இணங்க வேண்டுமென்பது தெளிவாயிற்று. மகிழ்ச்சி ஆரவாரமோ அல்லது ஏளனமோ செய்யும் மக்கட் கூட்டத்தில் வாக்காளர் தங்களது விருப்பத் தேர்வினை வெளியிடுவதற்குப் பதிலாக இரகசிய வாக்களிக்க வகைசெய்யும் திட்டங்கள் 1833ஆம் ஆண்டிற்குப் பிறகு கொண்டுவரப்பட்டன. ஆனால், 'பதுங்கிப் பதுங்கி ஓட்டுப் பெட்டியிடம் செல்வது, நேர்மையான, ஒளிவுமறைவற்ற ஆங்கிலேயரின் பண்பிற்கு உகந்தது அன்று' என்ற கருத்து நிலவி வந்தது.[62] இருப்பினும், வகையாள்களின் சொத்து அடிப்படையில் தகுதி என்பதை மாற்றியமைப்பதில் சீர்திருத்தக்காரர்கள் 1838ஆம் ஆண்டில் வெற்றி பெற்றனர். 1858ஆம் ஆண்டில் அப் பழக்கத்தை அறவே நீக்கினர்.[63] வாக்குரிமையை விரிவு செய்வதற்கும், ஸ்தானங்களை மாற்றியளிப்பதற்கும் ஆன திட்டம் பல முறை பாராளுமன்றத்திற்கு வந்தது. 1852ஆம் ஆண்டிலும் 1854ஆம் ஆண்டிலும் ஜான் ரஸ்ஸல் பிரபு, பல மசோதாக்களைக் கொண்டுவந்தார். 1859ஆம் ஆண்டில் டிஸ்ரேலி (Disraeli) மசோதா ஒன்றைக் கொணர்ந்தார். மற்றொரு மசோதாவை

ஜான் ரஸ்ஸல் பிரபு 1860-ல் கொண்டுவந்தார். இறுதியாக டிஸ்ரேலி கொண்டுவந்த மசோதாதான் காபினெட் சபையில் நடந்த எதிர்பாரா நிகழ்ச்சிக்குப்[64] பிறகு 1867ஆம் ஆண்டின் சீர் திருத்தச் சட்டமாக வெளிவந்தது.

**1867ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டம்:** டர்பி பிரபுவினுடைய (Lord Derby) கன்சர்வேடிவ் மந்திரிசபை நிறைவேற்றிய 1867ஆம் ஆண்டின் சீர் திருத்தச் சட்டத்தின்படி, இங்கிலாந்திலும் வேல்ஸிலும் மேலும் அளிக்கப்பெற்ற வாக்குரிமை விரிவாக்கமானது, 1832ஆம் ஆண்டின் சீர் திருத்தச் சட்டம் வழங்கியதைப்போல முக்கியத்துவம் வாய்ந்தது.

பரோக்களில் ஓராண்டுக் காலத்திற்கு வாழ்ந்து, இரவலர் வரி செலுத்திவந்த எல்லாக் குடியிருப்பு மனை உரிமையாளருக்கும், ஆண்டுக்குப் பத்துப் பவுன் வாடகையுள்ள விடுதிகளில் தங்கியிருந்தவர்களுக்கும் வாக்குரிமை வழங்கப்பெற்றது.[65] கவுன்டிகளில் பன்னிரண்டு பவுன் செலுத்திக் குடியிருப்பு மனைகளில் வாழ்வோர் எல்லாம் வாக்குரிமை பெற்றனர். பதினொரு பரோக்கள் வகையாள் அனுப்பும் உரிமையை இழந்தன. முன்னால் இரண்டு உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை பெற்ற பரோக்களில் முப்பத்தைந்து பரோக்கள் ஓர் உறுப்பினரையே அனுப்பவேண்டியதாயிற்று. இவ்வாறு கிடைத்த மன்றப் பதவிகளில் இருபத்தைந்து இங்கிலாந்திலுள்ள கவுன்டிகள் பெற்றன. பதினொரு புதிய பரோ தொகுதிகள் தோன்றின. ஆறு பெரு நகரங்கள் ஒவ்வொரு தானத்தைக் கூடுதலாகப் பெற்றன.[66]

ஸ்காட்லாந்திற்கும் அயர்லாந்திற்குமான சீர் திருத்தச் சட்டங்கள் அடுத்த ஆண்டே நிறைவேறின. கொள்கையளவில் அவை ஆங்கிலச் சட்டத்தை ஒத்திருந்தன என்றாலும் பல விவரங்களில் அதனின்றும் மாறுபட்டன. ஸ்காட்டிஷ் கவுன்டிகளில் ஆண்டுக்கு ஐந்து பவுன் வருமானம் தரும் 'நிலங்கள், மரபுரிமையால் வந்த சொத்துகள்' ஆகியவற்றை உடையவர் வாக்குரிமை பெற்றனர். மேலும், பதினான்கு பவுன்கள் செலுத்திக் குடியிருப்பு மனைகளில் வாழ்வோரும் இவ்வுரிமை கொண்டனர். ஸ்காட்டிஷ் பரோக்களிலோவெனின், குடியிருப்பு மனைகளை உடையவருக்கும், விடுதிகளில் தங்கியவருக்கும் வாக்குரிமை வழங்கப் பெற்றது. அயர்லாந்தின் கவுன்டி தொகுதிகளில் எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை; ஆனால், பரோக்களில் நான்கு பவுன் வாடகை கொடுத்துக் குடியிருப்பு மனைகளில் வாழ்வோருக்கும் வாக்குரிமை கிடைத்தது.

**சிறுபான்மையினரின் பிரதிநிதித்துவம் :** பிரதிநிதித்துவ முறையில் முற்றிலும் புதிய கருத்தினை 1867ஆம் ஆண்டுச் சீர்திருத்தச் சட்டம் புகுத்தியது. சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவ உரிமையைத் தற்காலிகமாகவும் அரைகுறையான வகையிலும் இச் சட்டம் கொண்டுவந்தது. சில கவுன்டிகளிலும் மற்றும் பெரிய நகரங்களிலும் மூன்று உறுப்பினர்களுக்கு வகைசெய்து, அவர்களில் இருவருக்கே வாக்காளர் வாக்களிக்க வேண்டுமென்று எடுத்துரைத்த ஜான் ரஸ்ஸல் பிரபுவின் நிறைவேரு 1854ஆம் ஆண்டின் சீர்திருத்த மசோதாவில் இத்தகைய கொள்கை பொதிந்துகிடந்தது. மான்செஸ்டர் நகரமும், லிவர்பூல், பர்மிங்காம், லீட்ஸ் ஆகிய பரோக்களும் தலா மூன்று வகையாள்களை அனுப்பும் உரிமை பெற்றன. மூன்று வகையாள்களைக் கொண்ட எந்த ஒரு கவுன்டியிலோ அல்லது பரோவிலோ தேர்தல் போட்டி நடைபெறுமானல், ஒருவர் இரண்டு பேர்களுக்குமேல் வாக்களிக்கக்கூடாது என இச்சட்டத்தின் எட்டாவது, ஒன்பதாவது பிரிவுகள் அறிவித்தன. அதேபோன்று நான்கு உறுப்பினரைக் கொண்ட லண்டன் நகரத்தில் ஒருவர் இரு வகையாள்களுக்கே வாக்களிக்கமுடியும்.

**1872ஆம் ஆண்டின் வாக்குரிமைச் சட்டம் :** டிஸ்ரேலியை யடுத்து 1868ஆம் ஆண்டில் பிரதம அமைச்சராக வந்த கிளாட்ஸ்டன்தான் 1872ஆம் ஆண்டைய வாக்குரிமைச் சட்டத்தைக் கொண்டுவந்தார்.[67] அவரது எதிராளியான டிஸ்ரேலியின் சட்டத்திற்கு எவ்வகையிலும் இச் சட்டம் இளைத்ததன்று. தொழிலாளர்களும் குத்தகைக்காரர்களும் தங்களுடைய முதலாளிகளுக்கும் நிலக்கிழார்களுக்கும் எதிரில் வாக்களிக்கும் வரையில் விரிவடைந்த வாக்குரிமையினுல் உண்மையான பயன் ஏற்படமுடியாது. எனவே, சீர்திருத்தச் சட்டத்தைச் செயற்படுத்துதற்கு இரகசிய வாக்களிப்பு இன்றியமையாததாயிற்று. அது அயர்லாந்தில் மெய்ப்பபடியான உரிமை வழங்குவதாகவே அமைந்தது.

**பயன்கள் :** சீர்திருத்தச் சட்டமும் வாக்குரிமைச் சட்டமும் ஒன்ருக இணைந்து, ஆங்கிலநாட்டு அரசியல் வாழ்வினை அதிகமாக மாற்றியமைத்தன. வரிப்பளுவின் பெரும்பகுதியையேற்றுப் பாராளுமன்ற உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பினைக் கொண்ட தகுதி மிக்கோரே வாக்காளர்கள் என்பது பழைய கருத்து. அவர்கள் தங்களுடைய பொறுப்பினை வெளிப்படையாக நிறைவேற்றவேண்டுமென்றும், அதன் பயனுக வந்த

சபையும் அதே முறையில் தனது கடமைகளைப்பற்றிக் கருத வேண்டுமென்றும் கருதியது இயற்கையே. வாக்காளரைப் போலவே வகையாளும் பொறுப்பாண்மை ஏற்றவர். அரசருடைய அமைச்சர்களை ஆதரிக்கவேண்டுமா அல்லது அவர்களுக்கு எதிராக வாக்களிக்கும் பொறுப்பு வாய்ந்த செயலை மேற்கொள்ளவேண்டுமா என்பதில் தம் விருப்புரிமையை விரிந்த அளவில் பயன்படுத்த வேண்டியவர்கள். 1832ஆம் ஆண்டுச் சட்டத்தின் விளைவாக அரசருக்கே அதிக இழப்பு நேர்ந்தது. ஏனெனில், அதன்பின் தேர்தலில் அவர் அமைச்சர்களை ஆதரிக்க முடியவில்லை. 'பொதுத் தேர்தலின் நேரடி விளைவாக மந்திரி சபையானது பதவியிலிருந்து விலகவேண்டுமென்பது நமது அரசியல் வரலாற்றில் முதல் முறையாகத்'[68] தோன்றியது. 1835ஆம் ஆண்டில் பீல் (Peel) வீழ்ந்தபோது தான் அரசு அதனைப் பார்த்துக்கொண்டிருக்கவேண்டியிருந்தது. இதன் விளைவாக மந்திரிசபையை அமைக்கும் இறுதி அதிகாரம் அரசரிடமிருந்து காமன்ஸ் சபைக்குச் சென்றது. 1832ஆம் ஆண்டு இருந்ததைவிட அதிக அளவிலுள்ள வாக்காளர்களை 1867ஆம் ஆண்டுச் சட்டமும் 1872ஆம் ஆண்டுச் சட்டமும் அரசியலில் புகுத்தின. மேலும், அவைகள் வேறு வகையான கூட்டத்தினரைக் கொண்டுவந்தன. அதுவரையில் அரசியல் வாழ்விலிருந்து விலக்கிவைக்கப்பெற்றிருந்த காரணத்தால், உறுதியான அரசியல் பிணைப்புகள் இல்லாத நிலையில் அவர்களிடம் உறுதியற்ற தன்மையும் அனுபவமின்மையும் அவர்களுடைய பண்பாய் அமைந்தன என்பது உண்மை. வழிவழியாக வந்த பழைய கட்சிகளுக்கும், இறுக்கமின்றி இணைந்திருந்த உறுப்பினர்களுக்கும் இடையே பிணைப்பாய் அமையும் உள்ளூர், குடும்பம், சமுதாய உறவுகள் என்னும் நுட்பமான செல்வாக்குகள் புதுவகையான வாக்காளர்களிடம் இல்லை. தொடர்பற்ற முறையில் அவர்கள் வாக்களித்தனர், '1832ஆம் ஆண்டிற்கும் 1867ஆம் ஆண்டிற்குமிடையே இருந்த கன்சர்வேடிவ் கட்சியினரைப் பெரும்பான்மையில் தேர்ந்தெடுத்து அனுப்பியது, 1841ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர்தலின் போதுதான். ஆயின், தென் ஆஃப்பிரிக்கப் போரின் இடையே 1900ஆம் ஆண்டில் இயல்புகடந்த நிலையில் நடைபெற்ற தேர்தல் நீங்கலாக 1867ஆம் ஆண்டிலிருந்து 1910ஆம் ஆண்டுவரையில் நடைபெற்ற தேர்தல்களெல்லாம் அரசாங்க மாற்றத்திற்குக் காரணமாக இருந்திருக்கின்றன.'[69] ஆஷ்பிக்கும் ஒயிட்டிற்கும் இடையேயான வழக்கில்[70] பொதுச் சட்டத்தினுல் சொந்தச் சொத்துப்போலக் கருதப்பெற்ற வாக்களிக்கும் பொறுப்புப் பற்றிய பழைய கொள்கையும், அதன் விளைவாகச் சபையில்

உறுப்பினர் தம்விருப்புரிமையைப் பரவலாகப் பயன்படுத்தியதும் புதிய வாக்காளர்களுக்கும் புதுமையானவையே. தங்களுக்கான வழிகளைத் தாங்களே காணவேண்டிய நிலையிலிருந்த அவர்கள் வேறு வகையான கொள்கையை வகுத்தனர். அதன்படி வாக்குரிமை தனி மனிதனுடைய உரிமை. அதனால் அது எல்லோருக்கும் உரியதாக இருக்க வேண்டும். அவர்களுடைய எண்ணப்படி வெற்றி பெற்ற வேட்பாளர் அவர்களின் சார்பாளர்தாம். இத்தகைய மாறுதல்களை அரசியல் அறிஞர் உணர்ந்தவுடன் அரசியல் நடைமுறைப் போக்கில் மாறுதல்கள் தோன்றலாயின. காமன்ஸ் சபையைவிட வாக்காளர்களையே மந்திரிகளின் நிலை நம்பியிருந்தது. தேர்தல் போராட்டங்களின்போது பொதுக்கூட்டங்களில் பேசுவதன்மூலம் வாக்காளர்களிடம் செல்லும் பழக்கத்தை அமைச்சர்கள் மேற்கொண்டனர். பழமைப் போக்குக் கொண்டவர்களுக்கு இப் பழக்கம் ஒவ்வாததாகவும் உயர்மதிப்பற்றதாகவும்தோன்றியது. கட்சிநிறுவனத்தைக் கண்டுபிடித்து அதனை முழுநிறைவுடையதாக்கினர். தனது தோற்றத்திற்கும் வாழவேண்டிய தகுதிக்கும் கடந்த காலத்தையே நோக்கிய பழைய வகைசார்ந்த கட்சிக் கொள்கையை அழிக்கும் வகையில் வருங்காலத்தையே நோக்கியிருந்தன கட்சிகளின் திட்டங்கள். இதன் காரணமாகக் காமன்ஸ் சபையின் பண்பிலே பெரு மாற்றம் தோன்றியது. பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த உறுப்பினரின் வாக்கினை நிர்ணயித்த பெரும் போக்கான தன் விருப்புரிமை மேலும்மேலும் கட்சிக் கட்டுப்பாட்டிற்கு வழிவிட்டது. சபையானது எவ்வளவிற்கெவ்வளவு வாக்காளரை அதிகமாகப் பிரதிபலித்ததோ அவ்வளவிற்கவ்வளவு அதனுடைய முடிவுகள் வாக்காளரைச் சார்ந்திருந்தன. சபையின் இத்தகைய இழப்புக் காபினெட் சபையின் பேறாக அமைந்தது. அதிகாரம் பிறக்கும் இடத்தையே அமைச்சர்கள் அணுக வேண்டுமென்பது இன்றியமையாததாயிற்று. அத்தகைய அதிகாரத்தை அவர்கள் பெற்றுவிட்டால் அவர்கள் எவ்வளவு தூரம் அதிகாரம் செலுத்துவார்கள் என்பதை அறிவது கடினம்.

**1884ஆம், 1885ஆம் ஆண்டுச் சீர்திருத்தச் சட்டங்கள் :** பரோ வாசகுரிமையோடு கவுன்டி வாக்குரிமையை ஒருங்கிணைத்த 1884ஆம் ஆண்டைய மக்களின் பிரதிநிதித்துவச் சட்டம் (The Representation of the People Act) நாட்டுப்புறத் தொழிலாளர்களுக்கு வாக்குரிமை வழங்கியது. மேலும், பெரும் எண்ணிக்கையிலுள்ள ஆலைத் தொழிலாளர்களுக்கும், குறிப்பாகப் பாராளுமன்ற பரோ எல்லைக்கப்பால் வாழ்ந்த சுரங்கத் தொழிலாளர்

களுக்கும் வாக்களிக்கும் உரிமை அளித்தது. இதன் விளைவாக மேலும் இரண்டு மில்லியன் வாக்காளர்கள் கூடினர். அதற்கேற்பப் பாராளுமன்றப் பதவிகளை மாற்றிப் பகிர்ந்தளிப் பது அவசியமாயிற்று. எனவே, அடுத்த ஆண்டில் இதற்காகவே 1885ஆம் ஆண்டின் ஸ்தானங்கள் மறுபகிர்ந்தளிப்புச் சட்டம் கொண்டுவரப்பட்டது; இரட்டை உறுப்பினர் தொகுதிகள் என்ற பழைய திட்டம் கைவிடப்பெற்றது. இருபத்திரண்டு நகரங்களும், ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகங்களும் மட்டிலுமே தொடர்ந்து இரண்டு வகையாள்களை அனுப்பின. 1867ஆம் ஆண்டில் நிறுவப்பெற்றுச் சிறிது காலத்திற்கே வாழ்ந்த மூன்று உறுப்பினர் தொகுதிகள் மறைந்தன. மற்ற பரோக்களும் கவுன்டிகளும் ஒற்றை உறுப்பினர் தொகுதி களாகப் பிரிக்கப்பட்டன. சிறிய பரோக்களாக இருந்தவை தொடர்ந்து ஒரு வகையாளை அனுப்பிவைத்தன. பெரியனவாக இருந்தவை மூன்று அல்லது நான்கு தனித்தனியான தொகுதி களாகப் பிரிந்தன. அதேபோன்று ஒற்றை உறுப்பினர் கொண்ட பிரிவுகளாகக் கவுன்டிகளும் பிரிந்தன.

1884ஆம் ஆண்டின் சீர்த்திருத்தச் சட்டமும், 1885ஆம் ஆண்டின் சீர்த்திருத்தச் சட்டமும் நிறைவேறிய நாளிலிருந்து தேர்தல் சீர்திருத்தங்களும் விரிவான வாக்குரிமையும் வேண்டு மென்ற கோரிக்கைகள் அதிகரித்தன. அவற்றில் மிகமுக்கிய மானது பெண்களுக்கான வாக்குரிமை பற்றிய கோரிக்கை யாகும். இந்நிலையில் பாராளுமன்றச் சீர்திருத்தப் பிரச்சினையை ஆராய்வதற்காக மாநாடு ஒன்றைக் கூட்டுவது என 1916ஆம் ஆண்டில் தீர்மானமாகியது. சபாநாயகரைத் தலைவராகக் கொண்ட அம் மாநாட்டில், பாராளுமன்றத்திலும் நாட்டிலும் நிலவிய பல திறப்பட்ட அரசியல் கருத்துகளைப் பிரதிபலிக்கும் வகையில் இரு சபைகளிலிருந்தும் முப்பது உறுப்பினர்கள் பங்கு கொள்ள வேண்டுமென்பது ஏற்றுக்கொள்ளப்பெற்றது. இக் குழு அளித்த திட்டத்தை ஏறக்குறைய முழுமையாகச் சட்ட சபை ஏற்றுக்கொண்டது. அத் திட்டம்தான் மக்கள் பிரதி நிதித்துவச் சட்டமாக 1918ஆம் ஆண்டில் வெளிவந்தது.

**1918ஆம் ஆண்டின் புதிய சீர்திருத்தச் சட்டம் :** இப் புதிய சீர்திருத்தச் சட்டம் புகுத்திய மாறுதல்கள் தீவிரத் தன்மைக்கும் தனிச்சிறப்புத் தன்மைக்கும் பெயர்போனது. பல தொகுதி களின் மன்றப் பதவிகளைப் பறித்து அவைகளைப் பிறவற்றிற்குப் பகிர்ந்தளித்தது சிறப்புவாய்ந்த 1832ஆம் ஆண்டுச் சட்டம். ஆனால், 658 ஆக இருந்த உறுப்பினர் எண்ணிக்கையில் எவ்வித

மாற்றத்தையும் அது கொண்டுவரவில்லை. ஏறக்குறைய 455,000 மக்கள் வாக்குரிமை பெறும் அளவில் வாக்குரிமையில் மாறுதல்களைச் செய்தது. 1867ஆம் ஆண்டுச் சட்டத்தின் விளைவாக மேலும் சில மாறுதல்கள் தோன்றின. அதன்படி பல பரோக்கள் வகையாள் அனுப்பும் உரிமையை இழந்தன. மன்றப் பதவிகள் மாற்றி வழங்கப்பெற்றன. எனினும், காமன்ஸ் சபையில் இருந்த உறுப்பினரின் எண்ணிக்கை முன்பிருந்த அளவிலேயே இருந்தது. நகரங்களில் வாழ்ந்த தொழிற் கலைஞர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் வாக்குரிமை விரிவு செய்யப்பெற்றதால், வாக்காளர் பட்டியலில் மேலும் 1,080,000 வாக்காளர் கூடினர். மேலும் 2,000,000 வாக்காளர்களை 1884—1885ஆம் ஆண்டைய சட்டங்கள் பெருக்கின. அவர்களில் பெரும்பான்மையோர் பயிர்த் தொழில் சார்ந்த கூலியாள்கள். மேலும், தேர்தல் தொகுதிகள் சமமாக அமைய இச் சட்டங்கள் வழிவகுத்தன ; அதனோடு 658 ஆக இருந்த உறுப்பினரின் எண்ணிக்கையை 670 ஆக உயர்த்தின. 1918ஆம் ஆண்டுச் சட்டமானது வாக்காளர் பட்டியலில் ஏறக்குறைய 8,000,000 பெயர்களைக் கூட்டியது. பெண்களுக்கு வாக்குரிமை வழங்கியது. இங்ஙனம் வாக்காளர்களுடைய தொகை ஏறத்தாழ 16,000,000 ஆக உயர்வதற்கு இச் சட்டம் வகைசெய்தது.

வாக்காளரின் தகுதி, அவர்களின் பதிவு, தேர்தல்களின் முறையும் செலவும், ஸ்தானங்களை மாற்றி வழங்குதல் ஆகியவையே புதிய சட்டத்தின் பிரதான செய்திகளாகும். 1928ஆம் ஆண்டில் நிறைவேறிய மக்கள் பிரதிநிதித்துவச் (சம வாக்குரிமை) சட்டத்தினால் இச் சட்டமே முக்கிய மாறுதல்களுக்குட்பட்டது.

வாக்குரிமையைப் பொறுத்த வரையில் ஏழு மாறுபட்ட தகுதிகளுக்குப் பதிலாக மூன்று வகையான தகுதிகளையே இச் சட்டம் வலியுறுத்தியது. அவைகள் (a) குடியிருப்பு, (b) வணிக நிலையங்களை வைத்திருத்தல், (c) பல்கலைக்கழகப் பட்டம் பெற்றிருத்தல் அல்லது பெண்களானால் அதற்குச் சமமான தகுதி பெற்றிருத்தல் ஆகியவையே. சொத்துரிமைத் தகுதியுடைமை மறைந்தது. அதனுடன் வரையறுக்குட்பட்ட வகையைத் தவிரப் பல்தொகுதி வாக்குரிமையும் (plural voting) மறைந்தது. வருங்காலத்தில் பொதுத் தேர்தலின்போது இரண்டு தொகுதிகளுக்குமேல் ஒருவர் வாக்களிக்க முடியாது. ஒரு தொகுதியில் அவர் குடியிருக்கும் காரணம் பற்றியும், மற்றதில் தொழில் நடத்தும் காரணம் பற்றி அல்லது பல்கலைக் கழகத்திற்காகவும்

வாக்களிக்கலாம். 1918ஆம் ஆண்டுச் சட்டப்படி ஒருவர் ஒரு தொகுதியில் ஆறு மாதங்களுக்காவது தங்கியிருந்தால்தான் வாக்குரிமை பெறமுடியும். ஆயின், இப்போதிருக்கும் சட்டப்படி ஒருவர் தமது தொகுதியில் ஜுன் மாதம் ஒன்றும் தேதி தங்கி யிருக்க வேண்டும். மேலும், பதிவு செய்யும்போது குறைந்தது முப்பது நாள்களுக்காவது அங்கு அவர் வாழ்ந்திருக்க வேண்டும். அதனோடு தமது தொகுதியிலோ, அல்லது அதே கவுன்டி அல்லது பரோவிலோ, அல்லது தமது தொகுதி அடங்கியிருக்கும் கவுன்டி அல்லது பரோவிற்கு அண்டையிலுள்ள கவுன்டியிலோ அல்லது பரோவிலோ அவர் தேர்தலுக்கு முந்திய மூன்று மாதங் களுக்குத் தங்கியிருக்க வேண்டும்.

**பெண்கள் :** வாக்குரிமையைப் பெண்களுக்கும் விரிவு படுத்தியது குறிப்பிடத்தக்க மாற்றம் என்பதை முன்னரே குறிப்பிட்டோம். ஆயின், 1918ஆம் ஆண்டின் சட்டத்தின்கீழ் அவர்கள் தகுதியின் அடிப்படை ஆண்களுடையதினின்றும் வேறுபட்டது. முப்பது வயதை அடைந்த மாது வாக்களிக்க லாம். அவர் சட்டரீதியான தகுதிக்குறை ஏற்படாதவராக இருக்க வேண்டும். உள்ளூர் ஆட்சியில் வாக்காளராக விளங்க வேண்டும். அதாவது, வரி செலுத்துபவராகவோ, அல்லது தட்டுமுட்டுச் சாமான்களற்ற விடுதியில் வாழ்பவராகவோ, அல்லது அத்தகைய தகுதிகளைப் பெற்றவருடைய துணைவியாகவோ இருக்க வேண்டும். சர்வகலாசாலைப் பட்டம் பெற்றவருக்கும் வாக்குரிமை வழங்கப்பெற்றது. எனினும், வாக்குரிமையைப் பொறுத்த வரையில் பெண்களையும் ஆண்க ளோடு சமநிலையில் இருக்குமாறு செய்தது, 1928ஆம் ஆண்டுச் சட்டமே.[71]

இரவலர் துணையுதவி பெறுவதனால் வாக்குரிமையில்லை யென்ற பழைய தடை நீக்கப்பட்டது. ஆயினும், பிரபுக்கள், பாலகர்கள், அன்னியர், அரசியல் பெருங்குற்றம் புரிந்தோர், குற்றவாளிகள், முட்டாள்கள், மூளைகெட்டவர்கள், ஊழலும் சட்டவிரோதமான செயல்களும் கொண்டவர் எனக் குற்றஞ் சாட்டப்பெற்றவர்கள், வரிகளைச் செலுத்தாததால் தகுதியற்றவ ரானவர் என்ற வகையில் சட்டரீதியான தகுதியின்மை அடிப் படையில் வாக்குரிமை அளிக்காத பழைய நிலை அப்படியே தொடர்ந்தது.

வேட்பாளர்கள் 150 பவுன்களை ஈட்டுப் பொருளாகக் கட்ட வேண்டுமென்றது, 1918ஆம் ஆண்டுச் சட்டம் புகுத்திய மற்று மொரு புதுமை. பதிவான வாக்குகளில் எட்டில் ஒரு பகுதியைப்

பெறத் தவறினால் வேட்பாளர் ஈட்டுப் பணத்தை இழக்க வேண்டும். விளையாட்டுத்தனமாக வேட்பாளராக நிற்பதைத் தடுப்பதே இதன் நோக்கமாகும்.

முக்கியமாக மக்கள்தொகை அடிப்படையில் ஸ்தானங்களை இச் சட்டம் மாற்றி வழங்கியது. 70,000 மக்களுக்கு ஒரு வகையாள் என்பது அளவையாக இருந்தது. ஆயின் சில தனித்த சூழ்நிலைகளில் இத்தகைய அளவையை மீறும் அதிகாரத்தை ஆணையாளர் பெற்றிருந்தனர். இங்ஙனம் கிரேட் பிரிட்டனில் 557 உறுப்பினர்களுக்குப் பதிலாக 602 உறுப்பினர் ஏற்பட்டனர். அதேசமயத்தில் 670 ஆக இருந்த மொத்த எண்ணிக்கை 707ஆக உயர்ந்தது. ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகங்கள் ஒவ்வொன்றும் இரு வகையாள்களை அனுப்பின. லண்டன், வேல்ஸ் பல்கலைக்கழகங்கள் ஒவ்வொருவரை அனுப்பின. மான்செஸ்டர், லிவர்பூல், லீட்ஸ், ஷெஃபீல்டு, பர்மிங்காம், பிரிஸ்டல் ஆகிய பல்கலைக்கழகங்கள் சேர்ந்து இரண்டு வகையாள்களை அனுப்பும் உரிமை பெற்றன. ஸ்காட்டிஷ் பல்கலைக்கழகங்களெல்லாம் ஒன்றாக இணைந்து மூன்று உறுப்பினரைத் தேர்ந்தெடுத்தன.[72] தனிச்சட்டம்[73] ஒன்றின்மூலமாக அயர்லாந்தில் மன்றப் பதவிகள் பகிர்ந்தளிக்கப்பெற்றன. 43,000 மக்களே அடிப்படை அளவையாக இருந்தனர். 103 உறுப்பினர் 105ஆக உயர்ந்தனர். ஆனால், 'வட அயர்லாந்தில் உள்ள தொகுதி தவிர அயர்லாந்தின் வேறெந்தத் தொகுதியிலிருந்தும் பாராளுமன்றத்தின் காமன்ஸ் சபையில் பணியாற்றுவதற்காக வகையாள்களைத் தேர்தெடுக்கவேண்டுமென்ற ஆணையை இச் சட்டம் நிறைவேற்றிய பிறகு அனுப்பக்கூடாது' என 1922ஆம் ஆண்டின் 'ஐரிஷ் சுதந்திர அரசு (உடன்படிக்கைச்) சட்டம்' வகுத்தது. எனவே, அயர்லாந்திலிருந்து வந்த வகையாள்களில் வட அயர்லாந்திலிருந்து வந்த பதின்மூன்று பிரதிநிதிகளே எஞ்சினர். இறுதியாக வந்த மறுவழங்கீட்டின்படி காமன்ஸ் சபையில் 640 உறுப்பினரே இருந்தனர்.

**உறுப்பினரின் ஊதியம்:** மாவட்டங்களில் இருந்துவந்த நைட் வீரர்களும் வணிகரும் ஆரம்ப காலத்திலிருந்தே அவரவருடைய தொகுதியினரிடமிருந்து ஊதியம் அல்லது சரியாகச் சொல்லவேண்டுமானால், செலவுகளுக்கான தொகை பெறும் உரிமை கொண்டிருந்தனர்.[75] பாராளுமன்றத்திலும், அதற்குச் செல்லும் பயணத்திலும் செலவிடும் ஒவ்வொரு நாளைக்கும் நைட் வீரர்களுக்கு நான்கு ஷில்லிங்கும், வணிகருக்கு இரண்டு ஷில்லிங்கும் அளிக்கவேண்டுமென்று இரண்டாம் எட்வர்டின்

ஆட்சியில் செலவுபற்றிய (de levandis expensis) ஆணைகள் வரையறுத்தன. அந்த வீத அளவிற்கு உறுப்பினர் பணம் பெறுவதற்கு நீதிமன்றங்கள் உதவியளித்தன. அதற்குக் குறைந்த அல்லது அதிகச் செலவுகளுக்காகத் தனிப்பட்ட முறையில் செய்துகொள்ளும் ஏற்பாடுகளை அரசாங்கம் தடை செய்யவில்லை. அத்தகை பேரங்கள் குறிப்பாக பரோக்களில் அடிக்கடி நடைபெற்றன. லண்டன் நகர வகையாள்கள் ஆடம்பரமாக வாழ்ந்தனர். அவர்களுடைய செலவுகளுக்காக அந் நகரம் ஒரு முறை மீன் விற்பவர் ஒருவரிடமிருந்து பத்துப் பவுன்கள் கடன் வாங்கியது. தங்களுடைய வகையாள்கள் நல்ல எண்ணத்தினைப் பிறர் மனத்தில் பதியவைக்கவேண்டுமென்று மற்ற நகரங்களும் விழைந்தன. ஆயின், அதனால் நகரத்திற்குச் செலவு கூடாது எனவும் எண்ணினர். இதற்காகவென்று நிதியளிப்பதற்காக மேனர் என்னும் பண்ணை நிலப்பகுதியையே கேம்பிரிட்ஜ் கவுன்டி தனியாக வைத்திருந்தது.[76] பாராளுமன்றம் கலைக்கப்பெற்ற பின்பு, அதில் செயலாற்றிய உறுப்பினரின் வேண்டுதலின்பேரில் வெளியிடப்பெற்ற இரண்டாம் ஹென்றியினுடையதைப் போன்ற ஆணைகளை எட்டாம் ஹென்றியின் ஆட்சி இறுதியில் காண முடியும். ஆயின், வெளியிடப்பெற்ற ஆணைகளையெல்லாம் பதிவு செய்தனர் என்று கூற முடியாது. ஆணைகள் இல்லாததைக் கொண்டு உறுப்பினர் ஊதியம் பெறவில்லை என்று கொள்ள முடியாது. அதேபோன்று அவைகள் காணப்பெறுததைச் சான்றாகக் கொண்டு உறுப்பினர் சபைக்கு வரவில்லை என்றோ, தேர்தல் நடைபெறவில்லை என்றோ கொள்வது பொருத்தமன்று. கவுன்டிகளிலும் பரோக்களிலும் ஊதியம் பெறுவதை மக்கள் விரும்பவில்லை. பாராளுமன்றப் பிரதிநிதித்துவத்தை விரும்பி ஏற்காததற்கான காரணங்களில் இதுவும் ஒன்றாகும். இன்னும் இடைக்காலத்தில் பிரதிநிதியாவது சிறப்புரிமை என்பதைவிடச் சுமையென்ற கருத்தே மேலோங்கி நின்றது. இத்தகைய பொறுப்பிலிருந்து தப்பிக்க முயற்சிகள் எழுந்தன. விதிவிலக்கு ஏதுமின்றி ஏற்றுக்கொள்ள இயலாத பிரதிநிதித்துவத்தின் தன்மை பற்றிய கோட்பாடுகள் பலவற்றை உருவாக்கினர். பண்டைய பண்ணைநிலத்தையும், விருப்ப ஆவணம் இன்றி பந்த உடைமையையும் (gavelkind) துறப்பதைப்போல, வகையாள்களைஅனுப்பும் உரிமையையும் கைவிடமுடியும் என்றனர். .பாராளுமன்றத்திற்குச் செல்லும் பிரபுவே குத்தகைக்காரரின் பிரதிநிதியாக இருந்தார் என்றும் எடுத்துக்காட்டினர். மேலும், ஷயரின் நைட் வீரர்களுடைய செலவினைச் செலுத்தத் தாங்கள் பொறுப்பேற்க முடியாதென்று அவர்கள் அறிவித்தனர்.[77] பிற்

காலத்திலும் சில பரோக்கள் தம்மிச்சையாகவே தங்களுடைய பகர ஆள்களுக்கு ஊதியம் அளித்துவந்தன. இரண்டாம் சார்லஸ் ஆட்சியில் ஹல்லின் (Hull) நகைச்சுவை மிகுந்த வகையாளான ஆண்ட்ரூ மார்வெல் (Andrew Marvel) என்பாரே இறுதியாக ஊதியம் பெற்றவர் எனத் தவருகப் போற்றப்பட்டார். ஆனுல், மார்வெல் இறந்து மூன்று ஆண்டுகள் கழிந்து 1681-ல் ஹார் விச்சின் வகையாளான தாமஸ் கிங் என்பவர் ஹார்விச் கூட்டுரிமைக் குழுவிற்கு அறிக்கையை அனுப்பிய பிறகு பர்கருடைய செலவினுக்கான ஆணையை (de expensis burgensium levandis) முறைமன்றப் பிரபுவிடமிருந்து பெற்ருர். முறைமன்றப் பிரபுவான நாட்டிங்காமின் வாழ்க்கை பற்றி எழுதிய காம்ப்பெல் பிரபு (Cambell) தாமஸ் கிங்கின் வழக்கினைக் குறிப்பிட்டார். அதன் பிறகு அத்தகைய ஆணையைக் கோரிப் பெறமுடியும் என்றும், பழைய வழக்கத்தை மீட்கும் விருப்பமுடையோர், புதிய சட்டத்தின் உதவியை நாட வேண்டியதில்லை என்றும் தமது கருத்துரைகளாக வழங்கினர்.[78]

உறுப்பினர் ஊதியம் பெறும் உரிமை வழக்கற்றுப்போனதோடு, நேர்மாருன சொத்துரிமைத் தகுதியின்மூலமாக மாற்றியமைக்கப்பட்டது என்பதை முன்பே கண்டோம்.[79] காமன்ஸ் சபையில்[80] பிளாண்ட்ஃபோர்டு பிரபு (Blandford) 1830-ல் கொண்டுவந்த சீர்திருத்தச் சட்டமொன்றில் உறுப்பினர்களுக்கு ஊதியமளிக்கும் பழக்கத்தை மீட்பதற்கான திட்டமும் இருந்தது. பாராளுமன்ற உறுப்பினர்கட்கு ஊதியம் வழங்குவதை ஆதரித்து 1893ஆம் ஆண்டிலும் 1895ஆம் ஆண்டிலும் காமன்ஸ் சபையில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. ஆனுல், பிரபுக்கள் சபை அவற்றை ஏற்காததால் அவை தோல்வியுற்றன. இறுதியில் காமன்ஸ் சபை தனியாகவே, துரித முறையில் 1911ஆம் ஆண்டில் இதனைப் பயனுள்ள வகையில் நிறைவேற்றிவைத்தது. பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு ஊதியம் வழங்குவதற்காகத் தொழிற்சங்கங்கள் தங்களுடைய அங்கத்தினர்களிடமிருந்து கட்டாயமாக நிதி திரட்ட முடியாது என முறைமன்றங்கள் தீர்ப்பு வழங்கியதால் இவ் விஷயம் அவசரமானதாகியது.[81] பாராளுமன்ற மசோதா பிரபுக்கள் சபையில் நிறைவேறிய மறுநாளான ஆகஸ்டு பத்தாம் தேதியன்றே நிதியமைச்சர் தீர்மானம் ஒன்றைக் கொண்டுவந்தார். அமைச்சர்கள், சபையின் அதிகாரிகள், அரண்மனை அதிகாரிகள் நீங்கலாகவுள்ள சபையின் எல்லா உறுப்பினருக்கும் ஆண்டுக்கு 400 பவுன்களை ஊதியமாக அளிக்க வகை செய்யவேண்டு

மென்று அத் தீர்மானம் கூறியது. அத்தகைய கொள்கையினைச் சபை அடிக்கடி வலியுறுத்திவந்திருக்கிறதென்றும், முந்திய பொதுத் தேர்தலுக்கு முன்னால் பிரதம மந்திரி அதனை ஏற்றுக்கொண்டுள்ளார் என்றும் நிதியமைச்சர் குறிப்பிட்டார். ஊதியம் அளித்தல் என்பது புதுமையாகப் புகுத்தப்பெறும் ஒன்றன்று; மாறாக ஆரம்பத்தில் இருந்த ஒரு பழக்கத்தைப் புதுப்பித்தலேயாகும். ஆரம்பகாலத்தில் எல்லாத் தொகுதிகளும் ஏற்றுக்கொண்ட இப் பழக்கம் பிற்காலத்தில் கள்ளத்தனமாக மறைமுகமான வழிகளில் 1780ஆம் ஆண்டுவரையில் நிலவி வந்தது. எவ்வாறாயினும், அந்த ஆண்டில் 'எல்லா உறுப்பினர்களும் நியாயமான ஊதியம் பெறவேண்டு'மென்னும் கருத்தினைத் துணை ஆணைக்குழு ஒன்று வலியுறுத்தியது. இக் காலத்தில் உறுப்பினர்கள் அதிக காலம் சபையில் கழிக்கவேண்டியிருக்கின்றது. ஆயின், இத்தகைய யோசனைக்கு அதிக எதிர்ப்பு இருந்தது. ஊதியம் வழங்கவேண்டுமென்னும் கருத்துப்பற்றி நீண்ட காலமாக விவாதங்கள் நடைபெற்று இருக்கின்றன. சட்டம் இயற்றவேண்டியது அவசியம் எனக் கொள்ளப்பட்டது. எனவே, தெளிவற்ற, அதிகம் அறியப்படாத செயல்முறையின் மூலமாக உறுப்பினர் தங்களுடைய ஊதியத்திற்காக வாக்களிக்கவேண்டுமென்ற தீர்மானம் வந்தபோது, படிக்காதாரிடையே ஓரளவு வியப்புக் காணப்பெற்றது. ஆயினும், ஆகஸ்டு மாதம் 14ஆம் தேதியன்று மேலும் விவாதம் நடைபெற்றபோது 241-க்கு 128 என்ற வாக்குகள் கணக்கில் அத் தீர்மானம் நிறைவேறியது.[82]

## சிறப்புரிமை

**சிறைப்படா உரிமை :** பொதுப்பணிகளில் ஈடுபட்டிருக்கும் ஊழியர்கள் தடையின்றி அரசாங்க காரியங்களைக் கவனிப்பதை உறுதி செய்யும் ஒரு வழியாகவே சிறப்புரிமை தோன்றியது என்பதை முந்திய இயல்களிலேயே கண்டோம். பாராளுமன்றத்திற்கு அழைக்கப்பெற்றவர்கள் மட்டுமன்றிப் பலவகையான முறைமன்றங்கள், அலுவலகங்கள் ஆகியவற்றின் ஊழியர்களும், அவற்றின் அதிகார எல்லைக்குட்பட்டவர்களும் அரண்மனையில் இருப்போரும் சிறப்புரிமையால் காக்கப்பெற்றனர். மன்னரே பெரும்பான்மையில் அதனைச் செயற்படுத்தினர். எட்டாம் ஹென்றியின் காலத்தில்தான் காமன்ஸ் சபை இப் பொறுப்பினை ஏற்க அனுமதி பெற்றது. அதிலிருந்து காமன்ஸ் சபையினரின் பெருமை உயரச் சிறப்புரிமை உதவியாக இருந்தது. மேலும், ஸ்டூவர்டுகள் காலத்தில் பல முறை

மன்னருக்கெதிரான கருவியாக் அது பயன்பட்டது. ஆயின், பதினெட்டாம் நூற்றாண்டில் முரட்டுத்தனமாகவும், சில சமயங்களில் பொறுப்பற்ற முறையிலும் பாராளுமன்றச் சிறப்புரிமை வலியுறுத்தப்பெற்றதன் விளைவாகப் பொதுமக்களே அதிகம் துன்புற்றனர். பிரபுக்களையும் காமன்ஸ் சபை உறுப்பினரையும் சிறையிடலாகாது என்னும் சிறப்புரிமை, அவர்களை மட்டிலும் காவாது அவர்களுடைய சொத்துகளையும், அவர்களின் சேவகர்களையும் காக்க வேண்டுமென்பதாக விரிவடைந்தது. சிறப்புரிமை கொண்ட காலத்தில் கள்ள வேட்டைகளிலிருந்தும் அவர்களுடைய விலங்குகள் காக்கப்படவேண்டுமென்ற அளவிற்கு விரிவடைந்ததாகக் கொண்டனர். இவற்றின் விளைவாகப் பல கேடு பயக்கும் ஊழல்கள் தோன்றின. எல்லா வகையான பொது வழக்கு நடவடிக்கைகளும் தங்களையும் தங்களது சேவகர்களையும் பாதியா என்றுகூடக் காமன்ஸ் சபையினர் வலியுறுத்தினர். பென்யானுக்கும் இவெலினுக்கும் இடையேயான (Benyon v. Evelyn) வழக்கில் சர் ஆர்லண்டோ பிரிட்ஜ்மெனும் (Sir Orlando Bridgeman), பேட்டியின் வழக்கில் (Paty's Case) ஹோல்ட் பிரபுவும் (Lord Holt) இத்தகைய உரிமை கொள்வதை மறுத்த போதிலும், காமன்ஸ் சபையினர் விடாப்பிடியாக இருந்தனர். பல சட்டங்கள் எழுந்து இத்தகைய கொடுமையான விதியை ஓரளவு கட்டுப்படுத்தின.[83] இறுதியில் பழங்காலத்தில் இருந்த அளவிற்குச் சிறப்புரிமையைக் குறைத்தது. 1770ஆம் ஆண்டில் நிறைவேறிய சட்டம், உறுப்பினர் மட்டுமே சிறையிடப்பெறுவதிலிருந்து காப்புப் பெறவேண்டும்; அவர்களுடைய சொத்துகளும் சேவகர்களும் நீதியின் நடைமுறைக்கு உட்பட்டவர்களே என வலியுறுத்தியது.[84] இத்தகைய பல சட்டங்களின் விளைவாக உறுப்பினர் பெற்றிருந்த சிறைப்படா உரிமையானது பாராளுமன்றச் சிறப்புரிமை என்பதைவிடச் சட்டரீதியான உரிமையாக மாறியது எனலாம். 'எனவே, பொது வழக்கில் உறுப்பினரைச் சிறைப்பிடித்தல் ஆரம்ப முதலே முறையற்றது. கைதுசெய்வதற்கு ஆணை பிறப்பித்த நீதிமன்றத்தின் தீர்மானத்தின் பேரில் அவரை உடனே விடுவிக்கவேண்டும்.'[85]

**தேர்தல் வழக்குகள்:** தங்களுடைய சுதந்திரத்தைக் காத்துக் கொள்வதற்காகத் தேர்தல் விவகாரங்களில் தனியான அதிகார எல்லை தங்களிடம் இருக்கவேண்டுமென்று வற்புறுத்தி, அதனைப் பெற்ற[86] காமன்ஸ் சபையினர், கட்சி நோக்கங்களுக்கு அதை அடிமையாக்கினர். இரண்டாம் ஜார்ஜ் காலத்திலும், மூன்றாம்

ஜார்ஜ் காலத்திலும் இத்தகைய ஊழல் உச்சநிலையெய்தியது.[87] 1770ஆம் ஆண்டில் நிறைவேறிய கிரன்வில் சட்டத்தினால் இத் தீமையைக் கூடுமானவரை திருத்த முடிந்தது. காமன்ஸ் சபையே பெற்றிராத உறுதிமொழியினைச் செயல்முறைப் படுத்தும் அதிகாரத்தினைக்கொண்ட சபையின் நிரந்தர ஆணைக் குழு ஒன்று உருவாக்கப்பெற்றது.[88] ஆணைக்குழுவினைத் தேர்ந் தெடுத்த முறை காரணமாகக் கட்சிகளின் செல்வாக்கு மறைய வில்லை. அதைப்போலவே, 1839ஆம் ஆண்டில், சர் ராபர்ட் பீலின் தூண்டுதல்பேரில் சட்டமாகிய[89] திருத்தியமைக்கப்பெற்ற திட்டமும் கட்சிச் செல்வாக்கினைக் களைய முடியவில்லை. கடைசி வரையிலும் தேர்தல் ஆணைக்குழுக்களின் அமைப்பும் செயல் முறைகளும் 'அரசியல் ஒருசார்பாய் அவைகள் செயலாற்று மாறு பல முறை செய்திருக்கின்றன.' இறுதியாக 1868ஆம் ஆண்டிலேதான் உயர் நீதிமன்ற நடுவரிடம் தேர்தல் வழக்குகளை மாற்றினர்.[90] இங்ஙனமாக 450 ஆண்டுகளுக்கு முன்னால் நான்காம் ஹென்றியின் பதினோராம் ஆண்டின் தேர்தல் சட்டத் தில் கையாளப்பெற்ற முறையையே மீண்டும் கொணர்ந்தனர்.[91]

**ஆஷ்பிக்கும் ஒயிட்டிற்கும் இடையேயான வழக்கு, 1702-1704:** தேர்தல்களின சட்டமுறைமைபற்றி மட்டுமன்றி வாக்காளர் களின் உரிமைகளையும் நிர்ணயிக்கும தனியுரிமை தங்களுக்கே உரியது எனக் காமன்ஸ் சபையினர் கொண்டாடியதால், 1702ஆம் ஆண்டில், பிரபுக்கள் சபைக்கும் காமன்ஸ் சபைக்கும் மறக்கமுடியாத போட்டி தோன்றியது. அயில்ஸ்பரியல் (Aylesbury) வாழும் இரவலர்களுக்கு வாக்குரிமை கிடையாது எனக் காமன்ஸ் சபை ஏற்கெனவே முடிவு செய்துவிட்டதால், அந் நகரின் வணிகரான ஆஷ்பி என்பாருக்குத் தேர்தலில் வாக்களிக்க அனுமதி வழங்க அச் சபை மறுத்தது. அதனால் அப் பரோவின் தேர்தல் அதிகாரிகளான ஒயிட போன்றோர்மீது மக்கள் முறை மன்றத்தில் ஆஷ்பி வழக்குத் தொடர்ந்தார். அவருக்குகந்த தீர்ப்பு அளிக்கப்பெற்றது. ஆனால், அத்தகைய செயலில் ஈடுபடும் அதிகாரம் அம் முறைமன்றத்திறகு இல்லையெனக் கூறி, அத் தீர்ப்பினைத் தடைசெய்யும் வகையில் அரச முறை மன்றத்திற்கு வழக்கு மாற்றப்பட்டது. முதன்மை முறை மன்றப் பிரபுவான ஹோல்ட்டின் கருத்திற்கு மாறாகப் பிரதி வாதியின் சார்பாகத் தீர்ப்பு அளிக்கப்பட்டது. ஆனால், பிரபுக் கள் சபை கோரிய பிழையாணையின் (Writ of Error) வாயிலாக இத் தீர்ப்பினை மாற்றியமைக்க முடிந்தது. கீழ் முறைமன்றத்தில் தலைமை நீதிபதியான ஹோல்ட் வெளியிட்ட மாறுபட்ட கருத்தினை அடிப்படையாகக் கொண்டே தீர்ப்பினை மாற்றி

யமைத்தனர். அதன்பேரில் நீண்ட விவாதங்களுக்குப்பின் காமன்ஸ் சபையினர் பல தீர்மானங்களை இயற்றினர். அவற்றில், 'தங்கள் சபைக்கான உறுப்பினரைத் தேர்தெடுக்கும் உரிமை பற்றிய எல்லாச் செய்திகளையும்' ஆராயவும் நிர்ணயிக்கவும் ஆன தனியுரிமை, பாராளுமன்றச் சட்டத்திஞல் மாறாகக் கூறப் படாதவிடத்து, 'பாராளுமன்றத்தில் கூடிய காமன்ஸ் சபை யினருடையதே' என்பது வலியுறுத்தப்பட்டது. மேலும், 'பாராளுமன்றச் சட்டத்தின்மூலமாகத் தனியாகக் குறிப்பிடப் பெற்றிருக்கும் செய்திகளைத் தவிர மற்றவற்றை அங்கிலப் பாராளுமன்றத்தில் கூடிய காமன்ஸ் சபையினரின் முன்னிலையில் அன்றி வேறெங்கும் வாக்காளரின் தகுதி பற்றியும், தேர்ந்தெடுக்கப்பெற்றவரின் உரிமைபற்றியும் தீர்மானிக்க முடியாது' என்றும் அவை வலியுறுத்தின. அதனோடு பாராளுமன்றச் சட்டத்தின்மூலமாகத் தனிப்பட்ட முறையில் குறிப்பிடப்பெற்றிருக்கும் செய்திகளைத் தவிர மற்ற வற்றில் காமன்ஸ் சபை தவிர மற்ற அதிகார எல்லையுடைய அமைப்புகளின் தீர்ப்பிற்கு வாக்காளர்களின் உரிமையை அல்லது பாராளுமன்றத்தில் பணிபுரிவதற்கெனத் தேர்ந் தெடுக்கப்பெற்றவரின் உரிமையைக் கொண்டுவருவதற்கான செய்தி, குற்றச்சாட்டு, நடவடிக்கை ஆகியவற்றைத் தொடங்கவோ அல்லது மேற்கொண்டு நடத்தவோ எண்ணுபவர் இச் சபையின் சிறப்புரிமையை மீறும் குற்றத்திற்குள்ளாவர்.[92] அதேபோன்று தங்களுடைய பரிந்துரை, மேற்கொண்ட நடவடிக்கை, மன்றாடுதல் ஆகியவற்றின்மூலமாக இத்தகைய செயலில் ஈடுபடும் வழக்குரைஞர்களும், வழக்கீட்டு ஆலோசகர் களும், ஆலோசனை வழங்குவோரும், உயர்வழக்கறிஞரும் அதே குற்றத்திற்கு உள்ளாவர்' என்றும் வலியுறுத்தின. மேலும், பொதுச் சட்ட முறைமன்றத்தில் வழக்குத் தொடுத்த ஆஷ்பி சிறப்புரிமை மீறல் குற்றம் புரிந்தவரே என்றும் அவை தீர்மானித்தன. ஆனல், மறுபக்கத்தில் பிரபுக்கள் சபையின் தீர்ப்பில் இத்தகைய விளக்கங்களுக்கு மறுப்புக் காணப் படுகின்றது. அதன்படி, வாக்காளருடைய உரிமைக்கும் வகையாள்களின் உரிமைக்கும் இடையே மிகுந்த வேற்றுமை உண்டு. எவ்வாறெனில், ஒருவருடையது பாராளுமன்றத்தில் இடம்பெறும் தாற்காலிக உரிமை; மற்றவருடையதோ வாக்குரிமை அல்லது உரிமை மானியம். காமன்ஸ் சபையில் அமரும் தகுதி யாருக்கு உண்டு என்பது அச் சபையின் ஆட்சி எல்லைக்குட்பட்டதாகலாம். ஆனல், தேர்ந்தெடுக்கும் உரிமை யாருக்கு உண்டு என்பது, பாராளுமன்றம் பிறப்பதற்கு முன்பே, ஆரம்பகாலத்தில் இருந்த நிலையான செய்தி. பொதுச் சட்டத்தின்

மூலமாக உரிமை மானியத்திற்கான உரிமையை மனிதன் பெற்றிருந்தான். உரிமை மானியத்துடன் வாக்களிக்கும் உரிமையை அச் சட்டம் இணைத்தது. எனவே, வாக்குரிமையும் உரிமை மானியத்தின் தன்மை பெற்றிருப்பதால், அதுவும் பொதுச் சட்டத்தைச் சார்ந்தே இருக்கவேண்டும். ஒருவனுக்கு உரிமை வழங்கிய அதே சட்டம் அவனுக்காக அவ்வுரிமையைக் காத்திடவும் வேண்டும். எனவே, அவனுடைய வாக்குரிமை நீக்கும் அதிகாரம் கொண்டதாக பாவனை செய்யும் எந்த அமைப்பும், வாக்குரிமை சார்ந்து நிற்கும் உரிமை மானியத்தையும் பறிக்க பாவனை செய்யலாம்.[93]

**பேட்டியின் வழக்கு :** தேர்தல் அதிகாரிகளுக்கு எதிராக ஆஷ்பியின் உரிமைக் கோரிக்கையை ஆதரித்துப் பிரபுக்கள் சபை தீர்ப்பு வழங்கிய சிறிது காலத்திற்குப் பிறகு, 'அயில்ஸ்பரி பேர் வழிகள்' என்று பிற்பாடு அழைக்கப்பெற்ற அயில்ஸ்பரியைச் சார்ந்த வேறு ஐந்து வணிகர்கள், தங்களுடைய பரோவின் காவல் அதிகாரிகளின் மீது ஆஷ்பியின் வழக்கினை ஒத்த நடவடிக்கைகளைத் துவக்கினர். அதன்பேரில் தனது அதிகார எல்லையை அவமதித்தாகக்கொண்டு காமன்ஸ் சபை, அவர்களை நியூகேட் சிறைக்கு அனுப்பியது. அந்த ஐவரும், ஹேபியஸ் கார்பஸ் ஆணையின் (Writ of Habeas Corpus) மூலமாகத் தங்கள் விடுதலையைப் பெற முயன்று தோல்வியுற்றனர். காமன்ஸ் சபையினரின் சிறப்புரிமைகள் எவை என்பதை முடிவு செய்யும் நடுவர்கள் காமன்ஸ் சபையினரேயன்றி வேறெவருமல்ல என்று பெரும்பாலான நீதிபதிகள் கருத்துக் கொண்டனர். மேலும், வாதிகளின் ஆலோசகர்களும், பகர ஆள்களும், பரிந்துரை பகர்வோரும் தங்கள் சிறப்புரிமையை மீறும் குற்றம் புரிந்தவரே என்று காமன்ஸ் சபையினர் அறிவித்தனர்; அவர்களையும் தண்டனைக்குள்ளாக்கினர். அதன் பிறகு ஹேபியஸ் கார்பஸ் ஆணையை நீதிபதிகள் வழங்க மறுத்து அளித்த தீர்ப்பினைப் பிரபுக்கள் சபையின்முன் கொண்டுவருவதற்காக 'அயில்ஸ்பரி பேர்வழிகள்' பிழையாணையைக் கோரினர். ஆனால், இந்த வழக்கில் பிழையாணை வேண்டியதில்லையென்று காமன்ஸ் சபையினர் தீர்மானித்தனர் ; அதனை வழங்கக்கூடாது என்று அரசியாரிடம் விண்ணப்பித்துக்கொண்டனர். மற்றொரு புறத்தில், பிழையாணைகள் எல்லாம் உரிமை ஆணைகள் என்பதை வலியுறுத்தும் வகையில் பிரபுக்கள் இராணியாரிடம் எடுத்துரைத்தனர். அத்தகைய ஆணையை அளிக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். இராணியார் ஆலோசனை கேட்ட போது பன்னிரண்டு நீதிபதிகளில் பதின்மர் பிரபுக்களின்

வாதத்தை ஏற்றனர். இறுதியாக, பாராளுமன்றக் கூட்டத்தைத் தள்ளிப்போடுவதன் மூலமாக ஓவ்வாத பூசலை அரசியார் முடிவுக்குக் கொண்டுவந்தார். அதன் காரணமாக, 'அயில்ஸ்பரி பேர்வழிகளும்' அவர்களுடைய ஆலோசகரும் விடுதலை பெற்றனர். சிறப்புரிமையின் குறுக்கீட்டினால் ஏற்படும் தடையேதும் இல்லாததாலும், பிரபுக்கள் சபையின் தீர்ப்பின்மூலம் ஆதரவு பெற்றும் இருந்த நிலையில் வாதிகள் தங்களுடைய வழக்குகளைத் தொடர்ந்து நடத்தினர். தேர்தல் அதிகாரிகளுக்கு எதிரான தீர்ப்புகளைப் பெற்று அவற்றை நிறைவேற்றுமாறும் செய்தனர்.[94]

**சட்டத்திற்கும் சிறப்புரிமைக்கும் இடையேயான முரண்பாடு :** காமன்ஸ் சபைக்கும் முறைமன்றங்களுக்கும் இடையேயான உறவுபற்றியதும், சிறப்புரிமைக்கும் சட்டத்திற்கும் இடையேயான உறவுபற்றியதும் ஆன வாத எதிர்வாதம் சில ஆண்டுகளாகவே எழுந்திருந்தது. அதனை உச்சநிலைக்குக் கொண்டு வந்தன இந்த இரு வழக்குகளும். தங்களுடைய சிறப்புரிமை, சட்டத்திற்கப்பாற்பட்டது என்றும், அது நீதிமன்றங்களில் விவாதிப்பதற்கு உரியது அன்று என்றும் காமன்ஸ் சபையினர் கருத்துக்கொண்டிருந்தனர். மேலும், சிறப்புரிமையில் அடங்கும் செய்திகள் முடிந்த செய்திகளின் பட்டியல் அல்ல என்றும், மாறாகச் சிறப்புரிமைச் செய்தி என்று தீர்மானத்தின்மூலமாக அறிவிக்கும் எதையும் தன்னுள் கொண்டிருப்பது சிறப்புரிமை என்றும், அவ்வாறு எடுக்கப்பெறும் தீர்மானங்கள் முறைமன்றங்களைக் கட்டுப்படுத்தும் என்றும் காமன்ஸ் சபையினர் வலியுறுத்தினர். அடிப்படையில் தனிச் சிறப்பு அதிகாரம் நெகிழும் தன்மை கொண்டது என்றும், பொதுச் சட்டத்திற்கு மேலானது என்றும் ஸ்டூவர்டு மன்னர்கள் கொண்டாடியதைப் போல, இப்போது சிறப்புரிமைக்கு அதுபோன்ற மறைமெய்ம்மைப் பொருளைக் காமன்ஸ் சபையினர் அளித்தனர். புனித நிலை கெடாத மறைபொருள் சார்ந்த உயர் அதிகாரங்கள்[95] உண்டு என உயர்வுநவிற்சிச் சொற்களைப் பயன்படுத்தி அறிவிப்பு விடுத்த காமன்ஸ் சபையினரின் செயல் வியப்பூட்டுவது அன்று. தனிச் சிறப்பதிகாரத்தை விளக்குதற்காக முதலாம் ஜேம்ஸ் பயன்படுத்திய வாசகங்களை இவை ஒத்திருக்கின்றன.

இத்தகைய உரிமைக் கோரிக்கையினால் சட்டத்தின் உச்ச உயர்நிலைக்கு ஆபத்துத் தோன்றியது. தனிச் சிறப்பதிகாரத்தை எதிர்த்துக் கோக் (Coke) என்பார் நின்றதைப்போல, சிறப்புரிமைக் கோரிக்கையைத் தலைமை நீதிபதியான ஹோல்ட்

எதிர்த்து நின்றார். சட்டத்தின் ஒரு பகுதியே அச் சிறப்புரிமை என்று ஆஷ்பிக்கும் ஒயிட்டிற்கும் இடையேயான வழக்கில் அவர் வற்புறுத்தினார். மேலும், பிரச்சினை எழுப்பப்பெறும் நீதிமன்றமே, மற்றச் சட்ட நுணுக்கத்தைப் போலவே, ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் சிறப்புரிமை உள்ளதா என்பதையும் நிர்ணயிக்கும் என்றும் அவர் வற்புறுத்தினார். இதிலிருந்து சபையானது தனது உரிமையை வரையறுக்க இயற்றும் தீர்மானம் பயனற்றது என்றாயிற்று. வேறு எந்த ஒரு சட்டம் சார்ந்த அறுதியுரையைக் குறிக்கும் தீர்மானத்தைப் போன்றே சிறப்புரிமைபற்றிய தீர்மானமும் பயனற்றதாக வேண்டும். அத்தகைய சிறப்புரிமை இல்லையென்று ஹோல்ட் தீர்ப்புக் கூறியபோது, பிரபுக்கள் தங்களது உரிமையை வலியுறுத்திய 1695ஆம் ஆண்டின் நோலியின் வழக்கில்தான்[96] (Knolly's Case) இச் செய்தியை அவர் குறிப்பிட்டார். பிரபுக்கள் சினங்கொண்ட போதிலும் இறுதியில் விட்டுக்கொடுத்தனர். பிழையாணையின் பேரில் ஆஷ்பிக்கும் ஒயிட்டிற்கும் இடையேயான வழக்கு பிரபுக்கள் சபைக்கு வந்தபோது, அவர்கள் ஹோல்ட்டின் கருத்தினை ஏற்றுக்கொண்டனர். ஏனெனில், காமன்ஸ் சபையினரின் சிறப்புரிமைகளின்மீது தீர்ப்பளிக்கும் வாய்ப்பு அளிக்கும் வழியாக அது அவர்களுக்குத் தென்பட்டது. காமன்ஸ் சபையினரைப் பிரபுக்களுக்குப் பணியுமாறு செய்வதாகக் காணப்பெற்ற இவ் விஷயம், காமன்ஸ் சபையில் தீவிர உணர்ச்சியைக் கிளப்பியது. ஹோல்ட்டினுடைய கருத்தினை ஒரு நூற்றாண்டுக் காலத்திற்கும் மேலாகக் காமன்ஸ் சபையினர் ஏற்க மறுத்தனர்.

**உறுப்பினரை வெளியேற்றல்:** முதலாம் எலிசபெத் அரசியாரின் ஆட்சிக் காலத்திலிருந்தே[97] உறுப்பினரை வெளியேற்றும் உரிமையைச் சில சமயங்களில் காமன்ஸ் சபை பயன்படுத்தியது. இவ்வதிகார உரிமையை அது தொடர்ந்து பயன்படுத்தி வந்தது. இங்ஙனம் சர் ரிச்சர்டு ஸ்டீல் என்பவரை 1714ஆம் ஆண்டில் வெளியேற்றியது. ஹனோவிரியர் அரசுரிமை எய்துவதற்கு ஆன் அரசியாரின் டோரி மந்திரிசபை எதிராக இருந்தது என்பதைக் குறிக்கும் சிறு நூல் ஒன்றை ஸ்டீல் எழுதியிருந்தார். 'The Crisis' எனப் பெயர்பெற்ற அந் நூல் 'அரசத் துரோகமான, இழிவான அவதூறு' என்பதற்காக அவர் காமன்ஸ் சபையினின்றும் துரத்தப்பட்டார். 1711ஆம் ஆண்டில் இலஞ்ச ஊழலுக்காக சர் வால்போல்[98] வெளியேற்றப்பெற்றது அதி தீவிரமானது. ஆறு மாதங்களுக்கு அவர் டவர் கோட்டைச் சிறையில் வதிந்தார். அதுபோது விக்குகள் அவரை அரசியல் தியாகி

எனக் கொண்டனர். பாராளுமன்றத் தொடர் ஒத்திப்போடப் பெற்றதால் அவர் விடுதலை பெற்ருர். மீண்டும் அவர் தேர்தலில் வெற்றி பெற்ருர். ஆயினும், அவர் ஒருமுறை பாராளுமன்றத் திலிருந்து வெளியேற்றப்பட்டதால், அந்தப் பாராளுமன்றத்தின் எக் கூட்டத் தொடரிலும் அமரும் தகுதி அவருக்கு இல்லை என்ற கருத்தினைக் காமன்ஸ் சபை கொண்டிருந்தது. அதனுல் அந்தப் பாராளுமன்றம் கலையும்வரையில் வால்போல் விலகியே இருக்க வேண்டியதாயிற்று.[99]

1763ஆம் ஆண்டிலும் அதற்கடுத்த ஆண்டிலும் ஜான் வில்க்ஸ் (John Wilkes)[1] என்பவருக்கு எதிரான நடவடிக்கைகள், நன்கறிந்த உதாரணமாக அமையும் சட்டத் திற்கும் மரபிற்கும் மாருன முறைமன்றத் தீர்ப்பினைச் சரியெனக் காட்டுதற்காக முதலில் காமன்ஸ் சபையினர் அவருக்குச் சிறப்புரிமை அளிக்கும் காப்பினைக் களைந்துவிட்டனர். அதன் பிறகு வெறுப்பிற்குள்ளான அவ் வுறுப்பினரை வெளியேற்றிய தோடு மனஅமைதி பெருது, வகையாளைத் தடையின்றித் தேர்ந் தெடுக்கும் உரிமையை அன்னரின் தொகுதியான மிடில்செக்ஸ் (Middlesex) வாக்காளர்களிடமிருந்து முறைகேடாகப் பறிக்கும் வகையில் நடந்துகொண்டனர். பேர்பெற்ற 'நார்த் பிரிட் டனின்' (North Briton) 45ஆம் வெளியீட்டிற்காக வழக்குத் தொடர்வதற்கு என்று 'பொது ஆணையின்' மூலமாக வில்க்ஸ் கைது செய்யப்பெற்றுச் சிறையிலடைக்கப்பெற்ருர். இங்கே 'பொது ஆணை' என்றது, ஆளின் பெயரைக் குறிப்பிடாது. ஆனுல், அதேசமயத்தில் 'ஆசிரியர்கள், அச்சிடுவோர், பதிப் பாளர்' ஆகியோருக்கு எதிரான ஆணையை, அதிலும் உள்நாட்டு அமைச்சரான ஹாலிஃபாக்ஸ் கையெழுத்திட்ட ஆணையையே குறிக்கும்.[2] பாராளுமன்றம் கூடாதிருந்த சமயத்தில் வில்க்ஸ் விடுதலையானுர். காமன்ஸ் சபை உறுப்பினரின் சிறப்புரிமை அடிப்படையில் ஹேபியஸ் கார்பஸ் ஆணை மனு மூலமாக அவர் விடுதலையடைந்தார். ஆனுல், சபை மீண்டும் கூடியபோது வில்க்ஸைப் பழிவாங்கவேண்டுமென்று நினைத்த சபை, அரசரை ஆதரிக்கும் வகையில் தீர்மானம் இயற்றியது. சிறப்புரிமை இருந்தபோதிலும், அரச நீதிமன்றத்தில் தம் வழக்கை எடுத் துரைக்கத் தயார் என்று வில்க்ஸ் அறிவித்திருந்தார். அதற்கேற்ப அவரது வெளியீடு அரச நீதிமன்றத்தில் விசாரணைக் குரிய செய்தியாக இருந்தபோதே கீழ்சபை தீர்மானம் கொண்டு வந்தது. வில்க்ஸின் வெளியீடு, 'தவருன, இழிவான, அரசத் துரோகமான அவதூறு' என்றும், அது நாட்டிற்கு விரோதமான கலகங்களைத் தூண்டிவிடக்கூடியது என்றும் கூறினர்.

அதனோடு, 'அரசத்துரோகமான அவதூறுகளை எழுதுவதோ அல்லது வெளியிடுவதோ பாராளுமன்றச் சிறப்புரிமையில் அடங்குவதன்று' என்று தீர்மானமும் இயற்றினர்.[3] இங்ஙனம் சினங்கொண்ட நிலையில் தனது உறுப்பினர்களில் ஒருவரைத் தாக்கவேண்டும் என்பதற்காக ஐயத்திற்கிடமின்றி இருக்கின்ற தனது சிறப்புரிமையின் ஒரு பகுதியை விருப்பார்வத்தோடு காமன்ஸ் சபை விட்டுக்கொடுத்தது. அருவருக்கத்தக்க 45ஆம் வெளியீட்டின் ஆசிரியரும் பதிப்பாளரும் வில்க்ஸே என்பது நிரூபிக்கப்பட்டபோது சபை மனநிறைவு பெற்றது. அவரை சபையினின்று துரத்தியது. சட்டத்தின் பாதுகாப்பை இழந்து, நாடுகடத்தல் பெற்ற நிலையில் இருந்த வில்க்ஸ், ஃபிரான்சிற்கு ஓடினர். 1768ஆம் ஆண்டு இங்கிலாந்து திரும்பிய அவரைப் பாராளுமன்ற உறுப்பினராக மிடில்செக்ஸ் வாக்காளர் தேர்ந்தெடுத்தனர். ஆனால், அவர் சட்டக் காப்பினை இழந்து இரண்டு ஆண்டுகள் சிறையில் கிடந்தார். இதற்கிடையில் மீண்டும் சபையினின்றும் வெளியேற்றப்பட்டார்.[4] மீண்டும் மறு தேர்தலில் அவர் வெற்றிபெற்ற உடனே மூன்றுவது முறையாக சபையினின்று வெளியேற்றப்பட்டதோடு, வெளியேற்றப் பட்டதன் காரணமாக 'நிகழ்காலப் பாராளுமன்றத்தில் பணி யாற்றுவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பெறும் தகுதியை இழந்து விட்டார்' என்ற தீர்மானத்தையும் காமன்ஸ் சபையினர் நிறை வேற்றினர். ஆனால், மிடில்செக்ஸ் கவுன்டியிலிருந்து வில்க்ஸ் மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார். அது செல்லாது என சபை அறிவித்தது. மேலும், ஒரு முறை அக் கவுன்டி வில்க்ஸைத் தேர்ந்தெடுத்து அனுப்பியது. அப்போது அவருடைய தேர்தல் செல்லாது என்று அறிவித்ததோடு காமன்ஸ் சபை நின்றுவிட வில்லை. வில்க்ஸிற்குப் பதிவான 1143 வாக்குகளுக்கு எதிராக 296 வாக்குகளையே பெற்ற இரண்டாவது வேட்பாளரான கர்னல் லட்டரல் (Colonel Luttrell) என்பவரே மன்றப் பதவியை வகிக்கவேண்டுமென்றும் அச் சபை தீர்ப்பளித்தது இங்ஙனம் திநெறி படைத்த கிளர்ச்சியைத் தூண்டும் கட்சிப் பேச்சாளரைப் பொதுமக்கள் சார்ந்த தலைவராகவும், அரசியல் அமைப்பார்ந்த சுதந்திரத்தின் காவலனாகவும் மாற்றியது மன்றத்தின் செய்கை. ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு பாராளுமன்றம் கலைக்கப்பட்டது. 1774ஆம் ஆண்டில் புதிய பாராளுமன்றம் கூடியபோது மீண்டும் வில்க்ஸ் மிடில் செக்ஸின் வகையாளாக வந்தார். மிடில்செக்ஸ் தேர்தலைப் பொறுத்த மட்டுமீறிய செயல்முறைகள் இறுதியாக 1782ஆம் ஆண்டில் காமன்ஸ் சபையின் பதிவேடுகளிலிருந்து நீக்கப் பெற்றன. நாட்டிலுள்ள வாக்காளர்களுடைய உரிமைகளைத்

தகர்த்தெறிவனவாக இருந்தன அச் செயல்முறைகள் என்று கூறி அவைகளை நீக்கினர். அவற்றைப்பற்றிக் குறிப்பிடும்போது, 'முதலாம் சார்லஸ் மன்னராட்சியில் பன்னிரண்டு ஆண்டுகள் பாராளுமன்றம் கூடாது இருந்தபோது ஏற்படாத பெருந் தீமையை இந்த வரம்பு கடந்த செயல்முறைகள் அரசியல் அமைப்பிற்கு விளைவித்தன' என்று காம்டன் பிரபு (Lord Camden) குறிப்பிட்டார்.

உறுப்பினர் ஒருவரை வெளியேற்றும் உரிமையை காமன்ஸ் சபை நிச்சயமாகப் பெற்றிருந்தது. மேலும், குறிப்பிட்ட ஒருவர் தகுதியற்றவர் என்பதைத் தீர்மானிக்கும் உரிமையும் அதற் கிருந்தது. வால்போலின் வழக்கில் 1711ஆம் ஆண்டில் எவ்வித எதிர்ப்புமின்றி இவ் வுரிமையைப் பயன்படுத்தியது. இதி லிருந்து, நன்கு நிலைநாட்டப்பெற்ற தேர்தல் சட்டக் கருத்தின் அடிப்படையில், வில்க்ஸிற்கு அளிக்கப்பெற்ற வாக்குகள் வீணானவையே என்று ஆகியது. அதனால் கர்னல் லட்டரலின் தேர்வே தேர்தலின் உண்மைப் பயனாக இருக்கமுடியும். ஆயின், வால்போல் தகுதியற்றவரானார் என்னும் முன்னிகழ்வின் தகுதியைப் பொறுத்தே இவை யாவும் அமைந்தன என்பதைப் பின்னால் பார்ப்போம். 1711ஆம் ஆண்டில் பொதுமக்கள் மன்றமானது தனது அதிகாரங்களுக்கு அப்பாற்பட்ட ஒன்றைச் செய்தது என்று வில்க்ஸின் தரப்பில் விவாதித்தனர். மேலும், அச் சபை வாக்காளரின் உரிமைக்கு ஊறு ஏற்படும் வகையில் புதிய சிறப்புரிமையை நிலைநாட்ட முனைந்தது என்றும், ஆஷ்பிக்கும் ஒயிட்டிற்கும் இடையே நடந்த வழக்கு[5] வலியுறுத்திய கருத்துப்படி அத்தகைய முயற்சி வீணானது என்றும் வாதிட்டனர். அக் கருத்தினை ஏற்றுக்கொள்வதில் நீண்ட காலத்திற்குச் சபை தயங்கியது. ஆனால், வில்க்ஸிற்கு எதிரான செயல்முறைகள் 1782ஆம் ஆண்டில் தள்ளுபடி செய்யப்பெற்றதிலிருந்து உறுப்பினரை வெளியேற்றுவதால், அவர் வகித்துவந்த இடம் காலியாகின்றது என்பது ஏற்றுக் கொள்ளப்பட்டபோதிலும், அவர் பாராளுமன்றத்தில் மீண்டும் பணிபுரியும் தகுதியை அது நீக்கிவிடவில்லை. உண்மையில் 'வேட்பாளருடைய தகுதியை வரையறுக்கும் சட்டங்களைச் செயற்படுத்துவதன்றி அவர்களின் தேர்வுத் தகவினைக் கட்டுப் படுத்தும் உரிமை காமன்ஸ் சபைக்கு இல்லை.' ஏனெனில், சட்டம் அறிபாத ஒரு தகுதியின்மையைப் பாராளுமன்றத்தின் சபை ஒன்று ஏற்படுத்த முடியாது.[6]

**அரசத் துரோகக் குற்றம் அல்லது அரசியல் பெருங் குற்றத்திற்கான தண்டனை :** அரசத் துரோகக் குற்றம் அல்லது

அரசியல் பெருங் குற்றத்திற்காகத் தண்டனை பெறுவதால் ஏற்படும் தகுதிக்குறைவுப் பிரச்சினைபற்றிக் காமன்ஸ் சபை இரண்டு மூன்று தடவைகள் விவாதித்தது. அரசத் துரோகக் குற்றம் அல்லது அரசியல் பெருங்குற்றத்திற்காக உரிமை இழந்தவர் பாராளுமன்ற உறுப்பினராக இருக்கும் தகுதியற்றவர் என்பது பொதுச் சட்டம்.[7] ஆனால், அரசத் துரோகக் குற்றத்திற்காகவோ அல்லது அரசியல் பெருங்குற்றத்திற்காகவோ உரிமை இழக்காது தண்டனை மட்டும் அடைந்த ஒருவர் தகுதியற்றவராவரா என்ற ஐயப்பாடு ஒரு சமயத்தில் தோன்றியது. அரசத் துரோகக் குற்றத்திற்காகத் தண்டனை அடைந்த ஸ்மித் ஓபிரையன் (Smith O'Brien) என்ற பாராளுமன்ற உறுப்பினர், சபையில் உட்காரும் தகுதியற்றவர் என 1849-ல் காமன்ஸ் சபையில் தீர்மானம் ஒன்று கொண்டு வரப்பட்டது. அவர் உரிமை இழந்தார் என்று தீர்மானம் இருக்கவேண்டுமென்று திருத்தம் வந்தது. ஆனால், திருத்தத்தைத் தள்ளுபடி செய்தனர்.. அரசத் துரோகக் குற்றத்திற்காகக் குற்றவாளியெனத் தீர்ப்பு அளிக்கப்பெற்றதால், சபையில் அமரும் தகுதியை அவர் பெற்றிருக்கவில்லை என்றே தீர்மானம் அமைந்தது. அடுத்தபடியாக 1870ஆம் ஆண்டில் ஓடானேவான் ரோஸ்ஸாவின் (O'Donovan Rossa) வழக்கு எழுந்தது. அரசத் துரோகப் பெருங்குற்றத்திற்காகச் சிறை வாசத் தண்டனையை அனுபவித்திருந்தபோதே திப்பராரியின் (Tipparary) வகையாளாக அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். விக்டோரியா மகாராணியாரின் 11ஆம்,12ஆம் ஆட்சியாண்டுக்கால அரசத்துரோகப் பெருங் குற்றச் சட்டப்படி அவர் தண்டனை அடைந்தாரேயன்றி, உரிமையை இழக்காததால், தகுதியின்மை அவருக்கு ஏற்படவில்லை என்று வாதிடப்பெற்றது.[8] ஆயினும், இத்தகைய வாதத்தை காமன்ஸ் சபை மீண்டும் ஏற்க மறுத்துப் பின்வரும் தீர்மானத்தை இயற்றியது: 'அரசியல் பெருங்குற்றம் புரிந்தவர் என்று தீர்ப்பளித்து ஆயுள் தண்டனை வழங்கப்பெற்று, அதனால் இப்போது சிறையில் இருக்கும் ஓடானெவான் ரோஸ்ஸா சபையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பெறவோ அல்லது அதில் வந்து அமரவோ தகுதியற்றவரானர்; தொடர்ந்து தகுதி இழந்தவரானர்.' எவ்வாறாயினும், இத்தகைய தீர்மானத்தின் சட்டமுறையைப் பற்றிய ஐயப்பாட்டினை நீக்குதற்காக 1870ஆம் ஆண்டில் நிறைவேறிய விக்டோரியா மகாராணியாரின் 33ஆம், 34ஆம் ஆட்சியாண்டுச் சட்டமாகிய பறிமுதல் சட்டத்தில் வாசகக் கூறு ஒன்று இணைக்கப்பட்டது. அரசத்துரோக அல்லது அரசியல் பெருங் குற்றத்திற்காக பறிமுதல் செய்தல் அல்லது உரிமை

இழக்குமாறு செய்தல் ஆகியவற்றை நீக்கிய இச் சட்டம், மேலே கூறிய குற்றங்களுக்காகத் தண்டனை பெற்றுச் சிறையில் இருப்பவருக்குப் பாராளுமன்றத் தேர்தலுக்கு நிற்கவோ அல்லது அதில் அமர்ந்து வாக்களிக்கவோ தகுதி கிடையாதென்றும், பாராளுமன்ற அல்லது நகராண்மைக் கழக வாக்குரிமையைப் பயன்படுத்தத் தகுதி கிடையாதென்றும் வகுத்தது. 1868ஆம் ஆண்டுச் சட்டம்[9] வந்தபோதிலும், உறுப்பினருடைய தகுதி பற்றித் தீர்மானிக்கும் அதிகாரத்தை காமன்ஸ் சபை தன்னிடம் வைத்திருந்தது என்பதை ஓடானெவான் வழக்குச் செயல்முறைகள் நிலைநாட்டின. அடுத்து வந்த முக்கிய வழக்கு ஜான் மிச்சலின் (John Mitchell) வழக்காகும். 1848ஆம் ஆண்டில் அரசத்துரோகப் பெருங்குற்றம் புரிந்தவர் என்று விசாரணை செய்து, குற்றவாளியெனக் கண்டு, பதினன்கு ஆண்டுகள் நாடுகடத்துந் தண்டனையை அவருக்களித்தனர். அவர் சிறிது காலமே சிறையில் இருந்தார். அதன்பின் தப்பிச் சென்று பல ஆண்டுகள் வெளிநாடுகளில் தங்கியிருந்தார். 1874ஆம் ஆண்டில் அயர்லாந்து திரும்பிய அவர் தண்டனையை முழுதுமாக அனுபவிக்கவுமில்லை; குற்றங்குறையும் பெறவில்லை. இந் நிலையில் 1875ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் திப்பராரியில் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பெற்றுக் காமன்ஸ் சபைக்கு வந்தார். அதன்பேரில் பிரதமராக இருந்த டிஸ்ரேலி, பிப்ரவரி மாதம் ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். காமன்ஸ் சபையில் நிறைவேறிய அத் தீர்மானத்தின்படி, 'திப்பராரி கவுன்டியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பெற்று வந்த ஜான் மிச்சல், அரசியல் பெருங் குற்றத்திற்காகப் பதினன்கு ஆண்டு நாடுகடத்தும் தண்டனை பெற்றவர்; அத்தகைய அரசியல் பெருங்குற்றத்திற்காகப் பெற்ற தண்டனையை அனுபவிக்கவோ அல்லது அரசப் பெருமுத்திரையின்கீழ்க் குற்றங்குறை பெறவோ செய்யாத அவர், இச் சபைக்குத் தேர்ந்தெடுக்கப் பெறவோ அல்லது உறுப்பினராக வரவோ தகுதியற்றவராகிவிட்டார்; தொடர்ந்து தகுதி இழந்து வருகின்றார்' என்று வகுக்கப் பெற்றது. அத்தகைய தீர்மானம் இயற்றுவதன் சட்டமுறைமை பற்றிய ஐயப்பாடுகள் எழுந்தன என்றாலும் அது காமன்ஸ் சபையில் நிறைவேறியது. மிச்சல் மீண்டும் தேர்ந்தெடுக்கப் பெற்றார். ஆனால், அவரது தேர்தலை எதிர்த்துவந்த விண்ணப்பம் ஒன்றின் மீது, அவருக்கு அளிக்கப்பெற்ற வாக்குகள் வீணான வாக்குகளே என்றும், அவருடன் போட்டியிட்டவரே மன்றப் பதவிக்கு உரியர் என்றும் தீர்மானம் செய்யப்பெற்றது.[10]

**சிறைப்படுத்தும் சிறப்புரிமை :** புரட்சிக்குப் பிறகு பல சமயங்களில் சிறைப்படுத்தும் அதிகாரங்களைக் காமன்ஸ் சபை தவருகப் பயன்படுத்தியது. சிறப்புரிமையின் நியாயமான, வழக்கிசைந்த வரையறைக்குப் புறம்பான வெறி உணர்ச்சியோடு நடந்துகொண்டது. காமன்ஸ் சபையினர் 'தவருன, கெடுநோக்கான, அவமதிப்பான, இழிவான, இராசத் துரோகமான அவதூறு' என்று தீர்மானித்த யாகோபிய (Jocobite) செய்தித்தாளை அச்சிட்டதற்காக மிஸ்ட் (Mist) என்னும் அச்சக முதல்வரை 1721ஆம் ஆண்டில் நியூகேட் சிறைக்கு அச் சபை அனுப்பியது. சபையை அவமதித்ததாகுமென்ருே அல்லது சபையின் சிறப்புரிமைகளை மீறியது என்ருே மிச்சலின் குற்றச் செயலை விளக்கமுடியாது. ஆகையினுல், முதலாம் ஜேம்ஸ்[11] மன்னர் காலத்தில் ஃபிளாய்டை (Floyd) நடத்திய முறைபோன்று அத்துணை வன்முறையானதாக இல்லாவிடினும், மிச்சல் மீது காமன்ஸ் சபை எடுத்த நடவடிக்கை நியாயமானதன்று. ஆயின், தங்களது கவனத்திற்கு வரும் பொதுத்தன்மை கொண்ட குற்றங்களுக்காகச் சட்டத் தலைமைப் பணி முதல்வரைக்கொண்டு வழக்குத் தொடுப்பதன் மூலமாக மேலே குறிப்பிட்டது போன்ற அதிகார மீறல்களைத் தவிர்ப்பது காமன்ஸ் சபையினர் கையாளும் அண்மைக் காலப் பழக்கமாகும்.

**1751ஆம் ஆண்டின் அலெக்சாந்தர் முர்ரேயின் வழக்கு :** 1751ஆம் ஆண்டில் பேர்போன ஸ்காட்டிய யாகோபியரான எலிபாங்க் (Lord Elibank) பிரபுவின் சகோதரரான கனம் அலக்சாந்தர் முர்ரேயின் வழக்கிலும், 1810ஆம் ஆண்டிலெழுந்த சர் ஃபிரான்சிஸ் பர்டெட்டின் (Sir Francis Burdett) வழக்கிலும், தனது சிறப்புரிமையை மீறுவோரை சிறைக்கனுப்பும் உரிமை காமன்ஸ் சபைக்கு உண்டு என்பதை நீதிபதிகள் தெளிவான முறையில் ஒப்புக்கொண்டனர். வெஸ்ட்மினிஸ்டர் தேர்தல் வழக்கினை சபை விசாரணை நடத்தியபோது, அமைச்சவையின் ஆதரவுபெற்ற வேட்பாளருக்கு எதிராகத் தீவிரமாகத் தேர்தலில் ஈடுபட்டிருந்த முர்ரே என்பார் தேர்தலுக்குத் தடையாக இருந்ததாகவும், கடமையைச் செய்த தம்மை அவமதித்ததாகவும், மன்னரின் உயர் மாவட்டப் பகர ஆள் புகார் செய்தார். இரு கட்சிகளின் வழக்கறிஞரின் வாதத்தைக் கேட்கக் காமன்ஸ் சபை முடிவு செய்தது. அவ்வப்பொழுது விசாரணைக்கு வருவதற்காகப் பிணையம் அளிக்குமாறு முர்ரேயை ஆணையிட்டது. அதன் பிறகு இறுதியாக அவரை நியூகேட் சிறைக்கு அனுப்பவேண்டுமென்று முடிவுசெய்ததோடு, தண்டனையை

அவர் முழந்தாளிட்டுப் பெற்றுக்கொள்ளவேண்டுமென்றும் தீர்மானம்செய்தது. இத்தகைய இழிவு தரும் ஆணைக்கு அடிபணிய அவர் உறுதியாக மறுத்தார். 'கடவுளைத் தவிர வேறு யாருக்கும் மண்டியிட்டுப் பணிவதில்லையென்று' சபாநாயகரிடம் ஆணவமாகப் பேசினர்.[12] அதனால் அவரை மிகுந்த கட்டுப்பாடுகளுடன் நியூகேட் சிறையில் வைக்க வேண்டுமென்று ஆணையிட்டு ஆறுதல் பெறவேண்டிய நிலை காமன்ஸ் சபையினருக்கு ஏற்பட்டது. பேனு, மை, காகிதம் போன்ற பொருள்களை அவருக்கு அளிக்கக் கூடாதென்றும், அவரது பணியாள் உட்பட யாரையும் அவரிடம் அனுமதிக்கக் கூடாதென்றும் கட்டளையிட்டனர். ஆயின், சிறிது காலத்திற்குள் அவரது உடல்நலக் குறைவு காரணமாகக் கட்டுப்பாடுகளின் கடுமை தளர்த்தப்பட்டது. அரச முறை மன்றத்தில் ஹேபியஸ் கார்பஸ் ஆணைக்கான மனுவை முர்ரே சமர்ப்பித்தார். ஆனல், காமன்ஸ் சபையினருடைய சிறப்புரிமைகளிலோ அல்லது அவர்களுக்கெதிரான அவமதிப்புகளிலோ தீர்ப்பளிக்கும் அதிகாரம் தங்களுக்கு இல்லை[13] யென்ற அடிப்படையில் அவரை விடுவிக்க இயலாது என நீதிபதிகள் ஒருமனதாகக் கூறினர். பாராளுமன்றக் கூட்டத் தொடர் இருக்கும் வரையில்தான் சிறையிலடைக்கும் அதிகாரம் காமன்ஸ் சபைக்கு உண்டு என்பதால், வெகு விரைவிலேயே முர்ரே விடுதலை பெற்ருர். பொது மக்கள் சுதந்திரத்திற்காத் தியாகம் செய்தவர் என்று அவரைக் கொண்டாடிய மக்களுடைய பெருத்த ஆரவாரங்களிடையே அவர் விடுதலையானுர். அடுத்த பாராளுமன்றக் கூட்டத் தொடரின் ஆரம்ப தினத்தன்றே அவரை மீண்டும் சிறையிலடைப்பதற்கான தீர்மானம் வந்தது. ஆனல், இதற்கிடையில் மன்றக் காவல்துறை முதல்வரின் ஆணை எட்ட முடியாத அலைகடலுக்கப்பாலுள்ள நாட்டிற்கு அலெக்சாந்தர் முர்ரே சென்றுவிட்டார்.[14]

**சர் ஃபிரான்சிஸ் பர்டெட்** (Sir Francis Burdett) **1810** : பிரதான ராடிகல் பேச்சாளரான ஜான் கேல் ஜோன்ஸ் (John Gale Jones) என்பவரை 1810ஆம் ஆண்டில் நியூகேட் சிறைச் சாலைக்குக் காமன்ஸ் சபையினர் அனுப்பிவைத்தனர். இரு பாராளுமன்ற உறுப்பினரின் நடத்தைபற்றிப் பேச்சுப் போட்டிக் கழகத்தில் விவாதிக்கப்போவதை அறிவிக்கும் அவமதிப்பான விளம்பர அட்டைகளை அச்சிடுமாறு அவர் செய்ததுதான் அதற்குக் காரணம். பாராளுமன்றத்திலேயே காமன்ஸ் சபையின் அதிகாரத்தை சர் ஃபிரான்சிஸ் மறுத்துப் பேசினர். அதனேடு காபட்டின் 'பொலிடிகல் ரிஜிஸ்டரில்' (Cobbett's

'Political Register') தமது பேச்சை வெளியிட்டுத் தமது மறுப்பினை உறுதி செய்தார். அவரே சிறப்புரிமை மீறல் குற்றம் புரிந்தார் என்று தீர்ப்பளித்த காமன்ஸ் சபை, சபாநாயகரின் ஆணையோடு அவரை டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பியது. ஆனால், பர்டெட் வலுக்கட்டாயமாகப் பணிய மறுத்ததால், இராணுவத்தின் உதவியுடன்தான் அவரைச் சிறைக்குக் கொண்டு செல்ல முடிந்தது. அதன் பிறகு சபாநாயகருக்கும் மன்றக் காவல்துறை முகவருக்கும் எதிராகக் கழிவு பெறுதற்காக நடவடிக்கைகளை பர்டெட் மேற்கொண்டார். இந் நடவடிக்கைகள் தங்களுடைய அதிகாரத்தை மேலும் அவமதிப்பதாகும் என்று கொள்ளாது, நீதிமன்றத்தின் அதிகார எல்லைக்கு உட்படுமாறு சபாநாயகரைக் காமன்ஸ் சபையினர் விவேகமுடன் கேட்டுக்கொண்டனர். அதன் விளைவாக அரச நீதிமன்றமும், மேல்முறையீடாக வழக்குக்குச் சென்ற எக்ஸ்செக்கர் முறைமன்றமும், பிரபுக்கள் சபையும் காமன்ஸ் சபையின் அதிகாரத்தையே ஆதரித்துத் தீர்ப்பளித்தனர்.[15]

**விவாதங்களை வெளியிடுதல்** : பாராளுமன்றச் சிறப்புரிமைகளிலெல்லாம் அதிக மாற்றத்திற்குள்ளானது, அதனுடைய செயல்நிகழ்வுகளின் இரகசியம் பற்றிய ஒன்றுதான். அதனை நடைமுறையில் கைவிட்டதனால், குறிப்பிடத்தகுந்த அரசியல் விளைவுகள் தோன்றியுள்ளன.

அரசருடைய நடவடிக்கைக்கெதிராகத் தங்களைக் காத்துக் கொள்ள உறுப்பினர் கொள்ளும் கவலைதான் விவாதங்களை இரகசியமாக வைத்துக்கொண்டதன் முதல் நோக்கம். ஆனால், வெகு விரைவில் தொகுதியினரிடமிருந்து தங்களுடைய செயல்நிகழ்வுகளை மறைப்பதற்கு ஏற்ற திரையாக அது விளங்க முடியுமென உறுப்பினர் கண்டனர். 'இச் சபையில் உறுப்பினர் பேசும் பேச்சுகளை அச்சிடுதல் அல்லது வெளியிடுதலானது, அவர்கள் உள்ளே கூறுவதற்கெல்லாம் மன்றத்தின் வெளியே பொறுப்பு வாய்ந்தவராகச் செய்வதுபோலக் காணப்படுகின்றது' என 1738ஆம் ஆண்டில் புல்டினி (Mr. Pulteney) என்பார் குறிப்பிட்டார்.[16] பிரதிநிதிகளெல்லாம் நாட்டின் சட்டமன்றத்தில் என்ன செய்கின்றார்கள் என்பதை அறிந்து கொள்ளும் வாக்காளரின் உரிமையும், பொதுவாக மக்களுடைய உரிமையும் இறுதியாக மதிக்கப்படுவதற்குமுன் நீண்ட பெரும் போராட்டம் நடத்தவேண்டியிருந்தது.

அரச முன்னிலை மீட்சிவரை தொடர்ந்து வெளிவந்து கொண்டிருந்த 'டையூர்னல் அக்கரன்சஸ் இன் பார்லிமெண்ட்' (Diurnal Occurrences in Parliament) என்பதில் தனது நடவடிக்கைகளை வெளியிட 1641ஆம் ஆண்டில் நீள்பாராளு மன்றம் அனுமதி வழங்கியது. ஆனால், சபையின் அனுமதி யின்றிச் சொற்பொழிவுகளை அச்சிடுவதைத் தடை செய்தது. அத்தகைய அனுமதி பெறாது தமது சொந்தப் பேச்சுகளின் தொகுப்பினை அச்சிட்ட சர் டெரிங் (Sir Dering) என்ற உறுப் பினர் சபையிலிருந்து வெளியேற்றப்பட்டதோடு டவர் கோட்டைச் சிறையிலும் அடைக்கப்பெற்றார். அவரது நூலை மரண தண்டனையை நிறைவேற்றும் பொதுக் கொலையாளியைக் கொண்டு எரிக்குமாறு செய்தனர்.[17] அரச முன்னிலை மீட்சிக்குப் பிறகும் இத் தடை தொடர்ந்து வந்தது. ஆனால், மன்றத்தில் நடைபெற்றதைப்பற்றித் தவறாகச் செய்தி தருவதைத் தடுக்கும் நோக்கத்தோடு விவாதங்களைக் குறிப்பிடாது தங்க ளுடைய 'வாக்கெடுப்புகளையும் செயல்முறைகளையும் சபா நாயகரின் ஆணைப்படி வெளியிடலாம் என்று 1680ஆம் ஆண்டில் காமன்ஸ் சபையினர் அறிவித்தனர்.[18] அக் காலத் திலிருந்து புரட்சி வரையில், அதன் பிறகு வெளிவந்த உறுப்பினருடைய சொந்த அறிக்கைகள், கடிதங்கள் ஆகிய வற்றைத்தான், பாராளுமன்ற விவாதங்களை அறிந்துகொள்ள முற்றிலும் நம்ப வேண்டியுள்ளது. அரச முன்னிலை மீட்சியி லிருந்து 1678ஆம் ஆண்டு வரையில், 18 ஆண்டுகள் பதவி வகித்த காலத்தில் ஹல் (Hull) தொகுதியைச் சார்ந்த ஆண்ட்ரூ மார்வல் (Andrew Marvell) என்னும் உறுப்பினர் தமது தொகுதியிலுள்ளோருக்கு முறையாக அறிக்கைகளை அனுப்பிக் கொண்டிருந்தார். முப்பது ஆண்டுகளுக்கு டர்பியின் வகை யாளாக இருந்த அன்சிட்டல் கிரே (Anchitell Grey) என்பார் 1667ஆம் ஆண்டிலிருந்து 1694ஆம் ஆண்டுவரை நடைபெற்ற மன்ற விவாதங்களின் குறிப்பு எழுதியிருந்தார். அவை ஏறக் குறைய நூறாண்டுகள் கழிந்து 1769ஆம் ஆண்டில் வெளியிடப் பெற்றவையாகும். பிரபுக்கள் சபையில் நடைபெற்ற விவாதங்கள் பற்றிய அறிக்கை ஒன்றினை எழுதி வெளியிட 1675 ஆம் ஆண்டில் லாக் (Locke) துணிவு கொண்டார். ஷாஃப்ட்ஸ்பரியின் (Shaftesbury) தூண்டுதலினால் இத்தகைய துணிவினைப் பெற்று, 'நாட்டிலுள்ள நண்பன் ஒருவனுக்குப் பண்புள்ள ஆள் எழுதும் கடிதம்' என்னும் தலைப்பில் இவ்வறிக்கை வெளிவந்தது. ஆயின், மரண தண்டனை நிறை வேற்றிய கொலையாளியைக் கொண்டு அந்த அறிக்கையைக் கொளுத்துமாறு பிரிவி கவுன்சிலர் ஆணையிட்டனர்.

செய்தி மடல்களிலும் விளம்பரச் சிற்றேடுகளிலும் எழுதியவர் பெயர் இன்றி மன்ற விவாதங்கள் அடிக்கடி வெளியிடப் பெற்றன. புரட்சிக்குப் பின் 1694 ஆம் ஆண்டி லிருந்து 1698 ஆம் ஆண்டிற்குள் 'செய்தி மடல்கள் வரைவோரைக்' (news-letter writers) கட்டுப்படுத்தும் தீர்மானங் களை இரு சபைகளும் பலமுறை நிறைவேற்றின. 'தங்களுடைய விவாதங்களிலும் மற்றச் செயல்நிகழ்வுகளிலும்' தலையிடுவதி லிருந்தும், விவாதங்கள்பற்றி விளக்கமோ அல்லது அவற்றைப் பதிவேட்டில் கண்டவாறு வெளியிடவோ செய்வதிலிருந்தும் அவை தடுத்தன. சுதந்திர நாட்டில் இயற்கையாய் இருக்கக் கூடிய அரசியல் செய்திகளை அறிந்துகொள்வதிலுள்ள ஆர்வத் திற்கு எதிராகச் சிறப்புரிமையை அத்தகைய தீர்மானங்களும், அவற்றை மீறுபவர்க்கு அளிக்கப்பெற்ற தண்டனைகளும் காக்க முடியவில்லை. ஹனோவர் குலம் ஆட்சிக்கு வந்ததிலிருந்து, 'ஜென்டில்மேன்ஸ் மேகஸின்' (Gentleman's Magazine), 'தி லண்டன் மேகஸின்' (The London Magazine), போயருடைய 'பொலிடிகல் ஸ்டேட் ஆஃப் கிரேட் பிரிட்டன்' (Boyer's Political State of Great Britain) என்னும் ஏடுகள், முக்கிய விவாதங்களின் திருந்தா அறிக்கைகள் ஆகியவை வெளிவந்தன. 'செனெட் ஆஃப் கிரேட் லில்லிபுட்' (Senate of Great Lilliput) அல்லது 'பொலிடிகல் கிளப்' (Political Club) போன்ற தலைப்புகளில் வெளியான இக் கட்டுரைகளில் பேச்சாளர்கள் பெயர்களின் முதல் எழுத்துகளை மட்டுமோ அல்லது புனைபெயர்களையோ குறிப்பிட்டனர். நினைவாற்றலை முக்கியமாக நம்பியும், கள்ளத் தனமாகக் குறிப்புகள் எடுத்தும் செய்திகளை அனுப்பவேண்டிய இடர்ப்பாடு காரணமாகப் பல செய்திகள் தவறாகத் தரப்பட்டன. 'விக்கு நாய்கள் அதிக நன்மை பெற்றுவிடாதிருக்கத் தாம் அக்கறை எடுத்துக்கொண்டதாக'[19] 1740ஆம் ஆண்டு நவம்பர் திங்களிலிருந்து 1743ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம்வரையில் 'ஜென்டில்மேன் மேகஸினில்' பாராளுமன்ற அறிக்கைகளை எழுதிய டாக்டர் ஜான்சன் (Dr. Johnson) ஒப்புக்கொண்டார்.

சபாநாயகர் ஆன்ஸ்லோ (Onslow) 1738 ஆம் ஆண்டு கொண்டுவந்த செய்தி பற்றி விவாதம் நடந்தபோது உறுப் பினரின் பேச்சுகளைத் தவறாக வெளியிடுவதைப்பற்றி வேடிக்கையாகப் புகார் செய்தார். அப்போது பின்வருமாறு குறிப்பிட்டார்: 'இச் சபையின் விவாதங்கள் சிலவற்றைப் படித்தேன். அவற்றில் நான் நினைத்ததற்கு எதிர்மாறானதைப் பேசியதாக வருகின்றது. மற்றவற்றைப் படித்தேன். அவற்றில் ஒரு பக்கத்தில் அறிவு, கல்வி, வாதத் திறமை அனைத்தும்

அமைந்திருந்ததாகவும், மற்றொரு பக்கத்தில் தாழ்ந்த, இழிவான, ஏளனத்திற்குரியவையே காணப்பெறுவதாகவும் குறிப்பிடப் பெறுகின்றது. ஆயினும், பிரச்சினையென்று வருகின்றபோது வாதத்தின் அடிப்படையில் அதனை ஆதரிக்கும் காரணமும் நேர்மையும் கொண்ட கட்சிக்கு எதிராகவே வாக்கெடுப்பு அமைந்துவிடுகிறது.[20] மேலும், பிற்கால நிருபர்கள் வெறுப் பூட்டும் இழிவான விளையாட்டுப் பெயர்களை அதிகமாகப் பயன் படுத்தினர்.

**1771 ஆம் ஆண்டில் அச்சாளருடன் ஆன மோதல் :** 1771ஆம் ஆண்டில் பேச்சாளருடைய பெயரோடுகூடிய சொற் பொழிவுகள்பற்றிய குறிப்புகளைப் பல செய்தித்தாள்கள் வெளியிட்டன. இவற்றில் பல, 'சொற்பொழிவுகளைத் திரித்துக் கூறின' என்றும், 'சபையின் உறுப்பினர் பலரைப் பழித்தன' என்றும் முன்னுள் சபாநாயகரின் உறவினரும், கில்டுஃபோர்டின் (Guildford) வகையாளுமான கர்னல் ஜார்ஜ் ஆன்ஸ்லோ (Col. George Onslow) முறையான குற்றச்சாட்டைக் கொண்டு வந்தார். அதனுல் காமன்ஸ் சபைக்கும் பத்திரிகைகளுக்கும் இடையேயான பூசல் தீவிரமடைந்தது. அதன் காரணமாக, முறைமன்றமாகிய காமன்ஸ் சபைக்கு வரவேண்டுமென்று சில பத்திரிகையாளருக்கு ஆணை பிறப்பிக்கப்பட்டது. சபாநாயகர் முன் மண்டியிட்டு அவரது கடிந்துரையை ஏற்ற சில பத்திரிகை யாளர் விடுதலை பெற்றனர். மற்றவர் ஆணைக்குப் பணியாது காலந்தள்ளினர். காமன்ஸ் சபையின்முன் வரத் தவறியவர் களில் ஒருவரான ஜான் மில்லரை (John Miller) சபையின் தூதுவர் கைது செய்தபோது, பணிவதற்குப் பதிலாக, தம்மைத் தாக்கியதற்காகவும், தவருகச் சிறைபிடித்ததற்காகவும் தூதுவரையே காவல்படையினரிடம் ஒப்படைத்தார். லண்டன் நகர மேயரான பிராஸ் கிராஸ்பி (Brass Crosby), நகரமன்ற உறுப்பினரான ஆலிவர் (Oliver), பேர்போன ஜான் வில்க்ஸ் (John Wilkes) ஆகியோரின் முன்னிலையில் ஜான் மில்லரும், அவரைக் கைது செய்ய வந்த மன்றத் தூதுவரும் கொண்டு நிறுத்தப்பெற்றனர். மன்றத் தூதுவர் அமைதி காக்கும் அதிகாரியோ அல்லது காவல்படையினரோ அல்ல என்னும் அடிப்படையிலும், அவர் கொண்டுவந்த ஆணை நகரக் குற்ற இயல் நடுவருடைய இசைவினைப் பெற்றது அன்று என்பத னுலும், நகரசபை நடுவர்களான பிராஸ் கிராஸ்பி ஆகியோர் பத்திரிகையாளரை விடுவித்தனர். முறைகேடாகக் கைது செய்த தற்காக மன்றத் தூதுவரைச் சிறைக்கூடத்திற்கனுப்பினர் வேறு இரு பத்திரிகையாளரைப் பிடித்துத் தருவோருக்குப்,

பரிசு வழங்குவதாக அரசாங்க அறிக்கை ஒன்று அறிவித்தது. அப் பத்திரிகையாளருடைய நண்பர்களே மோசடியாக அவர்களுடன் இணைந்து அவர்களைப் பிடித்து நகரமன்ற உறுப்பினர்களான வில்க்ஸ், ஆலிவர் ஆகியோர்முன் கொண்டுநிறுத்தினர். 'அவர்கள்மீது குற்றமேதும் சுமத்தப்படவில்லை' யென்று கூறி, நகரமன்ற உறுப்பினர் அவர்களை விடுதலை செய்தனர். அதனால் பாராளுமன்ற உறுப்பினர்களான லண்டன் நகரத் தந்தையும், நகர மன்ற உறுப்பினரான ஆலிவரும் சபைக்கு வருமாறு அழைக்கப்பட்டு, டவர் கோட்டைச் சிறைக்கு அனுப்பப் பெற்றனர். அவர்களுடைய சிறைவாசம், தண்டனையாக அமைவதற்குப் பதிலாக நீண்டகாலத்திற்கு மக்களுடைய ஆரவார வரவேற்பைப் பெறுவதற்கு உற்ற வாய்ப்பாக இருந்தது. சிறிது காலத்திற்குப் பிறகு பாராளுமன்றம் ஒத்திவைக்கப் பெற்றபோது அவர்கள் சிறையிலிருந்து மீண்டனர். அதிலிருந்து எவ்விதக் குறுக்கீடோ அல்லது தடையோ இன்றி மன்ற விவாதங்கள் செய்தித்தாள்களில் வெளிவந்தன.[21]

**பத்திரிகைக்குச் செய்தி அறிக்கை விடுதலும் சிறப்புரிமையும்:** தனது செல்வாக்கினை வளர்க்கும் முக்கிய வழிகளில் ஒன்றாக மாறிய பத்திரிகைக்குச் செய்தி அறிக்கை விடுவதைப் பாராளுமன்றம் ஆதரித்தது. செய்தி அறிக்கை அனுப்புதல் சிறப்புரிமையை மீறுவதாகும் என்று கொள்கை அளவிலே இருந்தாலும், வேண்டுமென்றே செய்தியைத் திரித்துக் கூறுவதைக் கண்டிக்கும் உரிமையைத்தான் பாராளுமன்றம் பயன்படுத்தியது. எனினும், நிருபர்களுக்குப் பல தொல்லைகள் தொடர்ந்து இருந்துவந்தன. குறிப்பு எடுப்பது தடைசெய்யப் பெற்றது. நிருபர்களுக்கென்று தனியிடங்கள் ஒதுக்கப்பெறவில்லை. வெளியாரை வெளியேற்றும் உரிமையைப் பாராளுமன்ற உறுப்பினர் மனம்போனபடி அடிக்கடி பயன்படுத்தினர். காமன்ஸ் சபையின் பண்டைய வழக்குப்படி அன்னியர் இருப்பதை ஓர் உறுப்பினர் 'அறிந்து சொன்னபோதும்' வினா ஏதும் எழுப்பாது அவர்களை வெளியேறுமாறு செய்வது சபாநாயகரின் கடமையாயிருந்தது. 1849ஆம் ஆண்டில் இவ்வதிகாரம் பயன் பட்டது. இரு ஆண்டுகள் இடைவெளிக்குப் பிறகு 1849ஆம் ஆண்டிலும் அது பயன்படுத்தப்பெற்றது. 1872ஆம் ஆண்டிலும் 1874ஆம் ஆண்டிலும் அவ்வதிகாரம் அதிகத் தொல்லை தருவதாக இருந்தது. அதனால் இறுதியில் 1875ஆம் ஆண்டு அவ் விதியை மாற்றியமைக்க வேண்டியதாயிற்று. அந்த ஆண்டு ஆகஸ்ட் திங்களில் நிறைவேறிய தீர்மானத்தின்படி சபாநாயகரின் தனிப்பட்ட தன்விருப்புரிமைக்குத் தடையேதும்

விதிக்கவில்லை. அதே சமயத்தில் அன்னியர் இருப்பதாக உறுப்பினர் ஒருவர் குறிப்பிட்டால், விவாதமோ அல்லது திருத்தமோ ஏதும் இன்றி வெளியேற்றும் பிரச்சினையை சபையில் இருந்த எல்லா உறுப்பினரின் தீர்ப்பிற்கும்வரவேண்டு மென்று சபாநாயகரை அத் தீர்மானம் வேண்டியது. சபை யிடமிருந்து வேறு அறிவுறுத்தல் இல்லாத நிலையில், நிலையான ஆணையாக இத் தீர்மானம் இல்லையென்றாலும் அடுத்து எழுந்த வழக்குகளிலெல்லாம் இத் தீர்மானத்தின் அடிப்படையிலேயே சபாநாயகர் செயலாற்றினர்.[22]

1834ஆம் ஆண்டில் ஏற்பட்ட தீ விபத்தினால் பாராளுமன்றச் சபைகள் அழிந்துவிட்ட பிறகு,[23] நிருபர்கள் இருப்பதற்கென்று தனிப் படியடுக்கு மேடைகள் ஒதுக்கப்பெற்றன. உறுப்பினர் அமர்வதற்கென்று இருக்கின்ற பகுதிகள் தவிர, படியடுக்கு மேடைகளிலோ அல்லது சபையின் பிற இடங்களிலோ அன்னியர் இருக்கலாம் என்பதை 1845ஆம் ஆண்டில்தான் முதல் முறையாகக் காமன்ஸ் சபை அதிகாரபூர்வமாக ஏற்றுக் கொண்டது. மன்ற நடவடிக்கைகளையும் உறுப்பினரின் பொறுப்புப் பற்றியும் வெளியிடும்போது, முழுமையை அளிக்க வல்ல நடவடிக்கைகளின் பகுதியாக இருக்கும் வாக்குப் பிரிவுப் பட்டியல்களை வெளியிடும் உரிமையை 1836ஆம் ஆண்டில்தான் காமன்ஸ் சபை அளித்தது. அதே பழக்கத்தை 1857ஆம் ஆண்டுவரை பிரபுக்கள் சபை கொண்டிருந்தது. இரு சபை களிலும் வாக்கெடுப்பின்போது எண்ணிக்கையேயன்றிப் பெயர்கள் கவனிக்கப்படவில்லையாதலால், முன்பெல்லாம் வாக்கெடுப்பின்போது யார் யார் வந்திருந்தனர், அவர்கள் எவ்வாறு வாக்களித்தனர் என்பது பெரும்பாலானவற்றில் அறிந்துகொள்ளுதல் இயலாததாக இருந்தது. பொதுமக்களைப் பெரிதும் பாதிக்கும் பிரச்சினைகள் வரும்போது தனிப்பட்ட உறுப்பினர் முயற்சி எடுத்துச் சிறுபான்மையினருடைய பெயர் களை வெளியிட வகைசெய்தனர். இத்தகைய வெளியீடுகள் 'பாராளுமன்றத்தின் சுதந்திரத்தையும் பல உரிமைகளையும் அழிக்கவல்லவை,' சிறப்புரிமையை மீறுபவை என 1696ஆம் ஆண்டில் காமன்ஸ் சபை அறிவித்து இருந்தபோதிலும், இவை குறைந்தபாடில்லை. பிற்காலத்தில் பெரும்பான்மை யினரின் பெயர்ப் பட்டியலும் செய்தித்தாள்களில் இடம் பெற்றது.

**பாராளுமன்ற அறிக்கைகளும் ஏடுகளும் :** மாமன்ற வாக் கெடுப்பு வகையில் பிரிவீடு பட்டியல்களைத் தினந்தோறும் வெளி

வரும் அதிகாரபூர்வமான வெளியீடுகளை அடுத்து, பொறுக்கு குழுக்களிடம் சான்று சொல்ல வருவோரிடம் வினாக்களைக் கேட்கும் உறுப்பினர் பெயர்களையும் வெளியிடும் பழக்கத்தை யும், சாட்சியம்பற்றிய குறிப்புகளையும் வெளியிடும் பழக்கத்தைக் யும் காமன்ஸ் சபை 1839ஆம் ஆண்டில் மேற்கொண்டது. பிரபுக்கள் சபையும் 1852ஆம் ஆண்டில் அப் பழக்கத்தை மேற் கொண்டது. சில ஆண்டுகட்கு முன்னர்தான் 1835-ல் எல்லாப் பாராளுமன்ற அறிக்கைகளையும் ஏடுகளையும் குறைந்த விலையில் தாராளமாக விற்கலாம் என்று காமன்ஸ் சபை அறிவித்தது. அதன் விளைவாக, அறிவினைப் பொதுமக்களுடன் பொதுவாகப் பகிர்ந்துகொள்ளவும் விவாதத்தில் பங்குகொள்ளவும் பொது மக்களுக்குப் பொது உரிமையைக் காமன்ஸ் சபை நல்கியது.

இதனால் பாராளுமன்ற நடவடிக்கைகளில் கலந்துகொண்டு அவற்றிற்கு ஆதரவாக மக்கள் அனைவரும் இருந்தது போலத் தோன்றியது. தான் அங்கம் வகிக்கும் சபைக்கு மட்டிலும் பேச்சாளர் உரை நிகழ்த்துவதில்லை; அச் சபையின் மூலமாக நாகரிகம் பெற்ற உலகிற்கே அவர் உரை நிகழ்த்தினர். அவருடைய செல்வாக்கும் பொறுப்பும் விரிவடைந்தன. பாராளுமன்ற அரசாங்கத்தின் அதிமுக்கியக் கருவிகளில் விளம் பரமும் ஒன்றாகியது. பாராளுமன்றம் மக்களை ஆலோசனையில் கலந்தது. முன்மொழிந்த சட்டங்களை ஏற்பதன் மூலமாகவோ அல்லது எடுத்தெறிவதன் மூலமாகவோ அது மக்களோடு உடன்பட்டது. இங்ஙனம் 'பொதுமக்களுடைய ஒப்புறுதி யின்றிச் சட்டங்கள் சட்டங்களாகா'[24] என்ற ஹூக்கரின் (Hooker) கருத்து எழுத்திற்கு எழுத்து உண்மையாகியது.

**ஸ்டாக்டேலுக்கும் ஹன்சார்டிற்கும் இடையேயான வழக்கு (Stockdale v. Hansard):** பாராளுமன்ற அறிக்கைகளையும் செயல் நிகழ்வுகளையும் வெளியிட்டதன் காரணமாக, முறை மன்றங்களுக்கும் காமன்ஸ் சபைக்குமிடையே 1836ஆம் ஆண்டில் முரண்பாடு தோன்றியது. காமன்ஸ் சபைக்கும் பொதுமக்களுக்கும் இடையேயிருந்த உறவுநிலைகளில் 18ஆம் நூற்றாண்டிலிருந்து புரட்சிகரமான மாறுதல்கள் தோன்றின என்பதை அந்த முரண்பாடு நன்கு வலியுறுத்தியது. சபையி னுடைய நடவடிக்கைகளை இரகசியமாக வைத்துக்கொள்ளும் மீறமுடியாத சிறப்புரிமையை நிலைநாட்டுவதற்காக 1771ஆம் ஆண்டில் லண்டன் நகரக் குற்ற இயல் நடுவருடன் முரண்பட்டு நின்ற காமன்ஸ் சபையினரை முன்னரே கண்டோம். நாட்டு மக்கள் செய்தி அறிந்துகொள்வதற்காகத் தங்கள் சபையின்

ஏடுகளையெல்லாம் அச்சிட்டு வெளியிடும் சிறப்புரிமையை நிலைநாட்டும் நோக்கத்தோடுதான் 1836ஆம் ஆண்டில் காமன்ஸ் சபையினர் முறைமன்றங்களுடன் முரண்பட்டு நின்றனர். காமன்ஸ் சபையின் ஆணைகட்கிணங்கச் சிறைச்சாலைகளின் மேற்பார்வையாளருடைய அறிக்கைகள் சிலவற்றை ஹன்சார்டு கம்பெனியார் அச்சிட்டு வெளியிட்டனர். அவற்றில் ஸ்டாக்டேல் என்பவர் எழுதிய நூல் ஒன்றை வன்மையாகக் கண்டித்து எழுதினர். அதன் காரணமாக அவற்றை அச்சிட்டோர் மீது ஸ்டாக்டேல் அவதூறு வழக்குக் கொண்டுவந்தார். அவரது நூல் இழிவானது என நிரூபிக்கப்பட்டதன் பேரில் கண்டிக்கத் தகுந்ததே என்ற வேண்டுகோளின்படி பிரதிவாதிகளுக்குச் சாதகமான தீர்ப்புக் கிடைத்தது. ஆயின், இந்த வழக்கினை விசாரித்த முதன்மை முறைமன்றப் பிரபுவான டென்மான் என்பவர் தற்செயலாகப் பின்வருமாறு கூறினார்: 'ஹன்சார்டு கம்பெனியாரோ அல்லது வேறு நூல் விற்பனையாளரோ பாராளு மன்ற அறிக்கைகளையெல்லாம் வெளியிடலாம் என்று காமன்ஸ் சபை ஆணையிட்டது என்பதற்காக ஒருவர் மீது அவதூறு ஏற்படும் வகையில் அமைந்த பாராளுமன்ற அறிக்கையை வெளியிடுதல் முறையானது அன்று.' இங்ஙனம் பாராளு மன்றத்தின் சிறப்புரிமையை மறுத்தபோது காமன்ஸ் சபை யினர் பேரறிவிப்பாணை ஒன்றினை வெளியிட்டனர். 'அதன்படி பாராளுமன்றத்தின் அரசியல் அமைப்புச் சார்ந்த செயல் களுக்கு இன்றியமையாது தேவைப்படுவது' தங்களுடைய மன்ற நடவடிக்கைகளையும் அறிவிப்புகளையும் வெளியிடும் அதிகாரமே என்றும், இரு சபைகளின் தீர்மானங்களுக் கெதிராகச்சிறப்புரிமைச் செய்திபற்றி வழக்குத் தொடுப்பவரும், அவ் வழக்கில் தீர்ப்பளிக்கும் முறைமன்றமும் மன்றத்தின் சிறப்புரிமையை மீறும் குற்றம் புரிந்தவர்களாவார்கள் என்றும் அறிவிக்கப்பெற்றது. உடனே வேறு வழக்குகளை ஸ்டாக்டேல் கொண்டுவந்தார். சபையினது சிறப்புரிமை காரணமாகவும், அதன் ஆணையின் பேரிலும் அச்சிட்டோரின் செயல் நியாயமானதுதான் என்ற பிரச்சினை எழுந்தபோது ஸ்டாக்டேலுக்கு எதிரான தீர்ப்பினை அரச முறைமன்றம் ஒரு மனதாக வழங்கியது.[25] எனினும், மற்றுமொரு வழக்கில் பிரதி வாதிகள் நீதிமன்றத்தில் வரத் தவறியதால், சாதகமான தீர்ப்பினை அவர் பெற்றார். முறைமன்ற அதிகாரிகளான ஷெரீஃப்புகள் சபையிடமிருந்து இழப்பீடு கோரினர் ஆயின், ஸ்டாக்டேலையும், அவர்தம் வழக்குரைஞரையும், முறைமன்ற அதிகாரிகளையும் சிறையிட்டதன் மூலமாகக் காமன்ஸ் சபை தனது உரிமையை நிலைநாட்டிக்கொண்டது.[26] சிறையில்

இருக்கும்போதே மேலும் சில வழக்குகளைத் தொடர்ந்த ஸ்டாக்டேல் பழைய குற்றத்தையே மீண்டும் செய்தார். அதற்காக வழக்குரைஞரின் மகனும் கணக்கரும் சிறையிடப் பட்டனர். பாராளுமன்ற ஏடுகள் சட்டம் (Parliamentary Papers Act) 1840ஆம் ஆண்டில் நிறைவேறிய பிறகுதான் இந்த முட்டுநிலை இறுதியாக நீங்கியது. பாராளுமன்றத்தின் சபை ஒன்றினுடைய ஆணையின் பேரில்தான் புகாருக்கு உள்ளான ஏடு வெளியிடப்பட்டது என்று சான்றிதழ் அல்லது உறுதி மொழித் தாள் காண்பிக்கப் பெறுமானால், அதன்மீதான வழக்குகள் யாவும் நின்றுவிடவேண்டுமென்று அச் சட்டம் வகை செய்தது.[27] பாராளுமன்றச் செயல் நிகழ்வுகளையும் விவாதங் களையும் செய்தித் தாள்களில் வெளியிடுவதைப் பொறுத்துக் கொண்டது என்றாலும், சட்டத்தினால் பாதுகாப்புப் பெறும் வகையில் 'அதிகாரம்' வழங்கவில்லை. ஆயின், இராணியார் முறைமன்றத்திற்கு வந்த வாசன் (Wason) என்பவருக்கும் வால்டர் (Walter) என்பவருக்கும் இடையேயான வழக்கில், 1868ஆம் ஆண்டு அளிக்கப்பெற்ற தீர்ப்பினால் அதுபற்றிய முடிவு ஒன்று ஏற்பட்டது. அதில் நேர்மையான, உண்மைக்குகந்த அறிக்கையைவெளியிட்ட 'டைம்ஸ்' (The Times) பத்திரிகையின் உரிமையாளர்மீது எவ்வித அவதூறு வழக்கும் இல்லை எனத் தீர்மானமாகியது.[28]

## சபாநாயகர்

முன்பே நாம் கண்டதைப்போல பதினாறும் நூற்றாண்டில் பெரும்பாலும் வழக்கறிஞரே சபாநாயகர் பதவியேற்றார். அதன் பிறகு அவரது அரசியல் வாழ்க்கை, பொதுவாக நீதி பதவியேற்பதோடு முடிந்தது.[29] அடுத்த நூற்றாண்டிலும் சில விதிவிலக்குகளைத் தவிர நிலைமை அப்படியே இருந்தது. 1685ஆம் ஆண்டிலும், மீண்டும் 1690—1695ஆம் ஆண்டு களிலும் சர் ஜான் டிரிவர் (Sir John Trevor) என்பாரும், 1689ஆம் ஆண்டில் பிரத்தியேகப் பாராளுமன்றத்தில் ஹென்றி பவலும் (Henry Powle) ஆவணப் பொறுப்பு மேல்முறைமன்ற நடுவராயிருந்தனர். ஆனால், அவர்களுக்குப்பின் வந்த எவரும் இங்கிலாந்தில் முறைமன்ற நடுவர் பதவி பெறவில்லை.[30]

**அரசியல்வாதிகளான சபாநாயகர்கள் :** 1701ஆம் ஆண்டு முதல் 1705 வரை ராபர்ட் ஹார்லி (Robert Harley) சபாநாயகர் பதவியை ஏற்றிருந்தபோது, புதிய நூற்றாண்டின் தொடக்கத்தி

லிருந்தே அப் பதவியில் புதிய பாணி தொடங்கியது. அவ்வாறு சபாநாயகராக வந்த ராபர்ட் ஹார்லியின் பிற்கால வாழ்க்கை நாம் நன்கு அறிந்ததே. சபாநாயகராக இருக்கும்போதே அவர் உள்நாட்டு அமைச்சரானார். அதன் பிறகு 1711ஆம் ஆண்டில் கருவூலப் பிரபுவானார். டோரி கட்சியின் தலைவராகவும், ஆக்ஸ்ஃபோர்டு ஏர்ல் பிரபுவாகவும் மாறினார். அப்போதிருந்தே அரசியல் வாழ்க்கையின் முதல் படியாக இருக்கக்கூடியது சபாநாயகர் பதவி என்பது தெளிவாகியது. ஹார்லியை அடுத்து சபாநாயகராக வந்த ஜான் ஸ்மித் (John Smith), ரிச்சர்டு ஆன்ஸ்லோ (Richard Onslow) ஆகிய இருவருமே அவருக்குப் பின் அடுத்தடுத்து கருவூலப் பிரபுக்களாகப் பணிபுரிந்தனர். அவருக்குப்பின் மூன்றாவதாக சபாநாயகராக வந்த வில்லியம் பிராம்லி (William Bromley) உள்நாட்டு அமைச்சரானார். 1715ஆம் ஆண்டு முதல் 1727ஆம் ஆண்டுவரை சபாநாயகராக இருந்த ஸ்பென்சர் காம்ப்டன் (Spencer Compton) என்பார், வால்போலைப் பதவியிலிருந்து நீக்குதற்கு இரண்டாம் ஜார்ஜ் மன்னர் முயன்ற போது, ஓரிரு நாட்கள் பிரதம அமைச்சராவதற்காக சபாநாயகர் பதவியை விட்டு விலகினார்.[31] அம் முயற்சி பயனற்றதாகியது. வில்மிங்டன் பிரபு (Lord Wilmington) எனப் பிற்காலத்தில் வழங்கப்பெற்ற அவர், வால்போல் வீழ்ச்சியுற்ற பிறகுதான் 1742ஆம் ஆண்டில் பிரதமராக முடிந்தது. அதுவரையில் அவர் காத்திருக்கவேண்டியதாயிற்று. இரண்டாம் ஜார்ஜ் மன்னரின் ஆட்சியில் 1727ஆம் ஆண்டு முதல் 1761ஆம் ஆண்டு வரை தொடர்ந்து சபாநாயகர் பதவி வகித்தவர்களிலேயே சிறப்பு மிகுந்த ஆர்தர் ஆன்ஸ்லோதான் காம்ப்டனுக்குப் பிறகு மக்கள் மன்றத் தலைவரானார். அப் பதவியின் தன்மையையும் சபையின் மரபுகளையும் நிலையான ஒழுங்குமுறைக்குக் கொண்டுவர அவரது ஆற்றலும், நீண்ட பதவிக்காலமும் பயன்பட்டன. ஸ்பென்சர் காம்ப்டன், மற்றுமுள்ளவர்களைப்போன்று அல்லது அவர் சபாநாயகராக வந்தவுடன் ஊதியம் அளிக்கும் பதவியைத் துறந்து விட்டார்.[32] அவருக்கு முன்பும் பின்பும் வந்த சபாநாயகர்களைப் போலவே அன்னாரும் குழுக்களின் விவாதங்களில் கலந்து கொண்டார். மேலும் நமக்குக் கிடைக்கும் ஏடுகள் காட்டுவதைப்போல அரசியலோடு அவர் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். எனினும், சபாநாயகர் பதவியை கட்சி அரசியலில் இருந்து பிரித்து வைக்கவே சபை எண்ணியது என்பதை அன்னார் பலமுறை தேர்தலில் வெற்றிபெற்றது எடுத்துக்காட்டுகிறது.

மன்னர் குறிப்பிட்ட ஒருவரை சபாநாயகராகத் தேர்ந்தெடுக்க மறுத்த 1679ஆம் ஆண்டிலிருந்து அப் பதவிக்கான தேர்தல்களை காமன்ஸ் சபை எவ்விதத் தடையுமின்றிக் கட்டுப்படுத்திய போதிலும், சபாநாயகர் பதவியையும் அரசியலையும் பிரித்து வைப்பது எளிதாக இல்லை.[33] உதாரணமாக, வில்லியம் விண்டாம் கிரன்வில் (William Wyndham Grenville) என்னும் தமது உறவினரைத் தேர்ந்தெடுக்குமாறு செய்வதில் இளைய பிட் வெற்றிபெற்றார். அவ்வாறு சபாநாயகராக வந்தவர் சிறிது காலத்திற்குள் உள்நாட்டு அமைச்சராகவும் 'திறமையாளர்' (All the Talents) அமைச்சவையின் தலைவராகவும் விளங்கினார்.[34] கிரன்விலுக்குப் பிறகு மன்ற முதல்வராக வந்த ஹென்றி அடிங்டனும் (Henry Addington) பிட்டின் குழுவைச் சார்ந்தவரே.[35] பல முறைகள் சபாநாயகராக இருந்த அவர் பிரதமராக வருவதற்கென்று 1801ஆம் ஆண்டில் அப் பதவியை விட்டு நீங்கினார்.

**சபாநாயகரான மேனர்ஸ் சட்டன்** (Mr. Speaker Manners Sutton) : சபாநாயகர் பதவிபற்றிய பழைய கருத்திற்கும் புதிய கருத்திற்கும் பாலமாக, திருத்தமடையாத காமன்ஸ் சபைக்கும் திருந்திய காமன்ஸ் சபைக்கும் இடையேயான இணைப்பாகப் பல வழிகளிலும் திகழ்ந்தது, 1817முதல் 1834வரை சார்லஸ் மேனர்ஸ் என்பார் சபாநாயகராக இருந்த காலம் எனலாம். தமக்குமுன் இருந்தவர்களைப் போலவே அவரும் குழு விவாதங்களில் பங்கு கொண்டார். ஆயினும், ஏதோ ஒரு சாக்கினைக் கூறியே அவ்வாறு செய்துவந்தார். 1827ஆம் ஆண்டில் உள்துறை அமைச்சர் பதவி அவரைத் தேடிவந்தபோது அதனை அவர் ஏற்க மறுத்தார். சபையின் நடவடிக்கைகளை அவர் கையாண்ட விதம் போற்றுதற்குரியதாக இருந்தது. எனினும், சபைக்கு வெளியில் அவர் கட்சியாளராகவே விளங்கினார். அவரது வீட்டிலேயே, 1831ஆம் ஆண்டில் சீர்திருத்தத்தை எதிர்த்தவர்கள் ஒரு கூட்டத்தைக் கூட்டினர். அவர் பிரதம அமைச்சராவார் என்ற பேச்சு 1832ஆம் ஆண்டில் எழுந்தது. எவ்வாறாயினும், அவரை மீண்டும் தேர்தலுக்காக பீல் (Peel) முன்மொழிந்தபோது பெருத்த எதிர்ப்பு இருந்தது. பீலினுடைய அரசாங்கம் அமைப்பதற்கான பேச்சுகளில் அவர் கலந்துகொண்டார் என்றும் மெல்போர்ன் பிரபுவின் (Lord Melbourne) பதவி நீக்கத்திற்கான தனி இயல்பான செயல்நிகழ்வுகளிலும் தொடர்பு கொண்டார் என்றும் வலியுறுத்தப்பட்டது. ஆனால், மந்திரி சபை அமைப்பதில் தாம் பங்கு கொள்ளவில்லையென்றும், மெல்போர்னின் பதவி நீக்கத்தில் தமக்குப் பங்கு இல்லை

யென்றும், பாராளுமன்றத்தைக் கலைக்குமாறு தாம் ஆலோசனை கூறவில்லையென்றும் மேனர்ஸ் சட்டன் வற்புறுத்திக் கூறினர்.[36] முழுவதும் கட்சி அடிப்படையில் வாக்கு அளிக்கப்பெற்றதால், அவர் தோல்வியுற்றார். பீலுக்குப் பெரும்பான்மையினரின் ஆதரவு இல்லையென்பது ஏற்கெனவே அறிந்த உண்மையாகும். மன்றத் தலைமைப் பதவிபற்றிய இருவிதக் கோட்பாடுகளுக்கிடையே சட்டனுடைய கருத்துகள் ஊசலாடியதைப் போலவே அவரது நடவடிக்கைகளும் அமைந்தன. அதே போன்று காமன்ஸ் சபையில் வாக்கெடுப்பும் தெளிவற்றதாக இருந்தது. முன்னாள் சபாநாயகரான சட்டன் ஆற்றியதாகக் கூறப்பட்ட அரசியல் செயல்களைக் கண்டிப்பதைப்போல வாக்கெடுப்பு அமைந்தது. அதே சமயத்தில் சபையின் அரசியல் நிலைமை மாறியதற்கேற்ப புதிய கட்சியிலிருந்து சபாநாயகரைத் தேர்ந்தெடுப்பதாகவும் அது அமைந்தது.

**சபாநாயகரின் நடுநிலைமை :** அடுத்து வந்த ஆண்டுகளில் மேலே கூறிய செய்திகள் எல்லாம் விரைவாகத் தெளிவடைந்தன. அதுபோது சபாநாயகரின் நடுநிலைமைத் தன்மை நன்கு நிலை நாட்டப்பெற்றது. இங்ஙனம் சபையில் கட்சிநிலை மாறியபோதிலும் சபாநாயகர் ஷா லெஃப்ரே (Shaw Lefevre) மறு தேர்தலுக்கு நின்றபோது எதிர்ப்பு ஏதும் இல்லை.[37] ஆயின், புதிய அமைப்பில் அரசியல் துறையில் முக்கியப் பதவி வகித்தவர் சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்பெறும் தகுதி பெற்றவரல்லர் என்பது தெளிவாகியது. இங்ஙனம் முன்னாள் கட்சிக் கொறடாவாக இருந்த மிஸ்டர் பிராண்ட் (Brand) என்பவர் 1871ஆம் ஆண்டில் மிகுந்த திறமை வாய்ந்த சபாநாயகராக விளங்கினர் என்றாலும் முன்னாள் போர் அமைச்சராக இருந்த காம்பெல்-பானர்மென் (Campbell-Bannerman) என்பவரை அப் பதவிக்கு நியமிக்கவேண்டுமென்ற எண்ணம் கைவிடப் பட்டது.[38]

பல காரணங்களினால் பாராளுமன்றத்தின் செயல்நிகழ்வில் சிக்கல் வளர்ந்தது. உதாரணமாக, வேலைப் பெருக்கம், அவ் வேலையின் பெரும் பகுதி முரண்பாடு கொண்ட தன்மை, அதனைக் குறுக்கிட்டு நிறுத்துவதற்கான முயற்சி ஆகியவற்றைக் குறிப்பிடலாம். இத்தகைய இடர் மிகுந்த நிலைமையைச் சமாளிப்பதற்காகத்தான் சபாநாயகரின் தன் விருப்பார்வ அதிகாரங்களைக் காமன்ஸ் சபை பெருக்கியது. பல செய்திகளில் அரசியல் போராட்டத்தைத் தீர்த்துவைக்கும் ஒருவகை நடுவராக அவரைச் செய்தது. 1911ஆம் ஆண்டின் பாராளுமன்றச் சட்ட

மானது இவ் வழியில் இறுதியாக வந்த மிக முக்கிய நடவடிக்கையாகத் தோன்றுகிறது. அதன்படி 'பண மசோதா'க்களுக்காக, இருக்கும் தனிப்பட்ட செயல்நிகழ்வு கொண்டவையென, சில மசோதாக்களுக்குச் சான்றிதழ் அளிக்கும் பொறுப்பு சபாநாயகரிடம் விடப்பட்டது. எவ்வாறெனின், இவ் விஷயத்தில் அவரது முடிவே இறுதியானது என்றும், அது எந்த முறை மன்றத்திலும் மாற்ற முடியாதது என்றும் அச் சட்டம் வலியுறுத்தியது.[39]

## அடிக்குறிப்புகள்

1. இந் நூலின் முதலாம் பகுதியைக் காண்க. பதினாறும் அதிகாரத்தையும் பார்க்க.

2. மேலே காண்க. பிற்பகுதியிலும் பார்க்க.

3. இரண்டாம் சார்லஸின் பன்னிரண்டாம் ஆண்டுச் சட்டம், முதலாவது சட்டக்கூறுபற்றி மேலே காண்க.

4. வில்லியம், மேரி கால முதலாண்டுச் சட்டத்தின் முதலாம் சட்டக் கூறு.

5. இந் நூலின் முதல் தொகுதியைக் காண்க. இச் சட்டங்கள் பயனற்றுப்போயின என்பதை முதல் தொகுதியிலேயே கண்டோம்.

6. இந் நூலின் இரண்டாம் தொகுதியில் காண்க.

7. இரண்டாம் சார்லஸின் 16ஆம் ஆண்டுச் சட்டம்.

8. மேலே காணவும்.

9. வில்லியம், மேரி கால ஆறும் ஆண்டுச் சட்டத்தின் இரண்டாவது கூறு.

10. முதலாம் ஜார்ஜின் முதலாண்டின் இரண்டாவது சட்டம். 1716ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பத்தாம் தேதியன்று பிரபுக்கள் சபையில் கொண்டுவரப்பட்ட இச் சட்டத்தின் மூன்றுவது வாசிப்பு 1716ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 26ஆம் தேதிதான் காமன்ஸ் சபையில் முடிவடைந்தது. ஆயினும், 1715ஆம் ஆண்டு மார்ச் மாதம் 17ஆம் தேதியே

பாராளுமன்றத் தொடர் கூடியதால், அந் நாளையே அதிகார பூர்வமான ஆனுல், மரபொழுங்காக உண்மையென்று கொண்டார். பாராளுமன்றம் 1714ஆம் ஆண்டிலேயே கூடியதாக பழைய பாணியைப் பயன்படுத்திய 'The Statutes at Large' என்னும் நூல் குறிப்பிட்டது.

11. Dicey எழுதிய 'Law of The Constitution' பக்கம் 42 ஐப் பார்க்கவும். 'பாராளுமன்றத்தினுடைய இறைமை அதிகாரத்தின் விளைவாகவும், நிலையான சான்ருகவும் அமைவது ஏழாண்டுச் சட்டம்' என 46ஆம் பக்கத்தில் வருகின்றது.

12. Lord Mahon எழுதிய 'History of England' அதி. 1, பக்கம் 305-ல் எடுத்து இயம்பியது.

13. K. G. Feiling எழுதிய 'The Second Tory Party,' பக்கம் 26.

14. பின்னல் பார்க்கவும். Basil Williams எழுதிய 'Stanhope' பக்கங்கள் 410, 459 ஆகியவற்றில் இந் நிகழ்ச்சிபற்றிய விளக்கம் காணலாம். விவாதங்களின் சுருக்கத்திற்கு A. S. Turberville எழுதிய 'House of Lords in the Eighteenth Century,' பக்கம் 164ஐக் காண்க.

15. Coxe எழுதிய 'Life of Sir Robert Walpole', அதி. 1, பக்கம் 75.

16. 'Parliamentary History' அதி. ix, பக்கம் 473. C. S. Emden, எழுதிய 'Selected Speeches on the Constitution' (World's Classics), அதி. ii, பக்கம் 105.

17. 'Parliamentary History', அதி. xvii, பக்கம் 223.

18. 'Parliamentary History', அதி. xxi, பக்கம் 113.

19. கட்சிப் பூசல்களைக் கடந்து மாறுதல்கள் தோன்றின என்பது குறிப்பிடத்தகுந்தது. பாராளுமன்ற உறுப்பினர் வாழ்நாள் முழுதும் அப் பதவியை வகிக்கவேண்டுமென்று தாம் எழுதிய 'Ready and Easy Way to Establish a Commonwealth' என்னும் நூலில் குடியரசுவாதியான மில்டன் ஒருமுறை குறிப்பிட்டார். பிற்காலத்தில் தீவிரவாதிகளின் கோட்பாட்டு வாசகங்களாக இருந்த

ஓராண்டுப் பாராளுமன்றத்தையும், மூவாண்டு பாராளுமன்றத்தையும், வால்போல், பெல்ஹாம் (Pelham) போன்றோரின் தலைமையிலான டோரி கட்சி (tory) ஆதரித்தது. விக்குக் கட்சியினரோவெனின், டோரிகளுக்கெதிராக ஏழாண்டுச் சட்ட அடிப்படையில் நீண்ட காலத்திற்குப் பாராளுமன்றம் கூடவேண்டுமென்றனர். முதல் இரண்டு ஜார்ஜ் மன்னர் காலங்களில் டோரிகளும் அடுத்துவந்த ஆட்சிகளில் தீவிரவாதிகளும் தலையாயது என வற்புறுத்திய சீர்திருத்தத்தினை 1877ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் ஆதரிப்பார் யாருமில்லை.

மேலே கூறிய கருத்தினை Lecky எழுதிய 'History of England' அதி. ii, பக்கம் 64-ல் காணலாம்.

20. பாராளுமன்றங்கள் அடிக்கடி கலைக்கப்பெற்றதால், அவை சராசரி மூன்று அல்லது நான்கு ஆண்டுகளே தொடர்ந்து வந்தன. மூன்றும் ஜார்ஜ் மன்னரின் பதினொரு பாராளுமன்றங்களில் எட்டு மட்டிலும் ஆறு ஆண்டுகளுக்குத் தொடர்ந்து வந்தன என்று 1818ஆம் ஆண்டில் சர் சாமுவேல் ரோமில்லி (Sir Samuel Romilly) குறிப்பிட்டார். ஆயின், நான்காம் வில்லியம் பட்டத்திற்கு வந்த 1830ஆம் ஆண்டிலிருந்து 1860ஆம் ஆண்டுவரை கூடிய பத்து பாராளுமன்றங்கள் சராசரி மூன்று ஆண்டுகளே உயிர் வாழ்ந்தன. May எழுதிய 'Constitutional History', அதி. i, பக்கம் 444. 1859ஆம் ஆண்டு மே மாதம் 31ஆம் தேதி தொடங்கிய பாராளுமன்றமான 1865ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஆறும் தேதி கலைக்கப்பெற்றதால், நடைமுறையிலான ஆறு ஆண்டுக் காலத்திற்குமேல் 35 நாட்களுக்கு வாழ்ந்தது.

21. மூன்றும் வில்லியத்தின் 7, 8ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்; ஆன் அரசியாரின் ஆறும் ஆட்சியாண்டுச் சட்டம்.

22. மூன்றும் ஜார்ஜின் 37ஆம் ஆட்சியாண்டுச் சட்டம். இவ்வாறாக இடையில் வரும் பொதுத் தேர்தல் செல்லாததாகியது. வேறு பல இடர்தரும் செய்திகளும் இச் சட்டத்தில் இடம் பெற்றன. தாம் அரசு எய்துவதற்குச் சற்று முன்னரே தேர்ந்தெடுக்கப்பெற்ற பாராளுமன்றத்தைப் புதிய மன்னர், ஏழாண்டு காலத்திற்கும் பொறுத்துக்கொள்ள வேண்டுவதில்லையென்பதற்காகவும்; அதற்கு மாறாகச் செல்வாக்கினைப் பயன்படுத்தித் தமக்கேற்ற பாராளுமன்றத்தைப் பெறுவதற்கான

வாய்ப்பினை அவர் பெறவேண்டுமென்பதற்காகவுமே இச் செய்திகள் இடம் பெற்றன எனலாம்.

23. விக்டோரியா இராணியாரின் 30, 31ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

24. ஆரம்பகால வரலாற்றிற்கு இந்நூலின் முதல் தொகுதியைக் காண்க.

25. பக்கிங்ஹாம் பிரபுவின்மீதான அரசியல் குற்றச்சாட்டு பற்றிய ஆவணங்களை Gardiner எழுதிய 'Documents' எனும் நூலில் 3—44 பக்கங்களில் காணலாம்.

26. Gardiner எழுதிய 'History of England', அதி. vi, பக்கங்கள் 208—211, 312—313.

27. Gardiner எழுதிய 'Documents', என்னும் நூலின் 156 ஆம் பக்கம் பார்க்கவும். Tanner எழுதிய 'Constitutional Conflicts', பிற்சேர்க்கை v, பக்கம் 277.

28. Plucknett எழுதிய 'Impeachment and Attainder' என்னும் நூலைக் காண்க. 'Transactions of the Royal Historical Society (1953)', பக்கம் 145.

29. 'English Government and Constitution', பக்கம் 66.

30. 1644ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 17ஆம் தேதி வெளிவந்த 'Lords Journal' அதி. vii, பக்கம் 103.

31. The articles are printed in full by Robertson, 'Documents,' p. 565.

31ᵃ. Roberts in 'Cambridge Historical Journal,' xiii, 1.

32. See Robertson, 'Documents,' 566—569.

33. 'Constitutional History', அதி. ii, பக்கம் 411.

34. 'Rotuli Parliamentorum', அதி. iii, பக்கம் 240.

35. 'பெருங்குற்றம் புரியும் வகையில்' ('feloniously) என்னும் வாசகத்தினாலும் இதேபோன்ற பிரச்சினை எழுந்தது. நான்காம் ஹென்றியின் 13ஆம் ஆண்டுக் குறிப்பேட்டினைக்

காண்க. Plucknett எழுதிய 'Commentary on the Indictments' என்னும் கட்டுரையை, B. H. Putnam எழுதிய 'Proceedings before Justices of the Peace,' cxliv தொகுதியில் காண்க.

36. 1679ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 28ஆம் தேதி, மே மாதம் 5ஆம் தேதி சார்ந்த 'Commons' Journal', அதி. ix, பக்கங்கள் 606, 612. இதே செய்தியைப்பற்றி, காமன்ஸ் சபையினர் 1348ஆம் ஆண்டின் வழக்கு ஒன்றிலே அக்கறை காட்டினர் என்பது குறிப்பிடத்தக்கது. 'Rotuli Parliamentorum,' அதி. ii, பக்கம் 201, எண் 4.

37. இந் நூலின் முதல் தொகுதி காண்க.

38. May எழுதிய 'Parliamentary Practice'-ன் 1924ஆம் ஆண்டின் 13ஆம் தொகுப்பில் 652ஆம் பக்கம் பார்க்க.

39. இந் நூலின் முதல் தொகுதியைக் காண்க.

40. 1679ஆம் ஆண்டு மார்ச் மாதம் 18, 19ஆம் தேதி வந்த 'Lords Journal,' அதி. xiii, பக்கம் 466.

41. பாராளுமன்றக் கூட்டத்தொடரைத் தள்ளிவைப்பதன் மூலமாகவோ அல்லது அதனைக் கலைப்பதன் மூலமாகவோ சட்டசபை நடவடிக்கைகளை நிறுத்திவைத்தல் ஒரு வகையில் காலத்திற்கொவ்வாததாகத் தென்பட்டது.

42. 'Lords' Journal,' May 22, 1685 (xiv, 11).

43. 'பிரபுக்கள் சபையில் காமன்ஸ் சபை கொண்டுவரும் அரசியல் குற்றச்சாட்டு, பாராளுமன்றக் கூட்டத் தொடரைத் தள்ளிப்போடுவதாலோ அல்லது கலைப்பதாலோ முடிவுறுவதில்லை என்பது அநேகமாகப் பொதுக் கருத்தாகியது என்று Pike எழுதிய 'Constitutional History of the House of Lords' எனும் நூலின் 233ஆம் பக்கத்தில் கூறப்பட்டுள்ளது. இச் செய்தியில் உள்ள ஐயப்பாடுகள் யாவற்றையும் நீக்கும் பாராளுமன்றச் சிறப்புச் சட்டங்கள், வாரன் ஹேஸ்டிங்ஸ், மெல்வில் வைகவுன்ட் பிரபு (Viscount Melville) ஆகியோருடைய வழக்குகளில் இயற்றப்பட்டன. 'மேலும், அப்போது வந்த தனிப்பட்ட வழக்குகளைப் பற்றியதாகவே இச் சட்டங்கள் அமைவதால், பிற்காலத்தில்

வரக்கூடிய அரசியல் குற்ற வழக்கில் இவ்வித முன்னிகழ்வு கள் பயன்பட முடியும்' என்று 'Constitutional History of the House of Lords' என்னும் நூலின் 234ஆம் பக்கத்தில் பைக் என்பார் எழுதியுள்ளார்.

44. 'Rotuli Parliamentorum' அதி. ii, பக்கங்கள் 53, 54. Hallam, எழுதிய 'Constitutional History', ii, பக்கம் 446. அரசத் தலையீடு இல்லாதது அரசியல் குற்றச்சாட்டு என்பதை ஏற்றுக்கொண்டால்தான் வாசகத்தில் பெர்ஃபோர்டின் வழக்கினைத் தனியாகப் பிரித்துப் பேசும் கொள்கை முறை யானதாகும். அத்தகைய கருத்து எத்துணைப் பழமை யானது என்பது தெரியவில்லை. இரண்டாம் ரிச்சர்டும், முதலாம் சார்லஸும் அதனை ஐயக்கண் கொண்டே நோக்கினர்.

45. மேலே உள்ள மெயின்வாரிங் வழக்கினை நோக்குக.

46. 1681ஆம் ஆண்டு மார்ச் மாதம் 26ஆம் தேதி சார்ந்த 'Commons' Journal' ஐக் காண்க.

47. மறைபொருளான இவ் வழக்குபற்றி டேவிட் ஆக் (David Ogg) எழுதிய 'Charles II' அதி. ii, பக்கங்கள் 617, 624-ல் விளக்கம் காணலாம்.

48. 'Lords' Jaurnal', அதி. xiv, பக்கம் 260, 262-264; May எழுதிய 'Parliamentary Practice' என்னும் நூலின் 1924ஆம் ஆண்டு வெளிவந்த 13ஆம் தொகுப்பின் 652ஆம் பக்கம் பார்க்கவும்.

49. 'State Trials' பக்கம் 233.

50. 'Constitutional History', அதி. iii, பக்கம் 204.

51. 'Lockhart Papers' அதி. i, பக்கம் 312.

52. Keith Feiling எழுதிய 'Second Tory Party' பக்கம் 411. A. S. Turberville எழுதிய 'House of Lords in the Eighteenth Century' பக்கம் 96. Lecky எழுதிய 'History of England' அதி. i, பக்கம் 63.

53. May எழுதிய 'Constitutional History' அதி. ii, பக்கம் 93.

54. பிரபுக்கள் சபையினின்று திருச்சபை அதிகாரிகளை அடியோடு நீக்கிட வேண்டுமென்பதற்கான முயற்சிகள் *1834, 1836, 1837*ஆம் ஆண்டுகளில் நடைபெற்று இருக்கின்றன. ஆனுல், அவை யாவும் தோல்வியே கண்டன. எவ்வாறெனினும், மேல் சபையில் இருந்த பிஷப்புகளின் எண்ணிக்கை அப்போதிருந்த இருபத்தி ஆறுக்கு மேல் செல்லக் கூடாது என்பதை *1847*ஆம் ஆண்டில் மான்செஸ்டரில் புதிய பிஷப் பதவி தோற்றுவிக்கப்பெற்றபோது சட்ட மன்றம் முடிவு செய்தது. (விக்டோரியா அரசியாரின் *10, 11*ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.) இரு ஆர்ச் பிஷப்புகளும் லண்டன், டர்ஹாம், வின்செஸ்டர் ஆகியவற்றின் பிஷப்புகளும் எப்போதும் பாராளுமன்றத்தில் அமரும் உரிமை கொண்டவர்கள். ஆயின், எவ்வகையிலும் பாராளுமன்றத்தின் பிரபுவாக அல்லாத பிஷப்புகளைக் கொண்ட சோடோர் (Sodor), மேன் (Man) ஆகியவை நீங்கலாகவுள்ள பிஷப்புகள் ஸ்தானத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பெறும் இறுதி பிஷப்பானவர் மற்ருெரு காலியிடம் வரும்வரையில் பாராளுமன்றப் பதவிக்கு உரிமை கொண்டாட முடியாது. May எழுதிய 'Constitutional History' அதி. i, பக்கம் *301*. Pike எழுதிய 'Constitutional History of the House of Lords பக்கம் *369*. Anson எழுதிய 'Law and Custom of the Constitution' தொகுதி i, பக்கம் *210*.

55. பின் தொடர்ந்த விளக்கங்களுக்கு May எழுதிய 'Constitutional History' அதி. i, பக்கம் *192*ஐப் பார்க்கவும். Holdsworth எழுதிய 'History of English Law' அதி. xi, பக்கம் *6*; Turberville எழுதிய 'House of Lords in the Eighteenth Century' அதி. v.

56. Lecky எழுதிய 'History of England' அதிகாரம் 2-ல் செல்வந்தர் ஆட்சிபற்றிய கட்டுரையைக் காண்க. அது *1877*ஆம் ஆண்டில் எழுதப்பெற்றது என்ருலும் இத்துறையில் *18*ஆம் நூற்ருண்டின் எண்ணத்தை சிறந்த முறையில் வெளிப்படுத்துகிறது.

57. *1713*ஆம் ஆண்டைய மாவுச் சட்டமும், ஆன் அரசியின் ஏழாம் ஆட்சியாண்டில் நிறைவேறிய ஸ்காட்டிய அரசத் துரோகக் குற்றச் சட்டத்தைத் திருத்தவந்த சட்டமும் எடுத்துக்காட்டுகளாகும்.

58. இரு சபைகளுக்கிடையே முரண்பாடு தோன்றுவதற்கு சிறப்புரிமை பயனுள்ள காரணமாகத் தொடர்ந்து வந்தது என்பதை ஆஷ்பிக்கும் ஒயிட்டிற்கும் இடையேயான வழக்குச் செயல் நிகழ்வுகள் நிரூபித்தன.

59. Turberville எழுதிய 'House of Lords in the Eighteenth Century' எனும் நூலில் 44ஆம் பக்கத்தில் இந் நிகழ்ச்சி பற்றிய செய்தியைக் காணலாம்.

60. அச் சமயத்திலிருந்த சிக்கல் நிறைந்த அரசியல் நிலையினை, Turberwille எழுதிய மேலே குறிப்பிடப்பெற்ற நூலின் 111-118, 155ஆம் பக்கங்களிலும், Keith Feiling எழுதிய 'The Second Tory Party' என்னும் நூலின் 424—445ஆம் பக்கங்களிலும் காண்க. உட்ரக்ட் (Utrecht) உடன் படிக்கையே முக்கியப் பிரச்சினையாக இருந்தது.

61. பின்னால் 20ஆம் அத்தியாயம் காண்க.

62. பின்னால் 20ஆம் அத்தியாயம் காண்க. இதற்குப் பிரதியாகப் புறச் சமயத்தவரை விக்குகள் கைவிட்டனர். சமாதானத்திற்கெதிராக நாட்டிங்காமின் உதவியைப் பெறுவதற்காகத் தங்களது சமயப்பொறைக் கொள்கையையே அவர்கள் புறக்கணித்தனர்.

63. Burnet, அதி. vi, பக்கம் 95.

64. அதே நூல், பக்கம் 99.

65. 'English Historical Review,' xxviii, 1913-ல் E. R. Turner எழுதிய 'The Peerage Bill of 1719' என்னும் கட்டுரையைக் காண்க. Turberville எழுதிய 'The House of Lords in the Eighteenth Century' ஆறும் அதிகாரத்தையும் காண்க. வால்போலின் பேச்சை C. S. Emden எழுதிய 'Speeches on the Constitution' அதி. i, பக்கங்கள் 105-111 ஐப் பார்க்கவும்.

66. Bagehot எழுதிய 'English Constitution,' பக்கம் 229.

67. May எழுதிய 'Constitutional History,' அதி. i, பக்கம் 278-ல் எடுத்து எழுதப்பெற்ற 1789ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பதினாறும் நாள் ஆற்றிய சொற்பொழிவு.

68. மேலே குறிப்பிடப்பெற்ற Turberville எழுதிய நூலின் 419ஆம் பக்கத்தில் தரப்படும் எடுத்துக்காட்டுகளைக் காண்க.

69. ஸ்காட்டிய பிரபுக்களையும், ஐரிஷ் பிரபுக்களையும் நடத்திய முறையில் பிற வேற்றுமைகளும் இருந்தன. ஸ்காட்லாந்து ஐக்கியத்திற்குப் பிறகு புதிய ஸ்காட்டியப் பிரபுக்களை அரசர் நியமிக்க முடியாது. ஆயின், அப்போதிருந்த ஸ்காட்டியப் பிரபுக்களின் எண்ணிக்கை நிரந்தரமாகியது. எனினும், அயர்லாந்துடனை ஐக்கியம் ஏற்பட்டபோது அந் நாட்டில் இருந்த அளவுக்குமீறிய பிரபுக்களின் எண்ணிக்கையைப் படிப்படியாகக் குறைக்க உறுதி பூண்டனர். அதனால்தான் ஐரிஷ் பிரபுக்களின் எண்ணிக்கை 100 ஆகக் குறையும் வரையில், மறையும் மூன்று பிரபுக்களுக்கு ஒரே பிரபுவைத்தான் நியமிக்க வேண்டுமென்று ஐக்கியச் சட்டம் வகுத்தது. அந்த அளவை எட்டிய பிறகு மறையும் ஒவ்வோர் ஐரிஷ் பிரபுவுக்கும் பதிலாக வேறொரு பிரபுவை நியமிக்க வேண்டும். அதேபோன்று மரபுரிமையாலோ அல்லது நியமனத்தின் மூலமாகவோ யுனைடெட் கிங்டமின் பிரபுவாகும் தகுதிபெறும் ஒவ்வோர் ஐரிஷ் பிரபுவுக்கும் பதிலாக வேறோர் ஐரிஷ் பிரபுவை நியமிக்கவேண்டும். மேலும் அயர்லாந்தில் அல்லாது இங்கிலாந்தில் வாக்காளர் தொகுதியில் தேர்ந்தெடுக்கப்பெறும் ஐரிஷ் பிரபுக்களுக்குக் காமன்ஸ் சபையில் அங்கம் வகிக்கும் உரிமை அளிக்கப்பெற்றது. காலப்போக்கில் ஐரிஷ், ஸ்காட்டிய பிரபுத்துவங்கள் படிப்படியாக யுனைடெட் கிங்டமின் பிரபுத்துவத்தோடு கலந்திருக்கின்றன. ஸ்காட்டிய பிரபுக்களுக்குக் குறைந்த அளவில் பிரதிநிதித்துவம் இருப்பதைச் சரிசெய்வதற்காக சமீப ஆண்டுகளில் பிரிட்டனின் பிரபுக்கள் சபையில் மரபுரிமையாக வரும் உறுப்பினர் பதவிகளைத் தாராளமாக அவர்களுக்கு வழங்கினர். ஸ்காட்டிய, ஐரிஷ் பிரபுக்களின் தேர்தல்முறைபற்றியும், அவர்தம் நிலைபற்றியும் L. O. Pike எழுதிய 'Constitutional History of the House of Lords' என்னும் நூலின் 358ஆம் பக்கத்தில் காண்க. மேலும், Anson எழுதிய 'Law and Custom' என்னும் நூலின் முதல் அதிகாரம் 219—222 பக்கங்களையும் பார்க்கவும்.

70. 1874ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்ற 'Short History of the English People,' பக்கம் 792.

71. 1846ஆம் ஆண்டில் தானிய இறக்குமதி மசோதாவின் (Corn Importation Act) இரண்டாம் வாசிப்பை எதிர்த்துப் பேசிய டர்பி ஏர்ல் பிரபு பின்வருமாறு குறிப்பிட்டார்: 'பிரபுக்களே, நன்கு ஆராயாத, தகுதியற்ற மசோதாவைப் பயனுள்ள வகையில் தடுப்பதும், மக்களுடைய அறிவீனத்தினுல் வரும் விளைவுகளில் இருந்து அவர்களைக் காப்பதுமே இச் சபையின் அரசியல் அமைப்புச் சார்ந்த பயன் என நான் கருதுகிறேன். ஆர்ந்தமர்ந்து செய்யப்பெற்று, தொடர்ந்து வரும் பொதுமக்கள் கருத்தினைத் தடுத்து நிறுத்தும்வழியில் இச் சபை எப்போதும் சென்றதில்லை. அத்தகைய கருத்து வெளிப்படும்போது எப்போதும் பணிந்தீர்கள், இனி எப்போதும் பணிவீர்கள். ஆனுல், மீளமுடியாத கேடுகளை விளைக்கும் அவசரச் சட்டங்களைத் தடைசெய்யும் கடமை உங்களுக்கு உண்டு.' (Hansard 'Debates' lxxxvi, பக்கம் 1175.) இதேபோன்று 1858ஆம் ஆண்டில் உறுதிமொழிகள் மசோதாவின் (Oaths Bill) இரண்டாம் வாசிப்பின்போது பேசிய லிண்ட்ஹர்ஸ்ட் பிரபு (Lord Lyndhurst) பின்வருமாறு பிரபுக்கள் சபையில் குறிப்பிட்டார்: 'மசோதா கொண்டு வருவது நமது கடமையின் ஒரு பகுதி. ஆனுல், அதே சமயத்தில் மற்ற சபையிலிருந்து வரும் தகுதியற்ற, அவசரமான, நன்கு ஆராயப்படாத, முற்றிலும் உணரப்பெருத மசோதாவைத் தடுத்து நிறுத்துவதும், நமது கடமையின் மிகமுக்கியப் பகுதியாக இருக்கின்றது. ஆலோசனைக்கான அவகாசம் தருதல் வேண்டும். வாக்காளரைக் கலக்கவும், அவர்களுடைய கருத்துகளை மாற்றியமைப்பதற்கும் போதிய காலத்தை அளிக்கவேண்டும். எனினும், பொதுமக்களுடைய ஆதரவுடன் பாராளுமன்றத்தின் மற்ற சபை கொண்ட கருத்திற்கெதிராக உறுதியான, தளராத, விடாப்பிடியான நிலையை நாம் மேற்கொள்ள வேண்டுமென்று நான் கருதவில்லை. அந் நிலையை நடைமுறையில் கொண்டு செலுத்துவதும் சாத்தியமில்லை. அதிலும் மற்ற சபையில் அமைப்பையும், பொதுமக்களுடைய உரிமையையும் ஏதோ ஒருவகையில் பாதிக்கும் பிரச்சினைகளில் அத்தகைய நிலை கொள்ளுதல் அழகன்று. அத்தகைய நிலையை நாம் மேற்கொள்வதானுல், இடர்களை ஏற்கத் தயாராக இருக்கவேண்டும். (Hansard, 'Debates', çxlix, பக்கம் 1770.)

72. 'சீர்திருத்த மசோதாவை நிறைவேற்றுவதற்குப் போதுமான எண்ணிக்கை கொண்ட பிரபுக்களை நியமனம் செய்ய கிரே ஏர்ல் பிரபுவுக்கும் மேல் மன்றத் தலைவருக்கும் அரசர் அனுமதி வழங்குகிறார். பிரபுக்களின் மூத்த புதல்வர் முதலில் அழைக்கப்பெறுதல் வேண்டும். இப்படிக்கு அரசர் வில்லியம், வின்ட்சர் மாளிகை, 1832ஆம் ஆண்டு மே திங்கள் 17ஆம் நாள்' என்று Roebuck எழுதிய 'History of the Whig Ministry' என்னும் நூல், அதிகாரம் ii, பக்கங்கள் 331,333-ல் இருப்பதை May தாம் எழுதிய 'Constitutional History', அதிகாரம் i, பக்கம் 312-ல் எடுத்து எழுதியுள்ளார்.

73. Hansard, 'Debates', மூன்றும் தொகுதி, அதி. xii, பக்கம் 1006 (17—5—1832), May எழுதிய நூலின் இரண்டாம் அதிகாரம் 314ஆம் பக்கத்தில் இது எடுத்து எழுதப் பெற்றுள்ளது.

74. May எழுதிய 'Constitutional History', அதி. i, பக்கம் 307.

75. E. Fitzmaurice எழுதிய 'Life of Lord Granville', அதி. ii, பக்கங்கள் 15-18. Turberville எழுதிய 'House of Lords in the Eighteenth Century', பக்கம் 115, குறிப்பு 3-ல் இதனைக் காண்க.

76. Morley எழுதிய 'Life of Gladstone', அதி. iii, பக்கம் 130.

77. C. S. Emden எழுதிய 'Select Speeches on the Constitution' (World's Classics), அதி. i, பக்கங்கள் 151—158-ல் ஜூன் மாதம் 24ஆம் தேதியன்று காம்பெல்-பானர்மெனுடைய பேச்சைக் காணலாம்.

78. இந் நூலின் இரண்டாம் தொகுதியைக் காண்க.

79. May எழுதிய 'Constitutional History', அதி. ii, பக்கம் 104-112. May எழுதிய 'Parliamentary Practice' என்னும் நூல் 563-576ஆம் பக்கங்களில் சில சொற்பொழிவுகளைக் காணலாம். தீர்மானங்களில் முழு வாசகங்களை C. S. Emden எழுதிய 'Select Speeches on the Constitution' (World's Classics), அதி. i, 137-154ஆம் பக்கங்களில் காண்க. இதே

கொள்கையை எப்போதும் காமன்ஸ் சபை பின்பற்றுமானால், பணமசோதாவைத் தடை செய்யும் அதிகாரத்தைக் கூடப் பிரபுக்கள் சபை இழக்கவேண்டும்; அல்லது அவ்வதிகாரத்தை நிலைநாட்டுவதற்காகப் பொது வருமானம், செலவு ஆகியவைபற்றிய மசோதாக்கள் யாவற்றையும் தடை செய்யவேண்டியிருக்கும்போல் தோன்றுகிறது' என்று 'Constitutional History of the House of Lords' என்னும் நூலில் 345ஆம் பக்கத்தில் Pike எழுதியுள்ளார். திருவாளர் பைக்கினுடைய முன்னறிவிப்பு உண்மையாகியது.

80. இத்தகைய எடுத்துக்காட்டுகளுக்கு M. A. Thomson எழுதிய 'Constitutional History', அதி. iv, பக்கங்கள் 97-100, 204-205; David Ogg எழுதிய 'Charles II' அதி. ii, பக்கம் 472 பார்க்கவும்.

81. A. S. Turberville எழுதிய 'House of Lords in the Eighteenth Century', பக்கம் 55, 57, 72.

82. Maitland எழுதிய 'Constitutional History', பக்கம் 399.

83. 'பண மசோதாவை' வரையறுத்து, சில சூழ்நிலைகளில் அந்த வரையறையைச் செயற்படுத்தும் அதிகாரத்தைச் சபாநாயகருக்கு அளித்த 1911ஆம் ஆண்டுப் பாராளுமன்றச் சட்டத்தின் பகுதி 1 (2) ஐப் பார்க்கவும்.

84. C. S. Emden எழுதிய 'Select Speeches', அதி. i, பக்கங்கள் 38—52, 165—199-ல் இந் நெருக்கடியின்போது நடைபெற்ற விவாதங்களின் பகுதிகளைக் காணலாம்.

85. Hansard எழுதிய 1910ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்து 'Parliamentary Debates'ஐப் பார்க்கவும். மீண்டும் சமர்ப்பிக்கப்பெற்ற 1909ஆம் ஆண்டின் வரவு செலவுத் திட்டத்தைக் காமன்ஸ் சபை நிறைவேற்றியது. இறுதியாகப் பிரபுக்கள் சபை ஏற்றுக்கொண்ட பிறகு ஏப்ரல் மாதம் 29ஆம் தேதி மன்னரின் இசைவினைப்பெற்ற இந்த வரவுசெலவுத் திட்டம், அது முதலில் கொண்டுவரப்பட்ட ஓராண்டுக் காலம் கழித்தே சட்டமாகியது.

86. அரசாங்கத்தின் சார்பாக பிரதமரான மிஸ்டர் ஆஸ்க்வித், நிதியமைச்சரான மிஸ்டர் லாயிட் ஜார்ஜ், அயர்லாந்து அமைச்சரான மிஸ்டர் பிர்ரல் (Birrell), குடியேற்ற நாடுகளின் அமைச்சரான கிரீவ் ஏர்ல் பிரபு (Earl of Crewe) ஆகியோரும்; எதிர்க்கட்சியின் சார்பில் மிஸ்டர் பால்ஃபோர், மிஸ்டர் A. சேம்பர்லேன், லேன்ஸ்டவுன் பிரபு, காவ்டர் பிரபு (Cawdor) ஆகியோரும் மாநாட்டின் உறுப்பினர்கள். இந்த மாநாட்டின் நடவடிக்கைகள் இரகசியமாக நடந்தவை. ஆகையினால், அதனுடைய கருத்துகள் அயர்லாந்தின் குடியாட்சிக்கும் பொருந்தும் என்பது பற்றியே மாநாடு முரிந்தது என்ற காரணம் பல ஆண்டுகள் வரை வெளியில் தெரியாமலே இருந்தது. R. C. K. Ensor எழுதிய 'England, 1870—1914' என்னும் நூலின் 422ஆம் பக்கம் பார்க்கவும்.

87. பாராளுமன்றம் ஏற்கெனவே ஆராய்ந்த சட்ட முறையான கருத்துரைகளின் மீதான வாக்கெடுப்பே பொதுமக்கள் வாக்கெடுப்பு அல்லது குடிமக்கள் அனைவருடைய நேர்முக வாக்கு எனப்படுவது. இதுபோன்ற ஒரு திட்டத்தையே ரூசோ (Rousseau) தமது 'Le Contrat Social' என்னும் நூலில் கோடிட்டுக் காட்டியுள்ளார். 1793ஆம் ஆண்டில் இத் திட்டத்தினை ஃபிரான்ஸில் முயன்று பார்த்தபோதிலும், 1874ஆம் ஆண்டுவரையில் ஐரோப்பாவில் அது நடைமுறைக்கு வரவில்லை. அந்த ஆண்டிலேதான் அது ஸ்விட்சர்லாந்தில் வழக்கிற்கு வந்து, பெருமளவில் வெற்றிகரமாக நடந்துவருகின்றது. பெல்ஜியத்திலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் இத் திட்டம் அதிகப் பயன் தரவில்லை. ஆயின், ஆஸ்திரேலியக் குடியரசு அமைப்பில் அது இடம் பெற்றிருக்கிறது. இதனை Dicey எழுதிய 'Law of the Constitution' (8ஆம் தொகுப்பு, 1920), அதி. xci—c; Lowell எழுதிய 'Public Opinion and Popular Government', பக்கங்கள் 152—195 ஆகியவற்றில் பார்க்கவும்.

88. தன்னாட்சிபெற்ற பிரிட்டிஷ் குடியேற்றங்கள் பெரும்பாலானவற்றில் சட்ட மன்றத்தின் இரு சபைகளும் ஒன்றாகக் கூடும் வாய்ப்பு இருந்தது. அதேபோன்று குறிப்பாக நன்னம்பிக்கை முனை பாராளுமன்றத்திலும், பல ஆஸ்திரேலியக் குடியேற்றங்களிலும் கூட்டரசில் இணைந்த பல இராச்சியங்களின் சட்ட மன்றங்கள் ஒன்றாகக் கூடுவதற்கும் வாய்ப்பு இருந்தது.

89. என்சார் எழுதிய, 'England 1870—1914', பக்கம் 428; May எழுதிய, 'Constitutional History,' அதி. iii, பக்கம் 373 (Francis Hollond தொடர்ந்து எழுதிய நூல்).

90. பிரபுக்கள் சபையின் ஆகஸ்ட் 10ஆம் தேதி சார்ந்த 'Parliamentary Debates'; கர்ஸான் பிரபுவும் (Lord Curzon) ஹால்டேன் பிரபுவும் (Lord Haldane) ஆற்றிய சொற்பொழிவுகளின் பகுதிகளை Emden எழுதிய, 'Select Speeches on the Constitution', அதி. i, பக்கம் 38—52-ல் காண்க.

91. பாராளுமன்ற மசோதாவிற்கான திருத்தங்களை வலியுறுத்தாத நிலையில் பின்வரும் முறையில் உறுப்பினர் வாக்களித்தனர் : ஆதரவாக 131 பேரும் எதிராக 114 பேரும் வாக்களித்ததால், 17 பெரும்பான்மை வாக்குகளால் அம் மசோதா நிறைவேறியது. மேலே தரப்பட்டுள்ள சட்ட வாசகத்தில் பகர அடைப்புக் குறிகளுக்குள் வரும் வாசகங்களை 1949ஆம் ஆண்டுப் பாராளுமன்றச் சட்டம் திருத்தியமைத்தது. திருத்திய வாசகங்களைக் கொட்டை எழுத்துகளில் காணலாம்.

92. 1949ஆம் ஆண்டுப் பாராளுமன்றச் சட்டம் (ஆறும் ஜார்ஜ் மன்னரின் 12, 13, 14ஆம் ஆட்சியாண்டின் 99ஆம் சட்டம்).

93. பாராளுமன்றச் சட்டத்தின் அரசியல் அமைப்புச் சார்ந்த பயன்களின் விளக்கத்தை Dicey எழுதிய, 'Law of the Constitution', 8ஆம் தொகுப்பின் முன்னுரை, xviiiஆம் பக்கத்திலும் cxxixஆம் பக்கத்திலும் காண்க. மேலும், W. I. Jenning எழுதிய, 'Parliament', பக்கம் 399ஐயும் காண்க.

94. அதே நூலின் xxiii பக்கம் பார்க்க.

95. Stubbs எழுதிய, 'Constitutional History', அதி. iii, பக்கம் 454, குறிப்பு 2.

96. பிரபுத்துவப் பட்டங்களைச் சில ஜெர்மானிய சீமாட்டிகள் பெற்றனர். அவர்களில் சிலர் தங்களது பெயர்களுக்குப் பின் இப் பட்டங்களை வைத்துக்கொண்டனர். மேலும், அவர்களில் சிலர் ஆயுள்வரையில்தான் அப் பட்டத்திற்கு

உரியவராக இருந்தனர். A. S. Turberville எழுதிய, 'House of Lords in the Eighteenth Century', பக்கம் 417—418.

97. 'Constitutional History', அதி. i, பக்கம் 298. வென்ஸ்லிடேல் வழக்கிற்கு முன்பிருந்த ஆயுள் பிரபுக்களின் பட்டியலை G. E. C. எழுதிய, 'Complete Peerage' (இரண்டாம் தொகுப்பு), அதி. viii, பக்கம் 751-ல் காண்க.

98. 1873ஆம் ஆண்டின் முறைமன்றச் சட்டம் வகுத்த வழி நடைமுறைக்கு வருவதற்கு முன்பே அதனை, 1875ஆம் ஆண்டின் முறைமன்றச் சட்டம் ரத்து செய்தது. (விக்டோரியா இராணியாரின் 38, 39ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.)

99. Pike எழுதிய, 'Constitutional History of the House of Lords', பக்கம் 383. [முதலாம் ஜேம்ஸின் ஸ்காட்டிய ஆதரவாளர்களில் ஒருவரான ஹே (Hay) என்பவரை, பிரபுக்கள் சபையில் இடம்பெறாத ஆயுள் பிரபுவாக 1606ஆம் ஆண்டு அரசர் நியமித்தார்.]

1. பல செய்திகள் பற்றிய மேலும் விரிவான விளக்கத்திற்கு Pike எழுதிய, 'Constitutional History of the House of Lords' என்னும் நூலின் 383ஆம் பக்கத்தையும், Anson எழுதிய, 'Law and Custom of the Constitution' என்னும் நூலின் ஐந்தாம் அதிகாரத்தையும் காண்க.

2. Pike எழுதிய, 'Constitutional History of the House of Lords', பக்கம் 384—387.

3. 'Parliamentary Papers' (1918) : 'Conference on the Reform of the Second Chamber'.

4. அதிலேயே நான்காம் பக்கம்.

5. அதிலேயே நான்காம், ஐந்தாம் பக்கங்கள்.

6. 'Parliamentary Papers' (1918), பக்கம் 5.

7. அதிலேயே 6 முதல் 9ஆம் பக்கம்வரையில்.

8. அதிலேயே 11ஆம் பக்கம்,

9. அதிலேயே 12ஆம் பக்கம்.

10. அதிலேயே 12ஆம் பக்கம்.

11. 1948ஆம் ஆண்டின் குற்ற வழக்குச் சட்டம் (Criminal Justice Act).

12. 1958ஆம் ஆண்டின் ஆயுள் பிரபுத்துவச் சட்டம் (Life Peerages Act).

13. இந் நூலின் முதல் தொகுதியைக் காண்க.

14. ஆயின், டியூடர் காலத்தில்தான் முதல் முறையாக வகையாள்களை அனுப்பிய நகரங்களில், 1545ஆம் ஆண்டு முதல் வெஸ்ட்மினிஸ்டரும், 1547ஆம் ஆண்டிலிருந்து பீட்டர் பரோவும், 1553ஆம் ஆண்டிலிருந்து மெய்டுஸ்டோனும் அத்தகைய உரிமை பெற்றவை. அதே சமயத்தில் முதலாம் எட்வர்டின் ஆட்சிக் காலத்திலிருந்து வகையாள்களை அனுப்பாதிருந்த லிவர்பூல் நகரமானது 1545ஆம் ஆண்டிலிருந்து தவறாது பிரதிநிதித்துவம் பெற்றிருந்தது. R. L. Poole தொகுத்த, 'Historical Atlas of Modern Europe' என்னும் நூலில் 23ஆம் தேசப்படத்தைப் பார்க்கவும்.

15. அந் நோக்கம் நிறைவேறவில்லை. இந் நூலின் முதலாம் தொகுதியைக் காண்க.

16. Glanville எழுதிய, 'Reports', அதி. ciiஐ மேற்கோள் காட்டி எழுதியதை May-ன் 'Constitutional History', அதி i, பக். 329-ல் காண்க. எப்போதாவது ஒரு முறை பாராளுமன்றத்திற்கு வகையாள்களை அனுப்பியிருந்தால் அப்படிப்பட்ட நகரங்களெல்லாம் அழைப்பாணையைப் பெறும் தகுதி கொண்டவை என்று பொதுமக்கள் உரிமைகளைப் போற்றுதற்காக முதலாம் ஜேம்ஸின் ஆட்சிக் காலத்தில் காமன்ஸ் சபை தீர்மானித்தது. இத் தீர்மானத்தின் விளைவாக முதலாம் ஜேம்ஸ் காலத்திலும், முதலாம் சார்லஸ் காலத்திலும் பதினைந்து பரோக்கள் பாராளுமன்ற வாக்குரிமையை மீண்டும் பெற்றன. இரண்டாம் சார்லஸின் 29ஆம் ஆட்சியாண்டுச் சட்டப்படி, பாலடைன் கவுன்டியும் டர்ஹாம் நகரமும் 1673ஆம் ஆண்டில்தான் முதல்

முறையாக வாக்குரிமை பெற்றன. Hallam எழுதிய 'Constitutional History', அதி. iii, பக்கம் 38.

17. யுனைடெட் கிங்டத்தைக் கவுன்டி தொகுதிகளாகவும் பரோ தொகுதிகளாகவும் புது வகையாகப் பிரித்த 1885ஆம் ஆண்டின் பாராளுமன்றப் பதவி பகிர்ந்தளிக்கும் சட்டமானது (Redistribution of Seats Act), பாராளுமன்றத்தின் உறுப்பினரின் எண்ணிக்கையை 67 ஆக உயர்த்தியது. இங்கிலாந்து ஆறு உறுப்பினரையும், ஸ்காட்லாந்து பன்னிரண்டு உறுப்பினரையும் அதிகமாகப்பெற்றன. 1918ஆம் ஆண்டின் மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்தினால் இவ்வெண்ணிக்கை மேலும் 707-க்கு உயர்ந்தது. வட அயர்லாந்து நீங்கலாக உள்ள பகுதிகளிலிருந்து வந்த ஐரிஷ் உறுப்பினர், அயர்லாந்து குடியரசு தோன்றியதும் காமன்ஸ் சபையிலிருந்து விலகியதால், அச் சபையில் 615 உறுப்பினரே மிஞ்சினர். தற்போது காமன்ஸ் சபையில் 640 உறுப்பினர் உள்ளனர்.

18. பொதுவாக Porritt எழுதிய, 'Unreformed House of Commons' எனும் நூலைக் காண்க. அந்த முறை செயற்பட்டதன் விளக்கத்தை, Sir John Neale எழுதிய, 'Elizabethan House of Commons' என்னும் நூலில் காண்க. அதிலே ஏற்கெனவே அம் முறை வேரூன்றியிருந்தது புலப்படும்.

19. இந் நூலின் முதலாம் தொகுப்பைக் காண்க.

20. 'Letters of Lord Chesterfield to his Son', அதி. vi, பக்கம் 269.

21. 'Life of Sir Samuel Romilly', அதி. ii, பக்கம் 200.

22. 'Parliamentary History', அதி. xvi, பக்கம் 397—402. Horace Walpole எழுதிய, 'Memoirs of George III,' அதி. iii, பக்கம் 153. May எழுதிய, 'Constitutional History,' அதி. i, பக்கம் 338.

23. Horace Walpole எழுதிய, 'Memoirs of the Reign of George III,' அதி. i, பக்கம் 42.

24. 'Parliamentary History,' அதி. xxii, பக்கம் 101. கருவூல முதற் பிரபுவின் நண்பராக இருந்த ஒருவருடைய செல்வாக்கினால் ஒரு பரோவிலிருந்த 500 வாக்காளர்களில் 120 பேர் அரசாங்கப் பதவி வகித்தனர் என்று ராக்கிங்காம் பிரபு கூறினார். மேலே குறிப்பிட்ட அதே நூலைக் காண்க. 1867ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டத்தின் விளைவாகத் தோன்றிய பெரிய தொகுதிகளில் தேவையற்றவையாக இருந்த ரெவினியூ அதிகாரிகள் மீதான வாக்களித்தல் பற்றிய தடைகளை, விக்டோரியா இராணியாரின் 31ஆம் 32ஆம் ஆட்சியாண்டுச் சட்டமும், 37ஆம் 38ஆம் ஆண்டுச் சட்டமும் நீக்கின.

25. May எழுதிய, 'Constitutional History,' அதி. i, பக்கம் 355, குறிப்பு 2. இச் செய்தி முழுவதையும் அதே நூலில் அதிகாரம் ஒன்று, பக்கங்கள் 327—334-ல் பார்க்கவும். Porritt எழுதிய, 'The Unreformed House of Commons', முதலாம் தொகுதி. Sir Lewis Namier எழுதிய, 'The Structrue of Politics at the Accession of George III'; இரு தொகுதிகளாக 1929ஆம் ஆண்டு வெளிவந்த இந் நூலானது பயனுள்ள பகுத்தறிவுடன் கூடிய நூலாகும்.

26. Hansard, அதி. vii, பக்கம் 529. May எழுதிய, 'Constitutional History,' அதி. i, பக்கம் 358.

27. Wakefiled எழுதிய, 'Statistical and Political Account of Ireland,' அதி. ii, பக்கம் 299. Oldfield எழுதிய, 'Representative History,' அதி. vi, பக்கம் 209. May எழுதிய, 'Constitutional History', அதி. i, பக்கம் 359. Porritt எழுதிய, 'The Unreformed House of Commons' என்னும் நூலின் இரண்டாம் தொகுதியிலும் பரவலாக உள்ளது.

28. 'Annual Register for 1793' என்னும் நூலில் 'Chronicle'-ன் பிற்சேர்க்கை, பக்கம் 83—99.

29. Oldfield எழுதிய, 'Representative History,' அதி. vi, பக்கம் 285-300. May எழுதிய, 'Constitutional History,' அதி. i, பக்கம் 362-ல் கண்டவாறு.

30. பாராளுமன்றப் பதவிகள் இரண்டையும் இரு குடும்பத்தினர் மாற்றி மாற்றிக்கொள்ள முடியும். '1722ஆம் ஆண்டிலிருந்து 1784ஆம் ஆண்டுவரையில் யார்மவுத்தி

லிருந்து வந்த வகையாள்களில் ஒருவர் டவுன்ஷண்டாகவும் மற்றவர் வால்போலாகவுமே இருந்தனர்'. இதனை Namier எழுதிய, 'Structure of Politics' என்னும் நூல், முதல் அதிகாரம், 129ஆம் பக்கத்தில் காண்க. 1715ஆம் ஆண்டிலிருந்து 1835ஆம் ஆண்டுவரையில் இடைவெளி ஏதுமின்றி டர்பியின் ஸ்தானங்களில் ஒன்றனை, காவண்டிஷ் குடும்பத்தவர் ஒருவரே வைத்திருந்தார். ஆனால், அவர்கள் இரு ஸ்தானங்களையும் கொள்ளவேண்டுமென்று முயலவில்லை. இதனையும் மேலே குறிப்பிட்ட நூலின் 131ஆம் பக்கத்தில் காணலாம். 1944ஆம் ஆண்டில் வேட்பாளராக நின்றவரும் ஒரு காவண்டிஷ் குடியினரே.

31. காவண்டிஷ்கள்போல எல்லோரும் பெருங் குடியைச் சார்ந்தவர்களல்லர். உதாரணமாக, 1678 முதல் 1885 வரை வென்லாக்கிலிருந்து தேர்ந்தெடுக்கப்பெற்ற ஃபாரஸ்டர் குடும்பத்தினரும், 1621 முதல் 1870 வரை பிரிட்ஜ்நார்த்தின் வகையாள்களாக இருந்த விட்மோர்களும், 1688 முதல் 1923 வரை லட்லோவிலிருந்து வந்த ஹெர்பர்ட்களும், கிளிவ்களும் முறையாகப் பிரதிநிதித்துவம் வகித்தனர். இதனை Namier எழுதிய மேலே குறிப்பிட்ட நூலின் அதி. ii, பக்கம் 301-ல் பார்க்கவும்.

32. 1761ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தலின்போது 315 தொகுதிகளில் 48 தொகுதிகளில் மட்டுமே தேர்தல் நடைபெற்றது. Namier எழுதிய நூலின் அதி. i, பக். 196.

33. மேலே பதினாறும் அதிகாரத்தில் காண்க.

34. மூன்றும் வில்லியத்தின் பதினோராம் ஆட்சியாண்டுச் சட்டம்.

35. மேலே பதினாறும் அதிகாரத்தில் காண்க. ஆன் அரசியாரின் 4—5ஆம் ஆட்சியாண்டுச் சட்டம். ('Statutes at Large'-ல் உள்ள சட்டம்).

36. ஆன் அரசியாரின் ஆறும் ஆட்சியாண்டின் 41ஆம் சட்டம் ('Statute at Large'-ல் உள்ள சட்டம்). பதவியாளின் எண்ணிக்கை உயர்வதைத் தடை செய்வதற்காக ஆணையாளர்களைப் பெருக்குவதிலும் சில வரையறைகள் விதிக்கப்

பெற்றன. ஸ்காட்டிய ஐக்கியம் இடையே வந்ததன் விளைவாகத் தோன்றிய இச் சட்டம் இரண்டாவது பாதுகாப்பாளர் சட்டமாகும். முன்பு செய்ததைப் போலவே பதவியாளர்பற்றிய சட்ட வாசகங்களையும் இச் சட்டத்தில் காமன்ஸ் சபையினர் இணைத்தனர்.

37. விக்டோரியா இராணியாரின் 30—31ஆம் ஆட்சியாண்டுச் சட்டம். இச் சட்டத்தின்கீழ் கிளாட்ஸ்டன் கொண்ட இடர்கள்பற்றி Morley எழுதிய, 'Life of Gladstone', அதி. ii, 465ஆம் பக்கம் பார்க்கவும்.

38. May எழுதிய, 'Constitutional History', அதி. i, 272ஆம் பக்கத்தில் எடுத்துரைக்கப்பெற்ற 1741ஆம் ஆண்டில் பிரபுக்களின் எதிர்ப்புகளைக் (Lords' Protests, 1741) காண்க. ஆன் அரசியார் காலத்து ஆங்கிலச் சட்டத்தின் கொள்கையை 179ஆம் ஆண்டில் ஐரிஷ் பாராளுமன்றம் ஏற்றுக்கொண்டது. அதேபோன்று அச் சட்டம் வந்த பிறகு நியமனம் பெற்ற துணைப் பிரபுவும் தகுதியற்றவர் எனக் கொண்டது. ஐக்கியம் ஏற்பட்டபோது யுனைடெட் கிங்டத்தின் பாராளுமன்றத்திற்கும் இத் தகுதிக்குறை விரிவடைந்தது. அதே சமயத்தில் மூன்றும் ஜார்ஜின் 41ஆம் ஆட்சியாண்டுச் சட்டத்தின் மூலமாக ஐரிஷ் பதவிகள் வகிப்பவர்கள் தகுதியற்றவர் ஆயினர்.

முதலாம் ஜார்ஜின் முதலாம் பாராளுமன்றத்தில் 271 உறுப்பினர்கள் பதவிகளும், உபகாரச் சம்பளங்களும், உம்பளப் பணிகளும் கொண்டிருந்தனர். இரண்டாம் ஜார்ஜின் முதலாம் பாராளுமன்றத்தில் அத்தகையோரின் எண்ணிக்கை 257ஆக இருந்தது. ஆனால், நான்காம் ஜார்ஜின் முதலாம் பாராளுமன்றத்தில் நிலப்படையிலும் கடற் படையிலும் இருந்த அதிகாரிகள் நீங்கலாக, அத்தகையோரின் எண்ணிக்கை எண்பத்தொன்பதுதான். 1833ஆம் ஆண்டில் பொதுத்துறைப் பதவிகளும் உபகாரச் சம்பளமும் பெற்ற 60 உறுப்பினரும், படைத் துறை அதிகாரிகளாகப் பதவி ஏற்றவர்களில் 83 உறுப்பினரும் மட்டுமே இருந்தனர். காமன்ஸ் சபையில் பதவிகள், உபகாரச் சம்பளங்கள் ஆகியவற்றிற்கு May எழுதிய, 'Constitutional History', அதி. i, 369—375ஆம் பக்கங்களைப் பார்க்கவும்.

39. இரண்டாம் ஜார்ஜின் பதினைந்தாம் ஆட்சியாண்டுச் சட்டம்.

40. மூன்றும் ஜார்ஜின் 22ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

41. பல சட்டங்கள் நிறைவேறியதால் தெளிவற்ற நிலையே தோன்றியது. இழப்பீட்டுச் சட்டங்கள் நிறைவேற்ற வேண்டிய அவசியம் அதிகமாக ஏற்படவில்லை.

42. முதலாம் ஜார்ஜின் முதல் ஆட்சியாண்டுச் சட்டம்.

43. மூன்றும் ஜார்ஜின் 22ஆம் ஆட்சியாண்டுச் சட்டம். தொலைபேசித் துறையில் கண்ட்ராக்டராக ஓர் உறுப்பினர் இருந்தார் என்பதையும், அதன் காரணமாக மன்றத்தில் அமர்ந்த ஒவ்வொரு நாளைக்கும் 500 பவுன்கள் அபராதம் செலுத்தவேண்டியிருந்தது என்பதையும் காலந்தாழ்ந்து கண்டறிந்ததன் விளைவாகவே 1931ஆம் ஆண்டின் காமன்ஸ் சபைச் (தகுதி நீக்க) சட்டம் நிறை வேற்றப்பட்டது. அரசாங்கத்தில் பதவி வகிப்போர் மன்ற உறுப்பினராகத் தகுதியற்றவர் என்று வகுத்ததன் மூலமாக அத் தகுதி நீக்கம் ஐக்கிய அரசு பராளுமன்றம் வரை விரிவுபடுத்தப்பட்டது.

44. இப்போது 1957ஆம் ஆண்டின் காமன்ஸ் சபையினர் தகுதி நீக்கச் சட்டத்தில் பெருமளவிலும், சிக்கல் மிகுந்ததாகவும் உள்ள இச் சட்டங்கள் அடங்குகின்றன.

45. Earl of Albemarle எழுதிய, 'Rockingham Memoirs', அதி. ii, பக்கம் 399.

46. 'Parliamentary History,' அதி. xv, பக்கம் 1035; Lord Mahon எழுதிய, 'History of England', அதி. v, பக்கம் 20; Lecky எழுதிய, 'History of England', அதி. i, பக்கம் 430.

47. Horace Walpole எழுதிய, 'Memoirs of George III', அதி. i, பக். 199. எவ்வித இழிவு உணர்ச்சியோ அல்லது பழிப்பு எண்ணமோ இன்றி அமைச்சர்கள் பிரபுக்கள் சபை உறுப்பினருக்கும் கையூட்டு வழங்கினுர்கள் என்பதை எடுத்துக்காட்டுவதற்காக சேயி, சீல் ஆகியவற்றின் பிரபுவானவர் (Lord Saye and Sele)

மிஸ்டர் G. கிரன்விலுக்கு எழுதிய மறக்கமுடியாத கடிதத்தைக் குறிப்பிடுவது வழக்கம். அக் கடிதம் பின்வருமாறு:

லண்டன்,
நவம்பர் 26, 1763.

தகவுடையோரே,

இன்று காலை என்னுடன் மனம்விட்டுப் பேசிய தற்காக நான் கடமைப்பட்டவனுவேன். அப்போது நான் பெற்ற பணத்தைவிட அவ்வுரையாடலையே பெரிதாக மதிக்கிறேன். தாங்கள் அளித்தபோது எனது நல்லியல்பின் நயம் காரணமாக மறுக்க முடியாது ஏற்றுக்கொண்ட 300 பவுன்களுக்கான உண்டியலை, எனது வாக்கின் வாய்மையை விளக்கும் வகையில் இக் கடிதத்துடன் வைத்து அனுப்புகிறேன்.

தங்களுக்கு அதிகக் கடமைப்பட்ட
பணிவான ஊழியன்,
**சேயி, சீலி.**

**பிற்குறிப்பு**: 'சுதந்திரக் குதிரைக்குக் குத்தூசி தேவையில்லாதது போல, அரசருக்கும், தற்போதைய அரசாங்கத்தில் இருக்கும் அன்னுரது நண்பர்களுக்கும் என்னுலான சிற்றுதவியைச் செய்வதற்குத் தூண்டுதலோ, கைக்கூலியோ தேவையில்லை'. Lecky-ன், 'History of England', அதி. i, பக்கம் 431-ல் எடுத்துரைக்கப்பெற்ற 'Grenville Correspondence,' அதி. iii, பக்கம் 145-146. Lewis Namier எழுதிய, 'Structure of Politics at the Accession of George III', அதி. i, பக்கம் 221—224-ல் பின்வரும் செய்தி தரப்படுகின்றது: கிளைவழியில் வந்த உறவினர் ஒருவரிடமிருந்து சேயி, சீலி பிரபு பட்டத்தைத் தான் மரபுரிமையாகப் பெற்ருர்; பெரும் பொருளையன்று. அத்தகைய சூழ்நிலையில் மன்னர் முறையாக அளித்த உபகாரச் சம்பளத்தின் ஒரு பகுதியாகவே அந்த 300 பவுன்கள் வழங்கப்பட்டன. இந்த வாசகத்தில் வரும் 25,000 பவுன்களின் பொருளாதார வரலாற்றிற்கு Namier எழுதிய மேலே குறிப்பிடப்பெற்ற நூலின் முதல் **அதிகாரம், 226—229ஆம் பக்கங்களைப் பார்க்கவும்.**

48. Namier எழுதிய மேலே குறிப்பிடபெற்ற நூல், அதி. i, பக்கம் 262—265.

49. இந் நூலின் இரண்டாம் தொகுதியைக் காண்க.

50. 1766ஆம் ஆண்டு ஜனவரி மாதம் மன்னரின் உரைமீதான விவாதங்கள். 'Parliamentary History', அதி. xvi, பக்கம் 100; அதி. xvii, பக்கம் 223; May எழுதிய, 'Constitutional History', அதி. i, பக்கம் 394. பிரபுக்கள் சபையில் இப் பிரச்சினையை 1770ஆம் ஆண்டில் கிளப்பினர். Emden எழுதிய, 'Select Speeches', அதி. ii, பக்கம் 111—112.

51. 'Constitutional History,' அதி. I, பக்கம் 394.

52. May எழுதிய, 'Constitutional History', அதி. i, பக்கம் 63.

53. 'Annual Register,' 1782ஆம் ஆண்டு வரலாறு, பக்கம் 181; 1783ஆம் ஆண்டு வரலாறு, பக்கம் 176.

54. 'Annual Register,' 1784—1785ஆம் ஆண்டுகள் வரலாறு, பக்கம் 189. Spencer Walpole எழுதிய, 'History of England,' அதி. ii, பக்கம் 263. May எழுதிய, 'Constitutional History,' அதி. i, பக்கம் 400.

55. தமது மசோதாவை வீழ்த்துவதற்காக மன்னர் அவரது செல்வாக்கைப் பயன்படுத்திவிடுவாரோ எனத் தாம் அஞ்சியதாகப் பொருள்படும் கடிதம் ஒன்றை பிட், மன்னருக்கு அனுப்பிவைத்தார். அதற்குப் பதிலாக ஜார்ஜ் மன்னர் பின்வருமாறு எழுதியிருந்தார்: 'பாராளுமன்றச் சீர்திருத்தத்தைத் துவக்குவது பற்றிய தமது கருத்தினை, பிட்டிடம் கொண்ட தனிப்பட்ட முறையிலான மதிப்புக் காரணமாக அவரிடமே அளிப்பதாக இருந்தது. ஆனால், 'இம் மசோதாவில் முதலிலேயே பிட் ஈடுபட்டது துரதிர்ஷ்டவசமானதே.' Tomline எழுதிய, 'Life of Pitt' (நான்காம் தொகுப்பு), அதி. ii, பக்கம் 40.

56. மேலே பதினெட்டாம் அதிகாரத்தைக் காண்க.

57. இவ்வியக்கம் பற்றிய முக்கிய விளக்கங்கள் பல உண்டு. G. S. Veitch எழுதிய, 'Genesis of Parliamentary Reform'; J. R. M. Butler எழுதிய, 'The Passing of the Great Reform Bill'; G. M. Trevelyan எழுதிய, 'Lord Grey of the Reform Bill'.

58. நான்காம் வில்லியத்தின் 2—3ஆம் ஆட்சியாண்டுச் சட்டம், 45.

59. நான்காம் வில்லியத்தின் 2—3ஆம் ஆட்சியாண்டுச் சட்டம், 65.

60. நான்காம் ஜார்ஜின் பத்தாம் ஆட்சியாண்டுச் சட்டம், 8.

61. நான்காம் வில்லியத்தின் 2—3ஆம் ஆட்சியாண்டுச் சட்டம், 88. 1850ஆம் ஆண்டில் எட்டுப் பவுன்கள் வருமானமுள்ள வீட்டுமனை உரிமையாளருக்கும் ஐரிஷ் பரோக்களில் வாக்குரிமை வழங்கப்பெற்றது. ஐந்து பவுன் ஆண்டு வருமானமுள்ள உரிமை மானிய தாரர்களுக்கும் பன்னிரண்டு பவுன்கள் வருவாயுள்ள மனைகளை வைத்திருப்போருக்கும் வாக்குரிமை வழங்கும் அளவிற்குக் கவுன்டி வாக்குரிமை தளர்த்தப்பட்டது. (விக்டோரியா இராணியாரின் 13—14ஆம் ஆட்சியாண்டுச் சட்டம், 69.)

62. 1852ஆம் ஆண்டில் பாமர்ஸ்டன் (Palmerston), E. L. Woodward எழுதிய, 'Age of Reform' என்னும் நூலில், 162ஆம் பக்கத்தில் எடுத்துரைக்கப்பட்டுள்ளார்.

63. இந் நூலின் முதலாம் தொகுதியைக் காண்க.

64. புகழ்பெற்ற 'பத்து நிமிடங்களுக்கு' (Ten minutes) Monypenny and Buckle எழுதிய, 'Life of Disraeli' (1929), அதி. ii, பக்கம் 234ஐப் பார்க்கவும்.

65. இந் நூலின் முதல் தொகுதியைக் காண்க.

66. விக்டோரியா மகாராணியாரின் 30—31ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்—102.

67. விக்டோரியா மகாராணியாரின் 35—36ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்—33.

68. May-யினுடையதைத் தொடர்ந்து Francis Holland எழுதிய, 'Constitutional History', அதி. iii, பக்கம் 18.

69. அதே நூல், அதி. iii, பக். 22.

70. ஒருசில பக்கங்கள் தள்ளிப் பார்க்கவும்.

71. இதன் காரணமாக இப்போது ஆண் வாக்காளரைவிடப் பெண் வாக்காளர் மிகுதியாக உள்ளனர்.

72. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வேட்பாளர் இருந்த போது பல்கலைக்கழகத் தேர்தல்களில் சரிவிதப் பிரதிநிதித்துவத் தேர்தல்முறைக் கொள்கை கையாளப்பட்டது. 1603ஆம் ஆண்டில் ஆக்ஸ்ஃபோர்டிற்கும் கேம்பிரிட்ஜுக்கும் முதலாம் ஜேம்ஸ் வாக்குரிமை வழங்கினர். லண்டன் பலகலைக்கழகத்திற்கும் ஸ்காட்டிய பல்கலைக்கழகங்களுக்கும் 1867ஆம் ஆண்டில் வாக்குரிமை அளிக்கப்பட்டது. ஆயின், 1948ஆம் ஆண்டின் மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் பல்கலைக்கழகப் பிரதிநிதித்துவத்தை நீக்கியது.

73. 1918ஆம் ஆண்டின் (அயர்லாந்து) மன்றப் பதவிகளின் மறுபகிர்ந்தளிப்புச் சட்டம். [The Redistribution of Seats (Ireland) Act] (ஐந்தாம் ஜார்ஜின் 7—8ஆம் ஆண்டுச் சட்டம்—65.)

75. M. McKisack எழுதிய, 'Parliamentary Representation of Boroughs', அதி. v. Pasquet எழுதிய, 'Origin of the House of Commons' (Laffan தொகுப்பு), பக்கம் 166; 'English Historical Review', அதி. xlviii, பக்கங்கள் 455—464; Latham எழுதிய, 'Collection of Wages of Knights of the Shire' என்னும் கட்டுரை; J. F. Willard and W. A. Morris தொகுத்த, 'English Government at Work'-ல் Plucknett எழுதிய, 'Parliament' என்னும் கட்டுரை. W. Prynne எழுதிய, 'Brief Register' தொகுதி iv-ல் பல அழைப்பாணைகள் இடம்பெற்றுள்ளன.

76. Prynne எழுதிய, 'Brief Register', அதி. iv, பக்கம் 540; Stubbs எழுதிய, 'Constitutional History', அதி. iii, பக்கம் 484.

77. 'Rotuli Parliamentorum', அதி. 258, குறிப்பு 23; பக்கம் 287, குறிப்பு 20.

78. Anson எழுதிய, 'Law and Custom of the Constitution,' தொகுதி i, பக்கம் 129.

79. இந் நூலின் முதல் தொகுதியைக் காண்க.

80. Hansard எழுதிய, 'Debates', இரண்டாம் தொகுதி, அதி. xxii, பக்கம் 678.

81. 'Osborne v. Amalgamated Society of Railway Servants' (1910), A. C. 87.

82. ஆரம்பக் கல்விக்காக முதல் முறையாகப் பொதுநிதி வழங்க இம் முறை 1833ஆம் ஆண்டில் பயன்பட்டது. 1937ஆம் ஆண்டில் பாராளுமன்ற ஊதியம் 600 பவுன்களாக உயர்ந்தது. அதனை அடுத்து அது மேலும் உயர்ந்தது.

83. மூன்றும் வில்லியத்தின் 12—13ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்—3; ஆன் அரசியாரின் 2—3ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்—12; இரண்டாம் ஜார்ஜின் 11ஆம் ஆண்டுச் சட்டம்—24. மேலே குறிப்பிட்ட ஊழல்களுக்கான உதாரணங்களை, Holdsworth எழுதிய, 'History of English Law' என்னும் நூலின் அதி. x, 545ஆம் பக்கத்தில் காண்க.

84. மூன்றும் ஜார்ஜின் 10ஆம் ஆண்டுச் சட்டம்—50.

85. 1734ஆம் ஆண்டில் எழுந்த கர்னல் பிட்டின் வழக்குப் பற்றிய குறிப்பினை May எழுதிய, 'Parliamentary Practice' (1924-ல் வெளிவந்த 13ஆம் தொகுப்பு), 115ஆம் பக்கத்தில் காணலாம். Anson எழுதிய, 'Law and Custom of the Constitution', தொகுதி i, பக்கங்கள் 154—157. பிரபுக்களிடமிருந்து சிறைப்படா உரிமையை நீக்கிவிடவில்லையெனினும், தீர்ப்பு அளிப்பதற்குமுன் இடைக்கால நடவடிக்கையாகக் கைதுசெய்வதை ஒருசில தனிப்பட்ட வழக்குகள் அன்றிப் பிறவற்றில் நீக்கும் சட்டம் 1838ஆம் ஆண்டில் நிறைவேறியதால், அவ்வுரிமையின் முக்கியத்துவம் குறைந்துவிட்டது. விக்டோரியா இராணியாரின் 1—2ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்—110. Pike எழுதிய, 'Constitutional History of the House of Lords' என்னும் நூலில் 259ஆம் பக்கம் பார்க்க. சாதாரண நீதிமன்றங்களை

அவமதித்ததற்காகச் சிறையிடல் என்ற இடர் மிகுந்த செய்திபற்றி இந் நூலின் இரண்டாம் தொகுதியில் 96ஆம் அடிக்குறிப்பில் காண்க.

86. இந் நூலின் இரண்டாம் தொகுதியைக் காண்க. சிறப்புரிமைகள் ஆணைக்குழுவின் மூலமாகத் தங்களது சபையின் அமைப்பைப் பொறுத்த வரையில் இதேபோன்ற அதிகாரத்தினைப் பிரபுக்கள் பயன்படுத்தினர். ஆயின், அதுபற்றி அரசர் சபையிடம் குறிப்பிடும்போது மட்டிலுமே அவ்வதிகாரத்தினைப் பிரபுக்கள் பயன்படுத்த முடியுமென்பதை அரசருக்கும் நோலிகளுக்குமிடையே 1695ஆம் ஆண்டில் நடந்த வழக்கில் தலைமை நீதிபதியான ஹோல்ட் (Holt) என்பார் வெற்றிகரமாக நிலைநாட்டினர். மேலும், தங்களுக்குச் சிறப்புரிமை உண்டு எனப் பிரபுக்கள் வலியுறுத்துவதாலேயே அது நீதிமன்றங்களைக் கட்டுப்படுத்தும் முடிவாக அமையாது என்றும் அறிவித்தார். Holdsworth எழுதிய, 'History of English Law', அதி. vi, பக்கங்கள் 270—271.

87. May எழுதிய, 'Constitutional History', அதி. i, பக்கங்கள் 362—369. 'பொதுக் கொள்கைப் பிரச்சினையின்மீது அல்லாது சிப்பன்ஹாம் தேர்தல் விண்ணப்பத்தில் அமைச்சர் தோல்வியுற்றதன் விளைவாக சர் ராபர்ட் வால்போலுக்கும் அவருடைய எதிரிகளுக்கும் இடையேயான போராட்டத்திற்கு 1741ஆம் ஆண்டில் ஒரு முடிவு ஏற்பட்டது. May எழுதிய, அதே நூலின் 364ஆம் பக்கம்.

88. மூன்றும் ஜார்ஜின் பத்தாம் ஆட்சியாண்டுச் சட்டம்—16; மூன்றும் ஜார்ஜின் பதினான்காம் ஆட்சியாண்டுச் சட்டத்தினால் நிரந்தரமாக்கப்பெற்றது.

89. விக்டோரியா இராணியாரின் 2, 3ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்—38. பல திருத்தச் சட்டங்கள் வந்தன.

90. விக்டோரியா இராணியாரின் 31, 32ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்—125.

91. இந் நூலின் முதல் தொகுதியில் 65ஆம் அடிக்குறிப்பைக் காண்க.

92. 'Commons' Journal', அதி. xiv, பக்கம் 308; Robertson எழுதிய, 'Documents', பக். 410—412,

93. 'State Trials', தொகுதி 14, பக்கம் 792-ல் தரப்பட்டுள்ள ஆஷ்பிக்கும் ஒயிட்டிற்கும் இடையேயான வழக்கில், மாநாடுகள்பற்றி 1704ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 27ஆம் தேதி வெளிவந்த பிரபுக்கள் சபை ஆணைக்குழுவின் அறிக்கை. மேலே குறிப்பிட்ட அதே நூலின் 695—888ஆம் பக்கங்களில் இந்த வழக்கின் முழு நடவடிக்கைகளும் தரப்பட்டுள்ளன. 'Lords' Journals', அதி. xvii, பக்கம் 534-ல் பிரபுக்கள் சபையின் தீர்மானத்தைக் காணலாம். Robertson எழுதிய, 'Documents', பக்கம் 412—413ஐயும் காண்க. Denman தொகுத்து எழுதிய Broom என்பாரின் 'Constitutional Law' என்னும் நூல் 846—868ஆம் பக்கங்களில் ஹோல்டினுடைய தீர்ப்பின் விரிவான குறிப்புகளைக் காணலாம். இந்த வழக்குப்பற்றிய விளக்கமும், அடுத்து அதனுடைய நிலையும் Holdsworth எழுதிய, 'History of English Law', அதி. vi, பக்கம் 271லும், அதி. x, பக்கம் 543லும் தரப்பட்டுள்ளன.

94. Hargrave எழுதிய, 'Judicial Arguments'ஐக் காண்க.

95. Holdsworth எழுதிய, 'History of English Law', அதி. vi, பக்கம் 271, குறிப்பு 2-ல் எடுத்துரைக்கப்பெற்ற 'நோலிக்களின் வழக்கு'. Hale எழுதிய, 'Jurisdiction of the Lords House', பக்கம் ccxxvii—ccxxx; முதலாம் ஜேம்ஸை இந் நூலின் இரண்டாம் தொகுதியில் காண்க.

96. மேலே அடிக்குறிப்பு 86ஐக் காணவும்.

97. இந் நூலின் இரண்டாம் தொகுதியைக் காண்க.

98. Stanhope எழுதிய, 'History of England', அதி. i, பக்கம் 398—400.

99. மன்றத்தினால் சிறையிடப்பெற்றவர் அம் மன்றக் கூட்டத் தொடர் முடிந்ததும் விடுதலையாவார் என்பது நீண்ட காலமாகவே நிலைநாட்டப்பெற்ற ஒன்று என்றபோதிலும், வெளியேற்றப்பட்டவர் பாராளுமன்றம் கலையும் வரையிலும் வெளியேற்றப்பட்டவராகவே இருக்க வேண்டுமென்பது கொள்கையளவில் இருந்ததாகத் தெரிகிறது.

1. Stanhope எழுதிய, 'History of England', அதி. v. பக்கம் 25-ல் வில்க்ஸினுடைய வாழ்க்கை பற்றிய சுவையான செய்திகளைக் காணலாம்.

2. இந்தக் குறிப்பிட்ட செய்தி பற்றி மேலே காண்க.

3. 1763ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், 24ஆம் தேதிய 'Commons' Journal'.

4. 1768ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதம், 24ஆம் தேதியன்று, நிதியமைச்சராக இருந்த நார்த் பிரபுவிற்கு, மூன்றும் ஜார்ஜ் மன்னர் பின்வருமாறு எழுதினுர்: 'எம்மிடம் உமக்குள்ள பற்றுதல் பற்றியும், முறையற்ற நடவடிக்கைகளில் உமது வெறுப்புப் பற்றியும் எமக்கு முழு நம்பிக்கை உண்டு எனினும், மிஸ்டர் வில்க்ஸை வெளியேற்றுவது அவசிய மாகின்றது என்பதை யாம் எடுத்துக் கூறுவது முறை யானது என்றே கருதுகின்றோம். அன்னுரை நிச்சயமாக வெளியேற்ற வேண்டும்'. Donne தொகுத்த, 'Correspondence of George III with Lord North', அதி. i, பக். 2.

5. சில பக்கங்களுக்கு மேலே காண்க. Holdsworth எழுதிய, 'History of English Law', அதி. x, பக்கம் 540—544-ல் இங்கே சற்றுமுன் குறிப்பிட்ட விவாதங்களைக் காணலாம்.

6. May எழுதிய, 'Parliamentary Practice' (1924ஆம் ஆண்டு வெளிவந்த 13ஆம் தொகுப்பு), பக்கம் 66.

7. Coke எழுதிய நூலின் அதி. i, பக்கம் 47.

8. இந் நூலின் 17ஆம் அதிகாரத்தைக் காண்க.

9. சில பக்கங்களுக்கு மேலே காண்க.

10. Anson எழுதிய, 'Law and Custom', அதி. i, பக்கம் 87.

11. இந் நூலின் இரண்டாம் தொகுதியைக் காண்க. Hallam எழுதிய, 'Constitutional History', அதி. iii, பக்கம் 279; Anson எழுதிய, 'Law and Custom', அதி. i, பக்கம் 360.

12. ஆர்ஃபோர்டு பிரபுவின், 'Memoirs of Last Ten Years of the Reign of George II, அதி. i, பக்கம் 24. காமன்ஸ் சபை மன்றத்தின் முன்னுல் கைதிகள் மண்டியிடவேண்டுமென்ற சபையின் அருவருப்பான வழக்கத்தை 1772ஆம் ஆண்டில் காமன்ஸ் நிலையாணை அகற்றியது. பிரபுக்களும் இவ்

வழக்கத்தினை மெதுவாக நிறுத்திவிட்டபோதிலும், சிறப்பு வழக்குரிமைகளில் தங்களது குறிப்பேடுகளில் பழைய பழக்கத்திற்கிணங்க அதைப்பற்றிக் குறிப்பிடுவதன் மூலமாக அவ் வழக்கம் இருந்ததுபோலக் காட்டினர். May எழுதிய, 'Constitutional History', அதி. ii, பக்கம் 75.

13. Anson எழுதிய, 'Law and Custom', அதி. i, பக்கம் 187.

14. Stanhope எழுதிய, 'History of England', அதி. iv, பக்கம் 28—30.

15. 1811ஆம் ஆண்டில் பர்டட்டுக்கும் ஆபெட்டிற்கும் இடையேயான வழக்கு. 'Annual Register for 1810', பக்கம் 67. May எழுதிய, 'Constitutional History', அதி. ii, பக்கம் 76. Keir and Lawson எழுதிய, 'Cases in Constitutional Law', பக்கம் 94.

16. 'Parliamentary History', அதி. x, பக்கம் 806. C. S. Emden எழுதிய, 'Speeches on the Constitution', அதி. i, பக்கம் 208. பாராளுமன்றத் தொடர் கூடாதபோது இத்தகைய வெளியீடுகளைத் தடைசெய்யும் உரிமை சபைக்கு உண்டா என்பதுபற்றிய ஐயம் அந்த விவாதத்தின்போதே எழுந்தது என்பதை மேலே குறிப்பிட்ட நூலின் 204ஆம் பக்கத்தில் காணலாம்.

17. 'Commons' Journal', அதி. ii, பக்கம் 411 (1641ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம், 2ஆம் தேதி).

18. அதே நூல், அதி. x, பக்கம் 74.

19. May எழுதிய, 'Constitutional History', அதி. ii, பக்கம் 34.

20. 'Parliamentary History' அதி. x, பக்கம் 809.

21. May எழுதிய, 'Constitutional History', அதி. ii, பக்கங்கள் 43—49. C. S. Emden எழுதிய 'Speeches on the Constitution', அதி. i, பக்கங்கள் 211—223.

22. Anson எழுதிய, 'Law and Custom', அதி. i, பக்கம் 162.

23. பெருந்தீ ஏற்படுவதற்கு ஒரு நூற்றாண்டிற்கு முன்னரே பழைய வெஸ்ட்மினிஸ்டர் அரண்மனைக்குப் பதிலாக நவீன

கட்டடம் அமைக்க வேண்டுமென்று எடுத்துரைக்கப் பட்டது. Lord Ilchester எழுதிய, 'Life of Henry Holland', அதி. i, பக்கம் 70ஐப் பார்க்கவும்.

24. May எழுதிய, 'Constitutional History', அதி. ii, பக்கம் 53.

25. 1839ஆம் ஆண்டில் ஸ்டாக்டேலுக்கும் ஹன்சார்டிற்கும் இடையே எழுந்த வழக்கு. Broom எழுதிய, 'Constitutional Law', பக்கம் 870. Keir and Lawson எழுதிய, 'Cases in Constitutional Law', பக்கம் 78. May எழுதிய, 'Constitutional History' அதி. ii, பக்கம் 78.

26. 1840ஆம் ஆண்டில் எழுந்த மிடில்செக்ஸின் மாவட்டத் தலைவரான ஷெரீஃபின் வழக்கு. Broom எழுதிய நூலின் 960ஆம் பக்கம்; Keir and Lawson எழுதிய நூலின் 92ஆம் பக்கம்.

27. விக்டோரியா இராணியாரின் 3—4ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்—9. சிறிது காலத்திற்குப் பிறகு காமன்ஸ் சபை அதிகாரிகளின்மீது ஸ்டாக்டேலின் வழக்குரைஞரான ஹோவர்டு (Howard) இரண்டு வழக்குகளைக் கொண்டு வந்தார். இந்த வழக்குகளில் சபாநாயகருடைய ஆணை முறைபிறழ்ந்ததாக இருந்தது என்பதனாலும், அதிகார வரம்பு கடந்ததாக இருந்தது என்பதனாலும் வாதிக்குச் சாதகமாகத் தீர்ப்பு அளிக்கப்பெற்றது. ஆனால், இரண்டாவது வழக்கில் வழங்கிய தீர்ப்பினை, பிழை யாணை மூலமாகக் கருவூல முறைமன்றம் மாற்றி யமைத்தது. 1842ஆம் ஆண்டு நடந்த ஹோவர்டிற்கும் கோசெட்டிற்கும் (Gossett) இடையேயான வழக்கு. Broom எழுதிய நூலின் 969ஆம் பக்கம் பார்க்கவும்.

28. 1868ஆம் ஆண்டில் வாசனுக்கும் வால்டருக்கும் (Wason v. Walter) இடையேயான வழக்கு. Keir and Lawson எழுதிய நூலின் 105ஆம் பக்கத்திற்குமேல் பார்க்கவும்.

29. இந் நூலின் முதலாம் தொகுதியைக் காண்க. 1566ஆம் ஆண்டில் தலைமை வழக்குரைஞராகவும் சபாநாயகராகவும் இருந்தவர் ரிச்சர்டு ஆன்ஸ்லோ (Richard Onslow).

30. 1802ஆம் ஆண்டில் சபாநாயகர் பதவியைவிட்டு நீங்கி, ரிடெஸ்டேல் (Redesdale) பிரபுவாக அயர்லாந்து அமைச்ச

ரான சர் ஜான் மிட்ஃபோர்டு (Sir John Mitford) ஒருவர் மட்டும் விதிவிலக்காக இருந்தார். சபாநாயகராக வருவதற்கு முன்னுல் தலைமைச் சட்ட அலுவலராக இருந்த சர் ஃபிளட்சர் நார்ட்டன் (Sir Fletcher Norton), தமக்குத் தலைமை நீதிபதி பதவி அளிப்பதாக வாக்குறுதி தரப் பெற்றது எனக் கூறியபோதிலும், அப் பதவியை அவர் அடையவில்லை. Lord Stanhope எழுதிய, 'History of England', அதி. vii, பக்கம் 15.

31. அதே சமயத்தில் சாதாரண, ஆனல், வருவாய்மிகுந்த சம்பளப் பட்டுவாடா தலைமை அதிகாரியாக இருந்தார்.

32. ஒரு சமயத்தில் நாவாய்ப் படையின் நிதியாளர் பதவியையும் ஒருசேர வகித்திருந்தார். சில கட்டணங்கள், குறிப்பாகத் தனியார் மசோதாக்களின்மீதான கட்டணங்கள் சபாநாயகருக்குக் கிடைத்தன என்ருலும், அப் பதவிக்கு ஊதியம் ஏதும் இல்லை.

33. A. I. Dasent எழுதிய, 'Speakers of the House of Commons', பக்கம் 226.

34. அரசருடைய உடல்நலக் குறைவு காரணமாக ஹென்றி அட்டிங்டன் சபாநாயகர் பதவியில் நிரந்தரமாக்கப்பெறவில்லை.

35. பிட்டின் குடும்ப மருத்துவரின் மகன் 1798ஆம் ஆண்டில் பிட்டிற்கும் (Pitt) டியர்னிக்கும் (Tierney) இடையே நடந்த போட்டியைக் காண்பதற்கென்று விம்பிள்டனுக்குச் (Wimbledon) சென்ருர்.

36. Dasent எழுதிய, 'Speakers', பக்கங்கள் 303—317.

37. W. Ivor Jennings எழுதிய, 'Parliament', பக்கம் 57.

38. அதே நூல், பக்கம் 55.

39. இந் நூலின் மேலே காண்க. பாராளுமன்றச் சட்டத்தின் கீழ்ச் சான்றிதழ் அளிக்கும் சபாநாயகத்தின் முக்கியத்துவம் பற்றியும், அது செயலாற்றும் விதம் பற்றியும் Jennings எழுதிய, 'Parliament' என்னும் நூலில் 61, 400—406ஆம் பக்கங்களைக் காணவும்.

# 19. நவீன கால அரசியல் முறையின் தோற்றம்

முந்திய அதிகாரங்களில், அரசுரிமை நிருணயச் சட்டத்தை ஆராய்ந்து, அதனுடைய பல வழிவகைகளினுல் எழுந்த பிரச்சினைகளைக் குறிப்பிட்டோம். ஆயின், புரட்சிக்குப் பிறகு அரசியல் அமைப்பிலே ஏற்பட்ட வளர்ச்சிபற்றி நிறையக் கூறவேண்டியதுள்ளது. மன்னருக்கும் பாராளுமன்றத்திற்கு மிடையே நுண்ணிய இணைப்பாக இருந்த காபினெட் சபையோடு 18ஆம் நூற்றுண்டில் வளர்ந்த உறுதியான அமைப்புப் பற்றியும், மந்திரிசபையையும் பாராளுமன்றத்தையும் பாதித்த வகையில் கட்சிகளின் தோற்றத்தைப்பற்றியும் இவ்வதிகாரத்தில் சுருக்கமாக ஆராய்வோம்.

## புரட்சிக்குப் பிறகு புரவலன் நிலை

**மன்னரின் தனிச்சிறப்புரிமைகள்:** புரட்சியின் விளைவாகத் தோன்றிய அரசியல் ஏற்பாட்டினுல் மன்னரின் சட்டமுறையான தனிச்சிறப்புரிமைகள் சிறிதளவே பாதிக்கப்பெற்றன. உயர் நிர்வாக அதிகாரத்தையும், இணையான சட்டமியற்றும் அதிகாரத்தையும் அரசர் கொண்டிருந்தது உண்மையே. அவர் தம் விருப்பப்படி பாராளுமன்றத்தைக் கூட்டினுர்; தள்ளிவைத்தார்; அல்லது கலைத்தார். மசோதாவிற்கு இசைவு தர அவர் மறுக்கலாம். நீதியின் நிலைக்களம் அவரே. அவர் பல நீதிமன்றங்களில் தலைவர்களாக இருப்பவரை நியமித்து முறை வழங்கும் பணியை மேற்கொண்டார். தலைமைக் குற்ற இயல் நடுவராகவும், அமைதியை நிலைநாட்டுபவராகவும் விளங்கிய அவரே பெயரளவில் குற்றவாளிகளின்மீது வழக்குத் தொடர்ந்தார். அதே நிலையில் தண்டனை அளிக்கப்பெற்ற

பிறகும் குற்றவாளிகளை அவரால் மன்னிக்கமுடியும். தலைமைத் தண்டநாயகர் என்ற வகையில் தரைப் படைகளையும் நாவாய்ப் படைகளையும் திரட்டுவதற்கும், ஒழுங்குசெய்வதற்கும், கலைப்பதற்கும் ஆன ஒரே அதிகாரியாக அவர் விளங்கினர். 'பட்டம் பதவிகளின் ஊற்ருக' இருந்த அவர், அதி அரசியல் முக்கியத்துவம்வாய்ந்த அதிகாரமான பிரபுக்களை நியமிக்கும் உரிமையினைப் பெற்றிருந்தார். மேலும், பட்டங்களையும், பதவி களையும், பலவகையான பணிகளையும் அவரே அளித்தார். நாட்டுச் சமயமான ஆங்கிலிகத் திருச்சபையின் சட்டமுறையான தலைவராகவும் தலைமை ஆளுநராகவும் திகழ்ந்தார். அந்த நிலையில் எல்லாவித சமயக் கூட்டங்கள் அல்லது மாநாடுகளைக் கூட்டவும், தள்ளிவைக்கவும், ஒழுங்குசெய்யவும், கலைக்கவும் ஆன உரிமை பெற்றிருந்தார். அந்நிய நாடுகளுடன் உறவு கொள்வதில் நாட்டின் பிரதிநிதியாக இருந்து தூதுவரை அனுப்பவும் வரவேற்கவும் உற்ற தனியதிகாரம் கொண்டிருந் தார். அதேபோன்று ஒப்பந்தங்களையும் உடன்படிக்கைகளையும் செய்துகொள்வதற்கும், சண்டையோ சமாதானமோ மேற் கொள்வதற்கும் ஆன ஒரே அதிகாரியாகவும் விளங்கினர்.

எப்படியும் புரட்சிக்குப்பிறகு ஏறக்குறைய 80 ஆண்டுகள் கழிந்து இத்தகைய நிலை இருந்தது என பிளாக்ஸ்டோன் (Blackstone) எடுத்துரைத்தார். அவருடைய கருத்தினை, நிலைமையை நன்கு உணரும் நிலையில் இருந்த அவர் காலத்தவரும் ஏற்றுக்கொண்டனர். ஆயின், இந் நிலையைச் சட்டமுறையில் நின்று விளக்குவதானல், சட்டப் புத்தகங்களில்[1] காணப்பெறும் பலவகையான சிறியனவும் பெரியனவும் ஆன வரையறைகளுக் குட்பட்டே மன்னரின் தனிச்சிறப்புரிமை இருந்தது எனலாம். தனிச்சிறப்புரிமை என்பது சட்டத்தின் ஒரு பகுதியே; அதற்குப் புறம்பானதும் அன்று மேலானதும் அன்று என்ற முக்கியக் கருத்தோடுதான் அவ்வுரிமைபற்றிய ஆராய்ச்சி அமையவேண்டு மென்பதை ஐயத்திற்கிடமின்றிச் செய்தது புகழ்பெற்ற புரட்சி.

**அரசியல் அமைப்பைச் சார்ந்த மரபுகள்** : எவ்வாருயினும், வழக்கறிஞரின் தனித்துறையான விளக்கத்திற்கு உட்படாத தாக, முறைமன்றங்களின் தீர்ப்பு என்னும் வழக்கறிஞரின் வழக்கமான கட்டளைக்கல்லிற்குக் கட்டுப்படாத வகையைச் சார்ந்த தகுதியே மிக முக்கியமானதாய் இருந்தது. சிறப் புரிமையை மரபுகள் வழியில் பயன்படுத்துவதால் வந்த தகுதியே அது. பழக்கம், நல்லுணர்வு, நல்லொழுக்கம், நடை

முறை சார்ந்த வசதி, சூழ்நிலைகளின் நெருக்கடி ஆகியவற்றின் அடிப்படையில் எழுந்ததே அவ்வகைத் தகுதியாகும். பதினெட்டாம் நூற்றாண்டில் சமுதாயத் தொடர்புகள் ஏதோ வழக்கங்களின் தொகுப்புப்போல மாறின. அவற்றினை நடைமுறையில் நன்கு பயன்படுத்த அறிந்தவர்கள் சமுதாயத் தொடர்பு கொள்வது எளிதாக இருந்தது. அதேபோன்று அரசர், அமைச்சர், பாராளுமன்றம் ஆகியோரிடையே உறவுமுறைகள் எளிதாக அமைவதற்கு ஏதுவாக இருந்தவை, வரையறுக்கப் பெற்ற வழக்கங்களாகும். வழக்கு முறைமைகளைப் பிறரும் அறிந்து அதன்படி நடப்பர் என்று மக்கள் கருதினர். அதன் காரணமாகச் சட்டங்களை வைத்துமட்டும் ஆங்கில அரசியல் அமைப்பினை விளக்க முடியாத அளவிற்கு வழக்கு முறைமைகள் மிக்க முக்கியத்துவம் வாய்ந்தவையாயின. மேலும், சமுதாய வழக்கு முறைமைகளைப்போலக் காலப்போக்கில் அரசியல் வழக்கு முறைமைகளும் மாற்றத்திற்கு உள்ளாகக்கூடியவை. புதியவாகப் புகுந்தவைபற்றிப் பழைய பாணியினர் புலம்பினர்கள். பிற்காலத்தில் வந்தவரோவெனின், வழக்கு முறைமைகளில் ஏற்பட்ட மாறுதல்களை அறியாதாராயின், முந்திய காலத்தைத் தவறாகப் புரிந்துகொள்ளும் பேரிடரில் சிக்க நேரிடும். மூன்றாம் ஜார்ஜின் ஆட்சியைப் பொறுத்தவரையில் இது முற்றிலும் உண்மையாகும். அவ்வாட்சிக் காலத்தில் இருந்த வழக்கு முறைமைகளை நாம் கவனத்தில் கொள்ளவில்லையானால், அதனைத் தவறாகப் புரிந்துகொண்டவர்களாவோம். நூலாசிரியர்களும் பத்திரிகையாளரும் பொதுக் காரியங்களின் பலவிதத் தன்மைகளையும் ஆராயும் இக்காலத்தைப்போன்று அல்லாது அந்நாளில் அரசியல் திட்டத்தை நடத்திச்சென்ற சிறு கூட்டத்தினர் மட்டுமே வழக்கு முறைமைகளைப்பற்றி விரிவாக அறிந்திருந்தனர்.

**அமைச்சர்கள் மூலமாகத் தனிச்சிறப்புரிமை செயற்பட்டது:** நடைமுறையில் இத்தகைய பெருவாரியான தனிச்சிறப்புரிமைகளை மன்னர் விருப்பப்படி பயன்படுத்துவது இல்லை. மாறாக, காமன்ஸ் சபையில் பெரும்பான்மையினரின் எண்ணத்தைப் பிரதிபலிக்கும் பொறுப்புவாய்ந்த அமைச்சர்களின் விருப்பப்படியே அவை செயற்பட்டன. மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது, 1688ஆம் ஆண்டுப் புரட்சியினால் இங்கிலாந்தின் இறைமை, ஜேம்ஸிடமிருந்து வில்லியத்திற்கும் மேரி அரசிக்கும் மாறியதுபோலத் தோன்றும். ஆனால், உண்மையில் மன்னரிடமிருந்த இறைமை காமன்ஸ் சபைக்கே மாறியது. உரிமைகள் மசோதா மூலமாக நாட்டில் வரிவிதிக்கும் தனி அதிகாரம்

காமன்ஸ் சபையிடம் வந்த நாளிலிருந்தே, அரசருக்கு ஆண்டு தோறும் மட்டுமே நிதி அளிப்பது என அச் சபை தீர்மானித்த காலத்திருந்தே அது நாட்டின் பிரதான சக்தியாகத் திகழத் தொடங்கியது. அம் மன்றத்தின் கூட்டத் தொடரை நிரந்தர மாகத் தள்ளிவைக்கவோ அல்லது அதனுடைய விருப்பத்தை நீண்ட காலம் எதிர்க்கவோ இயலாது. ஏனெனில், அவ்வாறு செய்வதால் அரசாங்கம் பணமின்றிப் பரிதவிக்க நேரிடும்; நிலப்படையும் கடற்படையும் கலைக்கப்பெற வேண்டிவரும்; பொதுப்பணித் துறைகளெல்லாம் செயலிழந்துவிடும்.[2]

பல நூற்றாண்டுகளாக மெதுவாக வளர்ந்த பிறகே இத்தகைய விளைவு ஏற்பட்டது. ஆட்சித் துறையிலும் சட்டத் துறையிலும் பரவிய பெருமளவினவான செயல்முறைகள் இடைக்காலத்தில் ஏற்கெனவே உருவாகியுள்ளன. அதன் விளைவாக அங்கீகாரம் பெற்ற அதிகாரிகளின் மூலமாகவும், வழக்கமான சம்பிரதாயங்களுடனும் மன்னர் செயலாற்ற வேண்டுமென்ற கருத்து வளர்ச்சியுற்றது. முதலில் அநேகமாக அறிவார்ந்த ஆட்சி முறையாக இருந்த இச் செயல்முறையின் அரசியல் விளைவுகள் காலப்போக்கில் தெளிவாயின. பிற்காலத் தில் மேலே கூறிய வழிகளில் அல்லாது, பிற வழிகளில் அரசர் செயலாற்ற முடியாது என்ற கருத்தினை உய்த்துணர முடிந்தது. அதே சமயத்தில் 1376ஆம் ஆண்டில் லாடிமர் பிரபு முதலாக 1701ஆம் ஆண்டில் சோமர்ஸ் பிரபுவும், 1715ஆம் ஆண்டில் ஆக்ஸ்போர்டு பிரபு ஈருகவும் உள்ள பலர்மீது கொண்டுவரப் பெற்ற அரசியல் துரோகக் குற்றச்சாட்டுகளின் மூலமாக, அமைச்சரின் அரசியல் காரியங்களுக்கு அவரே பொறுப்பானவர் என்பது வலியுறுத்தப்பட்டது. அதேபோன்று டான்பியன் வழக்கில் கண்டதைப்போல அரசருடைய வெளிப்படையான ஆணை அமைச்சருக்குப் பாதுகாப்பு அளிக்காது என்பதும் தெளிவாகியது.

**மன்னரின் சொந்த முறையிலான செல்வாக்கு :** 'நாட்டை ஆளுவதற்கென்று, தான் அறிந்த, நம்பிக்கை கொண்ட ஆள்களிலிருந்து சட்டசபை தேர்ந்தெடுத்த ஆளுநர் குழு'[3] என்று பொருத்தமாக வருணிக்கப்பெற்ற காபினெட் சபையின் வளர்ச்சியை ஆராயும்போது, அரசரின் நிர்வாக அதிகாரம் மெள்ள மெள்ளக் கைம்மாறிய விதம் நன்கு புலனாகும். புரட்சியின் விளைவாக மன்னரின் அதிகாரங்கள் வெகுவாகக் குறைந்துவிட்டபோதிலும், அரசாங்கக் காரியங்களில் நீண்ட காலத்திற்கு அவருடைய சொந்த முறையிலான செல்வாக்கு

வெளிப்படையாகவே தொடர்ந்து இருந்துவந்தது. இப்போதும் அது சக்தி வாய்ந்ததாக இருக்கிறது. அதன் சக்தி எத்துணை அளவிற்கு இருக்கின்றது என்பதை நாட்டின் தலைவரான மன்னருக்கும் அவர்தம் அமைச்சர்களுக்கும் இடையே இருக்கும் இரகசியமான தொடர்புகளில் பங்கு கொள்ளும் அவர்கள் மட்டுமே அறியமுடியும்.[4]

புரட்சிக்குப்பின் பல காரணங்களினால் மன்னரின் சொந்த முறையிலான செல்வாக்குக் குறைந்துவிட்டது. அரசுரிமைக்காக எழுந்த போட்டிதான் இவற்றில் முதலிடத்தைப் பெறுகிறது எனலாம். ஆன் அரசியார் இறந்த பிறகு ஆட்சிக்கு வந்த ஹனோவிரியரின் நிலை, பேராபத்திற்கு உள்ளானதாக இருந்தது. 1715ஆம் ஆண்டிலும் 1745ஆம் ஆண்டிலும் எழுந்த புரட்சிக் கலகங்களிலிருந்து, யாகோபியரின் சூழ்ச்சிகள் வலிவடைந்துவந்தன என்பது புலனாகும். புரட்சியின்போது நிரந்தரமாக நிராகரிக்கப்பெற்றது தெய்விக அரச உரிமை என்றபோதிலும், டோரி கட்சியினர் அதனைச் சிறிது காலத்திற்குத் தொடர்ந்து போற்றிவந்தனர். அதேபோன்று சாத்விகப் பணிவைப்பற்றியும், புரட்சிக் கலகத்தின் பாவத்தன்மையைப்பற்றியும் பெரும்பான்மையான திருச்சபையாளர் போதித்தனர். ஆனால், ஹனோவர் குடியினர் ஆட்சிக்கு வந்த பிறகு தெய்விக அரசுரிமைக் கோட்பாட்டில் நம்பிக்கை கொண்டவர்களும் நடைமுறையில் உண்மை அரசரிடம் அவ் வுரிமை இருந்ததாகக் கொள்ளாது ஸ்டுவேர்டு குல வாரிசிடமே அது இருந்ததாகக் கொண்டனர். மேலும், அவசியம் காரணமாக அரசு எய்துவதற்கு உறுதுணையாக இருந்த விக்கு கட்சியின் கைப்பாவையாக முதலாம் ஜார்ஜ் மன்னர் திகழ்ந்தார். கட்சிப் பகை காரணமாகவும், புதிய அரசகுலத்தின்மீதான வெறுப்புக் காரணமாகவும் டோரி கட்சியினர், இயற்கைக்கு மாறாக மன்னரின் தனியுரிமையை எதிர்த்தனர். வழிவழியாக வந்த உரிமை இல்லாதவர் என்பதாலும், தங்களது அரசியல் எதிரிகளுடன் இணைந்தவர் என்பதாலும் மன்னரின் சொந்த முறையிலான செல்வாக்கை டோரிகள் எதிர்த்தனர். இது ஒருபுறமிருக்க, மற்றொருபுறத்தில் காபினெட் முறை மூலமாகச் செயற்பட்ட கட்சி அரசியலின் வளர்ச்சியினால் அத்தகைய செல்வாக்குச் சரியத் தொடங்கியது.[5]

ஆன் அரசியார் மறைந்ததிலிருந்து, காபினெட் சபைக் கூட்டங்களுக்கு மன்னர் தலைமை தாங்குவது இல்லையென்பது, அவர்தம் சொந்த முறையிலான செல்வாக்குச் சரிந்ததனுடைய

முக்கியக் கூறுகும். காபினெட் சபைக் கூட்டங்களில் மன்னர் கலந்துகொள்ளும்போது தனிப்பட்ட அமைச்சர்கள் விவாதத்தில் மாறுபட்ட ஆலோசனைகளை வழங்குவார்கள். ஆனால், நடைமுறையில் இறுதி முடிவு எடுத்தல் மன்னருடையதாகவே இருந்தது. ஆனால், மன்னர், சபைக் கூட்டங்களில் கலந்துகொள்ளவில்லையானால், முழுக் காபினெட் சபையின் பெயரால் வரும் பரிந்துரையோடுகூடிய ஆலோசனையை ஏற்பது அல்லது நிராகரிப்பது என்பதைத் தவிர அவருக்கு வேறு வழியில்லை. ஆழ்ந்த அரசியல் ஆற்றல் பெற்றிருந்த மூன்றும் வில்லியம், தாமே தமது முதல் அமைச்சராகவும், வெளிநாட்டு அமைச்சராகவும், தானைத்தலைவராகவும் திகழ்ந்தார். ஆன் அரசியாரோ வெனின், காபினெட் சபைக் கூட்டங்களுக்குத் தவறாது தலைமை தாங்கியதோடு அவ்வப்போது பிரபுக்கள் சபையின் விவாதங்களிலும் கலந்துகொண்டார். முதலாம் ஜார்ஜ் பட்டத்திற்கு வந்தபிறகுதான், அன்னாருக்கு ஆங்கில மொழியறிவு இன்மையாலும், ஆங்கில அரசியலை அவர் அலட்சியப்படுத்தியதாலும் மன்னரின்றியே காபினெட் சபைக் கூட்டங்கள் நடைபெறும் வழக்கம் வந்தது. பாராளுமன்ற அரசாங்கமுறை[6] வளர்ச்சிக்கு இன்றியமையாதிருந்த இப் பழக்கம் அன்றிலிருந்து தொடர்வதைக் காணலாம். தலைசிறந்த ஒருவரை இணைப்பாளராகப் பயன்படுத்தும் (Optimus Interpres Usus) கொள்கை, இன்று அரசியல் அமைப்பில் நிலையான விதிமுறையாக வளர்ந்திருப்பதைக் காணலாம். எவ்வாறாயினும், சட்டமன்றமானது மூன்று சபைகளாக அன்றி இரண்டு சபைகளாகப் பிரிதல் போன்ற நமது அரசியல் அமைப்புக் கூறுகள் சிலவற்றில் காண்பதைப்போலவே, காபினெட் சபைக் கூட்டங்களுக்கு மன்னர் வராதிருத்தல், ஏதோ திட்டமிட்டுச் செய்ததாக இல்லாது இனிய எதிர்பாரா நிகழ்ச்சியின் விளைவுதான் என்பது போற்றுதற்குரியதாகும்.

தமது முப்பத்துமூன்று ஆண்டுக்கால நீள் ஆட்சியில் சட்ட வரம்பிற்குட்பட்ட மன்னரின் பொறுப்புகளை நிறைவேற்றி வைத்த இரண்டாம் ஜார்ஜ் பெருமைக்குரியவர். பெருந்தன்மையான நன்றியறிதலோடும், தமது நம்பிக்கைக்கு உரிய அமைச்சர்களுக்கு மாறாத ஆதரவு தருகின்ற வகையிலும், தமது சொந்தக் கருத்துகளை விட்டுக்கொடுத்தும் பொறுப்புகளை அவர் நிறைவேற்றினர். ஆயின், அவ்வாறு செய்தபோது மனவுளைச்சல் இல்லாமல் இல்லை. 'இந் நாட்டில் அமைச்சர்தாம் அரசராக இருக்கின்றனர்' என்று ஒரு முறை மனக்கசப்போடு அவர் கூறினர்.[7] அமைச்சரைத் தேர்ந்தெடுக்கும் தமது அதிகாரத்தைப் பயன்படுத்திச் சில சமயங்களில் தமக்குப் பிடிக்காதவர்கள்

அப் பதவியேற்பதைத் தடைசெய்தார். இவ்வகையில் 'மதிப்பிற்குரிய மக்கள் சபையினர்' என்று போற்றப்பெற்ற வில்லியம் பிட்டை வெகுவாக வெறுத்தார். அதற்குக் காரணம், மன்னர், ஹனோவிரியருக்கு அதிகச் சலுகைகள்[8] அளித்ததைக் காரசாரமாகத் தாக்கிய பிட், மன்னரின் மாறாப் பகைமையைத் தேடிக்கொண்டதுதான். ஆனால், இறுதியாக விட்டுக்கொடுத்து பிட்டினை அமைச்சராக ஏற்கவேண்டிவந்தபோது, அன்னாரை மனமார ஆதரித்தார். பதவியேற்ற சிறிது காலத்திற்குள், 'மன்னர் பெருமை, என்னை நம்புங்கள்; அதற்குத் தகுதியுடையவன் நான்' என்று பிட் கூறியதற்கு மறுமொழியாக, 'நம்பிக்கைக்கு உரியராக இருப்பின் அதனை நீவிர் பெறுவீர்' என மன்னர் மொழிந்தார். இவ் வாக்குறுதியை இறுதிவரை காத்தும் வந்தார்.[9]

**மன்னரின் வருவாய்:** 'மன்னரின் செலவுப் பட்டியல்' (Civil List) என்பது நீண்ட காலத்தில், சிக்கலான செயல் முறையோடு, மெதுவாக வளர்ந்த ஒன்றுதான்.[10] சொந்த நிலங்களிலிருந்து வந்த வருவாயும், இரண்டாம் சார்லஸ் காலத்தில் வழிவழியாக வரும் தீர்வையாக மாற்றியமைக்கப்பெற்ற சில நிலமானிய முறை சார்ந்த வருவாய்களும், மன்னர் அரசு எய்தும் போது அவரது ஆயுட்காலம் வரையிலும் என்று பாராளுமன்றம் அளிக்கும் வரிகளும், அஞ்சல் கட்டணங்களும், அதிகப் பொருள் அளிக்காத பலவகையான வருவாய் இனங்களும் மன்னர் நிதிகொண்ட வழிகளில் சிலவாகும். லங்காஸ்டர், கார்ன்வால் கோமக நாடுகளிலிருந்து வந்ததும், அதே அளவு சிக்கல் மிகுந்த ஸ்காட்லாந்திலிருந்தும் அயர்லாந்திலிருந்தும் வந்ததும் ஆன வருவாய்களையும் சேர்த்துக்கொள்ளலாம். இவற்றோடு பாராளுமன்றம் அவ்வப்போது அளித்த மானியங்களும் சேர்ந்தன. இவ் வருவாய் இனங்களை வைத்துக்கொண்டே அரசாங்கத்தை அரசர் நடத்தவேண்டுமென்றும், போர்போன்ற நெருக்கடிகள் தோன்றும்போதுதான் பாராளுமன்றத்தைப் பணத்திற்காக அணுகவேண்டுமென்றும் இரண்டாம் சார்லஸ் காலத்தில் கொள்கையளவில் இருந்தது. மன்னரின் வருவாய், செலவு ஆகியவற்றின் அளவு சரியாகத் தெரியாத நிலையில், ஊகமாகவே ஏற்பாடுகள் செய்யப்பட்டன. எவ்வாறாயினும், வில்லியமும் மேரியும் ஆட்சிக்கு வந்தபோது மன்னரின் அமைதிக் கால வருவாய் 1,200,000 பவுன்களாக இருக்கவேண்டுமென்று பாராளுமன்றம் நிர்ணயித்தது. அதில் வழிவழியாக வரும் வருவாயிலிருந்தும், உள்நாட்டு வாணிபத் தீர்வைகளின் ஒரு பகுதியிலிருந்தும் கிடைத்த 700,000 பவுன்

களும் பிற்காலத்தில் 'மன்னரின் செலவுப் பட்டியல்' என்று வருணிக்கப்பெற்றதற்காகச் செலவிடவேண்டும். மன்னரின் சொந்தச் செலவுகளும், அவரது குடும்பச் செலவு மட்டுமன்றிப் பொதுப்பணியாளரின் ஊதியமும், உபகாரச் சம்பளங்களும் இச் செலவுப் பட்டியலில் அடங்கின. ஆயின், அரசாங்கத்தின் பொதுச் செலவிற்காக என்று ஒதுக்கப்பெறும் எஞ்சிய பகுதியிலிருந்தே பொதுப்பணியாளருக்கு ஊதியம் வழங்கவேண்டியது தான் நியாயம் என்பது தற்காலக் கொள்கையாகும்.

அடுத்து வந்த ஆட்சிக் காலங்களிலும் இத்தகைய ஏற்பாடு தொடர்ந்துவந்தது. இரண்டாம் ஜார்ஜ் பட்டத்திற்கு வரும் வரையில் மன்னரின் செலவுப் பட்டியல் 700,000 பவுன் அளவிலேயே நின்றது எனினும், ஆன் அரசியார் 1,200,000 பவுன்களும், முதலாம் ஜார்ஜ் 1,000,000 பவுன்களும் கடன்பட்ட போது, அவற்றைப் பாராளுமன்றம் அடைத்தது. ஆயின், மன்னரின் செலவுப் பட்டியலிலிருந்து கணக்கிடும் கடன்களாகவே இத் தொகைகளை அம் மன்றம் அளித்தது. இரண்டாம் ஜார்ஜின் செலவுப் பட்டியலின் குறைந்த அளவு 800,000 பவுன்களாக நிர்ணயிக்கப்பெற்றது. அதே சமயத்தில் வழிவழியாக வரும் வருவாய் குறையுமானால், அந்த அளவிற்கு ஈடுசெய்வதாகப் பாராளுமன்றம் உறுதியளித்தது. அதற்கிணங்கச் செலவுப் பட்டியல்மீதான 456,000 பவுன் கடனைப் பாராளுமன்றம் அடைத்தது. ஆனால், மூன்றும் ஜார்ஜ் அரசு எய்தியபோது தான் மன்னருடைய சொந்தச் செலவுகளின்மீதான கட்டுப்பாட்டினைப் பாராளுமன்றம் முதல் முறையாகப் பெற்றது. வழிவழியாக வந்த வருமானத்தின்மீதான தமது உரிமையையும், அவற்றிலிருந்து உபரியாக வரும் பொருள்மீதான உரிமையையும் அரசர் விட்டுக்கொடுத்தார். அதற்கு ஈடாக, 'அவரது குடும்பத்தின் பராமரிப்பிற்காகவும், மன்னரின் மாட்சிமையையும் பெருமையையும் நிலைநாட்டுவதற்காகவும்' செலவுப் பட்டியலின் அளவு 800,000 பவுன்களாக நிர்ணயிக்கப்பட்டது. 1777ஆம் ஆண்டில் அது 900,000 பவுன்களாகக் கூடியது. இத்தகைய, நிலையான செலவுப் பட்டியல் பணத்தோடு பாராளுமன்றக் கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்ட உரிமைப் பொருள்கள், கடற்படைத் தலைமையகம், பிற வழிகள் ஆகியவற்றிலிருந்து மேலும் பெருமளவினதான வருவாயை மூன்றும் ஜார்ஜ் பெற்றிருந்தார். இருப்பினும், பதவிகள், உபகாரச் சம்பளங்கள், பரிசுகள்[11] போன்றவற்றைப் பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு வழங்கித் தமது மேதக நிலையை உயர்த்திக்கொள்ள வேண்டுமென்று மூன்றும் ஜார்ஜ் பாடுபட்டதன் விளைவாக, மன்னரின் செலவுப்

பட்டியல்மீதான கடன்களை அளிக்குமாறு பல முறை மக்களை வேண்டும் நிலையிலேயே அவர் இருந்தார். இத்தனைக்கும் அவர் சிக்கனமான, ஓரளவிற்குப் பிசுனமான வாழ்க்கையே நடத்தினர். மேலும், மன்னருடைய சொந்த நலனுக்கும் பெருமைக்கும் நேரடியாகத் தொடர்புகொள்ளாத பல செலவினங்கள் அவ்வப் போது செலவுப் பட்டியலிலிருந்து நீக்கப்பட்டன. அன்னரது ஆட்சிக் காலத்தில் 3,398,000 பவுன்கள்வரை மன்னரது கடன் களைப் பாராளுமன்றம் தீர்த்தது. அதனோடு 1782ஆம் ஆண்டில் 300,000 பவுன்கள் செலவுப் பட்டியல்மீதான கடனாக வழங்கப் பட்டது. அந்த ஆண்டில்தான் செலவு குறைக்கப்பெற்றதோடு, செலவினங்கள் தனித்தனிப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன.

நான்காம் வில்லியம் மன்னரானபோது வழிவழியாக வந்த வருமானங்களை மட்டுமல்லாது, தமது முன்னோர்கள் அனுபவித்துவந்த எல்லா வகையான வருமான வழிகளையும் விட்டுக்கொடுத்தார். அதற்கு ஈடாக 510,000 பவுன்களைச் செலவுப் பட்டியல் நிதியாகப் பெற்றார். ஆயின், நாட்டின் பொது அரசாங்கத்தைச் சேரக்கூடிய செலவினங்கள் பல அப் பட்டியலிலிருந்து நீங்கின. அதே அடிப்படையில் விக்டோரியா இராணியார் ஆண்டுதோறும் 385,000 பவுன்கள் பெற்றார். ஏழாம் எட்வர்டு மன்னரும், அலெக்சாண்ட்ரா அரசி யும் 470,000 பவுன்கள் பெற்றனர். அதற்கும் சற்று அதிகமான தொகையை ஐந்தாம் ஜார்ஜ் மன்னரும் மேரி இராணியாரும் பெற்றனர். இறுதியாக வந்த மூன்று ஆட்சி மாற்றங் களிலும், 1936, 1937, 1952 ஆகிய ஆண்டுகளில் மன்னரின் செலவுப் பட்டியல் பணச்சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. அதுவரையில் வழக்கமாக இருந்ததையே இச் சட்டங்கள் பின்பற்றின. கடைசியாக வந்த ஆறு ஆட்சிக் காலங்களிலும் பொதுத்துறைச் செலவினங்களை மன்னரின் செலவுப் பட்டியலிலிருந்து நீக்கியதால், மறைமுகமான செல்வாக்கினை மன்னர் செலுத்துகின்றார் என்ற ஐயப்பாடு நீங்கியது. அதே சமயத்தில் மன்னரின் பெருமையைப் பாதுகாப்பதற்காகக் கிடைக்கும் நிதியை நன்கு பராமரித்து, வகையாகச் செலவிடு வதன்மூலமாக மன்னர் செலவுப் பட்டியல்மீதான கடன்களை அடைக்குமாறு கோரிப் பாராளுமன்றத்தை அணுகவேண்டிய அவசியமும் ஏற்படவில்லை.[12]

**அரச நிலங்கள் :** மெய்ட்லண்டின் பின்வரும் வாசகங்கள் உன்னுதற்குரியவை: 'மன்னர் பெரு நிலக்கிழார் ஆவர். நாடாகிய நிலத்தின் தனிப்பெரு நாயகர் என்பதோடு, தமக்கே

சொந்தமான பண்ணை உரிமை நிலங்களையும் அவர் வைத்திருந்தார். அவற்றில் சில ஆரம்பகால மானிய அளிப்பாக வந்தவை. இங்கிலாந்தை வென்ற பிறகு வெற்றிவீரர் வில்லியம் செய்த பெருமைசால் உரிமை நிர்ணயத்தினால் அளிக்கப்பெற்று, நிலவுடைமைப் பேராய்வுக் கணக்கேட்டில் (Domesday Book) பதிவு செய்யப்பெற்ற அரச நிலங்களாகும்.'[13] இங்ஙனமே அரச நிலங்கள் தோன்றின. உரிமை இழப்பு மூலமாகவும் பறிமுதல் மூலமாகவும் அரச நிலங்கள் ஒருபுறம் தொடர்ந்து வளர்ந்துவந்தபோதிலும், துணைவர்களுக்கும் ஆதரவாளருக்கும் முன்யோசனையின்றி நிலங்களை மன்னர்கள் அளித்ததால், அவற்றின் அளவு குறைந்துகொண்டேவந்தது. மீட்புச் சட்டங்கள் இயற்றுதல் போன்ற பல முயற்சிகள் எழுந்தபோதிலும், இத்தகைய ஊழலைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. நிலங்களை ஏராளமாக விற்றதாலும் அடகு வைத்ததாலும் அரச புலங்களின் பரப்பை முதலாம் சார்லஸ் மேலும் குறைத்தார். பொதுநலத் துரைத்தனத்தின் பாராளுமன்றங்களும் அவர்தம் வழியைப் பின்பற்றின. இத்தகைய விற்பனைகள் செல்லாதவை என்று முன்னிலை மீட்சியின்போது ஏற்பட்டபோதிலும், வெகுவிரைவிலேயே மன்னருக்கு மீட்டுத் தரப்பெற்ற நிலங்களை இரண்டாம் சர்லாஸ் ஊதாரித்தனமாக அழித்தார். அதன் விளைவாக மூன்று ஆண்டுகளுக்குள் 217,000 பவுனுக இருந்த ஆண்டு வருமானம் 100,000 பவுனுகக் குறைந்துவிட்டது. அதே போன்று இரண்டாம் ஜேம்ஸும் மூன்றும் வில்லியமும் தாராளமாக முன்யோசனையின்றி நடந்துகொண்டனர். ஆன் அரசி பட்டம் எய்தியபோது, அரச நிலங்களிலிருந்து வரும் குத்தகை ஸ்குயர் என்னும் பெரு நிலக்கிழார் கொள்ளும் குத்தகையைவிட அதிகமில்லை எனப் பாராளுமன்றம் அறிந்தது.[14] மீதமிருந்த நிலங்களையாவது காக்கவேண்டுமென்பதற்காக ஆன் அரசியாரின் முதலாம் ஆட்சியாண்டில் சட்டமொன்று நிறைவேறியது. 'நிலத்தீர்வையிலிருந்தே மன்னரின் பராமரிப்புக்கான செலவுப் பணம் முழுவதுமோ அல்லது பெரும் பகுதியோ அளிக்கப்பெற்றது. முன்னால் வந்த இந் நாட்டு மன்னர்களும் அரசிகளும் தாராளமாக நிலங்களை வழங்கியதால், தீர்வை பாதிக்கப்பெற்றதோடு பெருமளவு குறைந்தும் விட்டது. அதன் காரணமாக மாட்சிமை தங்கிய இராணியாருக்குக் கிடைக்கும் நிலத் தீர்வையை வைத்துக்கொண்டு அரசாங்கம் நடத்த இயலாது' என்று அச் சட்டம் முதலில் வருத்தத்துடன் விளக்கியது. அதன்பின் நிலத்தை அடியோடு தானமாக வழங்குவதை அது முற்றிலும் தடைசெய்தது. பிற்காலக் குத்தகையின் காலம்,

அளவு போன்றவற்றில் கடுமையான கட்டுப்பாடுகளை விதித்தது. இங்ஙனம் எஞ்சியிருந்த சிறிய அளவினதான அரச புலம் அடியோடு அழிந்துவிடாது காப்பாற்றப்பட்டது. அரச நிலங்களின் மீதான உரிமையை மூன்றும் ஜார்ஜ் அரசு எய்தியவுடன் துறந்தார்; அதற்கு ஈடாக நிலையான செலவுப் பணம் பெற்றார்.

**மன்னரின் சொந்தச் சொத்துகள் :** இத்தகைய மாற்றத் தோடு மற்றொரு பயனும் தோன்றியது. வழிவழியாக வந்த நிலங்களின்மீது வரையறையற்ற உரிமை இருந்த காலத்தில் இழந்த ஓர் உரிமையை மன்னர் மீண்டும் பெற்றார். நார்மானிய வெற்றிக்குமுன் நாட்டு மன்னர் என்ற முறையில் நிலங்களை அரசர் வைத்திருக்கவில்லை. மாறாக, தனிமனிதர் என்ற முறையிலேயே நிலத்திற்கு உரியவராக அவர் இருந்திருக்க வேண்டும். குடிமகனைப் போலவே நிலத்தை மரபுரிமையாகப் பெறவும், விற்கவும், பகிர்ந்து அளிக்கவும், வேறு வழிகளில் தமது சொத்தினைப் பிறருக்கு அளிக்கவும் அரசரால் முடியும். ஆனால், கண்டிப்பாக மரபுரிமை அடிப்படையில் அரசுரிமை வந்தபோது அரசரும் அவர்தம் பதவியும் ஒன்றறக் கலந்து விட்ட காரணத்தால், அவருடைய சொந்தச் சொத்துகள் அரச புலங்களோடு இணைந்துவிட்டன. அதனால் விருப்ப ஆவணத்தின் மூலமாக உடைமை மாற்றம் செய்யமுடியாது போயிற்று. மூன்றும் ஜார்ஜ் மன்னர் அரச நிலங்களைக் கைவிட்டபோது நாட்டின் பிற குடிமக்களைப் போலவே தனிப்பட்ட சொத்தினை வாங்கவோ, வழங்கவோவான உரிமை மன்னருக்கு மீண்டும் வந்தது.[15]

## மன்னர்தம் அமைச்சர்கள்

ஆட்சிப் பொறுப்பினை ஏற்ற அரசர், அச் சுமையைப் பிறருடன் பகிர்ந்துகொள்வது என்பது எக் காலத்தும் இன்றி யமையாத ஒன்றாக இருந்ததாகும். அமைதியற்ற நார்மானிய, ஆஞ்சுவிய குல அரசர்கள் முதன்மையான அரசியல்—நீதித் தலைமை அலுவலரை (Justiciar) நியமித்தனர். இவ்வலுவலர், அரசருக்கு ஆலோசனை வழங்கியதோடு, பரந்த அரசின் பல பகுதிகளில் மன்னர் சுற்றியபோது அன்னாரின் பகர ஆள்களாக இருந்து ஆட்சியும் செய்தனர். முறையாக வந்த செய்திகளை அரசாங்கத் துறைகள் கவனித்தன. காலப்போக்கில் இத் துறைகள், வாழ்க்கைத் தொழில் சார்ந்த பொதுப் பணியாளர் வர்க்கம் தோன்றும் தாயகமாகத் திகழ்ந்தன. மூன்று பிரிவின

ரிடையேயிருந்து மன்னர் தமது உதவியாளரைத் தேர்ந்தெடுக்க முடிந்தது. (1) தற்செயலாகச் சந்தித்து, ஆலோசனை அளிப்பதற்கென அரசர் வைத்துக்கொண்டவர் ஒரு வகையினர். (2) அரண்மனைச் சேவகத்தில் ஆற்றல் காட்டி அரசரின் கவனத்தை ஈர்த்தவர்கள் இரண்டாம் வகையினர். (3) குறிப்பிடத்தக்க தகுதியுடைமையால் கருவூலம், ஆவணக்களரி போன்ற அலுவலகங்களில் படிப்படியாக முன்னேறியவர்கள் மூன்றும் வகையினர். இடைக்கால வரலாற்றில் இம் மூன்று வகையினரும் உரிய அளவில் புணிபுரிந்தனர்.

**இடைக்காலத்து மன்னுய முதல்வர்** (The Medieval Chancellors) : பொதுவாக மன்னுய முதல்வரே[16] இடைக்காலத்தில் குறிப்பிடத்தகுந்த அரசியல் அறிஞராவார். அரசியலில் ஓரளவும், பொதுப்பணித் துறையில் ஓரளவும் காலத்தைச் செலவிட்ட பிறகே ஒருவர் மன்னுய முதல்வர் பதவி பெறுவது வழக்கமாக இருந்தது. அநேகமாக அவர் சமயம் சார்ந்தவராகவே இருந்தார். அரசாங்க வேலைகளின் பெரும் பகுதி அவரது அலுவலகத்தின் மூலமாகவே நடைபெற்றதால், அவர் மிக உன்னத நிலையில் இருந்தது இயற்கையே. கருவூலத் தலைவரை முதல்வராகக் கொண்டு இயங்கிய நிதித்துறை அலுவலகங்கள் வழக்கமாகப் பணத்தை எண்ணும் வேலையில் மூழ்கியிருந்ததால், அவை அரசியல் முக்கியத்துவம் அடையவில்லை. நிதி சார்ந்த முடிவுகள்கூட வேறிடத்திலேயே எடுக்கப்பெற்றன. ஏறக்குறைய தொடர்ச்சியாக வந்த சமயத்துறை சார்ந்த மன்னுய முதல்வர்களிலே உல்சியே (Wolsey) இறுதியானவர். அதன் பிறகு பேகனும் கிளாரண்டனுமே சிறப்பு வாய்ந்த அரசியல் மன்னுய முதல்வராவர். எல்லஸ்மியர் (Ellesmere) காலத்திலிருந்து[17] வழக்கறிஞரே அரசப் பெருமுத்திரைப் பொறுப்பை ஏற்றனர். பொது நேர்மைத் தனிமன்றத்தில் அமர்வதே அவர்களின் முக்கியக் கடமையாக இருந்தது. ஆயின், அரசியல் பதவி ஏதும் இன்றியே மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த ஆதரவாளர் இருந்தனர் என்பதைக் கவனத்தில் கொள்ளவேண்டும். இங்ஙனம் வாழ்ந்த பலரில் இடைக்காலத்தில் கவஸ்டனையும் (Gaveston), டெஸ்பென்ஸர்களையும் (Despensers), பதினேழாம் நூற்றூண்டில் பக்கிங்ஹாமையும் குறிப்பிடலாம். அந் நூற்றூண்டின் இறுதியில் ஸ்டோல் அரச மாளிகைப் பணியாளராக மட்டும் இருந்த போர்ட்லண்டு பிரபு மட்டிலுமே மூன்றும் வில்லியத்தின் அயல்நாட்டுக் கொள்கை சார்ந்த இரகசியங்களை அறிந்திருந்தார். வேறு வகையில் கூறுவதானல், அரசாங்க அதிகாரிகள் மட்டும் அரசரின் ஆலோசகர்களாக இல்லை,

**டியூடர் கால அரச செயலாளர்** (Secretaries of State): எட்டாம் ஹென்றியின் அமைச்சரான தாமஸ் கிராம்வெல் 1536ஆம் ஆண்டிலிருந்து 1540ஆம் ஆண்டுவரையிலும் அரச முத்திரைப் பிரபுவாக இருந்தபோதிலும், மன்னரோடு நெருங்கிய தொடர்புகொண்டதாக இருந்த சிறப்பு அரசமுத்திரைப் (Signet) பிரபுவே ஆட்சிப் பொறியின் உண்மையான மூலவுறுப்பாக இருந்தார். மன்னரின் செயலரே அதனைப் பாதுகாத்தவர். 'அரசச் செயலர்' என்று அவர் பெயர் பெற்றதிலிருந்தே அவர் முக்கியத்துவம் அடைந்தார் என்பது தெளிவாகின்றது. 'கோரிக்கைப் பணி முதல்வர்' (Master of Requests)[18] என்ற பட்டம் ஃபிரான்ஸிலிருந்து வந்தது போன்றே, 'அரசச் செயலர்' (Secretary of State) என்பது ஸ்பானிய வழக்கிலிருந்து வந்திருக்கவேண்டுமென்று கூறப்படுகின்றது. எவ்வாறாயினும், டியூடர் காலத்தில் அப் பதவி வகித்தவர்களுடைய பெயர்களைக் கொண்டே அதன் சிறப்பினை உணரமுடியும். பர்க்ளி பிரபுவான வில்லியம் செசில், 1550-லிருந்து 1572 வரை அரசச் செயலராக இருந்தார்; 1572-லிருந்து 1590 வரை கருவூலத் தலைமைப் பிரபுவாகப் பணியாற்றினார். இங்ஙனம் குறிப்பிடத்தகுந்த காலப்பகுதியில் அவர் மொத்தத்தில் அரை நூற்றாண்டிற்குச் சிறந்த தொண்டாற்றினார். 1573ஆம் ஆண்டிலிருந்து 1590ஆம் ஆண்டுவரையில் சர் ஃபிரான்சிஸ் வால்ஷிங்காம் (Sir Francis Walsingham) அரசச் செயலராக இருந்தார். சாலிஸ்பரியின் ஏர்ல் பிரபுவும், பர்க்ளி பிரபுவின் இரண்டாம் மகனுமான ராபர்ட் செசில் என்பார் (Robert Cecil), 1590 முதல் முறையான நியமனம் இன்றியும், அதன் பிறகு முறையான நியமனப்படியும் அரசச் செயலராகப் பணி புரிந்தார். தமது தந்தையாரைப் போலவே 1608ஆம் ஆண்டிலிருந்து 1612ஆம் ஆண்டு வரையிலும் கருவூலத் தலைமைப் பிரபுவாகவும் இருந்த அவர், இரண்டு பதவிகளையும் ஒன்றாக வகித்தார்.

**செயலர் பதவியின் தோற்றுவாய்:** மன்னரின் தனிப்பட்ட செயலர் என்ற சாதாரண நிலையிலிருந்து பதினைந்தாம் நூற்றாண்டில் அப் பதவி சிறிது சிறிதாகச் சிறப்படைய ஆரம்பித்தது. முக்கியமாக, பெரும்பாலும் செயலரின் பாதுகாப்பிலே இருந்த அரசச் சிறப்பு முத்திரையிட்ட ஆணையின் மூலமாக அரசாங்க முத்திரையைப் பெறமுடியும் என்பதாலும், அரசாங்க முத்திரையிட்ட ஆணை மூலமாக அரசப் பெருமுத்திரையைப் பெற முடியும் என்பது ஏற்கெனவே வேரூன்றிவிட்ட பழக்கமாதலாலும், செயலர் பதவி சிறப்பு மிகுந்ததாயிற்று. இங்ஙனம், அப் பதவி மிகுந்த பொறுப்பு வாய்ந்ததாக இருந்தது.

எனினும், சில ஆண்டுகளுக்குப் பிறகு, செயலாளராகப் பணிபுரிந்தவர்கள் அப் பதவியைவிட்டு பிஷப்புகளாகப் பதவியேற்றனர். அப் பதவியின் நிலை பதினாறும் நூற்றாண்டில் பன்மடங்கு உயர்ந்தது. 1509ஆம் ஆண்டில் டர்ஹாமின் பிஷப்பாக வந்த பிறகும் தாமஸ் ருதால் (Thomas Ruthall) என்பவர் அப் பதவியில் தொடர்ந்து இருந்தார். தமது அரசியல் வாழ்வின் தொடக்க காலத்தில் அப் பதவியை வகித்த தாமஸ் கிராம்வெல் என்பாரே சமயம் சாராதவர். 1539ஆம் ஆண்டின் முந்துரிமைச் சட்டத்தின்படி (Statute of Precedence) அரசச் செயலர் கம்பளத் திண்டின்மேல் அமரும் தகுதி பெற்றார்.[20] இன்றும் அப் பதவியின் சிறப்புத் தன்மைகளாக இருப்பன வற்றில் சில, 1540ஆம் ஆண்டில் எட்டாம் ஹென்றியின் ஆணை யினால் ஏற்பட்டவை.

**1540ஆம் ஆண்டின் அரசக் கட்டளை:** ஒரே பதவிக்கு இரண்டு செயலாளர்களை இக் கட்டளையின்மூலமாக[21] மன்னர் நியமித்தார். அவர்களிருவரில் ஒருவர் மற்றவரைவிட உயர்ந்த வரல்லர். இருவருமே தனித்தனியாக அரசச் சிறப்பு முத்தி ரையை வைத்திருந்ததால், தனித்தே செயலாற்ற முடிந்தது. பெருமுத்திரையைப் பாதுகாப்பதற்கென்று சில சமயங்களில் அமர்த்தப்பெறும் ஆணையாளர் போன்றவர் அல்லர் அவர்கள். அவர்களுக்கிடையே கடமைகள் பகிர்ந்து அளிக்கப்பெறவு மில்லை. எனவே, பதவிக்குரிய முழு வேலையையும் ஒருவரே செய்ய முடிந்தது. இவ் விநோதமான உறவு நிலை இன்றும் தொடர்ந்து வருகின்றது. நடைமுறையில் அது மிகுந்த பய னுள்ளதாக இருக்கின்றது. 1540ஆம் ஆண்டில் அரசச் செயல ராக அமர்த்தப்பெற்ற இருவரும் வழக்கமான முறையில் தேர்ந் தெடுக்கப்பெற்ற காமன்ஸ் சபை உறுப்பினரே. ஆயினும், அவ்விருவரில் ஒருவர் ஒரு வாரத்தில் காமன்ஸ் சபையிலும், அடுத்த வாரத்தில் பிரபுக்கள் சபையிலும் அமரவேண்டும்; மற்றவர் முதல் வாரத்தில் பிரபுக்கள் சபையிலும், அடுத்த வாரத்தில் காமன்ஸ் சபையிலும் அமரவேண்டும். இருப்பினும், தேவைப்பட்டால், இருவருமே காமன்ஸ் சபையில் சேர்ந்து அமரலாம் என்று அரச அமைப்புக் கட்டளை அறிவித்தது. விநோதமான இத் திட்டம் சிறிது காலத்திற்கு நடைமுறையி லிருந்தது. பாராளுமன்றத்தின் இருசபைகளிலும் அரசாங்கத் தின் பணியினை எடுத்துக்கூறுவதற்குற்ற, முற்றிலும் திறமை வாய்ந்த, செய்திகளை நன்குணர்ந்த ஆள்கள் தேவையென்பதை

எட்டாம் எட்வர்டு தெளிவாக உணர்ந்திருந்தார் என்பதை இத் திட்டம் எடுத்துக்காட்டுகின்றது.

**செயலரின் கடமைகள்:** 1600ஆம் ஆண்டிற்குப் பிறகு எழுந்த நினைவுக் குறிப்புகளிலிருந்தும்[23] ஆய்வுக் கட்டுரைகளிலிருந்தும் அரசச் செயலரின் கடமைகள் பற்றிய அரிய செய்திகள் கிடைக்கின்றன. அவருடைய செயற் பரப்பெல்லை விரிந்தது என்பதை ஐயத்திற்கிடமின்றி அவை விளக்குகின்றன. பிரிவி கவுன்சிலுக்கு வரும் நீதித்துறை சார்ந்த செயல் நிகழ்வுகளில் பெரும்பாலானவற்றை அரசச் செயலரே ஆயத்தம் செய்தார். பொது நேர்மைத் தனிமன்றம், விண்மீன் அறை நீதி மன்றம் அல்லது முறைமன்றங்களுக்கு அவ் வழக்குகள் செல்வதை விரைவுபடுத்தினர். எழக்கூடிய எப் பிரச்சினைபற்றியும் அவர் நன்கு உணரந்திருக்கவேண்டியிருந்தது. இங்கிலாந்து, வேல்ஸ், அயர்லாந்து ஆகியவற்றின் மத்திய, தல ஆட்சி முறையை அவர் நன்கு புரிந்துகொண்டிருக்கவேண்டும். ஐரோப்பிய வெல்திறத்தை அறிந்திருப்பதோடு, பல பேச்சு வார்த்தைகள் எந்நிலையில் இருந்தன என்பது பற்றியும் தெளிவான அறிவு பெற்றவராகவும் இருத்தல் வேண்டும். வாணிபத்தைப் புரிந்துகொள்வதோடு இங்கிலாந்தின் பொருளாதார நிலையை விரிவாக விளக்கத் தயாராகவும் இருக்கவேண்டும். அரச வருமானம் பற்றியும், செலவு பற்றியும் கடுமையான கேள்விகளுக்கு விடையளிக்க ஆயத்தமாக இருக்க வேண்டும். நாவாய்ப் படையின் அளவும் அதற்கான ஆயுதங்களும், நிலப் படையின் அளவு, பயிற்சி, கிடைக்கக்கூடிய படைக்கலன்கள், அதற்காகும் செலவு ஆகியவையும் அவருக்குத் தெரிந்தவையாக இருக்கவேண்டும். பொதுவழக்கு, குற்றவழக்கு ஆகிய இரண்டிலும் இங்கிலாந்தின் சட்டமுறையை அவர் நன்கு உணர்ந்திருத்தல் அவசியமாகும். இச் செய்திகள் யாவற்றையும் பற்றிய நூல்கள் வைத்திருப்பதன் அவசியத்தை நிகோலஸ் ஃபான்ட் (Nicholas Faunt) நன்குணர்ந்திருந்தார். புள்ளிவிவரங்களில் குறிப்பிடத்தகுந்த நாட்டங்கொண்ட அவர் தமது அலுவலகத்தை ஒரு செய்தி தரும் கழகமாகவே அமைத்திருந்தார். முக்கியமான செய்திகளைப் பிரித்து வகைப்படுத்திவைத்திருந்தால், அவற்றின் உதவியை மன்னர் நாடினர். அரசச் செயலரின் செய்கைகளெல்லாம் மறைவடக்கமானவை. இரகசியத்தைக் காத்தலே செயலரின் தலையாய கடமையாக இருந்தது.

**செயலராய் இருப்பதன் இடர்கள்:** புள்ளி விவரங்களை ஃபான்ட் கோரினார் என்றால், மன்னரின் மேதகமையை கண்டு ராபர்ட் செசில் மயங்கினார். மேலும், அவர் அப் பதவியில் இருந்த இடர்களைக் கண்டு மிரண்டார். செயலரின் பதவி, சட்டம் அறியாத ஒன்று ஆகையினாலே, வழக்காறாக வரும் வரையறை எவை என்பது தெரியாது என்பதை அவர் விளக்கினார். அப் பதவியின் அதிகார எல்லையை நிர்ணயிக்கும் ஆணைக்குழு ஏதும் இல்லை. கடமைகளைக் கோடிட்டுக் காட்டும் பதவிப் பிரமாணம்[23] கூட இல்லை. அவரைப் பாதுகாப்பதற்கு என்று வழக்கமாக வரும் அரசியல் கட்டளைகளும் இல்லை. மன்னர் சொல்லுகிறார்; செயலர் செயலாற்றுகிறார். அவ்வளவுதான். ஆனால், தப் பெண்ணம் ஏற்படுமானால் நிலைமை என்னவாகும்? செயலரைப் புரக்கும் அரசியல் ஆவணம் ஏதும் இல்லை. 'நிலையான மதி படைக்காத மன்னரிடம் பணிபுரியும் செயலரின் பதவி பயங்கர மானது' என்பது டியூடர் ஆட்சியோடு ஐம்பது ஆண்டுகளுக்கு நெருங்கிய தொடர்பு கொண்டவரின் அனுபவ வாக்கு. முதலாம் ஜேம்ஸின்மீது செசில் ஆழ்ந்த அவநம்பிக்கை கொண்டிருந்தார். தாம் முற்றிலும் மன்னரது தயவிலேயே வாழ்ந்ததாகவும், எந்த நேரத்திலும் மன்னர் தம்மைக் கைவிட்டு விடுவார் என்றும் அவர் எண்ணினார்.[24] மேலே குறிப்பிடப்பெற்ற கட்டுரைகளி லிருந்து செயலர், நாட்டின் பேரதிகாரி என்ற எண்ணம் தோன்ற வில்லை. அதற்கு மாறாக, பிரிவி கவுன்சில் உறுப்பினர் உட்பட மற்றெல்லா அதிகாரிகளைக் காட்டிலும் மன்னரோடு நெருங்கிய, இடையறாத தொடர்பு கொண்ட நம்பிக்கை வாய்ந்த துணை வராகவே அவர் விளங்கினார் என்ற எண்ணம் மேலோங்கி நிற்கிறது. செயலராக இருப்பவர் இரகசியத்தைக் காப்பவராக இருப்பதோடு பல துறைகளிலும் வல்லமை பெற்று விளங்க வேண்டுமென்றாலும், ஆலோசனை வழங்குவது அவரது வேலை யன்று. முடிவு எடுப்பதற்குத் தேவையான செய்திகளைச் சேகரித் துத் தந்து, அம் முடிவு நிறைவேற்றப்படுகின்றதா என்று பார்த்துக்கொள்வது அவர்தம் கடமையாக இருந்தது. டியூடர் காலத்தில் அத்தகைய நிலை நன்மை பயந்தது. ஆயின், மன்னர் தனிப்பட்ட திறமையும் மனவுறுதியும் அற்றவராக இருந்தால், மன்னருடைய கொள்கைகளின்மீது செல்வாக்குச் செலுத்து வதோடு, அக் கொள்கைகளை உருவாக்கும் நிலையில் திறமை வாய்ந்த செயலர் இருந்தார் என்பதும் வெள்ளிடைமலை.

இதனை முதலாம் ஜேம்ஸ் உணர்ந்திருந்ததாகத் தெரிகின்றது. அதனால் சாலிஸ்பரி ஏர்ல்[25] பிரபுவிற்குப்பின் செயலர் பதவியை நிரப்பாமலே வைத்திருந்தார். அதற்கு மாறாகத் துணைச் செயலரோடும், ஆதரவாளரான சாமர்செட்டின் ஏர்ல் பிரபு ராபர்ட் கார் என்பாரை அரசச் சிறப்பு முத்திரைக் காப்பாளராக நியமித்தும், எல்லாக் காரியங்களையும் தாமே செய்ய முயன்றார். ஆயின், வேலைப்பளு காரணமாகப் பழைய முறையை மீட்க வேண்டிவந்தது. எனினும், அதன் பிறகு வந்த செயலர்கள் கடுமையாக உழைத்த அதிகாரிகளாக இருந்தனரேயன்றி, மன்னரின் முழு நம்பிக்கைக்கும் உரியவர்களாக இல்லை.

முன்னிலை மீட்சிவரையில் பழைய பிரதான நிலையை அப் பதவி பெறவில்லை. அதன் பிறகுதான் கெபால் (Cabal) மந்திரி சபையைச் சார்ந்த ஹென்றி பென்னட்டும் (Henry Bennett), ஆர்லிங்டன் பிரபுவும் (Lord Arlington), சண்டர்லண்டு (Sunderland), கொடால்ஃபின் (Godolphin), நாட்டிங்ஹாம், ஆக்ஸ்ஃபோர்டு, பாலிங்புரோக் ஆகியோரும் அப் பதவிக்கு அணி செய்தனர். ஹனோவிரியர் ஆட்சிக்கு வந்ததிலிருந்து அப் பதவிக்கு அதிக அரசியல் முக்கியத்துவம் ஏற்பட்டது. 1724ஆம் ஆண்டிலிருந்து 1754ஆம் ஆண்டு வரையில் நியூகாசல் பிரபு அதனை வகித்தார். இருவரைக் கொண்ட அப் பதவியில், அவருடன் இருந்தவர்களில் வால்போலும் கார்ட்டரட்டும் (Carteret) குறிப்பிடத் தகுந்தவர்கள். பெருஞ் செல்வரும் பேரமைச்சரும் வகித்த அரசியல் சிறப்பு வாய்ந்த பதவியாக அது மாறியதால், பெருகிவந்த அரசச் சிறப்பு முத்திரை அலுவலக அதிகாரிகளே சாதாரண, வழக்கமான வேலைகளைக் கவனிக்கலாயினர், விரைவிலேயே அவ்வலுவலகத்தின் தலைமைக் கணக்கர், துணை அரசச் செயலர் (Under-secretary of State) என்று அழைக்கப் பெற்றார்.[26]

**1689, 1782ஆம் ஆண்டின் சீர்திருத்தங்கள் :** இரு செயலருக்குமிடையே கடமைகளை ஒருவகையாகப் பகிர்ந்து அளிக்க வேண்டிய நெருக்கடியான சூழ்நிலை விரைவிலேயே உருவாகியது. பதினேழாம் நூற்றாண்டின் பெரும்பகுதியில் இதற்கான முயற்சி இருந்துவந்தது என்றபோதிலும், வடக்கு, தெற்குத் துறைகள் என்ற அரசியல் பாகுபாடு 1689ஆம் ஆண்டில்தான் தோன்றியது. 1782 வரை அது தொடர்ந்து வந்தது. அயல்நாட்டு விவகாரங்களில் இத்தகைய பாகுபாடு தோன்றியது. வடக்கு அரசுகளுடன் ஆன தொடர்பினை வடக்குத் துறை கவனித்தது. ஃபிரான்ஸ், ஸ்பெயின், போர்ச்சுகல், மற்றுமுள்ள தென்னரசுகளோடும் அயர்லாந்துக்

குடியேற்றங்கள் ஆகியவற்றோடும் ஆன உறவு நிலையையும் உள்நாட்டு விவகாரங்களையும் தெற்குத் துறை கவனித்துக் கொண்டது. 1689ஆம் ஆண்டில் இத் திட்டம் இடர் மிகுந்த தாக இல்லை. ஆனால், ஐரோப்பிய வெல்திறத்தில் தோன்றிய மாறுதல்களின் விளைவாகத் தற்செயலாகவோ அல்லது வேண்டுமென்றோ செயலர் இருவரும் ஒருவருக்கொருவர் முரண் பட்டு நிற்க வாய்ப்புகள் ஏற்பட்டன. செயலர் பதவியின் மரபிற்குப் பொருந்தும் வகையிலேயே வாய்ச்சொல் மூலமாக 1782ஆம் ஆண்டின் சீர்திருத்தம் கொண்டுவரப்பட்டது. அதற் கெனக் கவுன்சிலின் கட்டளையோ அல்லது அரச ஆணையோ ஒன்றும் கிடையாது. வெளிநாடுகளில் இருந்த பிரிட்டிஷ் பகர ஆள்களுக்கு அனுப்பிய சுற்றறிக்கை[27] ஒன்றே ஓரளவிற்கு அதிகாரபூர்வமான சான்று எனக் கொள்ளக்கூடிய நிலையில் உள்ளது. வெளிநாட்டு விவகாரத் துறையைக் கவனிப்பதற் கென்று புதிதாக நியமிக்கப்பெற்ற செயலரான சார்லஸ் ஜேம்ஸ் ஃபாக்ஸ் என்பாருக்கே கடிதங்களை அனுப்ப வேண்டுமென்று வெளிநாட்டில் உள்ள பிரிட்டிஷ் பிரதிநிதிகளை அச் சுற்றறிக்கை கேட்டுக்கொண்டது. அதிலேயே உள்நாட்டுத் துறையை ஷெல்பர்ன் பிரபு கவனிப்பார் என்றும் அறிவிக்கப்பட்டது.

1782ஆம் ஆண்டிற்கு முன்பும் பின்பும் தனிப்பட்ட பணிகளுக்கென்று துணைச்சேர்க்கையான செயலரை நியமிக்கும் சோதனை சில சமயங்களில் நடைபெற்றது. 1709-லிருந்து 1746 வரை ஸ்காட்லாந்திற்கான அரசச் செயலர் ஒருவர் இருந்தார். 1926ஆம் ஆண்டிற்குப் பிறகும் அவர் பணியாற்றினர்.[28] 1768ஆம் ஆண்டிலிருந்து 1782ஆம் ஆண்டுவரையில் அமெரிக்கக் குடியேற்றங்களுக்கென்று அரசச் செயலர் ஒருவர் பணி யாற்றினர். ஆனால், அமெரிக்காவை இழந்த பிறகு உள் நாட்டுச் செயலரே மற்றக் குடியேற்றங்களைக் கவனித்துக் கொண்டார். 1794ஆம் ஆண்டில் 'போரையும் குடியேற்றங்களை யும்' கவனிப்பதற்கென்று மூன்றாவது செயலர் நியமிக்கப் பெற்றார். 1854-ல் தனித்தனியாக இரு துறைகளாகப் பிரிந்த வரை இந்நிலை தொடர்ந்து இருந்தது. பிற்காலத்தில் இந்தியாவிற் கென்றும் (1858), அரச விமானப் படைக்கென்றும் (1918), டொமினியன்களுக்கென்றும் (Dominions) (1924), பர்மாவிற் கென்றும் (1935) துணைச்சேர்க்கையான அரசாங்கச் செயலர், அமர்த்தப் பெற்றனர்.[30] விமானப் படைச் செயலர் 1919ஆம் ஆண்டில் ஆகாயப் படை அரசாங்கச் செயலர் **(Secretary of State for Air)** என அழைக்கப்பெற்றார்.

**கருவூலத் தலைமைப் பிரபு (The Lord Treasurer) :** பண்டைக் கால நிதி அலுவலகத் துறையின் தலைவரே கருவூலத் தலைவராவார். 'டயலாகஸ் டி சக்காரியோ' (Dialogus de Scaccario) என்னும் நூலை எழுதிய பெருமை மிக்க ரிச்சர்டு ஃபிட்ஸ் நீல் (Richard Fitz Neal) என்பவர்தாம் நாம் நிச்சயமாக அறிந்த மிகப் பழைய கருவூலத் தலைவர். அரச புலங்கள், நிலமானிய வருவாய்கள் போன்ற பண்டைக் கால நிதி இனங்களையும் புதிய வருவாய் இனங்களையும் நிதித்துறை கவனித்தது. புதிய வருவாய் இனங்களில், பல சமயங்களில் அதற்கென்றே ஏற்பட்ட தனிக் குழுக்களினாலும், சில வேளைகளில் நகர வட்ட மன்றம் (court of wards) அல்லது லண்டன் நகர மக்கட்குழு போன்ற, விரைவில் பற்றுவரவுக் கணக்குமுறை கொண்ட அமைப்புகள் மூலமாகவும் கொள்ளப்பெற்ற போர் நெருக்கடிக் கால வரிவிதிப்புப் போன்றவை அடங்கும். முன்னிலை மீட்சிக்குப் பிறகு பல வகையான வரிகளைக்கொண்டு அவற்றிற்கான கணக்கினை வைத்துக் கொள்வதற்கென்று பெரும் எண்ணிக்கையிலான சிறப்பு ஆணையாளர் அமர்த்தப்பட்டனர். அதன் விளைவாக நாட்டின் வருவாயின் பெரும் பகுதி நிதி அலுவலகத்தின் கட்டுப்பாட்டினின்றும் நீங்கியது. எனவே, அரசியல் அமைப்புச் சார்ந்த பழைமைச் சின்னங்களின் காட்சிக் கூடமாகவே அது மாறியது.[31]

இடைக்காலக் கருவூலத் தலைவர் தலைசிறந்த அரசியல் வினைஞராவார். சில வேளைகளில்தான் அவர் சிறந்த அரசியல் வாதியாக விளங்கினார். பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பிரபுக்களும் ஏர்ல்களும் அப் பதவியை அலங்கரித்தனர். பதினாறும் நூற்றாண்டிலோவெனில், 1501 முதல் 1547 வரை நார்ஃபோக் கோமகனார் இருவரும், அதன் பிறகு காப்பாளராக விளங்கிய சாமர்செட்டும் அப் பதவியை வகித்தனர். மன்னரின் விதவைகள், பேதைகள் ஆகியோரின் காப்பாளராக இருந்து வின்செஸ்டரின் மார்குவிஸ் பிரபுவாக[32] உயர்ந்த வில்லியம் பாலட்டும் (William Paulet) 1550 முதல் 1572 வரை இப் பதவியிலிருந்தார். அரசியல் அல்லது நிர்வாகத் துறையில் முக்கியத்துவம் வாய்ந்ததாக இல்லாது மதிப்புத் தரும் பதவியாகவே அது விளங்கியது என்பது தெளிவு. செசில்கள் இருவரும் தங்களது நீண்ட அரசியல் வாழ்க்கையின் இறுதியில் அப் பதவியை வகித்தனர் என்பதை முன்பே கண்டோம். கருவூலப் பிரபுவாக இருந்தவர்களில் 1673 முதல் 1679 வரை அப் பதவியை வகித்த டான்பி பிரபுவே அரசியல் அடிப்படையில்

பெருமை மிக்கவர். 1714ஆம் ஆண்டில் பதவியிலிருந்த ஸ்ரூஷ்பரி கோமகன்தான் கருவூலப் பிரபுக்களில் கடைசியாளர்.

**கருவூலம் நிதியமைச்சகமாகியது :** உண்மையில் முன்னிலை மீட்சியின்போதே கருவூலத் தலைமையகம் பெருமளவில் போற்றப்பட்டது. தனித்தனியான வரியினங்களைக்[33] கவனித்து வந்த குழுமங்களும் ஆணைக்குழுக்களும் கருவூலத் தலைவரின்[34] பயனுள்ள கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவரப்பெற்றதால், நிதி வருமானத்தின் பெரும் பகுதியைக் கவனிக்கும் பொறுப் பேற்ற அதிகாரி ஒருவர் முதல் முறையாகத் தோன்றினர். நாட்டு நிதிநிலைமை பற்றிய பொது அடிப்படையிலான கருத்தினைக் கொண்ட அவர், ஒரு வகையான நிதிக் கொள்கையை வகுக்க முடிந்தது. எனினும், ஆண்டு வரவுசெலவுத் திட்டத்தில் (budget) அந்த ஆண்டிற்கான செலவின் பெரும் பகுதி விவாதிக்கப்படுதல் இல்லையாதலால், நீண்ட காலத்திற்கு ஓரளவிற்குத்தான் நிதி அமைப்பு ஒருமுகப்படுத்தப்பெற்றிருந்தது. உதாரணமாக, அமைதிக் காலச் செலவினங்களில் முக்கிய இடத்தினைப் பெற்றிருந்த அரசச் செலவுப் பட்டியல் பணமானது மன்னரின் ஆட்சி தொடங்கும்போதே நிர்ணயிக்கப் பட்டது. இத்தகைய வரையறைகள் இருந்தபோதிலும் உண்மையான நிதியமைச்சர் செயற்படுவதற்கு வாய்ப்பிருந்தது. கொடால்ஃபின் பிரபு, சர் ராபர்ட் வால்போல், ஹென்றி பெல் ஹாம் போன்றவர்கள் அதிகார சாத்தியக்கூறுகளை நன்கு அறிந்தவர்களாக இருந்தனர் என்பது யாவரும் அறிந்த ஒன்றே.[35]

கடற்படைத் தலைமையகத்தையும்[36] பொது நேர்மை முறை மன்றத்தையும் போலவே தனிநபரை நியமித்தல் என்பது சில சமயங்களில் நடைமுறைக்கு உகந்ததாக இல்லை. எனவே, அவ் அலுவலகத்தின் வழக்கமான கடமைகளை நிறைவேற்று வதற்கென்று ஆணையாளர் குழு ஒன்றை அமைப்பது வழக்க மாக இருந்தது. முதலில் தாற்காலிகத் திட்டமாக இருந்த இது, 1714ஆம் ஆண்டில் நிரந்தர விதியாக மாறியது. அவ்வாண்டி லிருந்து கருவூலம் ஒரு குழு உருவிலேயே அமைந்தது. இக் குழு வில் முதலாவதாகக் குறிப்பிடப்பெற்றவர் 'கருவூலத் தலைமைப் பிரபுவானர்' ; மற்றையோர் 'இளைய பிரபுக்களாயினர்' (Junior Lords) சிறிது காலத்திற்குக் கருவூலக் குழு முறையாகக் கூடியது. ஆயின், அப் பழக்கம் நாளடைவில் மறைந்தபோது நிதியமைச்சரின் நிலை மேலோங்கி நின்றது.[37]

**நிதியமைச்சர்** (Chancellor of the Exchequer) : நிதியமைச்சகமே பழைமையாகி, காலத்திற்கொவ்வாததாக ஆனபோது, பண்டைக் காலத்திலிருந்துவந்த அதன் தலைவரின் நிலையும் தாழ்ந்தது. டியூடர் காலத்தில் துணைக்கருவூலத் தலைவரோடு தான் அவ்வலுவலகம் இணைந்திருந்தது; இன்றும் அதே நிலை தான் இருந்துவருகின்றது. காமன்ஸ் சபை உறுப்பினராக இருந்தால், கருவூலத் தலைமைப் பிரபுவே நிதியமைச்சராகவும் பணியாற்றலாம் என்ற நிலை 1690 முதல் 1827 வரையிலான காலப்பகுதியில் இருந்தது. ஆயின், கருவூலத் தலைமைப் பிரபு, பிரபுக்கள் சபையினைச் சார்ந்தவராக இருந்தால், அதுசமயம் காமன்ஸ் சபையினர் ஒருவர் நிதியமைச்சராவார். இதிலிருந்து, சாதாரணமாக நடைமுறையில் இருந்ததைப்போலவே, பிரபுக்கள் சபையைச் சார்ந்தவர் கருவூலத் தலைமைப் பிரபுவாக இருக்கலாம் என்றபோதிலும், நிதியமைச்சராக வருபவர் காமன்ஸ் சபை உறுப்பினராகவே இருக்கவேண்டுமென்ற நியதி ஏற்கெனவே இருந்தது என்பது தெளிவு. பழைய திட்டத்தில் கூடுமான வரையில் நிதி சார்ந்த செய்திகளிலேயே நிதியமைச்சருடைய கவனம் சென்றதற்கிணங்கவே இவ் விதி தோன்றியது போலக் காணப்படுகின்றது. 'ஆயினும், கானிங் இறந்த பிறகு தான் தற்போது காணப்படுகின்ற முக்கியத்துவத்தை நிதியமைச்சர் பெற்றதாகத் தோன்றுகின்றது.'[38] இதற்கிடையில் கருவூலப் பிரபுக்கள் நிதிசார்ந்த செய்திகளில் கவனம் செலுத்தாது ஆதரவு அல்லது செல்வாக்குத் திட்டத்தின் நூதனமான செயல்முறைகளிலேயே அதிகக் கவனம் செலுத்தத் தொடங்கினர். கருவூலத் தலைமைப் பிரபு கையாண்ட அதிகாரத்தின் அடிப்படை இத் திட்டத்தின் பயனாக.வந்தது.[39]

**கருவூலத் தலைமைப் பிரபு** (First Lord of the Treasury) : பரிசாக வழங்குவதற்குப் பல பதவிகள் கருவூலத் தலைமைப் பிரபு வசம் இருந்தன. ஏற்கெனவே குறிப்பிட்ட ஆணைக் குழுக்கள், சங்கங்கள் ஆகியவற்றை மேற்பார்வை செய்கின்ற அதிகாரம் கருவூலத் தலைமைப் பிரபுவிற்கு இருந்தது ஒருவகையில் இந்நிலைக்குக் காரணமாகும். பல பாராளுமன்ற உறுப்பினர்கள் தங்கள் தங்கள் தொகுதிகளில் உள்ள ஆதரவாளர்களுக்கு இப்பதவிகளை வழங்கவேண்டுமென்று வற்புறுத்திப் பெற்றனர். 'கருவூல பரோக்கள்' என்று குறிப்பிடும் அளவிற்குப் பல பரோக்களின் மீது கருவூலத் தலைமையகம் மிகுந்த செல்வாக்குச் செலுத்தியது.[40] அநேகமாக அதன் மூலமாகவே அரச ஆதரவுகளும், சலுகைகளும் வழங்கப்பெற்றன. இத்தகை ஒன்றுக்கம் விரும்பத்தக்கதே. யாரிடம் கேட்டுப் பெறுவது என்பதை மன்ற

உறுப்பினர் அறிய விழைந்தனர். காமன்ஸ் சபை முழுவதிலும் இத் துறையில் இருந்த நிலைபற்றிச் சரியாக அறிந்த ஒருவர் அரசாங்கத்திற்கும் தேவைப்பட்டார். இத்தகைய நலன்களைப் பெற்று இருந்த கருவூலத் தலைமைப் பிரபுவானவர் 'செயலாட்சி' யென்னும் தகுதியும், உறுப்பினரின் நல்லெண்ணத்தைப் பேணும் பெற்றியும், சபையினைப் பொதுவாக நடத்திச் செல்லும் நயமும் படைத்தவராக இருந்ததால், நீண்ட காலத்திற்குப் பதவியில் இருக்கும் வாய்ப்பு உண்டு.[41] அமைச்சர் சிலர் இதில் வெற்றி கண்டனர். 1721 முதல் 1742 வரையில் வால்போல் பதவியிலிருந்தார் : 1743 முதல் 1754 வரை ஹென்றி பெல்ஹாம் பதவியிலிருந்தார்: 1770 முதல் 1782 வரை நார்த் பிரபு பதவியிலிருந்தார் ; 1783 முதல் 1801 வரை வில்லியம் பிட் பதவி வகித்தார். உண்மையில் இத் தகையோரைத்தான் ஏளனமாக அல்லது எரிச்சலோடு 'பிரதம அமைச்சர்' என்று மக்கள் அழைத்தனர்.

**பிரதம அமைச்சர்** (Prime Minister) : அரசியல் வழக்கில் தவருகப் பயன்படுத்துகின்ற வேறு பல வாசகங்களைப்போலவே தான் பிரதம அமைச்சர் என்பதில் ஓரளவேதான் உண்மை இருக்கின்றது. அது ஃபிரான்சில் தோன்றியது. வால்போல் முதல் நிலையை நோக்கி முன்னேறிக்கொண்டிருந்த தருணத்தில் தீக்குறியான எச்சரிக்கைகள் என்று அரசியல் பார்வையாளர்கள் கருதிய சில மாறுதல்கள் ஃபிரான்சில் ஏற்பட்டன.[42] அந்நாட்டில் அதிகாரபூர்வமான, வழக்கு மீறிய அதிகாரத்துடன்கூடிய பிரதமர் அல்லது முதல் அமைச்சர் பணியாற்றினுர். அவர் பதவிக் காலத்தில் மற்ற அதிகாரிகள் அனைவரும், குறிப்பாக அரசாங்கக் காரியதரிசிகள் யாவரும் அவருக்கு அடக்கமானவர். கார்டினல் ரிச்சிலியூ (Cardinal Richelieu) அதே பாணியில் பதவி வகித்தார். ஆயின், இங்கிலாந்தில் மன்னுய முதல்வர் பதவியை விட்டுப் பிரதம அமைச்சர் பதவியை ஏற்குமாறு கூறிய தமது நண்பர்களின் யோசனையைக் கிளாரண்டன் பிரபு மறுத்து விட்டார்.[43] வல்லரசரான பதினுன்காம் லூயியின் காலத்தில் இத்தகைய அளவுமீறிய அதிகாரங்கள் கொண்ட அமைச்சருக்கு இடமில்லை. ஆயினும், அவர் மறைந்த பிறகு சிறிது சிறிதாக ஃபிரஞ்சு பிரதமரின் நிலை சிறப்புற்றது. 1722ஆம் ஆண்டில் கார்டினல் டுபாய்ஸ் (Cardinal Dubois) அப் பதவியேற்ருர். அவர் இறந்தபின் 1723ஆம் ஆண்டில் ஆர்லியன் கோமகன் அப் பதவியை வகித்தார். இறுதியாக 1726 முதல் 1743 வரை பிரதமராக இருந்த கார்டினல் ஃபிலூரியிடம் (Cardinal Fleury) முன்னுளில் இருந்ததுபோல் பிற அமைச்சர்கள் அடங்கியிருக்க

வேண்டுமென்று வகுக்கப்பெற்றது.[44] ஃபிலூரியையும் அவருக்கு முன்னால் வந்த சிலரையும் மனத்தில் கொண்டுதான் வால்போலின் எதிரிகள், அவரைப் 'பிரதம அமைச்சர்' என அழைத்தனர். இத்தகைய ஒப்புமை முற்றிலும் பொருந்துவ தன்று. முக்கியமாக முறையொழுங்கு அடிப்படையில் பொருந்துவதாக இல்லை. மற்ற அமைச்சர்களைக் காட்டிலும் அரசாங்க ரீதியில் ஆங்கிலப் பிரதமர் உயர்வானவர் என்பது எப்போதும் இல்லாத ஒன்று. மேலும், அவர் எல்லா அரசாங்கத் துறைகளிலும் முறையான பொறுப்பு ஏற்றவர் அல்லர். அதற்கு மாறாக, மற்ற அமைச்சர்களைத் தமக்குக் கீழ்ப்படிந்தவர்களைப் போல நடத்தினர் என்று கொள்வதற்குரிய நிகழ்ச்சிகள் வால் போலின் பதவிக் காலத்தில் தோன்றியிருக்கின்றன. அதே போன்று அவர் மன்னரின் முழு நம்பிக்கையையும் பெற்றிருந்தார். மேலும், அரசருடைய அமைச்சர் பட்டியலில் உள்ள அனைவரை யும் அப்படியே அவர் நியமிக்கவில்லை. சிலரை நீக்கினர்; வேறு சிலரைப் புகுத்தினர். இவ்வாறு செய்வதற்குச் சிக்கல் நிறைந்த சூழ்ச்சியையும், சுற்றி வளைக்கும் முறையையும் அவர் கையாண்டார் என்பது குறிப்பிடத்தக்கது. மன்னர் தம் சேவையில் இருக்கும் அனைவரும் வேற்றுமைகளையும் உட்பூசல் களையும் மறந்து ஒன்றுபட்டுச் செயலாற்றவேண்டுமென்பது சித்தாந்தம். அதனைக் கடைப்பிடித்து ஒழுகுவதாக வால்போலும் அறிவித்தார். பல சமயங்களில் அமைச்சர் அனைவரும் அவ்வாறே செயலாற்றியும் வந்தனர். ஆயினும், சில சமயங்களில் விடாப்பிடியான மனிதப் பண்பு மேலோங்கி மாறான நிலையைத் தோற்றுவித்ததுண்டு. நடைமுறையில், வால்போலுக்கு அடங்கி நடக்காதவர்கள் அமைச்சரவையில் தொடர்ந்து பணியாற்றுவது கடினமாகிவிட்டது. இதற்குக் காரணம் அவருடைய பகைவர்கள் குறிப்பிட்டதைப் போல, அடங்காத ஆசை என்று கொள்வதைவிட அவருடைய தன் முனைப்பான ஆளுமையென்று கொள்வதே பொருத்தமானதாகும். அமைச்சர்கள் ஒன்றுபட்டால் காரியங்களை எளிதாகச் செய்ய முடியுமென்பதை அவர் நிச்சயமாக உணர்ந்திருந்தார். ஆனால், அமைச்சு ஒருமைப்பாட்டு மரபினைத் தோற்றுவிக்க அவர் முயன் றார் என்று கொள்வது இடர் விளைப்பதாகும். பல அமைச்சர் களுக்குத் தாழ்ந்ததான கருவூலத் தலைமைப் பிரபுவிற்குரிய இடத் தைத் தவிர வேறு இடம் அரசாங்க வரிசையில் அவருக்கு அளிக்கப்படவில்லை. 1905ஆம் ஆண்டுவரையில் பிரதமரின் பதவி சட்டம் காணாத ஒன்றாக இருந்தது. அந்த ஆண்டில்தான் டிசம்பர் மாதம் இரண்டாம் தேதியன்று வெளிவந்த அரசரது ஆணையில், அரசியல் முந்துரிமையில் யார்க்கின் ஆர்ச் பிஷப்பிற்கு

அடுத்த இடம் பிரதமருக்கு அளிக்கப்பெற்றது. மேலும், வேறு ஏதாவது ஒரு பதவியையும் பிரதமர் வகித்தார் என்றபோதிலும், மற்றப் பதவிகளிலிருந்து மாறுபட்ட பிரதம அமைச்சர் பதவி யென்பதை முறையாக ஏற்றுக்கொண்டது இவ்வாணையே. அதற்கு முன்னால் ஒரே ஒரு முறைதான் 'பிரதம அமைச்சர்' என்ற சொல் அரசாங்க ஏட்டில் காணப்படுகின்றது. 1878ஆம் ஆண்டின் பெர்லின் உடன்படிக்கையில்தான் பேகன்ஸ்ஃபீல்டு பிரபு (Lord Beaconsfield) 'பிரதம அமைச்சர்' என்று வழங்கப் படுகின்றார். மூன்று முறைகள் வெளிநாட்டு அமைச்சர் பதவியோடு பிரதமர் பதவியும் இணைந்திருந்தது. சாலிஸ்பரி பிரபு (Lord Salisbury) மூன்று முறை இவ்விரு பதவிகளையும் சேர்த்தே வகித்தார். எதிர்க்கட்சித் தலைவராக இருந்த மிஸ்டர் கிளாட்ஸ்டன் அம் முறையினைக் கண்டித்தார். அது பொதுக் காரியங்களைக் கவனிப்பதற்கு ஏற்ற முறையன்று என்று அவர் எதிர்த்தார். ஆனால், அது அரசியல் சட்டத்திற்கு விரோதமானது என்ற வாதம் எழவில்லை. காபினெட் முறையே அரசியல் ரீதியில் அமையாத நிலையில், அரசியல் சட்டம் சார்ந்த சிக்கல் எழுவதற்கு ஏது இல்லை. 1924ஆம் ஆண்டில் இரு பதவிகளையுமே ராம்சே மாக்டனால்டு (Ramsay Macdonald) வகித்தார். அரசாங்க பதவிகளில் இருந்த சில முரண்பாடுகளைச் சரிசெய்த 1937ஆம் ஆண்டின் அரசாங்க அமைச்சர்களின் சட்டம் (The Ministers of the Crown Act), வருங்காலத்தில் பிரதம அமைச்சர் கருவூலத் தலைமைப் பிரபுவாகத்தான் இருக்க முடியுமென்று மறை முகமாகக் குறிப்பிட்டது.

அரசியல் செல்வாக்குப் பெற்ற பதவிகளில் கருவூலத் தலைமைப் பிரபுவும் அரசாங்க அமைச்சர்களும் முக்கிய இடம் பெற்றனர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் அமைச்சர் வரிசையில் முன்னணியில் நின்றவர் நிதியமைச்சரே. நமது நாளிலும் அதிக முக்கியத்துவம் வாய்ந்த புதிய பதவிகள் தோன்றியிருக்கின்றன. அந்தந்தத் துறைசார்ந்த செய்திகள் உடனடியாகக் கவனிக்கப்பெற வேண்டியதாகின்றபோது பதவி வகித்த குறிப்பிட்ட அமைச்சரின் செல்வாக்கு அதிகரித்தது. மேலும், அதிக முக்கியத்துவம் இல்லாத பதவி வகிப்ப வரும் தமது தகுதி காரணமாகப் பொதுவான அரசாங்கக் காரியங்களில் செல்வாக்குச் செலுத்தும் சாத்தியக் கூறு எப்போதும் இருந்துவந்தது. தற்கால அரசியல் அமைப்பு முறைகள் உருவெடுக்கத் தொடங்கிய பதினெட்டாம் நூற் றாண்டில் இதுபோன்ற பதவிகள் நிறைய இருந்தன. இது போது அவற்றின் எண்ணிக்கை பல்கிப் பெருகியுள்ளது. அவற்றில் சில உயர் முந்துரிமை பெற்றவை. ஆதலால்,

பிரபுக்கள் சபையில் செல்வாக்குப் பெற்று, தொகுதிகளில் ஆதரவுங்கொண்டு, பயன்படக்கூடிய பிரபுக்களுக்கு அவை பொருத்தமாக இருந்தன. ஒருசில பதவிகள் அரச அவையைச் சார்ந்தவை. அவற்றை வகிப்பவர்கள் சுமுகமான அரசியல் சூழ்நிலையைத் தோற்றுவித்து, ஓரளவு செல்வாக்குச் செலுத்தினர். மேலும், சில பதவிகள் உயர்விற்கான படிகளாக அமைந்தன. இங்ஙனம் அரசு தலைமை வழக்குரைஞர் (Solicitor-general) சட்டத் தலைமைப் பணிமுதல்வராக வர எண்ணுவதற்கும், சட்டத் தலைமைப் பணிமுதல்வராக இருப்பவர் தலைமை நீதிபதியாகவும், பிரபுக்கள் சபைத் தலைவராகவும் வர எண்ணுவதற்கும் வாய்ப்புண்டு. இதற்கிடையில் சட்டத் தலைமைப் பணிமுதல்வராக (Attorney-general) இருந்த முர்ரே (Murray) என்பாரைப்போல வலிமையற்ற அமைச்சவையின் இன்றியமையாத அரணாகவும் அவர்கள் விளங்கமுடியும். வேறு சில பதவிகளில் நிறைய வருவாய் கிடைத்தது. மற்றப் பதவிகளை வகிக்கும் தகுதியற்றவர்களுக்கும் இப் பதவிகளை அளிக்கமுடிந்தது. சம்பளப் பட்டுவாடா தலைமை அலுவலாளர் (Paymaster-general) இவ் வகுப்பைச் சார்ந்தவரே. சுருங்கக் கூறுமிடத்து, பதினெட்டாம் நூற்றாண்டினர் அனுபவித்த சமுதாயக் கலை ஒன்றைப்போலவே, மந்திரி சபையை அமைக்கும் பணி சிறப்புற நடைபெற்றது. மந்திரிசபைகள் அடியோடு மாறுவது என்பது அருமையாக இருந்த காரணத்தால், அச் சபையை அமைப்பது மேலும் கடினமாகியது. 1689, 1714, 1782 ஆகிய ஆண்டுகளில்தான் அமைச்சவைகள் அடியோடு மாறியிருக்கின்றன. குறிப்பிடத்தகுந்த விதிவிலக்குகளாக இருந்த இவற்றைத் தவிர மற்ற மந்திரி சபைகள் எல்லாம் மெதுவாக, ஆனால், தொடர்ந்து ஏற்பட்ட அரைகுறையான மாற்றங்களின் விளைவாகவே ஒன்றன்பின் ஒன்றாக வந்தன.

## காபினெட் சபை (Cabinet)

**பிரிவி கவுன்சில் சபை** (The Privy Council): அரசரின் சட்டரீதியான ஆலோசகர் குழுவாகவே பிரிவி கவுன்சில்[45] தொடர்ந்து பணியாற்றிவந்தது. அதனைக் கலந்து ஆலோசிக்க வேண்டுமென்று சட்டங்களும் நாட்டு மரபுகளும் அரசரைக் கட்டுப்படுத்தின என்று சிலர் கருதினர். ஆனால், அது சட்ட அடிப்படையிலான உண்மை என்பதைவிட அரசியல் ஆர்வக் கருத்தே எனலாம். முன்னிலை மீட்சியின்போது பெரியவும் சிறியவுமான, அரசியல் ஆட்சிமுறை சார்ந்தனவான பல செய்திகளைக் கவனிக்கும் செயல்திறமுடைய சபையாகவே பிரிவி

கவுன்சில் விளங்கியது. ஆயின், அச் சபையின் நீண்ட விவாதங்களினால், தமது திட்டங்களுக்கு ஏற்பட்ட தடைகளையும் கால தாமதத்தையும் இரண்டாம் சார்லஸ் வெறுத்தார். அதனுடைய அளவைப் பெருக்கிய பிறகு, 'பெருவிவகாரங்களில் முக்கியமாகத் தேவைப்படுகின்ற இரகசியம், விரைவு ஆகியவற்றிற்கு சபையின் பெரும் எண்ணிக்கை பொருத்தமற்றது' என்ற உண்மை கலந்த குற்றச்சாட்டினை அவர் சுமத்தினார். குழுக்களின் மூலமாகச் செயலாற்றுதல் என்ற சபையின் பிரத்தியேகமான பண்பைப் பயன்படுத்திக்கொண்ட சார்லஸ், 'அயல் நாட்டு விவகாரங்களுக்கென்று இருந்த குழு'வினைத் தமது நம்பிக்கைக் குரிய கருவியாகப் பயன்படுத்திக்கொண்டார். முக்கியமான செய்திகளை அக் குழுவில் வைத்து ஆலோசனை செய்து முடிவெடுத்த பின்னரே, முறையாக உறுதி செய்யும்பொருட்டு அவற்றை பிரிவி கவுன்சில் சபையின்முன் வைத்தார். ஆயின், அக் குழு அதனை ஒத்த குழுக்களைப்போன்றது அன்று. ஏனெனில், மூலசபைக்கு அது அறிக்கை சமர்ப்பிப்பதில்லை. அது கவுன்சில் சபையினால் தேர்ந்தெடுக்கப்பெறாது அரசரால் நியமிக்கப்பட்டது. மேலும், கவுன்சில் சபை குறிப்பிட்ட செய்திகளோடு அக் குழு நின்றுவிடுவதில்லை. குறைந்த எண்ணிக்கை கொண்ட முக்கிய அமைச்சர்கள் அக் குழுவில் இருந்தாலும், அது வெல்திறம் சார்ந்த மிக முக்கியமான இரகசியச் செய்திகளையெல்லாம் ஆராய்ந்த காரணத்தாலும், பொறுத்தல் அறிக்கை வெளியிடல்போன்ற மிக முக்கியமான உள்நாட்டுப் பிரச்சினைகளிலும் மன்னர் அக் குழுவைக் கலந்தாலோசித்தார். ஆயினும், வெளிநாட்டு விவகாரங்களிலும் டோவர் இரகசிய உடன்படிக்கைபோன்ற சிலவற்றை அக் குழுவிடமிருந்து மறைத்துவிட்டார்.

**கேபல் மந்திரிசபை, 1671 (Cabal Ministry):** பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில் எழுதிய டிரஞ்சார்டு (Trenchard) என்பார் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்: 'முன்னாளிலெல்லாம் பிரிவி கவுன்சில் சபையில்தான் நாட்டு விவகாரங்களெல்லாம் விவாதிக்கப்பெற்று முடிவுகள் எடுக்கப்பெற்றன. அச் சபையில் ஒவ்வொருவரும் தம்முடைய கருத்தினை வெளியிட்டனர். அக் கருத்துகளுக்குப் பொறுப்பும் ஏற்றனர். நமது அரசியல் அமைப்பில் சிறந்த பகுதியாகத் திகழ்ந்த இம் முறையை, மறைந்த மன்னர் இரண்டாம் சார்லஸ் முதல் முறையாகக் குலைத்தார். மறைகுழு (cabal) அல்லது காபினெட் சபை ஒன்றை அமைத்து, முக்கியமான பிரச்சினைகளை அதிலேயே விவாதித்து, முடிவுகளை எடுத்து, அதன் பின்னர் உறுதிசெய்யும்

பொருட்டு அம் முடிவுகளைப் பிரிவி கவுன்சில் சபைக்குக் கொண்டு வந்தார்.'[46] முதலாம் ஜேம்ஸ் காலத்திலேயே அரச ஆலோசகரின் இரகசியக் கூட்டத்திற்குக் குழு அல்லது 'சூழ்ச்சியாளர் சங்கம்' என்ற பொருளில் 'மறைகுழு' (cabal) என்ற சொல் பெருவாரியாகப் பயன்பட்டது. 1671ஆம் ஆண்டில் தற்செயலாகக் காபினெட் சபையில் இருந்த ஐந்து அமைச்சர்தம் பெயர்களின் முதல் எழுத்துகளின் சேர்க்கை 'கெபால்' (cabal) என்ற சொல்லைத் தந்தது. அதன் காரணமாகச் சிறிது காலத்திற்குக் காபினெட் என்பதன் மாற்றுச் சொல்லாக அது பயன்பட்டது. கருவூலப் பிரபுவான கிளிஃபோர்டும் (Clifford), அரசாங்கக் காரியதரிசியான ஆர்லிங்டனும் (Arlington), குதிரை அரங்க முதல்வரான (Master of Horse) பக்கிங்ஹாமும் (Buckingham), சிறிது காலத்திற்கு மன்னரை முதல்வராக இருந்து பின்னால் ஷாஃப்ட்ஸ்பரி ஏர்ல் பிரபுவான ஆஷ்லியும் (Ashley), ஸ்காட்லாந்து அமைச்சரான லாடர்டேலும் (Lauderdale) கெபால் மந்திரிசபையில் இருந்தவர்கள். ஆட்சிமுறைக்கு ஏற்றதாகவும் ஓரளவு இன்றியமையாததாகவும் இருந்தபோதிலும், அப்போது இருந்த நிலையில் காபினெட்முறை அரசாங்கம், பெருந்தீங்குகளைத் தோற்றுவிப்பதாக இருந்தது என்பது உறுதி. மன்னர்தம் செயல்களைக் கட்டுப்படுத்துவதற்குப் பிரிவி கவுன்சில் சபை பெற்றிருந்த சிறிது செல்வாக்கையும் அது அழித்துவிட்டது. அதிலும் பிரிவி கவுன்சிலினுடைய அரசாங்கச் சார்பற்ற நிலையை மக்கள் கொண்டாடிய தருணத்தில் அதனுடைய செல்வாக்கினை அழித்து, நடைமுறையில் நாட்டு மக்களிடம் பொறுப்புக்கொள்ளாத அமைச்சர் தம் கையில் உண்மையான அரசாங்க அதிகாரத்தை ஒப்படைத்தது. பிரிவி கவுன்சில் சபையினை முறையாக ஆலோசனையில் கலப்பதில்லை என்றும், அதன் விளைவாகக் கொள்கை வகுப்பவர் யார் என்பதை அறிய முடிவதில்லை என்றும் பாராளுமன்றத்தில் அடிக்கடி புகார்கள் கிளம்பின. கெபால் மந்திரிசபையில் பலர் கத்தோலிக்கர்களாக இருந்ததால், சோதனைச் சட்டத்தினால் (Test Act) அச் சபை கலைந்தபோதிலும், பிரிவி கவுன்சிலின் ஆட்சியை மீட்பதற்கு அச் சட்டம் போதுமானதாக இல்லை.

**டெம்பிளின் 1679ஆம் ஆண்டின் திட்டம்:** பிரிவி கவுன்சில் சபையைப் பழைய நிலைக்குக் கொண்டுவரவேண்டுமென்று, சர் வில்லியம் டெம்பிளின் (Sir William Temple) ஆலோசனையின் பேரில், 1679ஆம் ஆண்டில் முயற்சியொன்று நடைபெற்றது. அதன்படி அச் சபை திருத்தியமைக்கப்பெற்றது. ஐம்பதாக இருந்த அதனுடைய உறுப்பினர்களின் எண்ணிக்கை

முப்பதாகக் குறைந்தது. அவர்களில் முக்கிய அரசாங்க அதிகாரிகள் பதினைந்து பேர். மற்றப் பதினைந்து பேர்களில் பதின்மர் பிரபுக்கள்; ஐவர் காமன்ஸ் சபையினர். அரசியல் சக்தியும் பொருளாதாரச் சக்தியும் ஒன்றாக இணையவேண்டுமென்ற கொள்கை அடிப்படையில் புதிய சபை அமைந்தது. காமன்ஸ் சபையினுடைய மொத்த வருமானத்திற்குச் சமமான 300,000 பவுன்களுக்குக் குறையாது பிரிவி கவுன்சில் உறுப்பினரின் வருவாய் இருக்கவேண்டுமென்று அத் திட்டம் வகுத்தது. இடைக்காலத்தில் ஏற்பட்ட ஆய்வுகளைப் போலவே அத்திட்டத்தில் பலதிறத்தார் பிரிவி கவுன்சில் சபையில் இடம் பெற முடிந்தது. உண்மையில் எதிர்க் கட்சியோடு தொடர்பு கொண்டவரே அச் சபையில் பெரும்பான்மையினராக இருந்தனர். பெருஞ்செல்வரும் செல்வம் கொழிக்கும் பெருநிலக் கிழார்களும் நிறைந்த இச் சபையானது, மறைகுழுவாவதற்கு இயலாத எண்ணிக்கை கொண்டதாகவும், அதே சமயத்தில் இரகசியத்தைப் பாதுகாத்துச் செயலாற்றுதற்கு ஏற்ற அளவிலும் இருந்த காரணத்தால், ஒருங்கே அரசரைக் கட்டுப்படுத்தவும், பாராளுமன்றத்தின் செல்வாக்கிற்குற்ற தடையாகவும் பயன் படும் என்ற நம்பிக்கை இருந்தது.[47] எல்லா அரசாங்கக் காரியங்களிலும் முப்பது பேர் கொண்ட இச் சபையின் ஆலோசனைப்படி நடப்பதாக இரண்டாம் சார்லஸ் உறுதியளித்தார். ஆயின், வெகு விரைவிலேயே அவ் வாக்குறுதி காற்றில் பறந்தது. கவுன்சிலின் உட்குழு அல்லது காபினெட் சபையானது மீண்டும் தலையெடுத்தது.

புரட்சியின் விளைவாக இத்திட்டம் உடனடியான மாறுதல் அதிகம் அடையவில்லை. முக்கிய அமைச்சர்கள் அடங்கிய சிறு குழுவிடம் ஓரளவு நம்பிக்கையை மூன்றாம் வில்லியம் தொடர்ந்து வைத்திருந்தார். ஆயின், வெளிநாட்டுக் கொள்கையில் மிக முக்கியமான நடவடிக்கைகளை அவர்களிடமிருந்தும் மறைத்து வைத்தார். இதற்கு விதிவிலக்காக இருந்த போர்ட்லண்டு பிரபுவைப்பற்றி முன்னரே கண்டோம்.[48] இங்ஙனம் இருந்தும் போரினைப் பயனுள்ள வகையில் நடத்துவதற்கு இயலாத அளவிற்குப் பெரியதாக இருந்தது பிரிவி கவுன்சில் சபை. ஆகையினால், சண்டர்லண்டின் ஆலோசனையின்பேரில் வேண்டுமென்றே அதன் அளவைக் குறைத்தனர். ஒரு காலத்தில் அரசருக்கு ஆலோசனை அளித்த உள்வட்டத்தில் விக்கு கட்சியினரே இருந்தது தெரியவந்தது. 'ஜன்டோ' என்ற ஏளனப் பெயர் 1696ஆம் ஆண்டில் பரவலாகப் பயன்படுத்தப் பெற்றது. பெயரில் குழப்பம் இருந்தபோதிலும், ஆன்

அரசியாரின் ஆட்சிக் காலத்திலும் இதேபோன்ற நிலை நிலைத்திருந்தது.[49] 'காபினெட்' கூட்டங்களுக்கு ஆன் அரசியார் தவறாது வந்தார் என்றும், ஆனால் 'குழு'க் கூட்டங்களுக்குப் பொதுவாக வருவதில்லை என்றும் தோன்றுகிறது. எவ்வாறிருப்பினும், பெயர் எதுவாக இருந்தபோதிலும், காபினெட் சபையின் அமைப்பு அநேகமாக ஒரு சீரானது. அரசியல் வட்டாரங்களில் அது நன்கு உணரப்பட்டது. இருந்தபோதிலும், அப்போதும் வெளிநாட்டுக் கொள்கை சார்ந்த சில செய்திகள் காபினெட் சபை அறியாதவையாகவே இருந்தன.[50] இத்தகைய மாற்றங்களினால் ஒருவிதக் கலக்கம் தோன்றியது. அதன் விளைவாகத்தான் காபினெட் சபையின் மூலமாக அல்லாது பிரிவி கவுன்சில் சபையின் மூலமாக ஆளவேண்டுமென்று ஹனோவர் குலத்தவரை வற்புறுத்தும் துணைவாசகம் ஒன்று அரசுரிமை நிர்ணயச் சட்டத்தில் இணைக்கப்பெற்றது.[51] உண்மையில் அரசியலையே வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டவருக்கும் அதிகாரிகளுக்கும் முன்னால் அரசியலைப் பொழுது போக்காகக் கொண்டவர் இறுதிமுறையாகப் போட்டியிடுவது போல் நின்றனர். ஆயினும், மேலே குறிப்பிட்ட துணைவாசகத்தை ஆன் அரசியார் தள்ளுபடி செய்ததிலிருந்து, காபினெட் சபையை ஏற்றுக்கொள்வதில் ஒரு படி முன்னேற்றம் தோன்றியது. பிரிவி கவுன்சிலைப் பொறுத்தவரையில், ஆன் அரசியார் மரணப் படுக்கையில் இருந்தபோது[52] அது தீர்மானத்தோடு கூடியது. ஆனால், அதுவே பிரிவி கவுன்சில் சபையின் இயற்கையான, சுதந்திரமான செயலுக்கு இறுதிச் சான்றாக அமைந்தது எனலாம்.

சிக்கல் நிறைந்த நிலையினைச் சுருக்கமாகக் கண்டோம். அச் சுருக்கமே சில முக்கியமான கூறுகளை வெளிப்படுத்துவதற்குப் போதுமானதாயுள்ளது. முதலாவதாக, காபினெட் சபையை ஓர் அரசியல் அமைப்பாக உருவாக்குவதில் அரசர் பெரும் பங்குகொண்டார். மன்னர் விரும்பியபோது ஆலோசனை கலப்பதற்கென்று இருந்த சிறிய, நம்பிக்கைவாய்ந்த சபையாகவே காபினெட் விளங்கியது. காபினெட்டையோ அல்லது ஓரிரு அமைச்சரையோ அல்லது அரண்மனை அலுவலாளர் சிலரையோ ஆலோசனையில் கலப்பதும், ஒருவரையும் யோசனை கேட்காததும் மன்னருடைய விருப்பத்தையே முற்றிலும் பொறுத்திருந்தது. மன்னரது செயல்களுக்கு அமைச்சரின் ஆலோசனையோ அல்லது இசைவோ அரணாக இருக்கவேண்டுமென்ற பொதுச் சட்டம் ஏதும் இல்லை. சில செய்திகளில் குறிப்பிட்ட அமைச்சர், பொறுப்பு ஏற்கும்வகையில் முத்திரை

இடுதல் அல்லது அதுபோன்ற வழக்கு உபசாரம் தேவைப் பட்டபோதிலும், அத்தகைய பொறுப்பினை ஏற்கக்கூடிய அமைச்சரைப் பெறுதல் அரசருக்கு அருமையான காரியமன்று. சிலர் இரகசியமாகக் கூடுதற்கேற்ற சிறிய அரண்மனையறை என்பதைக் காபினெட் என்ற சொல்லே சுட்டுகின்றது. அந்த நூற்றாண்டின் இறுதியில் காபினெட்டைக் காட்டிலும் இரகசியமான அறைபற்றிக் கேள்விப்படுகிறோம். மறைவான உள்ளறையில்தான் (closet) தனிமுறையிலான இரகசியப் பேச்சுகள் நடைபெற்றன. காபினெட் சபைக்கும் தொடக்க நிலையில் இருந்த கட்சி அரசியல் முறைக்கும் உள்ள தொடர்பும், அச் சபைக்கும் பாராளுமன்றத்திற்கும் பிற அமைச்சர் களுக்கும் இடையே இருந்த தொடர்பும் எத்தகையது என்பதை வருங்காலந்தான் நிர்ணயிக்கவேண்டியதிருந்தது. 1696ஆம் ஆண்டில் இருந்த 'ஜன்டோ', விக் கட்சியைச் சார்ந்ததாகும். விக் கட்சியைச் சார்ந்த உறுப்பினர்கள் கொண்ட கூட்டங் களைப் பொது விடுதியொன்றில் கூட்டும் பழக்கத்தையும் 'ஜன்டோ' மேற்கொண்டது.[53] ஆயினும், நிரந்தரமான அரசியல் அமைப்புச் சார்ந்த வழக்கு உடனடியாக வளர்ச்சி யடையவில்லை. ஆன் அரசியார் காலத்தில் காபினெட் சபைக்கு மாறாகக் 'குழு' என்னும் சொல் பயன் படுத்தப்பெற்றதிலிருந்து, சிறிது காலத்திற்கு இரண்டாந் தரமான சக்தியொன்றும் செயலாற்றியது எனக் கொள்ள முடியும். அதாவது, அமைச்சர்கள் கூடித் தங்களுக்குள்ளேயே கலந்தாலோசிக்கவேண்டிய அவசியம் இருந்தது எனலாம். அமைச்சர்களின் கூட்டமே காபினெட் சபையென்றும், பிரிவி கவுன்சில் என்பது பெரும்பான்மையில் இந்த இரண்டு அமைப்புகள் உள்ளிட்டதே என்றும் பொதுமக்கள் எண்ணி யிருக்கலாம். பிரபுக்கள் சபைக்கும் அது ஒரு புதிராகவே இருந் தது. 1711ஆம் ஆண்டில் ஸ்கார்ஸ்டேல் பிரபு (Earl Scarsdale) பிரபுக்கள் சபையில் ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். அதில் அரசருடைய முன்னாள் ஆலோசகர்களைக் 'காபினெட் சபையினர்' என்று குறிப்பிட்டிருந்தார். ஆனால், சிறிது காலத்திற்குப்பின் 'நன்கு அறிந்த பெயர்' என்பதற்காக 'அமைச்சர்கள்' எனும் சொல்லைக் 'காபினெட் சபை' என்பதற்குப் பதிலாகப் பயன் படுத்தினர். இத்தகைய சொல்மாற்றத்தின்பேரில் விவாதம் தொடர்ந்தது. அதுபோது 'காபினெட் சபை' என்பதும், 'அமைச்சர்கள்' என்பதும் ஒருபொருட் பன்மொழிகளேயெனச் சிலர் வலியுறுத்தினர். வேறு சிலர், இவற்றிற்கிடையே வேற்றுமையுள்ளது என வலியுறுத்திப் பேசினர். 'அமைச்சர்கள் அனைவரும் காபினெட் சபையினர் என்றும், ஆனால், காபினெட்

சபையிலுள்ளோர் அனைவரும் அமைச்சர்கள் அல்லர் என்றும்' ஆர்கைல் கோமகன் (Duke of Argyle) கொண்டார். 'காபினெட் கவுன்சில் என்பதைவிட அமைச்சரவை என்னும் சொல் முழுமையை உணர்த்துவது' என ஃபெர்ரர்ஸ் பிரபு கண்டார். இவ்விரு வாசகங்களும் தெளிவற்ற தனிச்சிறப்பு வாய்ந்தவை என்றும், 'காபினெட் சபை' என்பது 'சட்டம் அறியாதது' என்றும் கௌபர் பிரபு கூறினர். பீடர்பரோ ஏர்ல் பிரபுவோவெனில் பின்வருமாறு குறிப்பிட்டார்: 'பிரிவி கவுன்சிலுக்கும் காபினெட் சபைக்கும் இடையேயான வேற்றுமை ஒற்றுமைபற்றிச் செய்தி கிடைத்தது. யாவற்றையும் அறிந்தவர் என எண்ணப்பெற்ற போதிலும், பிரிவி கவுன்சிலர்கள் ஒன்றும் அறியாதவர்கள்; தங்களைத் தவிர வேறெவரும் ஒன்றும் அறியார் எனக் காபினெட் சபையினர் எண்ணியிருந்தனர்.'[54] எவ்வாறிருப்பினும், காபினெட் சபை உருவாவதுபற்றி அக் காலத்தில் எதிர்ப்பு இருந்ததாகத் தெரியவில்லை.

**முதலாம் ஜார்ஜ் மன்னர் காலத்தில் காபினெட் சபை:** காபினெட் சபையின் வரலாற்றில் ஒரு திருப்பமாக அமைந்தது, ஹனோவர் குலத்தவர் அரசு எய்தியது. அதன் விளைவாக அரசியல் நிர்ணயச் சட்டத்தில் வகுக்கப்பெற்ற திட்டங்களுக்கு மாறான தன்மை கொண்டதாக அச் சபை மாறியது. முதலாம் ஜார்ஜ் ஆட்சிக்கு வந்ததும் பதினைந்து பேர் கொண்ட காபினெட் சபையை அமைத்தார். அவர்களில் அரசாங்கக் காரியதரிசிகள், கருவூலத் தலைமைப் பிரபு, மன்னுய முதல்வர், பிரிவி கவுன்சில் சபையின் தலைமைப் பிரபு, அரசாங்க முத்திரைப் பிரபு, கடற்படைத் தலைமைப் பிரபு—ஆகியோர் அடிக்கடி கூட்டங்களில் கலந்துகொண்டனர். கான்டர்பரி ஆர்ச்பிஷப், அரச நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி, உள்படு கருமத் தலைவர் (Lord Chamberlain), பெருந்தகை முகவர் (Lord Steward) போன்ற மற்றையோர் எப்போதாவது சில சமயங்களில்தான் காபினெட் கூட்டங்களில் கலந்துகொண்டனர். மூன்றும் வில்லியத்தின் ஆட்சிக் காலத்தில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த அரண்மனை அதிகாரிகள் செல்வாக்கிழந்ததாகத் தெரிகிறது. காபினெட் சபையில் நீண்ட விவாதங்கள் நடைபெற்றன. அவை சில சமயங்களில் காரசாரமாக அமைந்தன. ஆங்கில அரசாங்க முறையையும், விவாதங்களில் இடம்பெற்ற கட்சிப் பிரச்சினைகளையும், தனிப்பட்ட சொந்தப் பிரச்சினைகளையும் முதலாம் ஜார்ஜ் மன்னர் சிறிதும் அறிந்திருக்கவில்லை. விவாதங்களைத் தொடர்ந்து கவனித்து, அவற்றினை விளங்கிக்கொள்வதற்கு வேண்டிய ஆங்கில மொழி அறிவும் அவரிடம் குறைவாகவே

இருந்தது. அதனால் அவ்விவாதங்கள் அவருக்குச் சலிப்பூட்டின. எனவே, 1717ஆம் ஆண்டிற்குப் பிறகு அவர் காபினெட் கூட்டங்களில் கலந்துகொள்வது அரிதாகிவிட்டது. யதேச்சையாகத் தோன்றிய இத்தகைய சூழ்நிலையினால் குறிப்பிடத்தகுந்த விளைவுகள் தோன்றின. அதன் பிறகு பல அமைச்சரின் மாறுபட்ட கருத்துகளைக் கேட்கும் வாய்ப்பு அவருக்கு இல்லை. விவாதங்களில் அவர் கலந்துகொள்வதும் இல்லை. இங்ஙனம் விவாதங்களின் அடிப்படையில் முடிவுசெய்யவேண்டிய பிரச்சினையும் அவருக்கு ஏற்படவில்லை. மேலும், போட்டியிடும் அரசியல்வாதிகள் கூட்டமாக அமைச்சர்களைக் காபினெட் சபையில் சந்திக்காத காரணத்தால், வளர்ச்சியடையாத நிலையிலிருந்த 'பிரதம மந்திரியை' மன்னர் மேலும்மேலும் சார்ந்திருந்தார். இங்ஙனம் மன்னரிடம் காபினெட்டின் சார்பாளப் பேச்சாளராகவும், காபினெட்டிடம் மன்னரின் சார்பாளப் பேச்சாளராகவும் இருந்த பிரதமரின் நிலை மேலும் உயர்ந்தது. ஜெர்மன் மொழியை அறியாத வால்போலும், ஆங்கில மொழியை அறியாத முதலாம் ஜார்ஜும் இலத்தீன்[55] மொழியில் பேச்சுவார்த்தை நடத்தவேண்டிய அவல நிலையில் இருந்தனர் என்ற செய்தி யாவரும் அறிந்ததே. அதனோடு மன்னர் தம்மிடம் குறிப்பிட்ட செய்திபற்றிக் காபினெட் சபை ஆலோசனை வழங்கியபோது, அது ஒரு வகையான சிபாரிசுபோலவே இருந்தது. மாற்று யோசனைகள் அளிப்பது அரிதாகிவந்தது. வேறு வகையாகக் கூறுவதானால், ஒரே குரலில் பேசவேண்டியதன் அவசியத்தைக் காபினெட் சபை உணர்ந்தது. வேற்றுமைகள் இருக்குமானால் அவற்றினை மறைத்து, நன்கு இணைந்த, ஒற்றுமை கொண்ட சபையாக விளங்க வேண்டியதன் அவசியத்தையும் அது உணர்ந்தது.

**காபினெட் சபையின் நிகழ்ச்சியேடு:** அரசாங்கக் காரிய தரிசி எழுதிய முறையான நிகழ்ச்சியேட்டு வடிவிலேயே, பெரும்பாலும், காபினெட் சபையின் ஆலோசனை மன்னருக்கு அளிக்கப்பெற்றது. பதினெட்டாம் நூற்றாண்டிலிருந்து வெளிவந்த இத்தகைய ஏடுகளில் பல அழியாது நமக்குக் கிடைக்கின்றன. அவற்றோடு சொந்தப் பயன் கருதிக் காபினெட் சபை உறுப்பினர்கள் எதேச்சையாகக் குறித்துவைத்த குறிப்புகளும் கிடைக்கின்றன. மன்னருக்குச் செய்தியனுப்புதற்காக எழுந்த இத்தகைய ஏடுகளைத் தவிரத் தனது உபயோகத்திற்கென்று அரசாங்க ஏடுகளை வைத்திருக்கவேண்டிய தேவைபற்றி அண்மைக் காலம்வரையில் அச் சபை கவனம் செலுத்தவில்லை. சிக்கல் மிகுந்த பல பிரச்சினைகள் எழுந்தபோதுதான் தங்கள்

தங்கள் துறைகளை நடத்துதற்கான காபினெட் சபையின் அங்கீகாரம் பெற்ற விளக்கமான கட்டளைகள் தேவை என்பதைக் காபினெட் அமைச்சர்கள் உணரும் வரையில், பிற ஏடுகள் பாதுகாக்கப்பெறவில்லை. இந் நாளில் பிரதம அமைச்சருடைய தனிப் பட்ட செயலர் அலுவலகத்தினின்று மாறுபட்ட பெரிய செயலர் அலுவலகம், காபினெட் சபையுடன் இணைக்கப்பட்டுள்ளது.[56]

காபினெட் சபைக் கூட்டங்களில் மன்னர் கலந்துகொள்ளாததனால், அன்னாருக்கு ஆலோசனை அளிக்கும் முக்கியப் பொறுப்பு ஏற்ற அமைச்சர்களின் கூட்டமே, காபினெட் என்பதற்கு மாருகப் பாராளுமன்றச் செயலாட்சி, கட்சி உபாயங்கள் போன்ற அமைச்சர் அனைவருக்கும் பொதுவான பிரச்சினைகளைப்பற்றிய பிரதான மந்திரிகளின் மாநாடுபோலப் பணியாற்ற முடிந்தது. அதனால் காபினெட் சபையில் நல்ல கட்டுக்கோப்பும் நெருங்கிய ஒற்றுமையும் ஏற்படுவதற்கு ஏதுவாயிற்று. மூன்ரும் ஜார்ஜ் மன்னருடைய கொள்கையை ஆராயும்போதுதான் இத்தகைய மாற்றங்களின் சிறப்பு விளங்கவரும்.

மெகாலே பிரபு (Lord Macaulay), வால்டர் பேஜாட் (Walter Bagehot) போன்ற பழங்கால அறிஞர்கள், காபினெட் சபைபற்றி வெளியிட்ட கருத்துகள் ஆராய்வதற்குரியவை. பிரிவி கவுன்சிலின் 'குழு'வென்ருே அல்லது பாராளுமன்றச் சபைகளின் 'குழு'வென்ருே காபினெட்டைக் குறிப்பிடுவது பயனளிப்பதாக இல்லை. குழு என்று சொன்னால் வேறென்றுக்கு அடங்கியதாக இருக்கவேண்டும். அதனிடம் குறிப்பிடப்பட்ட செய்திகளைப்பற்றிய அறிக்கைகளைத் தன்னை நிறுவியவரிடமே அக்குழு அளிக்க வேண்டும். இவற்றில் எதுவுமே காபினெட் சபைக்குப் பொருந்துவதாக இல்லை. உண்மையான 'குழுவின்' செயல்களைப்போலக் காபினெட்டின் செயல்கள் எவ்விதத்திலும் துணைமையானவையாக இல்லை. 'காபினெட் சபையைச் சட்டம் அறியாது' என்று சில சமயங்களில் குறிப்பிடப்பட்டது. இது உண்மையே. முக்கியமான அமைச்சர்களின் கூட்டமே காபினெட் சபையென்பது. ஆயின், அமைச்சர்களைச் சட்டம் நன்கு அறியும். அதிலும் இப்போது அமைச்சர்கள் கொண்டிருக்கும் அதிகாரங்களில் பெரும்பாலானவை சட்டத்தின் வாயிலாக வந்தவை. சட்டப்படி அதிகாரம் பெற்ற அதிகாரியோ அல்லது அமைச்சரோ இருந்தால்தான் முன்னாளில் மன்னர்களுடைய முடிவுகளைப்போலத் தற்காலக் காபினெட் சபையின் முடிவுகளை முறையாகச் செயற்படுத்த முடியும். நடைமுறையில், முடிவு காபினெட் சபையினுடையது என்பதனால், அதனை நிறைவேற்றும் அதிகாரிக்கு எவ்விதக் குறையும் ஏற்படுவதில்லை,

இங்ஙனம் அமைச்சர்கள் தங்களுக்குள்ளே கலந்தாலோசித்து, தங்களது அதிகாரத்தைச் செலுத்தவும், தங்களது துறைகளை நடத்திச் செல்லவும், அரசருக்கு ஆலோசனை கூறவுமான ஒரு வழியாகவே காபினெட் சபை அமைந்தது. அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பதைப்பற்றித்தான் சட்டம் கவலை கொண்டதே தவிர, அவர்கள் எவ்வாறு பூர்வாங்க ஆலோசனைகள் நடத்தினர் என்பதுபற்றியன்று. எவ்வாறிருப்பினும், அண்மைக் காலத்தில் காபினெட்டைப்பற்றிச் சட்டமே குறிப்பிட்டது. 1937ஆம் ஆண்டின் அரசாங்க அமைச்சர் சட்டத்தில், உயர்ந்த பதவியிலும் தாழ்ந்த பதவியிலும் இருந்த அமைச்சர்களுக்கான சம்பள வீதம் தரப்பட்டது. அதேபோன்று இடைநிலைப் பதவி வகிப்பவர்கள் காபினெட் சபையின் உறுப்பினர்களாக இருந்தால் அவர்களுக்குக் கூடுதலான ஊதியம் அளிக்கலாம் என அச் சட்டம் வகுத்தது. லண்டன் கெஜட்டிலிருந்து **(London Gazette)** இந்த உண்மையை அறியலாம் என்றும் குறிப்பிட்டது. எதிர்க்கட்சித் தலைவருக்கும் ஊதியம் வழங்கியதன்மூலம் அது ஒரு படி மேலே சென்றது.[57]

ஆயினும், காபினெட் சபைகளும் அமைச்சர்களும் தேர்ந்தெடுக்கப்பெறுதல், பதவியிலிருந்து விலகுதல், பதவி துறத்தல் போன்றவற்றிற்கும், தனிப்பட்ட முறையிலும் மொத்தமாகவும் பாராளுமன்றத்தோடு அவர்கள் கொண்டிருந்த உறவுநிலைபற்றியுமான சிக்கல் மிகுந்த மரபுகளின் கோவை பற்றி நாம் ஆராயவேண்டும். காபினெட் சபையைப் போலவே பல ஆண்டுகளாக இருந்த பழக்கத்தின் விளைவாகவே அவைகளும் தோன்றின. மேலும், அரசியல் கட்சிகள் அடிப் படையில் எழுந்த கருத்துகள் நிறைந்த சூழ்நிலையில் அவைகள் வளர்ச்சியுற்றன. எனவே, கட்சிகளின் வளர்ச்சிபற்றியும், ஒருபுறம் அவற்றிற்கும் மற்றொரு புறத்தில் காபினெட் சபை, மந்திரிசபை, பாராளுமன்றம் ஆகியவற்றிற்கும் இடையேயான உறவுபற்றியும் உணர முற்படவேண்டும்.

## அரசியல் கட்சிகளும் மந்திரிசபைகளும்

எலிசபத் இராணியாரின்[58] காலத்தில் தோன்றிய சமயப் பூசல்களைப்பற்றிக் குறிப்பிடும்போதே பிற்காலத்தில் 'விக்கு', 'டோரி' ஆகிய பெயர்களுடன் இணைந்த ஆழ்ந்த கருத்து வேற்றுமைகளைப்பற்றிக் குறிப்பிட்டோம். அதேபோன்று உள் நாட்டுப் போருக்கு வித்தாக வந்த பூசலைக்கொண்ட 'பியூரிட்டன்', 'கவாலியர்' (Cavalier) என்ற கட்சிகள் தோன்றியதைப்பற்றியும் முன்பே குறிப்பிட்டோம்.[59] குடியரசுவாதிகளின்மீது (Republi-

cans) அரச கட்சியினர் (Royalists) கொண்ட அரசியல் அல்லது இராணுவ வெற்றி காரணமாக முன்னிலை மீட்சி தோன்றவில்லை என்பதையும், பல கட்சிகள் ஒன்றுகச் சேர்ந்தே அதனைக் கொண்டுவந்தன என்பதையும், அதில் பிரஸ்பிடீரியர் பிரதான பங்கு பெற்றனர் என்பதையும் ஏற்கெனவே பார்த்தோம். எனினும், கட்சிப் பூசல் என்னும் வடிவில் பழைய பகைமை தொடர்ந்து வந்தது. இருந்தபோதிலும், தற்கால அரசியல் கட்சிகளின் மறு பிரதிகளே பதினேழாம் நூற்றுண்டிலும் பதினெட்டாம் நூற்றுண்டிலும் விளங்கிய விக்கு, டோரி கட்சிகள் எனக் கொள்வது தவறுன எண்ணத்தைத் தோற்று விப்பதாகும். ஒரு கட்சியின் நடவடிக்கைகளை ஒருங்கிணைக்கும் கட்சி அமைப்பு அக்காலத்தில் இல்லை. கட்சிக் கட்டுப்பாடும் அப்போது இல்லை. ஒவ்வொரு கட்சியின் முக்கியப் பண்புகளாக அமையக்கூடிய சில கொள்கைகள் இருந்தன என்பது உண்மை. ஆயினும், அவைகள் தெளிவற்ற முறையில் வெளி யிடப்பெற்றன. 'கட்சிக் கொள்கை' என்று கூறுமளவிற்கு அவைகள் உறுதியடையவில்லை. கட்சியமைப்பில் இத்தகைய இறுக்கமின்மை காணப்பெற்றதால், ஒவ்வொரு கட்சியிலும் மையக்கருவாக விளங்கிய நம்பிக்கை வாய்ந்த ஆதரவாளர்கள் இருந்தபோதிலும், கட்சியோடு நெருங்கிய தொடர்பு கொள்ளாத ஆதரவாளர்தாம் ஏராளமாக இருந்தனர். அவர்கள் எப்படி நடந்துகொள்வார்கள் என்பதை முன்கூட்டியே உணர்வது கடினமாகவும் இருந்தது. இதனல் அவர்கள் எளிதில் காரண மின்றிக் கட்சி மாறினுர்கள் என்பது பொருளன்று. ஒவ்வொரு கட்சியிலும் உட்பிரிவுகள் பல இருந்தன என்பதுதான் உண்மை நிலை. பெரிய கட்சியைவிட இச் சிறிய உட்பிரிவுகள்தாம் நெருக்கம் கொண்டனவாக இருந்ததோடு மிகுந்த செயல்திற முடையனவாகவும் இருந்தன. அதன் காரணமாக அரசியல் வல்லுநர்கள் இரு கட்சிகளோடுமட்டும் அல்லாது பல உட்பிரிவு களோடும் தொடர்புகொண்டு, அவற்றையும் சமாளிக்கவேண்டி வந்தது. இங்ஙனம் விக்கு மந்திரிசபையை எதிர்ப்பதற்கு டோரிகளுடன் இணைந்துகொண்ட விக்குகளின் குழுவிற்கு வால்போல் தலைமை தாங்கினுர். அவர் அநேகமாக ஒரு யாகோபியர் என்றே அவரது சகாக்கள் கொண்டாடினர்.[60] பதினெட்டாம் நூற்றுண்டில் இத்தகைய தாற்காலிகச் சூழ்ச்சித் திற நடவடிக்கைகள் அடிக்கடி நிகழ்ந்தன. இரு கட்சித் திட்ட அடிப்படையிலேயே பதினெட்டாம் நூற்றுண்டு அரசியல் அமைந்திருந்தது என மிக எளிதாகக் கூறுதல் தகாது என்பதை நினைவூட்டும் வகையில் அத்தகைய நடவடிக்கைகள் முக்கியத் துவம் வாய்ந்தவையாகின்றன.

**எதிர்க்கட்சி ஊக்கம் கெடுதல்:** இத்தகைய நிலைக்குப் பல காரணங்கள் இருந்தன. அரசாங்கக் காரியங்களை நிறைவேற்றுவதில் தங்களால் இயன்றவரை உறுப்பினர்கள் அரசாங்கத்திற்கு உதவி செய்யவேண்டுமென்ற பொதுவான கருத்து நிலவியது என்பதை முன்பே குறிப்பிட்டோம்.[61] அண்மைக் கால வழக்கில் 'எதிர்ப்புத் தெரிவித்தல்' எதிர்க்கட்சியின் வேலையன்று என்பது இதிலிருந்து தெளிவாகிறது. எனவே, வழக்கமாக ஒன்றிற்கொன்று எதிரிடையாக இருக்கும் இரு சக்திகளுக்கிடையே காணப்பெறும் இடையறாத பூசலின் விளைவாகத் தோன்றும் ஒற்றுமை யுணர்வும் கட்சிகளிடம் காணப்பெறவில்லை.

**உறுப்பினரும் உரிமையாற்றலும்** (Members and Mandates): அக் காலத்திலும் வாக்காளர்களிடமிருந்து பெறும் உரிமையாற்றல் போன்றவற்றையும், 'நெறிமுறைக் கட்டளைகள்' (instructions) என்று பொதுவாக வழங்கப்பெற்றவைகளையும் பெறுவதைப் பாராளுமன்ற உறுப்பினர் வெறுத்தனர். பாராளுமன்றக் கொள்கையில் ஏற்பட்ட ஓரளவு மாற்றத்தை இது பிரதிபலிக்கின்றது. பகரச் செயலாண்மை உரிமைப் பத்திரங்களோடுதான்[62] இடைக்காலப் பாராளுமன்ற உறுப்பினர் வந்தனர் என்பதை முன்னரே கண்டோம். ஆனால், அப் பத்திரங்கள் உறுப்பினரைக் கட்டுப்படுத்துவதைவிட வாக்காளர் தொகுதிகளையே அதிகமாகக் கட்டுப்படுத்தின. இருந்தபோதிலும், தல நலன்கள் என்று வரும்போது தொகுதியின் தெளிவான பகர ஆளாக உறுப்பினர் விளங்கினர்; தலச் சட்டங்களைக் கொண்டு வரும் கடமை கொண்டவராகப் பல நூற்றாண்டுகளாக விளங்கினர். எனினும், முதலாம் ஜேம்ஸின் ஆட்சிக்கு முன்னால் பொதுக் காரியங்களுக்கான உரிமையாற்றல்களைக் காணமுடியாது; முன்னிலை மீட்சிவரையிலும் அவை அரியவாகவே இருந்தன. அதன் பிறகு விலக்கு மசோதா (Exclusion Bill), உட்ரெக்ட் உடன்படிக்கை, வால்போலின் உள்நாட்டுப் பொருள்வரி மசோதா (Excise Bill), வில்க்ஸின் விவகாரம் போன்ற அரசியல் நெருக்கடிகள் தோன்றிய காலங்களில், வாக்காளர்களிடமிருந்து உரிமையாற்றலை உறுப்பினர் பெறுவது வழக்கமாகியது. தேர்ந்தெடுத்த தொகுதியின் வழக்குரைஞர் அல்லர் உறுப்பினர் என்றும், 'ஒருவர் தேர்ந்தெடுக்கப்பெற்றபின் அவர் இங்கிலாந்து மக்களின் பிரதிநிதியாக, வழக்குரைஞராக ஆகின்றார்; அதனால் பொதுவாக இங்கிலாந்து மக்களுக்கு உகந்தது என்று அவர் நினைத்த வழியில் செயலாற்றும் முழு உரிமை அவருக்கு உண்டு' என்றும் 1745ஆம் ஆண்டில் அமைச்சர் ஒருவர் விளக்கினர்

மேலும் அவர் குறிப்பிடுகையில், 'தமது வாக்காளர்களிடமிருந்து உறுப்பினர் யோசனை கேட்கலாம், அதனைப் பெறலாம், அதனைப் பின்பற்றியும் நடக்கலாம். ஆனால், அதற்கு அவர் கட்டுப்பட்டவர் அல்லர். நாட்டின் பொது நலனுக்கு முரணானது என அவர் கருதினால் அந்த யோசனையைப் பின்பற்றி ஒழுகவேண்டு மென்பது இல்லை' என்று விளக்கினார்.[63] 1797ஆம் ஆண்டில் இதைப்பற்றிக் குறிப்பிடும்போது சார்லஸ் ஜேம்ஸ் ஃபாக்ஸ் ஓரளவு உறுதி தளர்ந்து பேசினார்; 'மக்கள் நிறைந்த நகரங்களின் பிரதிநிதிகளாக இருப்பவர்கள், வாக்காளர்களின் வார்த்தைக்குப் பணிவதா அல்லது தங்கள் தங்களுடைய உள்ளுணர்வைப் பின்பற்றி நடப்பதா என்பது ஐயத்திற்குரிய ஒன்றே' என்று அவர் குறிப்பிட்டார். 'பிரபுவிற்கோ, கோமகனுக்கோ பிரதிநிதியாகச் செல்பவர்களைப் பொறுத்தவரையில் ஐயப்பாடு ஏதுமில்லை; தனிப்பட்ட தொகுதியாளரின் ஆணையை அப்படியே நிறைவேற்றாதவர் மதிப்பு வாய்ந்தவராகக் கருதப்படமாட்டார்'[64] என்றும் வஞ்சப் புகழ்ச்சியாகக் குறிப்பிட்டார். 1777ஆம் ஆண்டில் பிரிஸ்டல் மாவட்ட அதிகாரிகளுக்கு பர்க் எழுதிய கடிதங்கள் (Burk's 'Letter to the Sheriffs of Bristol'), பாராளுமன்ற உரிமை பற்றிய பண்டைக் காலக் கருத்து எத்துணைத் தீவிரமாக இருந்தது என்பதை விளக்குகின்றன. அரசியல் வட்டாரங்களில் இத்தகைய கருத்துகள் உலவிவந்த நிலையில் நன்கு இணைந்த கட்சி வளர்வது இயலாது என்பதைக் காணலாம். குறைந்த எண்ணிக்கையுள்ள நிலையற்ற வாக்காளரின் மனநிலைகளுக்கு ஏற்றவாறு தேர்தல் அமைகின்றது என இன்று பொதுவாகக் கருதப்படுவதைப்போலவே, பதினெட்டாம் நூற்றாண்டில் நிரந்தரமான அரசியல் பிணைப்புகள் கொள்ளாத சிறிய, ஆனால், முக்கியமான உறுப்பினரின் குழுவைப் பொறுத்தே பல முறை காமன்ஸ் சபையில் எடுக்கப்பெற்ற வாக்கெடுப்புப் பிரிவுகள் அமைந்தன.

**தனிப்பட்ட சொந்த முறையிலான குடும்பச் செல்வாக்குகள் :** கட்சிகளின் அமைப்பில் கொள்கையைவிடத் தனிப்பட்ட சொந்த முறையிலான செல்வாக்கே சக்தி வாய்ந்ததாக இருந்தது. முன்பே விளக்கப்பெற்ற ஆதரவாளர் முறை ஒருவகையில் இதற்குக் காரணமாக விளங்கியது. அத் திட்டத்தில் பாராளுமன்றத்திலும் நாட்டிலும் பெல்ஹாம் குடியினர், ரஸ்ஸல் குடியினர், காவண்டிஷ் குடியினர், ஸ்பென்சர்கள், கிரன்வில்கள் போன்ற சில பெருங்குடியினர் மிகுந்த செல்வாக்குச் செலுத்தினர். சில சமயங்களில் அவர்கள் ஒருவருக்கொருவர் எதிராக நின்றனர்; தங்களுக்குள்ளேயே போட்டியிட்டுக்

கொண்டனர். விக்கு கட்சியைச் சார்ந்த நெருங்கிய தொடர்பு கொண்ட 'உறவினர்களாக' இருந்தனர். அரசியல் கட்சி என்றல்லாது 'தொடர்பு கொண்டவர்' எனத் தங்களை அழைத்துக் கொண்டனர். அப்படியிருந்தும் நம்முடைய காலத்தில் கட்சிக் கட்டுப்பாடு என்று கருதக்கூடிய ஒன்றினைச் சிறப்பு வாய்ந்த பெருஞ்செல்வரான நியூகாசில் பிரபுவாலும் காப்பாற்ற முடியவில்லை. இத்தகைய திட்டத்தில் மனநிறைவு அற்றவர்கள் இருந்தார்கள். அவர்கள் எதிர்க்கட்சியுடன் இணைந்துகொள்ளுதல் இயற்கையே. தற்காலிகச் சூழ்நிலைகளுக்கேற்ப இரு கட்சிகளின் அமைப்பு மாறியபோது, அரசாங்கத்தைக் குறிக்கும் அரச கட்சி (Court), ஏதோ காரணம் பற்றி அரசாங்கத்துடன் இணையாதவர்கள் அடங்கிய நாட்டுக் கட்சி (Country) என இருந்த பண்டைப் பிரிவுகள் தொடர்ந்து தலைகாட்டிவந்தன.

**கட்சித் திட்டம்**: பெரிதும் எதிர்காலத்தைக் கவனத்தில் கொண்டு எழுந்த பரந்த விளக்கமான திட்டத்தினைக் கொண்டதாகத் தற்காலக் கட்சிகள் வெளிப்படையாக உரிமை பாராட்டுகின்றன. இது ஒன்றே பண்டைக் காலக் கட்சி முறைக்கும் தற்காலக் கட்சி முறைக்குமுள்ள முக்கிய வேற்றுமையாக உள்ளது. வாய்ப்புக் கிடைக்குமானால் உடனடியாக என்ன செய்ய முடியுமென்பதை ஒரு கட்சி எடுத்துரைக்க முடியும். எவ்வாறிருப்பினும், வாக்காளர்களுக்கு உறுதிமொழிகள் அளிக்க வேண்டிய அவசியம் பழைய திட்டத்தின்கீழ் இல்லை. மேலும், வேட்பாளர்கள் காட்டிய பலவகையான சுவர்க்கங்களில் ஒன்றினைத் தேர்ந்தெடுக்கவேண்டுமென்று வாக்காளரும் கருதவில்லை. எதிர்காலத்தில் என்ன செய்ய இருக்கிறோம் என்பது பழங்கால விக்கு அல்லது டோரியின் முக்கியப் பிரச்சினையன்று; அதற்கு மாறாக, இறந்தகாலத்தைப்பற்றிய அவர்களுடைய கருத்து என்ன என்பதுதான் முக்கியமாக இருந்தது. நீண்ட காலத்திற்கு முன்பு நடந்த புரட்சியும் உட்ரக்ட் உடன்படிக்கையும் இரு முக்கியச் சோதனைகளாகத் திகழ்ந்தன. 1688ஆம் ஆண்டின் விரிவான விவாதத்தையும், 1711ஆம் ஆண்டில் எழுந்த டாக்டர் சச்சிவெரல் வழக்கின் விவாதங்களையும் (Appeal from the New to the Old Whigs) எடுத்துக்காட்டித் தமது மரபு கோட்பாட்டிற்கு 1792ஆம் ஆண்டில் பர்க் விளக்கம் தந்தார். பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் 1688ஆம் ஆண்டின் நிகழ்ச்சிகளைப் பற்றிய விரிவான விவாதங்கள் அரசத்துரோகமான அவதூறாகக் கொள்வதற்கு இடமளித்தது. புரட்சிபற்றிய சரிநிகரான விளக்கமே விக்கு மரபு கோட்பாட்டின் முக்கியக் கூறாக விளங்கியது.

இரு கட்சிகளும் தங்களுக்குற்ற நூல்களைக் கொண்டிருந்தன. ஜான் லாக்கினுடைய (John Locke) கட்டுரைகளில் விக்கு கட்சியின் கொள்கை விவரமாக, வன்மையாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அரசாங்கத்தின் சமுதாய ஒப்பந்தக் கொள்கையின் மூலமாக நேர்மையையும் நடுநிலைமைத் தன்மையையும் அவ்வறிஞர் வலியுறுத்தினர். 1702ஆம் ஆண்டில் முதல் முறையாக வெளிவந்தபோது மிகுந்த உணர்ச்சியைக் கிளப்பியதும், ஆங்கில உரைநடையில் தலைசிறந்த நூல்களில் ஒன்ருன கிளாரண்டனின் 'புரட்சியின் வரலாறு' (Clarendon's 'History of the Rebellion')[65] என்பதையே டோரிகள் வேதமாகக் கொண்டனர். அதனேடு பாலிங்புரோக் பிரபு எழுதிய திரட்சி குறைந்த, ஆனல், ஒப்புவமையற்ற கட்டுரைகளையும் பல டோரிகள் முன்வைத்தனர்.

**தன்னலக் கும்பல் என்று கட்சியைத் தூற்றல்:** நீண்ட காலத்திற்குக் கட்சியை மக்கள் குறைகூறிவந்தனர். அதனைப் பொதுவாகத் தன்னலக் கும்பலென்றே குற்றஞ்சாட்டினர். கட்சியாளருடைய ஒன்றுபட்ட செயலைச் 'சூழ்ச்சி என்றும், செயற்கூட்டுறவு என்றும் தூற்றினர். கிரேக்க, ரோமானிய வரலாறுகள்மட்டுமன்றி நம் நாட்டு வரலாறும் எச்சரிக்கை விடுவதற்குரிய சான்றுகளாகப் பயன்படக்கூடியதே. தன்னலக் கும்பல்களின் விளைவு என்ன ஆகும் என்பதை உள்நாட்டுப் போர் நன்கு உணர்த்தியது. கிளாரண்டன் எழுதிய 'வரலாற்றிலும்' (History), அதன் முன்னுரையாக ரோசெஸ்டர் (Rochester) எழுதிய இடத்திலும் இப் படிப்பினை நன்கு விளங்குகிறது.[6 எனவே, அரசாங்கப் பணிபுரியும் பலதிறப்பட்ட கருத்துக் கொண்ட அனைவரும் அக்கம்பக்கமாக இருந்து பணியாற்றி நாட்டில் ஒற்றுமையை வளர்க்க வேண்டுமென்று டோரிகள் விழைந்தனர். ஒரு கட்சியினரே அரசாங்கத்தில் புகுந்து கொண்டு எதிர்க் கட்சியின் பணி அதற்குக் கிடைக்காது செய்வது என்பது இயற்கைக்கு மாருனதாகவும் தகாத் துணிபுடையதாகவும் அமையும். அதனேடு தலைசிறந்த மக்களுடைய பணியை வேண்டி நின்ற மன்னருக்கு இழுக்கானதாகவும், நாட்டிற்கு இடர் விளைவிப்பதாகவும் அச் செயல் அமையும். வெறுக்கத்தக்க இத்தகைய சூழ்ச்சிச் செயல் முறையை வெற்றிகரமாக விக்கு கட்சியினர் செயற்படுத்தியதிலிருந்து டோரிகளுடைய கருத்து உறுதிசெய்யப்பட்டது. பதவிகள், 'செல்வாக்கு' ஆகியவற்றின் மூலமாக நடைமுறைக்கு வந்ததனுல் இத் திட்டம் மேலும் தீங்கு நிறைந்ததாக மாறியது.

**கட்சி சார்பாக பர்க்கின் தன்னிலை விளக்கம்:** கட்சிகளைப் பொறுத்துக்கொள்ளும் மனநிலை மெள்ள மெள்ளத் தலைதூக்கியது. ஓரளவு உண்மையுடன் பல டோரிகளை யாகோபியக் கொள்கையுடையவரென்று விக்குகள் குற்றம் சாட்டினர். அந்த நிலையில் அரசியல் அமைப்பும் பிராட்டஸ்டெண்ட் சமயமும் ஆபத்தில் இருந்தனவென்றும், அவற்றைக் காக்க விக்குகளால் தான் முடியுமென்றும் ஓரளவு பொருத்தமாக வாதாடினர் அக் கட்சியினர். 1714ஆம் ஆண்டிலிருந்து 1760ஆம் ஆண்டில் மூன்றும் ஜார்ஜ் மன்னர் பட்டத்திற்கு வரும்வரையில் 'விக்கு கட்சியின் உச்ச உயர்நிலை' நிலைத்திருந்தது. ஆயின், நீண்டகாலத்திற்கு அது ஒரே கட்சியாகத் திகழவில்லை; வெகுவிரைவிலேயே தங்களுக்குள்ளேயே தீவிர அரசியல் பூசல்களில் ஈடுபட்ட பல கும்பல்களாகப் பிரிந்துவிட்டது. காபினெட், பாராளுமன்றம், கட்சி ஆகியவற்றிற்கிடையேயான சீரமைவின் முதல் படிகளை அவைகள் தோற்றுவித்தன. சுருங்கக் கூறின், கட்சியைப் பொறுத்துக்கொள்ளும் நிலை உருவாகியது. விக்கு கட்சியின் ஆதிக்கத்தை அழித்து, அரசாங்கப் பதவிகளை டோரிகளுக்கும் விக்குகளுக்கும் அளிக்கவேண்டுமென்று மூன்றும் ஜார்ஜும் பூட் பிரபுவும் (Lord Bute) உறுதிபூண்டபோது, விக்கு கட்சியைத் தாக்குவதையே கொள்கையாகக் கொண்டிருந்தனர். அதே போன்று தாம் எழுதிய 'தற்கால மனநிறைவின்மைக்கான காரணங்கள்பற்றிய கருத்துகள்' ('Thoughts upon the causes of the present Discontents') என்ற நூலின் இறுதி ஏடுகளில் பர்க்கும் கொள்கையளவில் அக்கட்சியை ஆதரித்துப் பேசினர். அவர் 'செல்வாக்கு' என்ற பிரச்சினையைத் தட்டிக் கழித்து விட்டார். 'மனிதர்கள்' மீதல்லாது 'செயல்கள்' மீதான பஞ்சடைந்த மேற்கோளுரையைப் பொருளற்ற மரபுரையென்று தள்ளிவிட்டார். அதற்கு மாறாகப் பண்டைக் கால விக்கு வரலாறு பற்றி விளக்க ஆரம்பித்துவிட்டார். சண்டர்லண்டு பிரபு, கொடால்பின் பிரபு, சோமர்ஸ் பிரபு, மார்ல்பரோ பிரபு போன்ற அறிஞர்கள், பேராசை கொண்ட ஜன்டோ என்று தங்களைக் கூப்பிடுவார்கள் என்பதற்காக அஞ்சவில்லையென்று குறிப்பிட்டார். மேலும், அவர்கள் ஒன்றாக நின்று ஒன்றாகவே வீழ முடிவு செய்ததைப் பதவிகளுக்காகப் பறத்தல் என்று பதவியாளர் விளக்குவார்கள் என்பதற்காகவும் அவர்கள் அஞ்சவில்லை யென்றும் குறிப்பிட்டார். யாவர்க்கும் இசைவான ஏதோ ஒரு குறிப்பிட்ட கொள்கையின் அடிப்படையில் ஒருமித்த முயற்சியால் நாட்டு நலனைப் பேணுதற்காக ஒன்றுபட்ட கூட்டமே கட்சியாகும் என்றும் விளக்கினர்.[67] பத்தொன்பதாம் நூற்றாண்டில்தான் 'கட்சி ஆட்சிமுறை ஒரு படி மேலே சென்றது.

அரசியல் திட்டத்தில் இன்றியமையாத ஒரு கூறுகக் கட்சியை ஏற்றுக்கொண்டது அந்த நூற்ருண்டில்தான்.

## அரசியல் அமைப்பின் செயற்பாடு

இதுவரையில் தனித்தனியே விவரித்த அரசர், அமைச்சர்கள், பாராளுமன்றத்தின் இரு சபைகள், காபினெட் சபை, 'செல்வாக்கு' முறை, அரசியல் கும்பல்கள், கட்சிகள் என்ற பல கூறுகளும் நடைமுறையில் ஒன்ருய் இணைந்து மிகவும் மென்மையான, நுட்பமான இழைபோன்ற மரபுகளையும் அரசியற் பழக்கங்களையும் தோற்றுவித்தன. பொதுச்சட்டமென்னும் கட்டுக்கோப்புடன் இணைந்த இவைகள், அரசியல் அமைப்பு என்னும் பெருமாளிகையை உருவாக்கின.

**கிளாரண்டனின் வீழ்ச்சி**: 1667ஆம் ஆண்டில் கிளாரண்டன் பிரபுவின் வீழ்ச்சியோடு புதிய சகாப்தம் தொடங்குகிறது. தாம் கொண்ட கோட்பாடுகளிலும் முறைகளிலும் கிளாரண்டன், ஸ்டூவர்டு காலத்தவராக இருந்தார் என்பதைக் காட்டிலும் டியூடர் காலத்தவர் என்றே கூறலாம். எலிசபெத் இராணியாரும் அவர் காலப் பழக்கங்களுமே அவர் மனத்தில் குடிகொண்டிருந்தன. பிரிவி கவுன்சில் சபைமீது அவர் வைத்திருந்த நம்பிக்கையும், இரண்டாம் சார்லஸ் ஒரு பகுதியை ஏற்க மறுத்த மன்னர்தம் பங்குபற்றிய அவரது கருத்தும், மன்னர் விரும்பினுல் பாராளுமன்றத்தை வலிமை மிகுந்ததாகவோ அல்லது வலிமை குறைந்ததாகவோ அல்லது ஒன்றுமே இல்லாததாகவோ செய்ய முடியுமென்ற கொள்கையும், மானியம் வழங்குவதே பாராளுமன்றத்தின் ஒரே வேலை என்ற எண்ணமும் ஸ்டூவர்டு காலத்தைவிட டியூடர் காலத்தைச் சார்ந்தவையாகவே தோன்றின. உண்மையில் இத்தகைய எண்ணங்கள் காலத்திற்கு ஒவ்வாதவை என்பதை எடுத்துக்காட்டுவதே ஸ்டூவர்டு காலத்தின் முக்கிய நோக்கமாக இருந்தது என்பது கவனிக்கத்தக்கது. மந்திரி சபையில் இருந்த கிளாரண்டனின் சகாக்கள் அனைவரும் அவரை ஒத்த கருத்துகள் கொண்டவர் அல்லர். அரசருடைய அனுதாபத்தைப் பெற்ற ஆர்லிங்டன் பிரபு போன்ற கவாலியர்களின் செயலே கிளாரண்டனின் வீழ்ச்சிக்குப் பெரிதும் காரணமாகும். அதே சமயத்தில் பாராளுமன்றத்திற்கும் அரசாங்கத்திற்குமிடையே இணைப்பாக நின்ற மன்னுயை முதல்வருக்குப் பதிலாக அரச ஆதரவாளர் குழு ஒன்றை உருவாக்குவதில் அரசர் அக்கறை காட்டினுர்[68].

**கெபால் மந்திரி சபை :** நடைமுறைக்கு ஒவ்வாத கோட்பாட்டையுடைய கிளாரண்டன் வீழ்ச்சியுற்றதும், ஆங்கில அரசியலில் ஆய்நிலையான காலம் தோன்றியது. அதுபோது அதிகம் அறியப்படாத பிரச்சினைக்குப் புதிய தீர்வு காண்பதில் சந்தர்ப்பவாதிகளாக இருந்தவர்கள் வழிகாட்டிகளாக விளங்கினர். மன்னர் கலந்தாலோசித்த மந்திரிகளின் கூட்டமே 'கெபால்' என்று பெயர் பெற்றது. அதில் இருந்தவர்கள் ஒருவருக்கொருவர் கடமைப்பட்டவர்கள் அல்லர். அனைவரும் அரசருக்கே கடமைப்பட்டவர்கள். அமைச்சர்களின் நடத்தை பற்றிய பிற்காலக் கருத்துகளுக்கு முரணாக அவர்கள் சமயம், அரசியல் ஆகியவற்றில் மிகுந்த வேற்றுமை கொண்டிருந்தனர். இத்தகைய முறையின் விளைவுகள் எப்போதும்போலவே இருந்தன. அமைச்சர்கள் ஒன்றுபட்டு நிற்காதவிடத்து அரசரின் அதிகாரம் நிச்சயமாக அதிகரித்தது.

**டான்பி பிரபு :** சோதனைச் சட்டத்தின் விளைவாகக் கெபால் மந்திரி சபை கவிழ்ந்தது. பிற்காலத்தில் லாடிமர் வைகவுண்ட், டான்பி ஏர்ல் பிரபு, கார்மார்தனிஸ் மார்குவிஸ், லீட்ஸின் கோமகன் என்றெல்லாம் பட்டம் பெற்ற சர் தாமஸ் ஆஸ்போர்ன் என்பாரே அதன் இடத்தை நிரப்பினர். நிதித்துறையில் பல பதவிகளைப் பெற்றுத் தமது தகுதிகள் காரணமாகவே மெதுவாக மேல்நிலைக்கு வந்தவர் அவர். பக்கிங்காமின் ஆதரவும் அவருக்கு இருந்தது. மானியம் வழங்குவதற்கேயுரிய பாராளுமன்றமும், கொள்கை வகுத்து அதனைச் செயற்படுத்துகின்ற திறமை கொண்ட அரசரும் கிளாரண்டனுடைய திட்டத்தில் இடம் பெற்றனர் என்றால், சிலவற்றில் அதற்கு நேர்மாறான நிலையிலேயே டான்பி இருந்தார். டான்பியின் காலத்தில்தான் முதல் முறையாகத் தமது சக்தி முழுவதையும் பாராளுமன்றத்திடமிருந்து பெற்ற அமைச்சர் ஒருவர் தெளிவான, நன்கு வரையறுக்கப்பெற்ற வேலைத்திட்டத்தினை மன்னரிடம் அளித்தார்.[69] விரைவில் அவர் பிரபுவாக உயர்ந்தபோது, காமன்ஸ் சபையை நடத்திச் செல்லும் பொறுப்பை சபாநாயகரான சர் எட்வர்டு சேமூரிடம் (Sir Edward Seymour) ஒப்படைத்தார். ஆயின், கீழ் சபையில் மன்னரது செல்வாக்கையும் தமது செல்வாக்கையும் வலுப்படுத்திக்கொள்வதில் கவனம் செலுத்தினர். வாக்குகளை நன்கு திரட்டுவதன் மூலமாகச் சாதாரணத் திறமையாளரும் மிகுந்த பயனுள்ளவர்களாவார்கள் என்று குறிப்பிட்டார். அது பயனுள்ள அருங்கண்டுபிடிப்பாகவே அமைந்தது.[70]

டோரி கட்சியொன்றை முதல் முறையாக டான்பி உருவாக்கிஞர். காமன்ஸ் சபை விழைந்தவாறு, டச்சுக்காரருடன் நட்புக் கொள்கையையும் ஃபிரான்சுடன் பகைமைக் கொள்கையையும் தம்மால் முடிந்தவரையில் கடைப்பிடித்துச் செயலாற்றிஞர். ஆஞல், பிற பிரச்சினைகள் இடையே வந்தன. கத்தோலிக்கப் பெரும் பிரச்சினை தீவிரமடைந்தது. அமைச்சரின் கொள்கைக்கு மாருன வெளிநாட்டுக் கொள்கையை மன்னர் கடைப்பிடித்தார். இளவரசி மேரியை ஆரஞ்சு இளவரசர் வில்லியத்திற்கு 1677ஆம் ஆண்டில் மணமுடித்துவைப்பதில் டான்பி வெற்றி பெற்ற போதிலும், மன்னர் ஃபிரான்சிற்குச் சாதகமாகவே இருந்தார். டான்பியை விரட்டவேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்ட பதினன்காம் லூயி மன்னரிடமிருந்து (Louis XIV) ஊதியம் பெறுவோரின் பட்டியலில் ரஸ்ஸல் குடியில் தோன்றிய ஒருவர் உட்படப் பல விக்குகளும் இருந்தனர் எனக் காணும்போது, அக் காலத்தில் ஃபிரெஞ்சு செல்வாக்கு எத்துணை அளவிற்குப் பெருகியிருந்தது என்பது புலப்படும்.

டான்பி கையாண்ட கொள்கையின் விளைவாக மன்னரின் உரிமை மேலும் வளர்ந்தது. பாராளுமன்றத்தின் பிடி தளரும் என்பது தெளிவானபோது, ஷாப்ட்ஸ்பரி ஏர்ல் பிரபுவின் தலைமையில் காமன்ஸ் சபையில் எதிர்க்கட்சி யொன்று உருவெடுத்தது. அப்போதிருந்து இரு கட்சிகளும் ஒன்றிற்கொன்று எதிராக இருந்தன. அதன்பின் தொடர்ந்த போப்பினர் சதி (Popish Plot), விலக்கு மசோதா, புகழ் பெற்ற புரட்சிபோன்ற திடீர்த் திருப்பங்களுடைய நிகழ்ச்சிகள் பற்றி ஏற்கெனவே குறிப்பிட்டோம்[71]. அதிலும் விக்கு, டோரி கட்சிகளின் கொள்கைகள் அடிப்படையில் அவற்றை விளக்கிஞேம். மூன்ரும் வில்லியம் ஆட்சிக்கு வந்தபிறகு அரசியலில் ஆற்ருெழுக்குப்போன்ற அமைதி வழிகள் தோன்றின. மேலும், வழிவழியாக வந்த அரசியல் அமைப்புடன் கட்சி அரசியலை இணைக்குவிக்கும் நீண்ட கால முயற்சியின் தொடக்கமும் அது போது தோன்றியது.

**மூன்ரும் வில்லியம் :** மூன்ரும் வில்லியத்திற்கு ஆட்சியைப் பெற்றுத்தந்தவர் தாங்களே என்று உரிமை பாராட்டிய விக்குகள் தங்களுக்குள்ளேயே அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பார் வில்லியம் என எதிர்பார்த்தனர்[72]. ஆஞல், அரசரோவெனின் கட்சி அரசாங்கத்தை வன்மையாக எதிர்த்தார். செயலாட்சி செய்யும் சக்தியைத் தம்மிடமே இருத்திக்கொள்ள அவர் விரும்பிஞர். ஃபிரெஞ்சு மன்னர் பதினன்காம் லூயிக்கு எதிரான தமது

ஐரோப்பியக் கொள்கையை நிறைவேற்றுவதற்கு ஒன்றுபட்ட பாராளுமன்றத்தின் உதவியைப் பெறவும் விழைந்தார். அதற்கிணங்க 1693ஆம் ஆண்டுவரையில் முக்கிய அரசாங்கப் பதவிகளை இரு கட்சிகளுக்கும் இடையே ஏறக்குறைய சமமாகப் பகிர்ந்தளித்தார். இங்ஙனம் கார்மார்தன், நாட்டிங்காம் போன்ற வெளிப்படையாகக் கொண்டாடிய டோரிகளுக்கும், ரஸ்ஸல், பெல்ஹாம் (Pelham), டிவோன்ஷியர் போன்ற நன்கறிந்த விக்குகளுக்கும் பதவிகள் அளித்ததோடு, இரு கட்சிகளும் உரிமை கொண்டாடிய (அல்லது கைவிட்ட) ஆற்றலும் பேராசையும் கொண்ட கொடால்பினுக்கும் பதவிகள் தந்தார்.[73] ஆயின், முக்கிய, பயனுள்ள அதிகாரம் அரசர் கையிலேயே இருக்குமாறு செய்த இக் கொள்கையினுல் அரசாங்க அமைச்சர் பலரிடையே ஒற்றுமை வளராதுபோனதோடு அவர்களுக்கிடையே வெளிப்படையான பூசலும் தோன்றுவதற்கு வாய்ப்பிருந்தது. பாராளுமன்ற விவாதங்களில் பகைமையைக் காட்டியதைப் போலவே, நிர்வாகக் கடமைகள் ஆற்றுவதிலும் அவர்கள் முரண்பட்டு நிற்கும் நிலை ஏற்பட்டது. இந் நிலை மேலும் தொல்லை தருவதாக வளர்ந்தபோது, சண்டர்லண்டின் ஏர்ல் பிரபுவான ராபர்ட் ஸ்பென்சரின் யோசனையின் பேரில், அதுவரையில் இரு கட்சிகளுக்குமிடையே வகித்துவந்த நடுநிலைமையை இறுதியாக வில்லியம் கைவிட்டார். 1693ஆம் ஆண்டுமுதல் 1696ஆம் ஆண்டுவரையில் காமன்ஸ் சபையில் பெருவாரிக் கட்சியாக விளங்கிய விக்கு கட்சியைச் சார்ந்தவரிடமே உயர் அரசாங்கப் பொறுப்புகளை ஒப்படைத்தார்.

**'ஜன்டோ' 1694—1698 :** விக்கு கட்சித் தலைவர்கள் நெருக்கமாக இணைந்து எவ்விதத் தாக்குதலிலிருந்தும் ஒருவரை ஒருவர் காக்க முற்பட்ட புதுமைக் காட்சியைக் கண்டவர்கள், அவர்களை 'ஜன்டோ' என்று பெயரிட்டழைத்தனர். பதவிகளின்மீது விக்குகள் தனியுரிமை கொண்டாட முற்பட்டனர். அமைதி காக்கும் பொறுப்பாண்மைக் குழுக்களிலிருந்து டோரிகளை அவர்கள் வெளியேற்றினர். வில்லியத்தைக் கொலை செய்வதற்கென்று முளைத்த சதியைச் சாக்காக வைத்துக் கொண்டு கட்சியில் பற்றுறுதி குன்றியவர் என்று ஐயத்திற்குள்ளானோர்மீது கடுமையான நடவடிக்கை எடுத்தனர். ஆனால், அப்போதும் தற்கால வடிவில் மந்திரிசபை சார்ந்த அரசாங்க முறை முழுதுமாக நிலைநாட்டப்பெற்றது எனக் கூறமுடியாது. 1698ஆம் ஆண்டில் பொதுத் தேர்தல் நடைபெற்றபோது ஜன்டோவை எதிர்த்த காமன்ஸ் சபை உருவாகியது. கருவூலத் தலைமைப் பிரபுவாகவும், அதே சமயத்தில் நிதியமைச்சராகவும்

இருந்த மான்டேகு, காமன்ஸ் சபையின் தலைவர் பதவியை ஏற்று அதற்கான அதிகாரத்தையும் செலுத்தியபோது, அச் சபையைக் கட்டுப்படுத்தும் நிலையில் அவர் இல்லை. இக் காலத்தில் என்றால் அத்தகைய சூழ்நிலையில் மந்திரிகள் பதவியிலிருந்து நீங்கி எதிர்க் கட்சியினர் பதவிக்கு வர வழி விடுவர். ஆனால், அதற்கு மாறாக மான்டேகு தலைமையிலிருந்த அமைச்சர்கள் அவரவர்கள் பதவியில் நிலைத்துநின்றனர். வில்லியத்தின் ஆட்சித் தொடக்கத்தில் செய்ததைப்போல மந்திரி சபையைப் பதவியிலிருந்து நீக்கவேண்டுமென்று பாராளுமன்றமும் மன்னரைக் கோரவில்லை. அதற்குக் காரணம், அமைச்சர்கள் மீது தவறான நடத்தைக்கான குற்றச்சாட்டுக் கொண்டுவருவதற்கு ஒன்றும் இல்லாததுதான். அமைச்சர் ஒருவரைப் பதவியிலிருந்து விலகுமாறு கோருவதற்கு அரசியல் வேற்றுமை யொன்றே போதுமான காரணம் என்ற நிலை அப்போது தோன்றவில்லை. இங்ஙனம் மக்களின் பிரதிநிதிகளுக்கும் மன்னரின் ஆள்களுக்குமிடையே இருந்த பழைய ஒற்றுமையற்ற நிலை முழுச் சக்தியோடு மீண்டும் தலைகாட்டியது. 1705ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தலில், பாராளுமன்றத்தில், விக்குகள் பெரும்பான்மைக் கட்சியாக வரும்வரையில், சிறிது கால இடவெளிகள் நீங்கலாக இந் நிலை தொடர்ந்து வந்தது.

**பிரிவி கவுன்சில் சபையை மீட்பதற்கான முயற்சி:** பாராளு மன்றத்தின் பெரும்பான்மைக் கட்சிக்கும் காபினெட் சபைக்கு மிடையே ஒற்றுமையற்ற நிலை இருந்த இந்த இடைக்காலத்தில், அன்னிய அரச குலம் பதவிக்கு வந்தால் வேற்றுமை மேலும் வளரும் என்ற எண்ணம் மக்கள் மனத்தில் நிறைந்திருந்த வேளையில், மன்னருடைய தன்னிச்சையான செயலைத் தடுத்து நிறுத்தி, அரசியல் நிர்ணய சட்டத்தின் நான்காவது துணை வாசகத்தின் வழிவகை ஏற்பாட்டின் மூலமாக அமைச்சரின் பொறுப்பினை வலியுறுத்தும் முயற்சி யொன்று தோன்றியது. மூன்றாம் வில்லியத்தின் வெல்திறச் செயல்களை ஆராய்ந்ததன் விளைவாக, கவுன்சில் சபையில் விவாதிக்காமலேயே பிரிவினை உடன்படிக்கைகளை மன்னர் செய்துகொண்டார் என்பதைக் கண்டறிந்த பிரபுக்கள் சபை, அதைப்பற்றி புகார் செய்யும் அறிக்கை யொன்றை மன்னரிடமே அளித்தது. அரசியல் நிர்ணயச் சட்டத்தில் இச் செய்தி இடம் பெற்றது. நாம் முன்னரே கண்டவாறு, ஹனோவர் குலத்தவர் பட்டத்திற்கு வந்த பிறகு பிரிவி கவுன்சிலின் ஆட்சி எல்லைக்குட்பட்ட நாட்டு அரசாங்கத்தோடு தொடர்பு கொண்ட செய்திகள் அனைத்தும்

அச் சபையிலேயே எடுத்துக்கொள்ளப்படுதல் வேண்டு மென்றும், அவற்றிற்கான ஆலோசனை வழங்கி இசைவுதந்த பிரிவி கவுன்சிலரின் கையெழுத்தோடு அவை உறுதி செய்யப் படுதல் வேண்டுமென்றும் அரசியல் நிர்ணயச் சட்டத்தின் நான்காவது துணை வாசகம் வகுத்தது. 1689ஆம் ஆண்டி லிருந்து எதிர்க்கட்சி கோரிவந்தவற்றிற்குச் சட்டத்தின் இவ் வாசகமும், பதவிகள், நீதிபதிகளின் பதவிக் காலம், அன்னிய நாடுகளுடனான உறவுச் சிக்கல் போன்றவைபற்றிய பிற துணை வாசகங்களும் சட்ட வடிவம் தந்தன. மேலும், பகைமை யுணர்வும் உறுதியும் கொண்ட சபையானது ஒன்றினை ஏற்றுக் கொள்ளுமாறு மந்திரி சபையை வற்புறுத்த முடியும் என் பதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகவும் இவை விளங்கு கின்றன.[74] இருப்பினும், பிரிவி கவுன்சிலின் பழைய அதிகாரத்தை மீட்டது எத்துணைத் தூரம் தற்காலத்திற் கொவ்வாதது என்பது வெகு விரைவில் புலனாகியது. அதனால் செயற்படுவதற்கு முன்பே, ஆன் அரசியாரின் ஆட்சியின் தொடக்க காலத்தில், இத் துணைவாசகம் தள்ளுபடியாயிற்று என்பதை முன்பே பார்த்தோம்.

**கட்சியை வெறுத்த ஆன் அரசியார்:** மூன்றாம் வில்லி யத்தைப் போலவே இரு கட்சியிலிருந்தும் மிதவாதிகளைக் கொண்ட கலப்பு மந்திரிசபையை அமைப்பதில் ஆன் அரசியார் திடமான நம்பிக்கை கொண்டார். அவரது முதல் மந்திரிசபை ஏறக்குறைய இறுதிவரையில் இப் பண்பையே பெற்றிருந்தது. அதில் போருக்கான போதுமான ஆதரவைத் திரட்டுவதையே நோக்கமாகக்கொண்ட மார்ல்பரோவும், சமகாலத்தவர் வகை படுத்திக் கூறமுடியாத நிலையிலிருந்த கருவூலத் தலைவரான கொடால்ஃபினும், முன்னாள் விக்கு கட்சியினராய் இருந்து, அதுபோது டோரி தலைவராக விளங்கிய சபாநாயகர் ஹார்லியும் முக்கியமானவர்களாவர். அது நடுநிலைமையில் இருந்தோரின் கூட்டு மந்திரி சபையாக இருந்ததால் இரு கட்சிகளில் இருந்த தீவிரவாதிகளின் தாக்குதல்களுக்கு இலக் காகியது. 1708ஆம் ஆண்டில் ஹார்லியும் செயின்ட் ஜானும் பதவியிலிருந்து நீங்கியதால் விக்கு கட்சியினரின் மேலாதிக்கம் முழுமையடைந்தது. இராணியாருக்கு அது பெருவேதனையாக இருந்தது. 1710ஆம் ஆண்டில் போரை முடிவிற்குக் கொண்டுவர வேண்டுமென்ற நடுநிலையிலுள்ளோர் கட்சி யொன்றை ஹார்லியும் ஷ்ரூஸ்பரியும் உருவாக்கினர். பாராளுமன்றத்தில் உறுதியான பெரும்பான்மையை விக்கு கட்சி பெற்றிருந்த போதிலும்,[75] கருவூலத் தலைவராயிருந்த கொடால்ஃபின்,

அரசாங்கச் செயலாளராயிருந்த சண்டர்லண்டு போன்ற குறிப்பிடத்தகுந்த விக்கு கட்சித் தலைவர்களை வெளியேற்றுவதில் இராணியார் வெற்றி கண்டார். பல மாதங்களுக்குப் பரவிய, எச்சரிக்கையோடு கூடிய, பல படிகளில் அவர்களை வெளியேற்றினர். முற்றிலும் டோரிகளையே கொண்ட மந்திரிசபை அமைவதைத் தவிர்க்க வேண்டுமென்றும் அரசியாரும் ஹார்லியும் கவலை கொண்டிருந்தனர். அதற்காக அதிகாரத்தின் பெரும் பகுதியை டோரிகளிடமே விட்டு, கலப்பு மந்திரிசபையில் சேருமாறு விக்கு கட்சித் தலைவர்களைத் தூண்டும் முயற்சி பயனில்லாதுபோயிற்று.

அந்த ஆண்டிலேயே பொதுத் தேர்தல் நடைபெற்றது. சச்சிவெரல் வழக்கினால் கிளர்ந்து எழுந்த திருச்சபையாளருடைய செல்வாக்கு மிகுதியாக இருந்தது. அதன் காரணமாக 1714ஆம் ஆண்டில் இராணியாரின் ஆட்சி முடிவிற்கு வரும்வரை வாதத்திற்கிடமற்ற அதிகாரத்தை ஆக்ஸ்ஃபோர்டு ஏர்ல் பிரபுவான ஹார்லியின் தலைமையிலான அமைச்சரவை தொடர்ந்து அனுபவித்துவருமளவிற்கு விக்கு கட்சியினர் படுதோல்வி அடைந்தனர். பிரபுக்கள் சபையில் கடுமையான எதிர்ப்பு இருந்தபோதிலும்[76], உட்ரக்ட் உடன்படிக்கையை அம் மந்திரிசபை செய்துகொண்டது. ஆயின், யாகோபிய நலனைப் பேண வேண்டுமென்ற நோக்கோடு ஏற்பட்ட வழக்குமீறிய சூழ்ச்சியின் விளைவாக அது வீழ்ச்சியுற்றது.

**காபினெட் சபை:** எவ்வாறாயினும், எந்தக் குலம் ஆட்சிக்கு வந்தால் காபினெட் சபை இருந்த இடம் தெரியாமல் மறைய வேண்டுமோ அக் குலத்தின் முதல் இரு மன்னர்கள் காலத்தில் தான் மந்திரிசபையின் மூலமாக நடைபெறும் பாராளுமன்றம் சார்ந்த அரசாங்கம் இறுதியாக முழு வடிவம் எய்தியது. மந்திரிகள் பெயரளவில்தான் மன்னரின் சேவகர்களாக இருந்தனர். உண்மையில் காமன்ஸ் சபையில் அவ்வப்போது விளங்கும் பெரும்பான்மைக் கட்சியின் பிரதிநிதிகளாகவே அவர்கள் திகழ்ந்தனர். முதலாம் ஜார்ஜ், இரண்டாம் ஜார்ஜ் ஆகிய மன்னர்களுடைய தனிப்பட்ட பண்பின் விளைவே இந்நிலைக்குக் காரணம். இனம், மொழி, அரசியல் ஒத்துணர்வு ஆகியவற்றில் அன்னியர்களாக இருந்த அவர்கள், அன்பிற்குப் பாத்திரமான ஹனோவரை அதிகமாக நேசித்து அங்கே தங்குவதிலே குறியாய் இருந்தனர். மேலும், கிரேட் பிரிட்டனின் அரச பதவியைத் தங்களது சிறிய ஜெர்மானியத் தேர்வாள நாட்டின் சார்பு பொருளாகவே, அதிலும் தொல்லை தரும் சார்பு பொருளாகவே அவர்கள் கருதியதாகக் காணப்படுகின்றது.

சர் எர்ஸ்கின் மே (Sir Erskin May) என்னும் அறிஞருடைய பின்வரும் சொற்கள் கவனித்தற்குரியவை: 'பாராளுமன்றத்தின் தொல்லை தரும் சக்தி அவர்களுக்குப் புரியாத புதிராக இருந்தது. கலகங்களை ஒழித்து அரச பதவிக்குப் போட்டியாக வந்த போலிகளை அழித்து, பாராளுமன்றத்தின் எதிர்ப்பைச் சமாளித்து வெற்றி கொண்டு, அரசாங்கத்தின் சுமைகள் அனைத்தையும் ஏற்றுக்கொண்ட ஆற்றல்மிகு அமைச்சர்கள் முதன்மை நிலை எய்துவதை முதல் இரண்டு ஜார்ஜ் மன்னர்களும் மகிழ்ச்சியோடு வரவேற்றனர். தாங்கள் பிறந்த நாட்டிற்கு அடிக்கடி சென்றுவருதல்; ஜெர்மானிய அரசவையாளர், ஆதரவாளர், காமக்கிழத்திகள் ஆகியோருடன் மகிழ்ந்திருத்தல் போன்ற தங்கள் மனத்திற்குகந்த இன்பங்களில் ஈடுபட்டிருந்த அவர்கள், அரசியல் சட்டத்திற்குட்பட்ட அரசாங்கத்தின் தொல்லைமிகு தகராறுகளில் தேவைக்குமேல் பங்குகொள்வதை விழையவில்லை. திறமைவாய்ந்த அமைச்சரிடம் தங்களது பெயரையும் அதிகாரத்தையும் பயன்படுத்த அனுமதியளித்த அவர்கள், அமைச்சரின் ஆலோசனைப்படியே நடந்தனர். மன்னர்தம் வசமிருந்த எல்லா வழிகளிலும் அவர்களுக்குத் துணையாக நின்றனர்.'[77] ஐரோப்பாவில் இருந்த தங்களுக்குச் சொந்தமான பகுதிகளை பாதிக்காத செய்திகள் அனைத்திலும் முதலிரு ஜார்ஜ் மன்னரும் காட்டிய அக்கறையின்மையினால், மிக முக்கியமானவும் நன்மை பயப்பனவுமான விளைவுகள் தோன்றின. சொந்த முறையிலான அரச அதிகாரம் சிறிது காலத்திற்கு அறவே இல்லாத கோனாட்சியின்கீழ்க் கட்டுப்பாடு ஏதுமின்றி ஆங்கில அரசியல் திட்டம் வளர்வதற்கு வாய்ப்பு ஏற்பட்டது. தமக்கு முன்னால் ஆண்ட இரு மன்னர்களின் காலத்தில் இழந்த நிலையை மீட்பதற்காகத் தமதாட்சி முழுவதிலும் மூன்றாம் ஜார்ஜ் மன்னர் அரும்பாடு பட்டார். ஆனால், காமன்ஸ் சபையிடம் கூட்டுப் பொறுப்புக் கொண்ட அமைச்சர் நிறைந்த அரசாங்கத் திட்டம் நன்கு வேரூன்றிவிட்டதால், அதனை அழிப்பது என்பது அரிதே. மேலும், அது இன்று பாராளுமன்றத்தைப்போலவே அரசியல் திட்டத்தின் இன்றியமையாத ஒரு பகுதியாகக் கருதப்படுகிறது.

1714ஆம் ஆண்டில் எழுந்த நம்பிக்கையிழந்த, நலங்கெட்ட சூழ்ச்சியினால் யாகோபியக் கறை, டோரிகளின்மீது மீண்டும் படிந்தது. ஹானோவர் குலத்தின் முறையான தன்மையில் கொண்ட நம்பிக்கையையும், எதிர்ப்புத் தெரிவிப்பதில்லையென்ற உறுதியையும் பொய்யாக்கும் செயல்களில் பல டோரிகள் ஈடுபட்டதனால், அவர்களுடைய வளர்ச்சி தடைப்பட்டதே தவிர, தீவிரமடையவில்லை.[78] அதனால் அரை நூற்றாண்டுக் காலத்திற்கு

அவர்கள் பதவியின்றிப் பரிதவித்தனர். தங்களை யாகோபியர் என்று வெளிப்படையாகவே அழைத்துக்கொண்டவரிட மிருந்தே 'பதினைந்தோ' அல்லது 'நாற்பத்தைந்தோ' (1715ஆம் ஆண்டிலும் 1745ஆம் ஆண்டிலும் எழுந்த கலகங்கள்) மனமார்ந்த ஆதரவைப் பெறவில்லையென்றாலும், அதனோடு தொடர்புகொண்டது என்ற ஒன்றே, அப் பழி, நினைவிலிருந்து நீங்கி அழியும்வரையில் டோரி கட்சியினரைப் பதவியிலிருந்து விலக்கிவைக்கப் போதுமானதாக இருந்தது. இதற்கிடையில் பயனுள்ள திறனாய்வுப் பணியை மேற்கொண்ட விக்கு கட்சி யினர், உண்மையிலேயே ஆபத்தான சில கூறுகளைக் கண்டித்து வந்தனர். அதன் காரணமாக விக்கு கட்சியின் மேலாதிக்கம் இருந்த காலம் முழுவதிலும் டோரி கட்சிக்குக் குறையாத எதிர்ப்பு இருந்துவந்தது. 'நிலைப்படையும், நீண்ட காலப் பாராளு மன்றங்களும், பெருஞ் செல்வந்தரும்' தாக்குதலின் தனி யிலக்குகளாக இருந்தன. இங்கிலாந்தின் தலைவிதியை நிர்ணயிப் பது அதன் நிலப்படை அல்ல என்றும், கடற்படையே என்றும் தனித் தலைவரான கிளாரண்டனைப்போலவே அவர்களும் எண்ணினர். அவர்கள் ஏழாண்டுச் சட்டத்தை அடிக்கடி குறைகூறினர். விக்கு கட்சியின் கண்டுபிடிப்பே இங்கிலாந்து பாங்கு (Bank of England) என்று கொண்டனர். நிதிசார்ந்த சூதாட்டங்களின் தீமைகளுக்கெதிரான எச்சரிக்கையாகத் தென் கடற் குமிழியைச் (South Sea Bubble) சுட்டிக் காட்டினர். விக்கு கட்சியினர் ஆழ்ந்து வேரூன்றிவிட்ட காரணத்தால் டோரிகள் கருதியதைப்போலக் கட்சி ஆட்சியின் தீமைகள் மேலோங்கின. பொதுவாகப் பாராளுமன்ற ஊழல் களுடனும், 'செல்வாக்கு', 'பதவியாளர்' ஆகியோருடனும் அயராது போரிட்டுவந்த டோரிகள் சில சமயங்களில் சிறிது வெற்றியும் பெற்றனர். இவ்வாறாக எதிர்க் கட்சிக்கான திண்மையான கருமூலம் அப்போது இருந்தது. அவ்வப்போது அதிருப்திகொண்ட விக்குகள் அதனுடன் சேர்ந்துகொண்டதால் உண்மையான முனைப்புமிகுந்த அரசியல் போட்டி எழுவதற்கு வாய்ப்புகள் தோன்றின.[79]

**1714 முதல் 1721 வரை இருந்த ஸ்டான்ஹோப் மந்திரி சபை:** ஏறக்குறைய மந்திரி சபையில் முழு மாற்றத்தோடு புதிய ஆட்சி தொடங்கியது. சாதாரணமாகச் சிறிதுசிறிதாகத் தான் மாற்றம் தோன்றுவது வழக்கம். அதனால் அரசாங்கத்தின் அரசியல் தன்மையும் மெள்ளமெள்ள மாறும். அந்நிலையில் இது போன்ற முழு மாற்றம் ஏற்படுவது மிக அருமையாகும். 1689ஆம் ஆண்டில்தான் இத்தகைய முழு மாற்றம் தோன்றி

அது ஒரு முன்னிகழ்வாக விளங்கியது. 1782ஆம் ஆண்டில் நார்த் பிரபுவைத் தொடர்ந்து ராக்கிங்காம் பிரபு பதவி ஏற்ற போதுதான் மீண்டும் இதுபோன்ற நிலை தோன்றியது. 1714ஆம் ஆண்டில் பதவிக்கு வந்த மந்திரிசபையில் பாலிங் புரோக்கிற்குப்[80] பதிலாக வந்த அரசாங்கச் செயலரான டவுன் ஷெண்டும், அவரது சகாவான ஜேம்ஸ் ஸ்டான்ஹோப்பும் முக்கியமானவர்கள். 1717ஆம் ஆண்டில் பிரபுத்துவம் பெறும் வரையில் காமன்ஸ் சபையில் மந்திரிசபைக்காகப் பேசியவர் ஸ்டான்ஹோப்பே. மாண்டேகு என்பவர் கருவூலத் தலைமைப் பிரபுவாகவும் ஹாலிஃபாக்ஸ் பிரபுவாகவும் உயர்ந்தார். அரசாங்க முத்திரைக் காவலராகக் கௌபர் பிரபு பதவியேற்றார். டவுன் ஷெண்டின் மைத்துனரான வால்போலும் வில்லியம் புல்டினியும் (William Pulteny) சாதாரணப் பதவிகளை வகித்தனர். பிரிவி கவுன்சிலின் தலைமைப் பிரபுவாக இருந்த நாட்டிங்காம் பிரபு, ஆரம்ப காலத்தில் டோரியாக இருந்தவர். ஆனால், ஹனோவிரி யரைப் பதவிக்குக் கொண்டுவருவதில் அவர் விக்குகளுடன் இணைந்துகொண்டார். எனவே, நடைமுறையில் பார்க்கும் போது, ஒரு கட்சியைச் சார்ந்த மந்திரி சபையாகவே அது விளங்கியது. அச் சபை குறிப்பிடத்தகுந்ததாக இருப்பதற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

**வால்போலின் எழுச்சி :** காமன்ஸ் சபை விவாதங்களில் காட்டிய திறமை காரணமாக வால்போலுக்கு இறுதியில் உயர் பதவி கிட்டியது. 1715ஆம் ஆண்டு முடிவதற்குள் அவர் கருவூலத் தலைமைப் பிரபு ஆனார். இதற்கிடையில், ஆன் அரசியார் இறந்த ஆறு மாதங்களுக்குள் அவர் காலப் பாராளு மன்றம் கலைக்கப்படவேண்டுமென்பது சட்டமென்பதால், புதிய பாராளுமன்றம் தேர்ந்தெடுக்கப்பெற்றது. நல்ல ஹனோவிரிய பிராட்டஸ்டென்டுகளையே தேர்ந்தெடுக்கு மாறு அரசப் பேரறிவிப்பாணை வற்புறுத்தியது. இத்தகைய தவறான நடைமுறையை இடைக்காலத்திலும் பிற்காலத்திலும் பல முறை கண்டித்தனர் என்பது கவனிக்கத்தக்கது. பதி னெட்டாம் நூற்றாண்டில் சாதாரணமாக நடைபெறுவதைப் போலவே மந்திரிசபைக்குச் சாதகமாகவே தேர்தல்கள் அமைந்தன. உட்ரெக்ட் உடன்படிக்கையில் கொண்ட பங்கிற் காக பாலிங்புரோக்மீதும் ஆக்ஸ்ஃபோர்டு மீதும் அரசியல் துரோகக் குற்றத்தைப் புதிய பாராளுமன்றம் சுமத்தியது. ஓர் அமைச்சர் மீது, குற்றவழக்கிற்குப் பிறிதான, அரசியல் தடுப்பு நடவடிக்கையாக இத்தகைய செயல்முறை பயன்பட்டது இதுவே கடைசித் தடவையாகும். அதேசமயத்தில் ஏழாண்டுச்

சட்டம் இயற்றுவதற்கான வாய்ப்பினை 1715ஆம் ஆண்டில் ஏற்பட்ட யாகோபியர் படையெடுப்பு அளித்தது. இங்ஙனம் விக்குகள் உறுதியாக வேரூன்றி நின்றனர். எனினும், டவுன் ஷெண்டின் அமைச்சும் ஸ்டான்ஹோப்பின் அமைச்சும் வெகு விரைவிலேயே பிரிந்து நின்றன. தனிப்பட்ட சொந்த முறையிலான காரணங்களுக்காக சண்டர்லண்டு ஏர்ல் பிரபுவான சார்லஸூம் பிரிந்து சென்றார். மன்னருக்கும் டவுண் ஷெண்டிற்குமிடையே சிறு காரணங்களுக்காகத் தகராறு ஏற்பட்டது. டவுன்ஷெண்டுடன் மட்டுமல்லாது வால்போலுடனும் பூசல் தோன்றியது. 1717ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் டவுன்ஷெண்ட் பதவியிலிருந்து விலக்கப்பட்டார்.[81] அதன் பேரில் தமது அனுதாபத்தைத் தெரிவிப்பதற்காக வியப்பூட்டும் வகையில் வால்போலும் தமது பதவியை ராஜிநாமா செய்தார். அவ்வாறு செய்யவேண்டாமென்று வற்புறுத்திய மன்னருக்கும் சமகால மக்களுக்கும் வால்போலின் செயலானது இயற்கைக்கு மாறானதாகவும், மட்டுமீறிய நடத்தையாகவும் தோன்றியது. ஒன்றாகச் சேர்ந்து செய்த புதிய சூழ்ச்சிக்கிணங்க புல்டினியும் மற்றையோரும் தங்கள் பதவிகளைத் துறந்தனர்.

இதைவிட மோசமான நிலை பின்னர்தான் தோன்றியது. அதுவரையில் கண்டிராத அளவிற்கு, இயற்கைக்கு மாறான வகையில் வால்போலும் அவரைச் சார்ந்த கும்பலும் எதிர்ப்புத் தெரிவித்தனர். முன்னால் தாம் அங்கீகரித்த வழிமுறைகளையே வால்போல் கடுமையாகத் தாக்கினார். டோரிகளுடனும் யாகோபியருடனும் சேர்ந்துகொண்டார். மேலும், எதிர்ப்பதையே கடமையாகக்கொண்ட எதிர்க்கட்சி என்ன செய்யுமென்பதற்கு அவர் எடுத்துக்காட்டாக விளங்கினார். இங்ஙனம் பிரபுத்துவ மசோதாவையும், பிற அரசாங்க மசோதாக்களையும் வால்போலும் அவரது சகாக்களும் வீழ்ச்சியுறுமாறு செய்தனர். ஆயினும், தொல்லைகள் தந்தபோதிலும் உறுதியான ஸ்டான் ஹோப்பின் மந்திரி சபையினை அவர்களால் அசைக்க முடியவில்லை. மன்னருக்கும் வேல்ஸ் இளவரசருக்குமிடையே 1720ஆம் ஆண்டில் சுமுகமான உறவு ஏற்பட்டது. வேல்ஸ் இளவரசருடன்தான் வால்போல் இணைந்திருந்தார். அதனைத் தொடர்ந்து அமைச்சர்களுக்கும் முன்னாள் அமைச்சர்களுக்குமிடையே ஒருவகையான சமரசம் ஏற்பட்டது. வால்போலும் டவுன்ஷெண்டும் சிறு பதவிகளை ஏற்றனர். ஆனால், தென்கடல் நீர்க்குமிழியோடு மந்திரிசபையும் கவிழ்ந்தது. பிரபுக்கள் சபையில் விஷமத்தனமான தாக்குதலுக்கு உட்பட்ட குற்றமற்றவரான ஸ்டான்ஹோப் மறுநாளே உயிர்நீத்தார். அரசாங்கச்

செயலாளராக இருந்த கிராக்ஸும் (Graggs) மரணமடைந்தார். அஞ்சல்துறைத் தலைமை அலுவலராக (Postmaster General) இருந்த அவரது தந்தையாரும் நஞ்சுண்டு இறந்தார். பதவி துறந்த அய்ஸ்லபியும் (Aislabie) டவர் கோட்டைச் சிறையில் வைக்கப்பெற்ருர்.[82] சரியான சமயத்தில் பெருத்த இலாபத்தோடு வாணிபச் சந்தையிலிருந்து தம்மை மீட்டுக்கொண்ட வால்போல், அய்ஸ்லபியை அடுத்து நிதியமைச்சரானார். உண்மையில் கருவூலம், பாங்கு, தென்கடற் குமிழி ஆகியவற்றிற்கிடையே யான சிக்கல்மிகுந்த தொடர்புகளை விடுவிப்பதற்குப் போதுமான தொழில்நுட்பத் திறமை கொண்டவர் வால்போல் ஒருவர்தான். அவரது திட்டத்தின் வெற்றியும், ஸ்டான்ஹோப், சண்டர் லண்டு, அய்ஸ்லபி, கிரேக்ஸ் போன்ற பல எதிரிகள் நீங்கியதும், அந் நாளின் தலைசிறந்தவராக வால்போல் விளங்குவதற்கு வழி வகுத்தன.

**வால்போலும் அவர்தம் சகாக்களும்:** புதிய பாராளு மன்றத்தில் விக்குகளே பெரும்பான்மைக் கட்சியாக இருந்தனர். காலியான பதவிகளைப் பலர் நிறைத்தனர். முனைப்பார்வமுள்ள ஐரோப்பிய அயல்நாட்டுக் கொள்கையில் நம்பிக்கைகொண்ட அரசாங்கச் செயலாளராக இருந்த கார்டரட் பிரபு (Lord Carteret) அவர்களில் குறிப்பிடத்தகுந்தவர்.[83] பேராசையும் பெருமிதமும்கொண்ட டவுன்ஷெண்டு வால்போல், கார்டரட் போன்ற மூன்று தலைவர்களைக்கொண்ட காபினெட் சபையின் நிலை மிகக் கடினமாக இருந்தது. டவுன்ஷெண்டா அல்லது கார்டரட்டா என்பதை நிர்ணயிக்கவேண்டிய நிர்ப்பந்தம் மன்னருக்கு ஏற்பட்டதனால் கார்டரட்டே முதலில் 1724ஆம் ஆண்டில் வெளியேறினர். நியூகாசில் கோமகன் அவரது வாரிசானர். அடுத்த ஆண்டில், மாருத நட்புக்கொண்டிருந்த புல்டினியை, வால்போல் தமது தவறு காரணமாக இழந்தார். 1711ஆம் ஆண்டில் ஊழல் காரணமாக டவர் கோட்டைச் சிறையில்[84] வால்போல் வதிந்தபோது இடையருத பற்றுறுதி காட்டியவர் புல்டினி. 1717ஆம் ஆண்டில் வால்போலுடன் சேர்ந்து ராஜிஞமா செய்தார்; அவர்தம் இணைபிரியாத் தோழ ராகவும் விளங்கினர். அறிவுக் கூர்மையுள்ள பாராளுமன்ற வாதியான அவர், உள்ளார்ந்த ஆற்றல்மிக்க எதிரியாகத் திகழக் கூடியவர். அத்தகைய நண்பராகவும் துணைவராகவும் விளங்கிய அவருக்குத் தமது மந்திரி சபையில் முதலில் வால்போல் இட மளிக்கவில்லை. இரண்டாண்டுகள் கழிந்து அரண்மனைக் கருவூலப் பெட்டிக் காவலர் (Cofferer of the Household) என்னும் சிறிய பதவியைத் தந்தார். வால்போலுடன்

இணைந்து வேலை செய்வதனால் பயன் ஒன்றும் எதிர்பார்க்க முடியாது என்று இறுதியாக உணர்ந்த புல்டினி, எதிர்க் கட்சிக்குச் சென்று, அப்போதுதான் நாட்டிற்குத் திரும்பிய பாலிங்புரோக்குடன் சேர்ந்துகொண்டார். எதிர்க் கட்சியின் சிறப்புவாய்ந்த 'தி கிராப்ட்ஸ்மன்' (The Craftsman) என்னும் பத்திரிகையை அவர்கள் இருவரும் சேர்ந்து நடத்திவந்தனர். அரசாங்கத்தின் கொள்கைகளைத் தொடர்ந்து எதிர்த்துவந்தார் என்ற வெளிப்படையான காரணத்துக்காக ஸ்காட்லாந்திற்கான அரசாங்கச் செயலாளராக இருந்த ராக்ஸ்பர்க் கோமகன் (Duke of Roxburgh) 1725ஆம் ஆண்டுப் பதவியிலிருந்து விலகு வதற்கு வால்போல் காரணமாக இருந்தார். அடுத்தபடியாக அயல்நாட்டுக் கொள்கையில் டவுன்ஷெண்டுடனே வேற்றுமை கள் தோன்றின. தமது மைத்துனரின் சுதந்திரப் போக்கு வால்போலுக்குப் பிடிக்கவில்லை. அரசாங்கத் தொழிற்கூட்டின் பெயர் 'வால்போல் & டவுன்ஷெண்டு' (Walpole & Townshend) என்று இருக்கவேண்டுமே தவிரத் தலைகீழாக இருக்கக்கூடாது என்று தாம் உறுதிபூண்டதாக வால்போலே குறிப்பிட்டார்.

முதலாம் ஜார்ஜ் மன்னர் மறைந்ததன் விளைவாக அமைச்சர் பதவிகளெல்லாம் தாமாகவே முடிவிற்கு வந்தபோது, வால்போலின் வாழ்க்கையில் ஒரு நெருக்கடி தோன்றியது. வால்போலை நீக்கிவிட்டு அப்போது சபாநாயகராக இருந்த சர் ஸ்பென்சர் காம்ப்டன் (Sir Spencer Compton) என்பவரைப் பதவியிலிருத்தவேண்டுமென்று முயல்வதே புதிய மன்னரின் முதல் வேலையாக இருந்தது. ஆனால், அவர் எந்த அரசியாரின் பகுத்தறிவில் நம்பிக்கை கொண்டிருந்தாரோ, அந்த அரசியாரே அம் முயற்சிக்கு எதிராக ஆலோசனை அளித்ததனால் மன்னர் தமது முயற்சியைக் கைவிட்டார். மேலும், மந்திரி சபையை அமைக்கவோ அல்லது மிகச் சாதாரண அரசாங்க அலுவலை நடத்தவோ காம்ப்டனால் இயலாது என்பது இரண்டு மூன்று நாள்களிலேயே தெளிவாகிறது. அதற்கு மேலும், அரச செலவுப் பணத்தைப் பாராளுமன்றத்திடமிருந்து பெற்றுத் தருவதாகத் தந்த உறுதிமொழியை காம்ப்டனைவிட வால்போலே நன்கு நிறைவேற்றிவைக்க முடியும் என்பது தெளிவானதால், இறுதியான முடிவு ஏற்பட்டது. இங்ஙனம் பழைய அமைச் சரவையே மீண்டும் பதவியேற்றது. வால்போலுக்கும் டவுன் ஷெண்டிற்கும் இடையேயான பகைமை அநேகமாக ஒரு தனிப் பட்ட மோதலாகவே மாறிவிட்டது. அச் சமயத்தில்தான் பதவியிலிருந்தும் அரசியல் வாழ்விலிருந்தும் டவுன்ஷெண்டு ஓய்வுபெற்றார்.[85] அதிலிருந்து வால்போலுக்கு எதிராளியில்லை.

காமன்ஸ் சபையின் ஆதரவு அவருக்குக் கிடைத்தது. இராணியார்மீதும், அன்னாரின்மூலமாக மன்னரின்மீதும் வால்போலின் செல்வாக்கு மேலும் உறுதியானது.

**கலால்வரி மசோதா** (Excise Bill): டவுன்ஷெண்டும் கார்டரட்டும் வெளியேறிய பிறகு அமைதியான அயல் நாட்டுக் கொள்கை உருவாகியது. நிதிச் சீர்திருத்தத்தில் வால்போல் தமது கவனத்தைச் செலுத்தினார்; புகழ்வாய்ந்த கலால்வரி மசோதாவை 1733ஆம் ஆண்டில் கொண்டுவந்தார். அரசவையில் அசைக்கமுடியாத நிலையையும் காமன்ஸ் சபைமீது திடமான கட்டுப்பாட்டையும் வால்போல் கொண்டிருந்தார் எனினும், நியாயமான, நேர்மையான இம் மசோதாவை நிறைவேற்றுவதில் அவர் தோல்வியே கண்டார். தவறாகச் செய்திகளைத் திரித்துக் கூறும் அடிப்படையில் எதிர்க்கட்சியினர் நாடெங்கிலும் எதிர்ப்பாகிய புயலைக் கிளப்பினர். குருதி சிந்துவதற்குக் காரணமாகவிருக்கும் வரியெதையும் தாம் கொள்ளப் போவது இல்லையென்று கூறி, தமது மசோதாவை வால்போல் வாபஸ் வாங்கிக்கொண்டார். 1725ஆம் ஆண்டில் அயர்லாந்து முழுவதையும் அமைச்சரவைக்கு எதிராக ஒன்றுபடுத்திய நிகழ்ச்சியான உட் (Wood) என்பாரின் அரைபென்னி நாணயத்திற்கு (half pence) அளிக்கப்பெற்ற முன்னுரிமையை ரத்து செய்யவேண்டி வந்தபின்பு வால்போல் அடைந்த முதல் தோல்வி இதுவே. மக்களுடைய அச்சுறுத்தல்களுக்கு அஞ்சிய அமைச்சர் சிலர் மசோதாவை ஆதரிக்கத் தயங்கினர். அவர்கள் மீது வால்போல் கடுமையான நடவடிக்கை எடுத்தார். அக்காலத்தில் கொள்கையளவிலோ அல்லது நடைமுறையிலோ அமைச்சர்களின் கருத்தொருமை என்பது இல்லை என்பதை நினைத்துப் பார்க்கும்போது, வால்போலின் செயல் பழிக்குப் பழி வாங்கும் இயல்புடையதாகக் காணப்படுகிறது. நாட்டு மக்களின் முரண்பாட்டிற்குப் பணிந்த வால்போல், நிச்சயம் தமது சகாக்களின் முரண்பாட்டினை மன்னித்திருக்கலாம்.[86] ஆனால், மசோதாவைக் கைவிட்ட இரண்டு நாள்களுக்குள், செஸ்டர்ஃபீல்டு பிரபுவும் வேறு எட்டுப் பிரபுக்களும் அரண்மனைச் சேவகத்திலிருந்து நீக்கப்பட்டனர். போல்டன் கோமகனும் (Duke of Bolton) கோபாம் பிரபுவும் (Lord Cobham) தங்களது படைத்தலைமையை இழந்தனர். மன்னர் மீது வால்போல் கொண்டிருந்த முழு ஆதிக்கநிலை காரணமாகத் தான் இத்தகைய உடனடியான விரிவகல்வுடைய வெளியேற்றங்களை அவரால் செய்யமுடிந்தது. பாராளுமன்றம் வாக்கெடுத்துத் தீர்மானித்தற்காக அதிகாரி ஒருவரைப் பதவியி

லிருந்து நீக்கவேண்டுமென்பதை மூன்றும் வில்லியம் மறுத்துவிட்டார்.[77] பாலிங்புரோக்கும் புல்டினியும் 'தேசியவாதிகள்' என்று குறிப்பிட்ட சில எதிர்க்கட்சியாளர்கள் படைத்துறை முறைமன்றத்தைக்கொண்டு விசாரணைசெய்தபிறகே உயர் அதிகாரிகளைப் பதவியிலிருந்து நீக்கவேண்டுமென்று வீணுக வலியுறுத்தினர். இதற்கெல்லாம் வால்போல் அசைந்துகொடுக்கவில்லை. வேல்ஸ் இளவரசரின் மணத்தைப் பாராட்டி எழுதிய உரையை 1736ஆம் ஆண்டில் ஆதரித்தார் என்பதற்காக, கார்னெட் பிட் (Cornet Pitt) என்பவரை இராணுவப் பதவியிலிருந்து நீக்கினர். படையில் இருந்தோர் அரசியல் வேற்றுமை கொண்டவராக இருக்கக்கூடாது என அவர் கருதியிருந்தார் என்பது சமகாலத்தவர் துணிபு.[83] ஏழாண்டுச் சட்டத்தைத் தள்ளுபடி செய்யவேண்டுமென்ற எதிர்க்கட்சியின் தீர்மானமும் தோல்வியுற்றது.

**போர்ப் புயல் எழுந்தது** : 1737ஆம் ஆண்டு நவம்பர் மாதம் கரோலின் இராணியார் இறந்ததில் சில நன்மைகளை அடையலாம் என்று 'தேசியவாதிகள்' எண்ணியது வீணுகியது. எனவே, எப்போதும் போலவே பழைய செய்திகளைக்கொண்டே தாக்கமுற்பட்டனர். அவற்றில் விக்கு கட்சியின் நலனுக்கு இன்றியமையாதது என்று அரசாங்கச் சார்பாளர் கவனக் குறைவாகக் குறிப்பிட்ட 'நிலைப்படை' முக்கியமானது.[83] எதிர்க்கட்சிகள் கையாண்ட பன்டைக் கால முறைப்படியே படைகுறைப்புச் செய்யவேண்டுமென்றும், ஸ்பெயின்மீது போர் தொடுக்க வேண்டுமென்றும் 'தேசியவாதிகள்' வற்புறுத்தினர். இப்பிரச்சினையில் வால்போலின் வலிமை சிறிது சிறிதாகத் தளர்ந்தது. மேலும், குறிப்பிடத்தகுந்த வகையில் அரசாங்கத்தின்மீது ஆதிக்கம் செலுத்தத் தொடங்கிய துண்டுப் பிரசுரப் போட்டியில், பத்திரிக்கையாளரைப் புறக்கணித்த வால்போலின் நிலை சாதகமானதாக அமையவில்லை. அவர்தம் அரசாங்கச் செயலரான நியூகாசிலும், கருவூலத் தலைவரான ஹார்டுவிக்கும் (Hardwicke) அவருக்கு எதிராக இருந்தனர். வால்போலின் ஆரம்ப காலமாக இருந்திருந்தால், இத்தகைய முரண்பட்ட சகாக்களை உடனே பதவியிலிருந்து விலக்கியிருப்பார். ஆனல், காலம் மாறிவிட்டது. ஏனெனில், போர் இன்றியமையாதது என்பதை அரசரே நம்பினர். எனவே, தமது காபினெட்டிற்குள்ளேயே தோன்றிய கருத்து வேறுபாடுகளைக் கூடுமானவரையில் அவர் பொறுத்துக்கொள்ளவேண்டியதாயிற்று. 'ஜென்கின்ஸ் காது' (Jenkins' Ear) நிகழ்ச்சியினுலும் மக்கள் பெருஞ்சினங் கொண்டிருந்தனர். வால்போலின்

முன்னுள் சகாக்களான செஸ்டர்ஃபீல்டும் கார்டரட்டும் பிரபுக்கள் சபையில் அரசாங்கத்தைத் தாக்கத் தொடங்கினர். காமன்ஸ் சபையின் அரசாங்கத்தின் பெரும்பான்மை 28ஆகக் குறைந்துவிட்டது. அதன் பிறகு பிரிந்து செல்வதற்கான அறிகுறியாக புல்டினியும் எதிர்க்கட்சியினரும் வெளிநடப்புச் செய்தனர். முன்பு எப்போதையும்போலவே இத்தகைய நடவடிக்கையின் மூலமாக மக்களிடையே எழுச்சியையோ அல்லது அரசாங்கத்திற்குத் தடுமாற்றத்தையோ தோற்றுவிக்க முடியவில்லை. அரசவையிலும் மக்களிடையேயும் எழுந்த போர் வேண்டுமென்ற கூக்குரலுக்கு வால்போல் பணிந்தார். ஆனால், எதிர்க் கட்சிக்காக அவர் பணியவில்லை. 1739ஆம் ஆண்டில் போர்ப்பிரகடனம் செய்யப்பட்டது.

**போர் அமைச்சராக வால்போல்:** தவறு என்று கருதி எதிலிருந்து விடுபட அரும்பாடுபட்டாரோ, அக் கொள்கையைப் பின்பற்றிச் செயலாற்றும் அமைச்சராக வேண்டிய நிலை வால்போலுக்கு ஏற்பட்டது. இருப்பினும், அப் பதவியை அவர் ஏற்றுக்கொண்டார். பதவியை விட மனமில்லாதது ஒரு காரணமாக இருக்கலாம். அரசருடைய அமைச்சர்கள் விரும் பினாலும் விரும்பாவிட்டாலும் அவரது அலுவல்களை நிறை வேற்றும் கடமைகொண்டவர்கள் என்பதைப் பழைய மரபு வற்புறுத்தியதும் ஒரு காரணமாகும். போரில் வெற்றிகள் கிட்டவில்லை. ஏழாண்டுச் சட்டப்படி தேர்தலின் காலம் நெருங்க நெருங்க, போரில் அடைந்த தோல்விகளுக்கு வால்போலே காரணம் என்ற தாக்குதல் மேன்மேலும் தீவிரமாகியது. வால்போலை அரசருடைய சமூகத்திலிருந்தும் ஆலோசனை சபைகளிலிருந்தும் நிரந்தரமாக நீக்கவேண்டுமென்ற கோரிக் கையை சாமுவேல் சாண்டீஸ் (Samuel Sandys) என்பார் 1741ஆம் ஆண்டில் கொண்டுவந்தார். நாட்டின் துன்பங்களுக் கெல்லாம் காரணமானவர் வால்போல் ஒருவரே என்று குறிப் பிட்டு, அதனைப் பின்வருமாறு விளக்கினார்: ‘அந்த ஒருவர் தாம் அரசாங்கத்தின் அதிகாரப் பிரிவுகள் அனைத்தையும் பிடித்துக் கொண்டவர். அந்த ஒருவரே யாவற்றையும் இயக்கும் சக்தி பெற்றவர். அரசாங்கம் அளிக்கும் சலுகைகள்மீது தனியுரிமை பாராட்டியவர். பதவிகள், பட்டங்கள், அவற்றைக் குறிக்கும் வண்ணச் சிலைகள், உபகாரச் சம்பளங்கள் ஆகியவற்றை அளிக்கும் உரிமையைத் தம்மிடமே வைத்துக்கொண்டார். அதேபோன்று பொதுத்துறை, படைத்துறை, சமயத்துறை ஆகியவற்றில் மேல்பதவிகளை வழங்கும் உரிமையை வைத்திருந் தார். தேர்தல்களிலும் பாராளுமன்றத்திலும் நிகழ்கால

ஆதரவையும், வருங்காலத்தில் எதிர்பார்க்கக்கூடியவற்றையும் தமது விருப்பத்திற்குப் பணியவைத்தவரும் அந்த ஒருவர் தாம்'.[90] வால்போலினுடைய எதிரிகள் கண்ட நிலையில் அவர்தம் அரசாங்கத்தின் தன்மையை விளக்குவதாக இவ் வாசகங்கள் அமைகின்றன. விவாதத்திற்கு வால்போல் பதிலளிக்கையில், தாம் 'இந் நாட்டின் பிரதம, தனியுரிமையான அமைச்சர்' என்பதை வாதத்திற்காகிலும் ஒப்புக்கொண்டார். வாக்கெடுப்பின்போது பல எதிர்க் கட்சியினர் கலந்துகொள்ளாது இருந்ததாலும், யாகோபியருடன் இரண்டாவது முறையாகத் தகாத உடன்பாடு செய்துகொண்டதாலும்,[91] சாண்டீஸின் தீர்மானத்தைப் பெருவாரியான வித்தியாசத்துடன் வால்போல் முறியடித்தார். அது எப்படியிருப்பினும், வால்போல் கொண்ட வெற்றி வெளிப்படையானதாக இருந்ததே ஒழிய உண்மையான வெற்றியன்று.

**வால்போலின் வீழ்ச்சி :** 1741ஆம் ஆண்டில் நடைபெற்ற பொதுத் தேர்தல் கொந்தளிப்பு மிகுந்ததாக இருந்தது. வெஸ்ட்மினிஸ்டரில் நடந்த வாக்கெடுப்பின்போது அமைதியை நிலைநாட்டப் படைகளைப் பயன்படுத்தவேண்டியிருந்தது. நிலைப்படையைக் கண்டித்த எதிர்க்கட்சியினருக்கு இது ஒரு வாய்ப்பாக அமைந்தது. அவர்களுடைய தேர்தல் நிதிக்கு வேல்ஸ் இளவரசர் பொருள் வழங்கினர். புதிய பாராளுமன்றத்தில் வால்போலுக்கிருந்த பெரும்பான்மை ஆதரவு பதினெருகக் குறைந்துவிட்டது. கட்சி வாக்குகளின் அடிப்படையில் தீர்க்கப்பெற்ற தேர்தல் வழக்குகளின் விளைவாக மந்திரிசபைக்கு ஆதரவளித்த பெரும்பான்மையின் எண்ணிக்கை ஏழாக இருந்தது. வெஸ்ட்மினிஸ்டர் விண்ணப்பத்தில் நான்கு வாக்குகள் வித்தியாசத்தில் மந்திரி சபை தோல்வியுற்றது. சிறப்புமிகுந்த சிப்பன்ஹாம் தேர்தல் விண்ணப்பத்தில் எதிர்க்கட்சியினர் ஓர் ஓட்டு வித்தியாசத்தில் அரசாங்கத்தைத் தோற்கடிக்கக்கூடுமென்று அறிந்தவுடன், தாம் பதவி துறக்க எண்ணியிருப்பதாக வால்போல் அறிவித்தார். வாக்கெடுப்பு நடைபெற்றபோது பதினறு பெரும்பான்மை வாக்குகள் அவருக்கு எதிராக இருந்தன. 1742ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் முதலாம் நாளன்று மன்னரிடமிருந்து அவர் விடைபெற்றுக்கொண்டார். இரண்டாம் தேதியன்றுதான் சிப்பன்ஹாம் விண்ணப்பத்தின்மீதான வாக்குப் பிரிவு ஏற்பட்டது. மூன்றும் தேதியன்று மன்னருடைய வேண்டுகோளின்பேரில் பாராளுமன்றத்தின் இரு சபைகளும் மூன்று வாரங்களுக்கு ஒத்திப்போடப்பெற்றன.

**பிரதம மந்திரியாக வால்போல் :** அரசியல் அமைப்புச் சார்ந்ததாக இல்லாத, வால்போல்மீதான, குற்றச்சாட்டுகளைப் பற்றி இங்கே நாம் அக்கறை காட்டப்போவதில்லை. சாமுவேல் சாண்டீஸின் உரையிலிருந்து மேலே எடுத்துக்காட்டிய பகுதியிலிருந்து, வால்போலைப் 'பிரதம மந்திரி' என்று வற்புறுத்திக் கூற எதிர்க்கட்சி குறியாயிருந்தது என்பது தெளிவாகின்றது. சாண்டீஸ் மேலும் குறிப்பிடுகையில், 'நமது அரசியல் அமைப்பில் தனியுரிமைகொண்ட அமைச்சரோ அல்லது பிரதம மந்திரியோ இருப்பதற்கில்லை; எப்போதும் பல பிரதம மந்திரிகளை[92] அல்லது அரசாங்க அதிகாரிகளைத்தான் கொண்டிருக்கவேண்டும்; அத்தகைய அதிகாரிகள் ஒவ்வொருவருக்கும் முறையான தனித் துறைகள் உண்டு; மற்றொருவருடைய துறைபற்றிய அலுவல்களில் எந்த ஓர் அதிகாரியும் தலையிடக்கூடாது' என்று விளக்கினார். இங்ஙனம் பிரதம மந்திரிக்கு மாற்றாக இருந்த திட்டத்திற்கு, 'துறைகளால் ஆன அரசாங்கம்' என்ற பெயர் வந்தது. வால்போல் அளித்த தன்னிலை விளக்கம், செயல்திறத் திட்டம் வாய்ந்ததா அல்லது அப் பிரச்சினையில் அவர் கொண்டிருந்த உண்மையான கருத்தின் பிரதிபலிப்புதானா என்று கூறுவது கடினம். எப்படியாயினும், சாண்டீஸின் கோட்பாட்டை வால்போல் எதிர்க்கவில்லை. ஆனால், உண்மை நிலையை மறைக்கும் வகையில் அவரது விவாதம் அமைந்தது. பிரதம மந்திரியின் நிலையைத் தாம் அடைந்துவிடவில்லையென்பதை அவர் நிலைநாட்ட முற்பட்டார். தன்னிலையை விளக்குதற்கு இத்தகைய இடரான வழியை வால்போல் கடைப்பிடித்ததிலிருந்தே, பிரதம மந்திரி என்ற கொள்கையை ஆதரிக்க முயல்வது மேலும் இடரானது என்பதை அவர் உணர்ந்திருந்தார் என்றறியலாம். நார்த் பிரபுவும் நாற்பது ஆண்டுகள் கழிந்து இதே இக்கட்டான நிலைக்கு வந்தார். அவரும் அரசர்வசம் அத்துணை அதிகாரத்தை விட்டுவைத்த 'துறைகளால் ஆன அரசாங்கம்' (Government by departments) முற்றிலும் திருப்தியளிக்கக்கூடியதுதானா என்ற ஐயப்பாட்டிற்கு இடமளித்தபோதிலும், தாம் ஒரு 'பிரதம மந்திரி' என்பதை ஏற்க மறுத்தார். இறுதியில் 1803ஆம் ஆண்டில்தான் பிரதம அமைச்சரின் அரசியல் அமைப்புச் சார்ந்த முறைமையையும், நடைமுறை இன்றியமையாத் தன்மையையும் நிலைநாட்ட இளைய பிட் துணிந்தார். எனவே, வால்போல் பதவியிலிருந்த இருபது ஆண்டுக் காலத்தில் பிரதம அமைச்சருடைய அரசியல் அமைப்புச் சார்ந்த நிலைபற்றிய கொள்கை உறுதிப்படவில்லை. அத்தகைய நிலை விரும்பத் தக்கதா என்ற பிரச்சினைகூடத் தீர்க்கப்படவில்லை.

சர் ராபர்ட்டின் மறுப்புகளைப் புறக்கணித்து, அவரைப் 'பிரதம மந்திரி' யென்றே அழைப்பதானல், சாண்டீஸ் எடுத்துரைத்த அடிப்படையிலேதான் அது அமைய முடியும். அதாவது, அரசாங்க அலுவல்களை இயக்கும் முழுப்பொறுப்பும் வால்போலிடம் இருந்தது. மன்னரிடமிருந்து செய்திகள் அறிவதைத் தம்முடையதாகவே கொண்டார். அவரிடமிருந்தே சலுகைகள் கிடைத்தன. எவ்வாறிருப்பினும், தம்மிடமிருந்த திறமையாலும் ஆளுமை காரணமாகவுமே இதில் அவர் வெற்றி கொண்டார். சாதாரணமாகப் பதவியோடு வரும் அதிகாரத்தை அவர் பயன்படுத்தவில்லை. இத் துறையில் அவரது முன்னோர் என்று குறிப்பிடக்கூடியவர் யாருமில்லை. அதேபோன்று அவர் பெற்றிருந்த நிலையை பெறும் வாரிசு யாரும் இல்லை. இங்ஙனம் வால்போல் பெற்றிருந்த உச்ச உயர்நிலை முற்றிலும் சொந்த முறையிலானதே ஒழிய பதவி சார்ந்ததன்று. தற்காலப் பிரதமரோடு ஒப்பிட்டுப்பார்க்கும்போது மேலும் சில வழிகளில் அது மாறுபட்டு இருந்தது. ஒரே தடவையாகத் தமது மந்திரி சபையை வால்போல் அமைக்கவில்லை. மெதுவாக வந்த மாற்றங்களின் விளைவாகவே மந்திரிசபை உருவானது. அதில் இருந்த சகாவைப் பதவி துறக்குமாறு எளிதாகக் கூறி விட முடியாது. அத்தகைய பதவி துறப்பு அவசியம் என்பதை மன்னரோ அல்லது குறிப்பிட்ட சகாவோ உணருமாறு செய்யவேண்டும். முன்பிருந்த மந்திரிசபையின் தொடர்ச்சியாக வால்போலின் மந்திரி சபை அமைந்ததைப்போலவே, அவர் வீழ்ச்சியுற்றதும் அவருடன் அவரது சகாக்களும் பதவியைத் துறக்கவில்லை. அவருக்குப் பிறகும் பலர் தொடர்ந்து பதவி வகித்துவந்தனர்.

**புல்டினியின் மந்திரிசபை:** பத்தொன்பதாம் நூற்றாண்டின் பழக்கத்திலிருந்து எத்துணைத் தூரம் பதினெட்டாம் நூற்றாண்டின் இடைக்காலப் பழக்கம் மாறுபட்டிருந்தது என்பதற்கு, வால்போலின் வீழ்ச்சிக்குப் பிறகு வந்த அரசியல் நடவடிக்கைகள் சிறந்த சான்றுகளாக அமைகின்றன. வால்போல் திரைமறைவில் தொடர்ந்து சுறுசுறுப்பாக வேலை செய்தார். அவர்மீது அரசத்துரோகக் குற்றம் சாட்டவேண்டுமென்ற கூக்குரல் எழுந்ததனல், அதைத் தடை செய்யும் நோக்கத்தோடு அவர் தீவிரமாக வேலைசெய்தார். கூடுமானவரை குறைந்த மாறுதல்களைக் கொண்ட அரசாங்கத்தை அமைக்குமாறு, முக்கிய எதிர்க்கட்சித் தலைவராக விளங்கிய வில்லியம் புல்டினியை மன்னர் கேட்டுக்கொண்டார். அதனோடு வால்போலின்மீது அரசத்துரோகக் குற்றம் சாட்டுவது இல்லை

என்ற உறுதி மொழியும் கோரினர். குறிப்பிடத்தகுந்த இந் நிபந்தனையை ஏற்கப் புல்டினி மறுத்தார்.[93] ஆயினும், பழிக்குப் பழி வாங்குவதில்லையென்ற அடிப்படையில் நிபந் தனையை இறுதியாக ஏற்றுக்கொண்டார். பதவிகளைப் பகிர்ந்தளிக்கும் அதிகாரம் தம் கையிலேயே இருந்ததால், தாம் எப் பதவியையும் ஏற்றுக்கொள்வது இல்லையென்று புல்டினி கூறினர். மேலும், அதைப்பற்றிய தமது தீர்மானத்தைப் பல முறை வெளியிட்டதாகவும், அத்தகைய தீர்மானத்திற்கு முரணாக நடக்கப்போவதில்லையென்றும் இயம்பினர். எனவே, வில்மிங்டன் பிரபு கருவூலத் தலைமைப் பிரபுவானர்.[94] சாமுவேல் சாண்டீஸ் நிதியமைச்சரானர். கார்டரட் பிரபு ஓர் அரசாங்கச் செயலராகப் பதவியேற்றார். நியூகாசில் கோமகன் மற்றோர் அரசாங்கச் செயலராகத் தொடர்ந்து பணியாற்றினர். அவர் தம் சகோதரரான ஹென்றி பெல்ஹாம், படைச் சம்பளப் பட்டு வாடா அதிகாரியாகத் தொடர்ந்து செயலாற்றினர். கருவூலத் தலைவராக ஹார்டுவிக் பிரபுவே தொடர்ந்து பணிபுரிந்தார். பாத்தின் ஏர்ல் பிரபு பட்டமும், காபினெட் சபையில் ஓர் இடமும்மட்டும் தமக்கு வேண்டுமென்று புல்டினி வேண்டினர். இங்ஙனம் எவ்விதப் பதவியும் வகிக்காத புல்டினி, தமது சகாக்களைத் தேர்ந்தெடுத்தல் என்ற தற்காலப் பிரதமரின் உடமையாகக் கருதப்பெற்ற ஒன்றைப் பயன்படுத்தினர் என்பதைக் காணலாம். அவர் காபினெட் சபையில் அமர்ந்தார் என்பதையும், ஒன்றிற்கும் உதவாத சிறப்பற்றவர் என்பதை எல்லோரும் ஏற்றுக்கொண்ட ஒருவருக்குக் கருவூலத் தலைமைப் பிரபு பதவி அளிக்கப்பெற்றது என்பதையும் காணலாம். தாம் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த காமன்ஸ் சபையை விட்டுச் சென்ற புல்டினி, சில மணி நேரத்திலேயே தமது தவற்றை உணர்ந்தார். எனவே, பிரபுக்களுக்கான சிறப்புச் சின்னம் தமக்கு வழங்குவதைத் தடுத்து நிறுத்த முயன்றார் ஆயினும், அவருக்கெதிராக வால்போலின் செல்வாக்குச் செவ்வையாகப் பயன்பட்டது. 'முழுத் தோல்வியுற்ற மந்திரியான வால்போல் புழுதியில் கிடந்தவாறே புல்டினியைச் சூத்திரப் பாவைபோல ஆட்டிவைத்தார்.'[95] காமன்ஸ் சபையின் பெருமகனக விளங்கிய புல்டினி, பிரபுக்கள் சபையில் செயலிழந்து நின்றார். மேலும், அரசாங்கப் பதவியேதுமின்றிக் காபினெட்டில் இடம்பெறுவதால் அதிகாரம் சிறிதும் அடைய முடியாது என்பதைக் காலந்தாழ்ந்து கண்டுணர்ந்தார். உண்மையில் அவரது மந்திரிசபை கார்டரட்டினுடையதாகவே இருந்தது. சபையை விட்டு முறைமன்றத்திற்குச் செல்லத்

துடித்துநின்ற தலைமை வழக்குரைஞரான சர் வில்லியம் முர்ரேயைத் தவிரக் (Sir William Murray) காமன்ஸ் சபையில் சுயபலத்தில் நின்று மந்திரிசபையை ஆதரித்து அதன் நிலையை விளக்கவல்லார் யாருமில்லை.[93]

**பெல்ஹாம்கள்** (The Pelhams): 1743ஆம் ஆண்டில் வில்மிங்டன் (Wilmington) இறந்ததும், ஹென்றி பெல்ஹாம் என்பார் கருவூலத் தலைமைப் பிரபுவானார். பதவியேற்பதைப் பற்றிய தமது கருத்தினை மாற்றிக்கொண்ட பாத் பிரபு (புல்டினி) அப் பதவியை அடைய முடியாதுபோனதற்கு வால்போலின் செல்வாக்குக் காரணம் என்பது கவனிக்கத்தக்கது. அதன்பிறகு இரண்டு பெல்ஹாம்களும் கார்டரட்டை வெளியேற்றினர். இங்கேயும் பெல்ஹாம்களுக்கு விட்டுக்கொடுக்குமாறு மன்னருக்கு வால்போல் ஆலோசனை கூறினர். இத்தகைய மாற்றங்கள் தோன்றிய காலத்தில் கவனிக்காது விடப்பெற்ற பிட்டினை மந்திரிசபையில் சேருமாறு 1745ஆம் ஆண்டில் பெல்ஹாம்கள் அழைத்தனர். மன்னரையும், கார்டரட், ஹனோவர் ஆகியோரையும் பல ஆண்டுகளாகக் கடுமையாகத் தாக்கி வந்தவர் பிட். அவர் 1745-ல் நிலைமை மாறியது என உணர்ந்தார். 1746ஆம் ஆண்டில் சம்பளம் வழங்கும் அதிகாரியாக மந்திரிசபையில் பதவியேற்றார். இங்ஙனம் எதிர்க்கட்சியினரின் தாக்கும் சக்தி குறைந்துவிட்டது. அதனால் சில ஆண்டுகள் அமைதியாகக் கழிந்தன. 1754ஆம் ஆண்டில் பெல்ஹாம் இறந்தபோது நியூகாசில் கோமகன் தலைமைப் பிரபுவாகப் பதவியேற்றார். பெருஞ் செல்வத்தையும் செல்வாக்கையும் வாரி வழங்கி, உறவுகொண்ட பெரிய விக்குகளை இணைத்துவைத்திருந்த[97] வற்றாத வளமுடைய அந்தக் கோமகனுடன் நல்லுறவு கொள்ளாத எந்த அமைச்சரவையும் நீடித்து நிற்கமுடியாது என்பது இப்போது புலனாகியது. வால்போல் காலத்திருந்த தீவிரக் கட்டுப்பாட்டினை நிலைநாட்ட வேண்டுமென்று இந்த மந்திரிசபைகளில் எதுவும் முயலவில்லை. இங்ஙனம் ஹார்டுவிக் பிரபு கொண்டுவந்த 1753ஆம் ஆண்டின் மணச் சட்டத்தைப் போர் அமைச்சராக இருந்த ஹென்றி ஃபாக்ஸும், வாணிப ஆட்சிக் குழுவில் இருந்த சார்லஸ் டவுன்ஷெண்டும் வன்மையாகக் கண்டித்தனர். பதவியில் இருந்து கொண்டே, ஃபாக்ஸும், சம்பளம் வழங்கும் அதிகாரியாக இருந்த பிட்டும் நியூகாசிலைக் குறைகூறினர். இவ்விரு புரட்சியாளர் மீதும் வெவ்வேறான நடவடிக்கைகளை நியூகாசில் எடுத்தார். காபினெட்டில் இடம்பெற்ற ஃபாக்ஸ் பெட்டிப் பாம்பானார். அதே ஆண்டில் பிட் பதவியிலிருந்து நீக்கப்பெற்றார்.

1756ஆம் ஆண்டில் ஏழாண்டுப் போர் துவங்கியது. ஆரம்பத்தில் ஏற்பட்ட தோல்விகளால் ஆபத்தான நிலை உருவாகியது. மக்களுடைய கூக்குரலுக்கிணங்க[1] மந்திரிகளின் பலியாடாகத் தளபதி பிங் (Admiral Byng) கொல்லப்பட்டார். நியூகாசிலும், அவருடன் ஹார்டுவிக்கும் ராஜிநாமா செய்தனர். காமன்ஸ் சபையில் பயனுள்ள ஆதரவு இருந்தாலொழிய மந்திரிசபையைக் கட்டிக்காக்க இயலாது என்பதை அவர் உணர்ந்தார். அத்தகைய ஆதரவு, குறிப்பாகத் தலைமை நீதிபதியாகத் தாம் வரவேண்டுமென்று முர்ரே வற்புறுத்திய நிலையில், கிடைப்பது அரிதாயிற்று. தலைமைப் பிரபுவாக டிவோன்ஷயர் சம்மதித்தார். மக்களுடைய ஆதரவை அதிகம் பெறாத ஃபாக்ஸுக்குப் பதிலாக ஆதரவு அதிகம் கொண்ட பிட்டினை அரசாங்கச் செயலராக அவர் தேர்ந்தெடுத்தார்.

**வில்லியம் பிட்டின் மந்திரிசபை 1756—1761 :** பதவியிலிருந்து விலக்கிவைக்கப்பெற்ற நியூகாசில் கோமகன், பிட்டிற்குப் பாடம் ஒன்று கற்பித்தார். பிட் உள்ளிட்ட பல புதிய மந்திரிகள் மறுதேர்தலில் வெற்றிபெறுவது மிகக் கடினமாக இருந்தது. அவர்களிற் சிலர் தோல்வியுற்றனர். மேலும், எதிர்க்கட்சியில் இருந்தபோது பிட் தம்மிடம் காட்டிய அத்துமீறிய அவமதிப்புகள் நிறைந்த ஆண்டுகளை மன்னர் மறந்துவிடவில்லை. பதவியில் பிட் இருக்கும்வரையில் ஐரோப்பாக் கண்டத்தில் படைத் தலைமையைத் தம்மால் ஏற்க இயலாது என்று கம்பர்லண்டு கோமகன் (Duke of Cumberland) கண்டிப்பாக இருந்ததால், 1757ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் அமைச்சரவை கலைக்கப் பட்டது. தமது திட்டம் ஒன்றினாலேயே போரில் வெற்றி பெற்று விடமுடியாது என்பதை ஏற்கெனவே நியூகாசில் உணர்ந்ததைப்போலவே, நியூகாசிலின் இன்றியமையாத் தன்மையைப் பிட் இறுதியில் ஏற்றுக்கொண்டார். நியூகாசிலைத் தலைமைப் பிரபுவாகக் கொண்ட திருந்திய மந்திரிசபை தோன்றியது. ஆயின், நியூகாசிலையோ அல்லது டிவோன்ஷயரையோ 'பிரதம மந்திரி' என்று அச் சொல்லின் உண்மைப் பொருளில் கொள்ளமுடியாது.[2] 'என்னைத் தவிர இந் நாட்டைக் காக்கக்கூடியவர் யாருமில்லை என்பது திண்ணம்' என்று டிவோன்ஷயரிடம் பிட் கூறியது கவனிக்கத்தக்கது. இங்ஙனம் அரசாங்கம் என்னும் இயந்திரமானது தங்குதடையின்றி அமைதியாகச் செல்வதற்குற்ற வழியில் தமது திறமையான மோசடி வழிகளில் நியூகாசில் மீண்டும் இறங்கினர். அதே சமயத்தில் நமது வரலாற்றில் மிகச்சிறப்பு வாய்ந்த பல வெற்றிகளைப் பெற்றுத்தருவதில் பிட் முனைந்திருந்தார்.

**அரசியல்பற்றிப் பிட்டின் கருத்து :** நீண்ட காலமாகப் பிட் கொண்டிருந்த அரசியல் கருத்துகள் போர் அமைச்சருக்கு உகந்த வகையில் பொருத்தமாக்கப்பட்டன. முதல் நிலையில் அரசியல் கட்சிகளையும் உறவுகளையும் அவர் உதறித் தள்ளினார். ஆரம்ப காலத்தில் 'பையன்களில்' (the Boys)[3] ஒருவராக யாருடைய ஆதரவில் பணிபுரிந்தாரோ அந்தக் கோபாம் பிரபுவிட மிருந்து பிரிந்து சென்றார். அவர் தமது தாயாரின் மூலமாக லிட்டில்டன்களுடனும் (The Lytteltons), டெம்பிள் பிரபுவை மூத்தவராகக்கொண்ட கிராவில் சகோதரர்களின் உடன் பிறந்தவராக இருந்த தமது மனைவியின் மூலமாக கிரன்வில்களுடனும் உறவு கொண்டிருந்தார். ஆனால், அவ்விரு குடும்பத்தாருடன் கடுமையான சச்சரவில் ஈடுபட்டார். சுதந்திரப் பறவையாக எக் கட்சியோடும் கட்டுண்டு கிடக்காதது அவரது இயற்கைக் குணமாகும். அதையே ஒரு கொள்கையாக அவர் கடைப்பிடித்தார் எனலாம். 1764ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் நியூகாசில் பிரபுவிற்கு எழுதிய கடிதத்தில் அவர் பின்வருமாறு குறிப்பிட்டார் : 'என் ஒருவனைப் பொறுத்த வரையில், நான் கொள்ளுகின்ற சிறந்த கொள்கைகளின் படியேயன்றிக் குறிப்பிட்ட பேரங்களின்படி வாழப்போவது இல்லை. தனியாக நின்று தனது கொள்கைகளின் நன்னிலை பற்றியும், நடத்தையின் நேர்மைபற்றியும் நாட்டு மக்களின் மேலான தீர்ப்பைக் கோரும் துணிபுகொள்ளும் சுதந்திர நிலையை விட்டுவிடும் எண்ணம் எனக்கில்லை.'[4] சிறிது காலத்திற்குப் பிறகு, நாட்டின் நலனுக்காகக் கட்சிப் பூசல்களெல்லாம் மறையவேண்டு மென்று அவர் விரும்பியதாகவும், மன்னர் நியமிக்க மக்கள் ஏற்றுக்கொண்ட மந்திரிசபை[5] ஏற்படவேண்டுமென்று அவர் விழைந்ததாகவும் கூறப்பட்டது. பிட்டைப் பொறுத்த வரையில் இது அவருடைய தனித்தன்மையானதும், எளிதில் விளங்கிக்கொள்ள முடியாததுமான பண்பின் பயனே என்பது வெளிப்படை. ஆனால், இதன் காரணமாகப் பல தலைமுறை களுக்குமுன் டோரிகள் அடைந்த அதே நிலையைப் பிட்டும் அடைந்தார். மேலும், விக்கு செல்வரின் பிடி எத்துணையளவிற்கு இறுக்கமானது என்பதை மேன்மேலும் உணரத் தொடங்கிய இரண்டாம் ஜார்ஜும் மூன்றாம் ஜார்ஜும் அடைந்த நிலைக்கும் இதுவே காரணமாய் அமைந்தது.

**பிட்டும் கட்சியாட்சியும் :** மேலும், கட்சியாட்சியும், அதன் கண் தோன்றிய சிக்கல் காரணமாக, ஏற்கெனவே சிதையத் தொடங்கியது. 1750ஆம் ஆண்டிற்குப்பிறகு 'விக்கு', 'டோரி' என்னும் தொடர்களைப் பயன்படுத்துவதில் உள்ள இடர்ப்

பாட்டினைச் சமகாலத்தவரே உணரத் தலைப்பட்டனர்.[6] தலை சிறந்த எதிர்க்கட்சியாளரையும் எதிரிகளாக வரக்கூடியவர் களையும் மந்திரிசபைக்கு இழுத்த பயந்தாங்கொள்ளியான ஹென்றி பெல்ஹாமின் செயல் காரணமாகக் கட்சியாட்சியின் தனிச்சிறப்பே குன்றிவிட்டது. வால்போலின் கொள்கைக்கு நேர்மாறான இச் செயலின் விளைவாக ஆங்கிலப் பாராளுமன்ற வரலாற்றிலேயே சிறப்பற்ற காலம் ஒன்று தோன்றியது.

**பிட்டும் காமன்ஸ் சபையும் :** பதினெட்டாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் கட்சியாட்சி இருந்த குழப்பமான நிலையிலும், கட்சிபற்றி அவர் கொண்டிருந்த கருத்தை வைத்துப் பார்க்கும் போதும், அரசியல் ஆட்டத்தின் அத்தாணி மண்டபமாகத் திகழ்ந்த காமன்ஸ் சபைபற்றிய பிட்டின் கருத்து அதனைக் கண்டிக்கின்ற வகையிலும், சில சமயங்களில் அவமதிக்கின்ற வகையிலும் இருந்தது என்பது வியப்பூட்டுவதாயில்லை. நியூகாசில், ஹார்டுவிக், ஃபாக்ஸ் போன்றோரும், தமக்குத் தடுமாற்றத்தை ஏற்படுத்திய கிரன்வில்களும் நடத்திய அரசியல் சூதாட்டங்களில் பங்குகொள்ளும் நிர்பந்தம் சில வேளைகளில் பிட்டிற்கு ஏற்பட்டது என்பதை முன்னரே கண்டோம். ஆனால், அவர் சிறந்த முடிவை எய்துதற்கு, இன்றியமை யாததாக இருக்கும்போது, வெறுப்புடன் அவ் வழிகளைக் கடைப்பிடித்தார். தமது கண்பார்வையாலேயே பல முறை காமன்ஸ் சபையை அவர் அடக்கினார். அவரது ஆளுமைக்கு முன் அமைச்சர்களும், சகாக்களும், எதிர்க்கட்சியினரும் சிறிது காலத்திற்காவது அஞ்சி நடுங்கினர். 1766ஆம் ஆண்டிலும், அதன்பிறகு 1770ஆம் ஆண்டிலும் பிரதிநிதித்துவ முறையில் சீர்திருத்தம் வேண்டுமென்று முதலில் வற்புறுத்தியவர் அவரே.[7]

**பிட்டும் பொதுமக்களும் :** மேலே எடுத்துக் கையாளப் பெற்ற மேற்கோள் உரையில் கண்டவாறு, காமன்ஸ் சபையைக் கடந்து 'நாட்டு மக்களைப்' பிட் நோக்கினார். அமைச்சரின் வடிவில்தான் மன்னருக்கும் மக்களுக்கும் இடையேயான நெருங்கிய ஒற்றுமையைக் காணவேண்டுமென்பது அவரது அரசியல் திட்டத்தின் அடிப்படை. இதனை அக் காலத்தவர் நன்குணர்ந்திருந்தனர். இங்ஙனமாகக் காமன்ஸ் சபையினர் சிபாரிசு செய்தார்கள் என்ற காரணத்தைக் காட்டித் தளபதி பிங்கிடம் கருணைகாட்டவேண்டுமென்று பிட் வற்புறுத்தியது இரண்டாம் ஜார்ஜ் மன்னருக்கு முரணாகப் பட்டது. மற்ற இடங்களில் காமன்ஸ் சபையைக்காட்டிலும் தம் நாட்டு

மக்களுடைய கருத்தையே பெரிதென மதிக்கவேண்டு மென்பதைத் தமக்குக் கற்றுத்தந்தவரே பிட்தான் என்று மன்னர் குறிப்பிட்டார். மக்களைத் தம்வயப்படுத்த முயல்வதாகப் பிட்டின்மீது அவருடைய எதிரிகள் குற்றம்சாட்டினர். இருந்த போதிலும், அச் சமயத்தில் தோன்றிய பிங் பிரச்சினையில் பிட்டும் மக்களும் மாறுபட்ட கருத்துகளையே கொண்டிருந்தனர். வில்க்ஸின் வழக்குகளில் ஒன்றாக இணைந்த அவர்கள், அமெரிக்கப் பிரச்சினையில் முரண்பட்டு நின்றனர். எவ்வாறிருப் பினும், நகரங்களிலிருந்தும் வாணிப நலன்களிலிருந்தும் பல முறை ஆர்வத்தோடு கூடிய ஆதரவினைப் பிட் பெற்றுவந்தார். தமது வாழ்நாளின் பெரும்பகுதியில் நாட்டுமக்களுடைய ஆதரவு தமக்கு இருந்தது என்று அவர் பெருமை கொண்டாடியதில் பொருள் உண்டு. இதற்கென இருக்கும் தற்கால வசதி ஏதும் இன்றியே, எப்படியோ அவர் வெற்றிபெற்றார். துண்டுப் பிரசுரக்காரர்கள் அவரைச் சிறிதும் ஆதரிக்கவில்லை. பெரிய பொதுக் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்து, அவற்றில் அமைச்சர்கள் உரைநிகழ்த்துதல் என்ற பழக்கமும் அதுவரை தோன்றவில்லை. அவரது பாராளுமன்றப் பேச்சுகள் பத்திரிகை களில் வெளியிடப்படுவது இல்லை. அப்படியே வெளியிடப் பெற்றாலும் அவை மோசமாக வெளிவந்தன. மேலும், யாரையும் எளிதாகத் தம்மிடம் அணுகவிடாத உளப்பாங்கு கொண்டவராக அவர் விளங்கினார். எனினும், தம் கைக்கு எட்டக்கூடிய கலைகள் அனைத்தையும் அவர் முழுமையாகப் பயன்படுத்தினார். அவர் நடிகரைப்போன்ற நடையுடை பாவனை கொண்டவர் என்பதையும், தம்மைப்பற்றி மேலான எண்ணத்தைப் பதியவைப்பதற்கான வழிகள் அனைத்திலும் கரைகண்டவராக இருந்தார் என்பதையும் அவரை அறிந்த அனைவரும் ஏற்றுக்கொள்வர். ‘தங்களுடைய சிறப்பியல்புகளை மக்கள் மனத்தில் பதியவைப்பதற்காக இடையறாது பாடுபட்ட அரசியல் தலைவர்களில் முதல்வராகப் பிட் இருந்திருக்கக்கூடும்.’[8] அவை அனைத்தும் ஒருவகையில் மனக்கலக்கம் உண்டுபண்ணும் நவீனமானவை. அக் காலத்தில் வாழ்ந்த பலருக்கு அவை நிச்சயம் அதிர்ச்சி தருவனவாய் இருந்தன.

**பிட்டும் காபினெட் சபையும்** : அமைச்சர்களுக்கிடையேயான உறவுகள்பற்றிய சமகாலக் கருத்திற்குப் பிட்டின் தன்மையோ அல்லது அவர்தம் கொள்கைகளோ பொருந்துவனவாக இல்லை. கட்சியாட்சியை அவர் வேண்டுமென்றே புறக்கணித்ததால் ‘துறைகளால் ஆன அரசாங்கம்’ அமைய வழியேற்பட்டது. ஆனால், அதேசமயத்தில் மற்றொரு புறத்தில், ‘பிரதமர் அல்லது

தனிப்பட்ட அமைச்சர்' அவர் என்பதை அவர்தம் பெருமிதப் பண்பு சுட்டியது. 1761ஆம் ஆண்டில் அவர் பதவி துறப்பதற்குக் காரணமான நிகழ்ச்சியினால் இக் கூறுகள் யாவற்றுக்கும் விளக்கம் கிடைக்கின்றது. ஸ்பெயின் மீது போர் தொடுக்க வேண்டுமென்ற பிரச்சினையில் காபினெட் முழுவதும் பிட்டிற்கு எதிராக இருந்தது. பின்வரும் புகழ் பெற்ற வார்த்தைகளோடு அப்போதைய நடவடிக்கைகளை அவர் முடித்துவைத்தார்: 'நாட்டின் அரசாங்க சேவையை மற்றவர் கைவிட்டபோது அதற்குத் துணையாக இருப்பதற்கென்று மன்னரும் மக்களும் என்னை அழைத்தனர். அப்படியிருக்க, எனது ஆலோசனை மறுக்கப்படும்வரையில் நான் தொடர்ந்து பணியாற்றுவதைக் கண்டு எவரும் வியப்படையத் தேவையில்லை. பொறுப்பு வாய்ந்தவன் என்பதால் அரசாங்கத்தை இயக்குவேன். நான் இயக்காத எதற்கும் நான் பொறுப்பேற்கமாட்டேன்'. முந்திய தலைமுறையில் வாழ்ந்த கார்டரட்போன்ற கிரன்வில். பிரபுவின் விளக்கவுரையும் நன்கு அறியப்பட்டதே. 'மக்களுக்குப் பொறுப்பானவர் என்று அவர் (பிட்) பேசும் போது காமன்ஸ் சபையின் மொழியிலேயே பேசுகின்றார். இக் குழுவில் மன்னருக்கு மட்டிலுமே பொறுப்பானவர் என்பதை அவர் மறந்துவிடுகிறார்' என்று கிரன்வில் பிரபு குறிப் பிட்டார்.[9]

**மூன்றும் ஜார்ஜ் மன்னர்; அரசரின் ஆப்த நண்பர்கள்:** 1761ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் ஐந்தாம் தேதி பதவியிலிருந்து பிட் விலகினார். 1760ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 25ஆம் தேதி தமது பாட்டனாரைத் தொடர்ந்து மூன்றும் ஜார்ஜ் அரசுகட்டில் ஏறினார். இளமைவாய்ந்த மன்னரின் நோக்கங்களாக இருந்தவற்றைச் சுருங்கக் கூறுவதானால், கடந்த ஐம்பது ஆண்டுகளாக இழிவுதரும் தாழ்ந்த நிலைக்கு அரசரைக் கொண்டு நிறுத்திய விக்கு கட்சியினரின் மேலாதிக்கத்தைக் குலைப்பது, நாட்டு மக்களுக்குச் சேவைசெய்யும் அமைச் சரவையில் கட்சி வேறுபாடு இன்றித் தகுதியுடையார் அனைவர்க்கும் இடமளிப்பது, நாட்டு மக்கள் பெருஞ் சுமை யெனக் கருதத் தொடங்கிய போரை முடிவிற்குக் கொண்டு வருவது என்பவை முக்கியமானவை.

அமைச்சர்கள் கையிலிருந்த அதிகாரங்கள் அனைத்தையும் கைப்பற்றி, அவற்றைத் தாமே செலுத்தவேண்டுமென்ற தமது முடிவான தீர்மானத்திற்கிணங்க, இரகசிய ஆலோசகரின் சிறு குழுவின் துணையோடு ஜார்ஜ் தமது ஆட்சியைத் துவக்கினார். ஸ்காட்லாந்தைச் சார்ந்த பிரபுவும், முன்னாளில் தமது

ஆசிரியராகவும், அதுபோது அரச அங்கிச் சேவகராகவும் இருந்த பூட் பிரபுவை அக் குழுவின் தலைவராகக் கொண்டார். அதுவரையில் யாகோபியக் கொள்கைகளால் பொது அலுவல் களிலிருந்து பிரித்துவைக்கப்பெற்றவர்களும், ஆனால், தற்போது பழைய தலைவரைப் புறக்கணித்துத் தங்களது கருத்துகளை[10] மட்டும் தக்கவைத்துக்கொண்டு, ஸ்டுவர்டு மன்னர்களை ஆதரித்தவர்கள் காட்டிய பணிவுடன் கூடிய அபிமானத்தைப் புதிய மன்னரிடமும் காட்டத் தொடங்கிய டோரிகளே அக் குழுவில் மிகுதியாக இருந்தனர். எனினும், டோரிகள் மாத்திரமென்றால் மிகவும் வலிமை குன்றியிருந்தனர். உண்மையில் பல புரட்சி விக்கு பிரிவினர் டோரிகளுடன் சேர்ந்தனர். பெட்ஃபோர்டு பிரபுவின் 'புளூம்ஸ்பரி கும்பலும்' (Duke of Bedford's 'Bloomsbury Gang'), வால்போல் மரபில் வந்த ஃபாக்ஸும், ஜார்ஜ் கிரன்விலும் அவர்களில் குறிப்பிடத் தகுந்தவர்கள். 'அரசரின் ஆப்த நண்பர்களோடு' காமன்ஸ் சபையிலிருந்த அவர்களுடைய ஆதரவாளர்களின் உதவியைப் பெற்ற மன்னர், நியமனத்திற்குத் தமது நல்லெண்ணத்தையே பெரிதும் சார்ந்திருந்த அமைச்சர்களின் மூலமாக ஆட்சிபுரிய முனைந்தார். மேலும், தமக்கு முன்னால் வாழ்ந்த இரு முன்னோர்களின் ஆட்சிக் காலங்களில், விக்கு பெருங்குடியினர் ஏற்கெனவே பெற்றிருந்த அரசியல் செல்வாக்கை மேலும் வளர்த்துக்கொள்வதற்கு, அவ்வப்போது மந்திரிகளாக இருந்தவர்கள் தமதாக்கிக்கொண்ட சமய, படை, பொது அரசாங்கத் துறைகள் சார்ந்த பல சலுகைகளை வழங்கும் உரிமையை மூன்றும் ஜார்ஜ் தம்முடையதாக்கிக்கொண்டார்.

**பூட் மந்திரிசபையும் கிரன்வில் மந்திரிசபையும் :** 1760ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 25ஆம் தேதி அரசு எய்திய மூன்றும் ஜார்ஜ், இரண்டு நாள்கள் கழிந்து பூட் பிரபுவை பிரிவி கவுன்சிலில் பதவிப் பிரமாணம் எடுக்குமாறு செய்து, காபினெட்டில் சேர்த்துக்கொண்டார். பிட்டும் நியூகாசில் பிரபுவும் சேர்ந்து 1757ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் அமைத்த கலப்பு மந்திரிசபை தொடர்ந்து பதவி வகித்தது. ஆயின், பூட் பிரபுவே மன்னரின் உண்மை ஆலோசகராகவும், மன்னரது விருப்பையும் கருத்துகளையும் வெளியிடவல்ல ஒரே தலைவராகவும் விளங்கினார்.[11] ஐந்து மாதங்களுக்குள் அவரை அரசாங்கச் செயலர் என்று கெஜட் அறிவித்தது. அதிகாரமின்றிப் பொறுப்புமட்டும் ஏற்க மறுத்த நியூகாசிலும் மற்ற மந்திரிகளும் பதவியிலிருந்து நீக்கப்பட்டனர். அதனால் பதின்மூன்று மாதகாலத்திற்குள், அதாவது, தமது வாழ்நாளின்

குறிக்கோளாக இருந்த பிரதமர் பதவியை பூட் பிரபு 1762-ல் ஏற்றார். சில நாள்களுக்குள் 'ஆர்டர் ஆஃப் தி கார்டர்' (Order of the Garter) என்னும் பட்டமும் பெற்றார். திறமை வாய்ந்தவர்கள் இத்துணை விரைவில் மேல்நிலைக்கு வந்தாலே மற்றவரிடம் பொறாமை என்னும் பேய் தலைவிரித்தாடும். பூட் பிரபுவோவெனின், சாதாரணத் திறமையும் அற்றவர். அவர் ஒரு ஸ்காட்டியராக இருந்ததைப் பெருங்குறையாக மக்கள் கருதினர். இத்தகைய வெறுப்புணர்ச்சி வளர்வதற்குப் பல வசைப்புராணங்களும் தூபமிட்டன. 1763ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் பத்தாம் தேதி செய்துகொண்ட பாரீஸ் உடன்படிக்கையின் மூலமாக ஏழாண்டுப் போரை முடிவிற்குக் கொண்டுவருவதில் அவர் வெற்றி பெற்றார். அவ்வுடன் படிக்கைக்குப் பாராளுமன்றத்தின் இசைவினைப் பெறும், மிகுந்த தேர்ச்சித்திறத்திற்குரியதும், ஆனால், சுவையற்றதுமான செயலைச் செய்துமுடிக்க ஹென்றி ஃபாக்ஸைப் பயன்படுத்திக் கொண்டார். முன்னவரும் பல தன்னலம் சார்ந்தவற்றைச் செய்துமுடிக்க இதனை ஒரு வாய்ப்பாகக் கொண்டார். இலஞ்ச ஊழல், அரசியல் மோசடிகள், எதிரிகளைப் பதவியிலிருந்து கண்டிப்பாக நீக்குதல் போன்ற மரபாக வந்த வழிகளை வால்போலைவிடத் தீவிரமாகப் பயன்படுத்தினர். ஃபாக்ஸின் செயலால் பழியும் பிரபுத்துவமும் அவரை நாடிவந்தன.[12] ஆயினும், பாராளுமன்றத்திலும் வெளியிலும் மக்கள் விரும்பாத நிலை தீவிரமடைந்ததால், பூட்பிரபு பதவியில் தொடர்ந்திருத்தல் ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இல்லை. 'தாம் வீழ்ச்சியுறுவதோடு அதில் தமது மன்னரையும் ஈடுபடுத்திவிடக்கூடும்'[13] என்று அஞ்சிய அவர், 1763ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் எட்டாம் தேதி திடீரென்று ராஜினமா செய்தார். எனினும், அரசவையில் தமது செல்வாக்கைத் தக்கவைத்துக்கொண்டார். அவரது சிபாரிசின் பேரில் ஜார்ஜ் கிரன்விலின் தலைமையில் மன்னர் அமைத்த புதிய மந்திரி சபையின் செயல்களின் மீது செல்வாக்குச் செலுத்தமுடியும் என்றும் நம்பினர். ஆனால், பூட் பிரபுவின் பகர ஆளாக இருக்கப் புதிய பிரதமர் எவ்வகையிலும் ஒப்பினர் இல்லை. அதற்கு மாறாகத் தமது ஆதரவாளரான பூட்பிரபுவை அரசசபையிலிருந்து மன்னர் நீக்கவேண்டியதாயிற்று. அதனோடு 'எந்த முறையிலும், எந்த வடிவிலும்' அரச ஆலோசனை சபைகளில் பூட் பிரபு தலையிடுவதை ஏற்பது இல்லையென்ற உறுதிமொழியும் அளிக்கவேண்டிவந்தது.

**வேண்டாதவரை வெளியேற்றும் கொள்கை :** பாரீஸ் சமாதானத்தின் முன்னுரிமைகளைப் பாராளுமன்றத்தில்

கொண்டுசெலுத்துவதற்கு பூட்டும் ஃபாக்ஸுடம் 'வேண்டாதாரை வெளியேற்றும் கொள்கையை' முக்கியமாகக் கொண்டனர். நாட்டு மக்கள் விரும்பாத ஃபிரான்சுடன் சமாதானம் என்பது பற்றித் தீர்மானிக்கக்கூட்டிய கவுன்சிலுக்கு வர மறுத்ததற்காக, 'விக்குகளின் இளவரசர்' என்று அரசமாதா வஞ்சப் புகழ்ச்சியாகக் குறிப்பிட்ட டிவோன்ஷயர் கோமகன், மன்னரால் அவமதிக்கப்பட்டார். உட்படு கருமத் தலைவர் பதவியையும் அவர் துறக்கவேண்டியதாயிற்று. பிரிவி கவுன்சிலர் பட்டியலிலிருந்து அவரது பெயரை மன்னர் தமது கையாலேயே அடித்தார். கோமகாரான நியூகாசிலும், கிராஃப்டனும், ராக்கிங்காம் மார்குவிஸ் பிரபுவும் பாராளுமன்றப் பிரபுக்கள் என்ற வகையில் பாரீஸ் சமாதானத்தை எதிர்த்துப் பேசியதற்காகக் கவுன்டிகளில் வகித்திருந்த லெப்டினெட் பிரபு பதவிகளைத் துறக்கவேண்டியதாயிற்று. அத்தகைய அவமானம் தமக்கு ஏற்படுவதற்குமுன் டிவோன்ஷயர் கோமகன் ராஜினுமா செய்துவிட்டார். சமாதானத்தையும் மந்திரிசபையையும் தைரியமாக, கடுமையாகத் தாக்கி எழுதியதால் அரசாங்கத்தின் கோபத்தைத் தூண்டிய 'நார்த் பிரிட்டன்' (Nhorth Briton) பத்திரிகையின் உரிமைமையாளரான ஜான் வில்க்ஸுடன் நட்புக்கொண்டதற்காக லெஃப்டினெட் பிரபு பதவியை டெம்பிள் ஏர்ல் பிரபு கைவிடவேண்டியதாயிற்று. அவரது பெயரும் பிரிவி கவுன்சிலர் பட்டியலிலிருந்து நீக்கப் பட்டது.

தீரமிக்க படைவீரரும் பெருந்தன்மை வாய்ந்த அரசியல்வாதியுமான தளபதி கான்வே, அரசாங்கத்திலும் படையிலும் வகித்திருந்த பதவிகளைத் துறக்க நேர்ந்ததற்கு அவர் அரசாங்கத்திற்கு எதிராகப் பாராளுமன்றத்தில் வாக்களித்ததுதான் காரணம். அதே காரணத்திற்காகக் கர்னல் பாரேயும் (Colonel Barre), கானல் எ கோர்ட் (Colonel a Court) என்பாரும் படைத்தலைமையை இழந்தனர். ஷெல்போர்ன் பிரபுவும் அரச மெய்காப்பாளப் பதவியைப் பறிகொடுத்தார். ஃபிட்செர்பர்ட் (Fitzherpert) வாணிப ஆணைக்குழுவிலிருந்தும், கால்கிராஃப்ட் (Calcraft) பேரவைப் பணியிலிருந்தும் வெளியேற்றப்பட்டனர். மன்னரின் விருப்பத்திற்குகந்தவாறு வாக்களிக்கத் தவறிய பாராளுமன்றப் பதவியாளர் அனைவரும் மொத்தமாக வெளியேறவேண்டியதாயிற்று. பொதுத்துறை அலுவல்களில் பணியாற்றிய கணக்கரும், காப்பாளரால் நியமிக்கப்பெற்ற சிறிய அதிகாரிகளும் தங்கள் தங்கள் காப்பாளர்களின் கதியையே அடைந்தனர்.[14]

எவ்வாறிருப்பினும், இந்த 'வேண்டாதரை வெளியேற்றும் கொள்கை' சிறிது காலத்திற்காவது படுதோல்வியடைந்தது. 1763ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பதினாறும் தேதி பிரதமராகப் பதவியேற்ற கிரன்விலுக்கும் மன்னருக்கும் இடையே சில தினங்களுக்குள்ளேயே கருத்து வேற்றுமைகள் எழுந்தன. தங்களுடைய விருப்பங்களைச் செயற்படுத்தும் அரசியற் பேராளாகவே கிரன்வில் இருக்கவேண்டுமென்று பூட்பிரபுவும் மன்னரும் கருதினர். ஆனால், மன்னரைப் போலவே அரசியல் கருத்துகளில் ஆணவமும் குறுகிய மனப்பான்மையும் கொண்டவராக கிரன்வில் திகழ்ந்தார் எனினும், அவர் தமது திறமையில் நம்பிக்கை கொண்டதிலும், அதிகார வெறியிலும், தமது உரிமைகளை விட்டுக்கொடுக்காததிலும் மன்னருக்கு எவ்வகையிலும் இளைத்தவரல்லர். பூட்டுடன் எவ்வித அரசியல் தொடர்பும் கொள்வது இல்லையென்ற வாக்குறுதியைப் பெறுவதில் கிரன்விலும் பெட்ஃபோர்டும் 1765ஆம் ஆண்டில் பெருவெற்றி பெற்றனர்.[15] இத்தாலியிலோ அல்லது ஸ்காட்லாந்திலோ இருந்தபோதும் பூட்டின் இரகசியமான செல்வாக்கு மன்னர்மீது இருந்தது என்ற வதந்தி சில ஆண்டுகளுக்குத் தொடர்ந்து இருந்தபோதிலும், கொடுத்த வாக்கைக் காப்பதில் மூன்றும் ஜார்ஜ் மன்னர் குறியாய் இருந்தார்.[16] கிரன்வில் மந்திரிசபை இருந்த காலத்திலேயே, அன்னார் தடுத்தும் கேளாது, புதிய மந்திரிசபை அமைப்பதற்காக மன்னர் பிட்டுடன் இருமுறை பேச்சுவார்த்தைகள் துவக்கினர். ஆனால், இருமுறையும் தோல்வியே கண்டார். பிட்டை ஏற்றுக் கொள்ள அவர் சித்தமாக இருந்தார். ஆனால், 'தம் முன்னோரைக் கட்டுப்படுத்தி அடிமையாக்க முயன்ற, சென்ற ஆட்சியில் பதவி வகித்த பிற அமைச்சர்களை' ஏற்க அவர் மறுத்தார். தமது சகாக்களாக இருக்கவேண்டுமென்று பிட் வற்புறுத்திய மற்றவர்களைத் 'தாம் செங்கோல் பிடித்து வாழும்வரை எக் காரணம் பற்றியும் ஏற்கமுடியாது'[17] என மன்னர் அறிவித்தார்.

**ராக்கிங்காமின் மந்திரிசபை, 1765 :** கிரன்வில் மந்திரி சபையினால் மிகுந்த சோர்வுற்ற மன்னர், இறுதியாக 1765ஆம் ஆண்டில், என்ன நேர்ந்தாலும் அதனை ஒழித்துக்கட்டுவது என உறுதி பூண்டார். அதன் காரணமாகச் சிறிது காலத்திற்கு முந்திதான் லெப்டினென்ட் பிரபு பதவியிலிருந்து வெளியேற்றிய ராக்கிங்காம் மார்குவிஸ் பிரபுவைப் பிரதம அமைச்சராக ஏற்கவேண்டிய அவலநிலை அவருக்கு ஏற்பட்டது. அதே சமயத்தில் அரண்மனைச் சேவகத்திலிருந்தும், படையணித்

தலைமைப் பதவியிலிருந்தும் நீக்கப்பெற்றவரான தளபதி கான்வே, உள்நாட்டு அமைச்சராகவும் காமன்ஸ் சபையின் தலைமை அமைச்சராகவும் பதவியேற்ருர். இளமைத் துடிப்புக் கொண்ட ராக்கிங்காம் பிரபுவின் விக்கு குழு, ஒரு காலத்தில் விக்கு கட்சியின் வீழ்ச்சிக்குக் காரணமாக இருந்த ஊழல்களைத் தவிர்க்க முற்பட்டதாகத் தோன்றியது. 'ஒரு கட்சி எவ்வாறு இருக்கவேண்டுமோ அதே மாதிரியாக ராக்கிங்காமின் கட்சி விளங்கியது'[18] என்று மெகாலே குறிப்பிட்டார். ராக்கிங் காமின் செயலராக அரசியல் வாழ்வைத் துவக்கிய எட்மண்டு பர்க்கைச் சேர்த்துக்கொண்ட தனிப்பெருமை அம்மந்திரிசபைக்கு நிச்சயமாக உண்டு. ஆனல், தாம் வெறுத்தவர்களேயே பதவியில் அமர்த்தவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டபோதிலும், தம் போக்கில் செல்லவே மூன்ரும் ஜார்ஜ் முடிவுசெய்தார். அதற்காக அவர் வேருன செயல்முறைகளைக் கையாண்டார். அமெரிக்கக் குடியேற்றங்களைச் சமாதானப்படுத்துவதற்கு முற்றிலும் இன்றியமையாதது என்று கூறி, பத்திர முத்திரைச் சட்டத்தை ரத்து செய்யவேண்டுமென்று மசோதா ஒன்றை மந்திரிகள் கொண்டுவந்தபோது, அதனை எதிர்த்தார். ஆனல், 1766-ல் தோல்வியே கண்டார். அதன்பிறகு உரிமை பெற்ற அரசகட்சி உறுப்பினர் மட்டுமன்றி, அரசாங்கப் பதவியேற்றவர்களையும் கொண்ட 'அரசரின் ஆப்த நண்பர்களை' எதிர்க்கட்சியாக அமைத்து, மந்திரிசபையை எதிர்க்குமாறு செய்தார். அரசாங்கப் பதவியேற்றவர்களையும் தமது மந்திரிகளை எதிர்க்கு மாறு தூண்டினர். எதிர்க்கட்சியுடன் இணைந்து வாக்களித்த அவர்கள், பதவிகளில் தொடர்ந்து பாதுகாப்புப் பெறவும் அவர் வழிசெய்தார்.[19]

**கிராஃப்டன், சாத்தம் ஆகியோரின் அமைச்சரவை, 1766 :** பன்னிரண்டு மாதகாலம் பதவி வகித்தபின், 1766ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில், ராக்கிங்காமை மன்னர் பதவியிலிருந்து நீக்கினர். அதுபோது சாத்தம் ஏர்ல் பிரபுவாகிப் பிரபுக்கள் சபைக்கு உயர்த்தப்பெற்ற பிட்டைக் கட்சி அடிப்படையற்ற மந்திரிசபையை அமைக்குமாறு மன்னர் வற்புறுத்தினர். அரசாங்க முத்திரைக் காப்பாளப் பிரபுவாகப் பிட் பதவியேற்க வேண்டுமென்றும், கிராஃப்டன் கோமகன் கருவூலத் தலைமைப் பிரவாவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. எனினும், பிட்டின் இரண்டாவது மந்திரிசபை வெற்றிபெறவில்லை. 'பொது மக்கட் பெருமகனை' அவர், ஏர்ல் பட்டத்தை ஏற்றபின் தமது செல்வாக்கை இழந்தார். காமன்ஸ் சபையில் அவர் அமராததால் அவரது மந்திரிசபை வலிமை குன்றியிருந்தது.

எவ்வாறிருப்பினும், அரசாங்கத்தில் முனைப்பார்வமுள்ள பங்கு கொள்ள முடியாதவாறு அவரைச் செயலற்றவராகச் செய்த இனம் புரியாத, வேதனை மிகுந்த நோயினால் துன்புற்ற காரணத்தால், கீழ்சபையில் இருந்திருந்தாலும், அவர் பழையபடி தீவிரப் பங்குபெற்று இருக்கமுடியாது என்பது திண்ணம். இங்ஙனம் அதிகரித்துவந்த இடர்களுக்கிடையே ஆட்சிப் பொறுப்பை கிராஃப்டனிடமே விட்டு 1768ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் பிட் பதவியிலிருந்து விலகினார்.

பிரபுக்கள் சபையில் சாத்தம் பிரபுவும், சான்சலப் பிரபுவாக இருந்த காம்டனும் தாக்கவும், அதேசமயத்தில் மற்றொரு காபினெட் அமைச்சர் காமன்ஸ் சபையில் தாக்கவும், இறுதியாக 1770ஆம் ஆண்டில் கிராஃப்டன் மந்திரிசபை ராஜினாமா செய்தது. ராக்கிங்காமின் ஆதரவாளர்கள் என்றும், சாத்தமின் ஆதரவாளர்கள் என்றும் இரு பிரிவினராக விக்கு கட்சினர் பிரிந்திருந்தனர். இந்த ஒற்றுமையற்ற நிலையை அரிய சந்தர்ப்பமாகப் பயன்படுத்தி, பழைய அரசாங்கத்தில் நிதியமைச்சராகவிருந்த நார்த் பிரபுவைப் பிரதம மந்திரியாக்கினார் மன்னர். இங்ஙனம் பத்தாண்டுகளில் வந்த ஏழாவது பிரதமராக நார்த் பிரபு பதவியேற்றார்.

**மன்னரும் நார்த் பிரபுவின் மந்திரிசபையும், 1770—1782 :** 1770 தொடக்கம் 1782 வரை பன்னிரண்டு ஆண்டுகள் நீடித்த நார்த் பிரபுவின் அரசாங்கத்தில்தான் அரசரின் சொந்த முறையிலான செல்வாக்கு உச்சகட்டத்தை அடைந்தது. அதைப் பற்றிக் குறிப்பிடும்போது மே என்பார் பின்வருமாறு எழுதினார் :[20] முக்கிய அயல்நாட்டு, உள்நாட்டுக் கொள்கைகளில் அமைச்சரை மட்டும் மன்னர் இயக்கவில்லை. பாராளுமன்ற விவாதங்களை எவ்வாறு நடத்துவது என்பதுபற்றியும் அமைச்சருக்கு அறிவுரை வழங்கினார். எந்தத் தீர்மானங்களைக் கொண்டுவரவேண்டும், எவற்றை எதிர்க்கவேண்டும் என்றும், எவ்வாறு தீர்மானங்களை நிறைவேற்றுவது என்பது பற்றியும் யோசனை கூறினார். சலுகைகள் யாவற்றையும் தம் கையிலேயே வைத்துக்கொண்டார். அரசாங்கத்தின் அமைப்பை அவரே நிர்ணயித்தார். அரசாங்க மந்திரிகள், சட்ட அதிகாரிகள், அரண்மனை அலுவலாளர் ஆகியோரின் பதவிகளையும், தராதர நிலைகளையும் அவரே ஒழுங்கு செய்தார். ஆங்கில நீதிபதிகளையும் ஸ்காட்டிய நீதிபதிகளையும் நியமித்து, அவர்களுக்குப் பதவி உயர்வுதரும் பொறுப்பு முழுவதையும் தாமே ஏற்றார். பிஷப்புகளைப் பதவியில் அமர்த்தவும், அவர்களை இடமாற்றஞ் செய்யவும், கோயில்

குருமார்களை நியமனம் செய்யவும், திருச்சபையில் உள்ள பிற பதவிகளை வழங்கவும் ஆன அதிகாரத்தை மேற்கொண்டார். இராணுவ ஆட்சிகளையும், படையணிகளையும், பதவி ஆணைகளையும் தம் விருப்பம்போல் விலக்கிவைத்தார். படைகள் முன்னேறுவதற்கான ஆணைகளையும் அவரே பிறப்பித்தார். பட்டங்கள், வரிசைகள், உபகாரச் சம்பளங்கள் ஆகியவற்றை வழங்கவும் மறுக்கவும் ஆன அதிகாரங்களையும் அவர் பயன்படுத்தினார். உண்மையில், அரசாங்கத்திடம் இருந்தவை யாக நூல்கள் குறிப்பிட்டவையும், விக்கு மேலாதிக்கம் இருந்த போது மந்திரிகள் கைப்பற்றிக்கொண்டவையுமான அதிகாரங்கள் அத் துணையையும் அரசர் அனுபவித்தார். காமன்ஸ் சபையில் ஃபாக்ஸ் அறிவித்ததைப்போல 'அவரே தமது அறிவுரை பெருத அமைச்சராக' விளங்கினார். மன்னரின் முகவராகவே நார்த் பிரபு திகழ்ந்தார். எந்த அமெரிக்கப் போர் தொடர்ந்து நடைபெறுமானால் 'நாட்டிற்கும் மன்னருக்கும் அழிவே ஏற்படும் என்று மூன்றுண்டுகளாகத்தாம் மனத்திற்குள் எண்ணியிருந்ததாக' 1779ஆம் ஆண்டில் மன்னரிடம் அறிவித்தாரோ, அதே அமெரிக்கப் போரை அவர் தொடர்ந்து நடத்தினார்.

**நார்த்தின் வாழ்க்கையும் குணதிசயங்களும் :** நிலைத்து நிற்காது, சிறிது காலத்திற்கே வாழ்ந்த பல மந்திரி சபைகளுக்குப் பிறகு வந்த நார்த் பிரபுவின் நீண்ட கால மந்திரி சபையைப்பற்றி ஆராய்வது அவசியம். தமது உறவினரான நியூகாசில் கோமகன் ஆதரவில்தான் நார்த் பிரபு அரசியலில் புகுந்தார். 1759ஆம் ஆண்டில் சிறப்புவாய்ந்த பிட், நியூகாசில் மந்திரி சபையில் கருவூலத் துணைப்பிரபுவாகப் பதவியேற்றார். 1765ஆம் ஆண்டில் ராக்கிங்காம் ஆட்சிக்கு வந்ததும் அவர் தமது பதவியை ராஜினுமா செய்தார். சாத்தம்—கிராஃப்டன் மந்திரி சபையில் 1767ஆம் ஆண்டில் நிதியமைச்சராகப் பணிபுரிந்தார். 1782ஆம் ஆண்டில் வீழ்ச்சியுறும் வரையில் அப் பதவியில் தொடர்ந்து இருந்தார். 1770 தொடக்கம் 1782 வரை கருவூலத் தலைமைப் பிரபுவாகவும் பணியாற்றினார். (கருவூலத் தலைமைப் பிரபு மேல்சபையைச் சேர்ந்தவராக இருந்தபோது இவ்விரு பதவிகளும் தனித்தனியாகப் பிரிந்திருந்தன. அப்படியில்லையென்றால் இரண்டும் ஒருவருக்கே அளிக்கப்படுவது 18ஆம் நூற்றாண்டில் சாதாரணமாக இருந்த ஒன்று.) உடலால் சோம்பேறியாகவும் உள்ளத்தால் நெடுநீர்மையும் சொகுசும் கொண்டவராகவும் இருந்த நார்த் பிரபு, பதவியை நாடிச் செல்பவரல்லர். பதவி வந்தபோதும் அதனைத் துறக்கவே முயன்றார். பதவிகளை எதிர்நோக்கி நிற்கும் பதவி வேட்டைக்

காரராக இல்லாததால், அவர் கொள்கைவழி நின்று சரியென்று கண்டவாறு வாக்களித்தார். பொதுமக்களிடையேயான மதிப்பினைத் தாம் நாடவில்லை யென்று அவர் கூறியது உண்மையே. மிகக் கடினமான காலத்தில் நிதியமைச்சராக இருந்தபோதும், கிழக்கு இந்தியக் கம்பெனியுடன் கொண்ட தொடர்புகளினாலும், தொழில்நுட்பங் கலந்த, சிக்கல் மிகுந்த செய்திகளில் பங்குகொண்டு அவற்றினைப் பேரவை விளங்கிக் கொள்ளுமாறு செய்யும் திறமை தமக்குண்டு என்பதை நிரூபித்தார். இவற்றிற்கும் மேலாக வேடிக்கையாகப் பேசுவதிலும், பர்க், ஃபாக்ஸ், டன்னிங், இறுதியில் இளைய பிட் ஆகியோருடைய தாக்குதல்களுக்கு இடையே கலங்காது நிற்பதிலும், மிகுந்த பயனுள்ள பேச்சாளராகத் திகழ்வதிலும் அவர் போற்றுதற்குரிய காமன்ஸ் சபையின் தலைமகனாக விளங்கினார். இத்தகைய பெருநலங்களைப் பெற்றிருந்த போதிலும், நார்த் பிரபுவிடம் ஒருவகையான தன்னம்பிக்கைக் குறைவு காணப்பட்டது. அதன் விளைவாக மற்றவர்கள், முக்கியமாக மன்னர், அவரது நல்ல கருத்துகளையெல்லாம் நேர்வழியினின்று வளைத்துக்கொண்டு செல்லமுடிந்தது.[21]

**நார்த் பிரபு கையாண்ட அரசியல் அமைப்பைச் சார்ந்த முறைகள் :** காமன்ஸ் சபையின் தனியுரிமைகளையும் மேன்மை நிலையையும் காப்பதில் மன்னரைப்போலவே நார்த் பிரபுவும் குறிப்பாய் இருந்தார். வில்க்ஸின் விவகாரங்களில் அவர்கள் கொண்டிருந்த நிலை இந்த அடிப்படையில் அமைந்ததுதான். அவர்கள் கொண்ட அடிப்படை தவறாக இருக்கலாம்; ஆனால், அதனை அவர்கள் மனமாரப் போற்றினர். குடியேற்றங்களில் வரிவிதிக்கும் உரிமை பாராளுமன்றத்திற்கு உண்டு என்பதன் பேரில்தான் அவர்கள் அமெரிக்கப் போரைத் தொடர்ந்து நடத்தினர்; அரசாங்கத்தின் உரிமை என்று கூறிப் போரிடவில்லை. தமது முன்னோர் பலரைப்போலவே 'பிரதம மந்திரி' என்று தம்மை அழைப்பதை நார்த் வெறுத்தார். ஏதோ ஒரு விளக்கங் கூறமுடியாத மக்கள் குரலைக் கேட்டதாகக் கருதிய பிட் அதன் வழி நடந்தார். ஆனால், தமது நிலைபற்றி நார்த் பிரபுவின் கருத்துகள் குறிப்பிடத்தகுந்தவை. ஓர் அமைச்சர் பதவியில் இருக்க இரண்டு அடிப்படைகள் தேவைப்படுகின்றன. முதலாவதாக, தமது சேவகர்களை நியமிக்கும் ஐயத்திற்கிடமில்லாத உரிமை மன்னருக்கு உண்டு. இரண்டாவதாக இருப்பது நாட்டிற்கு இன்பமூட்டுவது. அதன்படி அமைச்சர்தம் கொள்கைகளை மக்களின் பிரதிநிதிகள் உள்ளபடியே மறுதலிப்பார்களானால், அந்த அளவிற்கு அவருடன் ஒத்துழைக்க மறுப்பார்களானால்,

அத்தகைய அமைச்சரின் மூலமாக மன்னர் அலுவல்களை மேற்கொள்ள முடியாது. மன்னருடைய ஆதரவு எத்துணைதான் இருந்தபோதிலும், அத்தகைய அமைச்சர் பிரிந்து செல்லவேண்டியதே.[22] பாராளுமன்றத்தின் ஆதரவை நார்த் மிகுதியாகப் பெற்றிருந்தார். அத்தகைய ஆதரவு இருக்கும் வரையிலும், தமது சேவைகளை மன்னர் விரும்புகின்ற வரையிலும், பதவியில் தொடர்ந்து இருப்பது தமது கடமை என்று அவர் உணர்ந்தார். தமக்குப் பதவியிலிருந்து விடுதலை தருமாறு அவர் பல முறை மன்னரை வேண்டித் தோல்வி கண்டதும் உண்மையே.

எவ்வாறிருப்பினும், மூன்றும் ஜார்ஜ் மன்னர் எழுப்பிய அரசியல் அமைப்பைச் சார்ந்த பிரச்சினைகள் பாராளுமன்றத்தைவிட அமைச்சர்களையும் காபினெட்டையுமே பொறுத்தவைகளாக இருந்தன. இச் செய்திகளில், தமது வழக்கமான செயல் சூழ்நிலைக்கிசைந்தவாறு இருந்தது என்றும், கொள்கை அடிப்படையில் இல்லை என்றும் நார்த் ஒப்புக்கொண்டார். சாத்தம் பிரபுவின் கலப்பு அமைச்சரவைக்கு இலக்கணமாகத் திகழ்ந்த முந்திய மந்திரிசபையில் நார்த்தும் அவரது சகாக்களில் பலரும் பதவியேற்றிருந்தவர்களே. இந்த ஒருமைப்பாடு அற்ற நிலையினால் அவர் அல்லலுற்றார். அலுவலகத் துறைகளில் போரை நடத்த இயலாதென்றும், அரசாங்கத்தை இயக்கும் பல பிரிவுகளிலேயும் ஒற்றுமையும் நேசமுடன் கூடிய மனமார்ந்த ஒத்துழைப்பும் தேவையென்றும், அவைகள் ஒன்றையொன்று கலக்கவேண்டுமென்றும், அவற்றின் மூலமாகத் தோல்வியுறாதிருக்க இன்றியமையாது தேவைப்படும் திறனையும் சக்தியையும் அளிக்கவேண்டுமென்றும்[23] அவர் குறிப்பிட்டார். காபினெட்டில் கட்டுப்பாடு தேவையென்பதை அரசியல் கொள்கை அடிப்படையில் சார்லஸ் ஜேம்ஸ் ஃபாக்ஸ் வலியுறுத்தியபோது, கருத்துரை வழங்கிய நார்த் பின்வருமாறு குறிப்பிட்டார்: 'துறைகளின் மூலமான அரசாங்கம் கூடாது என்பது உமது கருத்தானால், அதனை நான் ஏற்கிறேன். அது கேடு பயக்கும் முறையென நானும் எண்ணுகிறேன். முழுவதையும் ஆட்சி செய்யவும் யாவற்றையும் இயக்கவும் ஒருவரோ அல்லது ஒரு காபினெட் குழுவோ இருக்க வேண்டுவது அவசியம். துறைகளின் மூலமான அரசாங்கத்தை நான் கொண்டுவரவில்லை. அது இங்கே இருக்கக் கண்டேன். அதனை முடிவிற்குக் கொண்டுவரும் உறுதியும் வலிமையும் என்னிடம் இல்லை.'[24]

தமது தனியாட்சித் திட்டத்தை நடைமுறையில் கொண்டு வருவதற்கு எத்தகைய தீவிர நடவடிக்கைகளையும் எடுக்க மன்னர் தயாராக இருந்தார். 1770ஆம் ஆண்டில் பாராளு மன்றத்தைக் கலைக்க வேண்டுமென்ற தீர்மானத்தை சாத்தம் பிரபு கொண்டுவரவிருந்த வேளையில், தளபதி கான்வேயுடன் உரையாடிக்கொண்டிருந்த மன்னர், தமது வாள்மேல் கைவைத்து, 'பாராளுமன்றத்தைக் கலைப்பதில் விட்டுக் கொடுப்பதற்குமுன் இதனைப் பயன்படுத்தவேண்டியிருக்கும்'[25] என்று கூறினர். தாம் விரும்பாத அமைச்சர்களையோ அல்லது செயல் முறைகளையோ ஏற்றுக்கொள்வதைக் காட்டிலும் முடிதுறந்து, முந்தையோரின் நாடான ஹனேவருக்குச் சென்றுவிடுவதாகப் பல முறை பயமுறுத்தினர். இவ்வாறு அச்சுறுத்தியபோது, தர்லோ பிரபு ஒரு முறை பின்வருமாறு கூறியது குறிப்பிடத்தகுந்தது : 'மாட்சிமை தங்கிய மன்னர் அவர்கள் போய்விடலாம்; அதைவிட எளிதானது வேறொன்று மில்லை; ஆனல், அங்கே தங்குவதில் மன்னர் அவர்கட்கு அலுப்புத் தோன்றினல் திரும்பிவருவது அத்துணை எளிதாக இராது'.

**அரச வெட்டதிகாரம்** (Royal Veto) : ஹனேவரியர் குலம் ஆட்சிக்கு வந்ததிலிருந்து பாராளுமன்றத்தின் இருசபைகளிலும்[26] நிறைவேறிய மசோதவிற்கு இசைவுதர மறுத்தல் என்னும் அரச சிறப்பதிகாரத்தை ஆங்கில நாட்டு மன்னர் எவரும் பயன்படுத்தவில்லை. ஆனல், மூன்ரும் ஜார்ஜ் மன்னர் அவ்வாறு செய்ய முன்வந்தார் என்பதில் வியப்பொன்றும் இல்லை. 'பாராளு மன்றச் சபைகள் ஒன்றில் ஒரு மசோதவைக் கவிழ்க்க அரசரால்முடியும். ஆனல், அதற்காக இசைவுதர மறுக்கும் அரச உரிமையை எப்போதும் பயன்படுத்தக்கூடாது என்ற நிலையை உருவாக்கக்கூடிய வாசகம் எதையும் உபயோகிக்க நான் தயாராக இல்லை'[27] என்று 1774ஆம் ஆண்டில் நார்த் பிரபுவிற்கு எழுதிய கடிதத்தில் ஜார்ஜ் குறிப்பிட்டிருந்தார். அரச அதிகாரத்தைப் பயன்படுத்தாததுபற்றிய இத்தகைய விளக்கம் சரியானதே. ஒரு மசோவின் ஆரம்ப கட்டத்திலேயே, நேரடியாகவோ அல்லது அமைச்சர்கள் மூலமாகவோ இருக்கும் மன்னரது செல்வாக்கு, அதனைத் தடுத்து நிறுத்திடமுடியும் என்பதால் மன்னர் இசைவுதர மறுக்கவேண்டுமென்பது அவசியமற்றதாயிற்று.[28] ஆயின், 'அரசச் செல்வாக்கு' என்னும் பிரச்சினையை ஒழித்துக்கட்ட மேன்மேலும் பல முயற்சிகள் எழுந்தன. குறிப்பாகப் பொருளாதாரச் சீர்திருத்தத்திற்காக பர்க் கொண்டுவந்த மசோதாவினல் பல உம்பள மானியப்

பணிகள் ஒழிந்திருக்கும். இச் செய்திபற்றி வந்த பல விண்ணப்பங்களைக் காமன்ஸ் சபையின் ஆணைக்குழுவொன்று ஆராய்ந்துகொண்டிருந்த சமயத்தில், 1780ஆம் ஆண்டில் சிறப்புவாய்ந்த தீர்மானமொன்றை டன்னிங் (Dunning) கொண்டுவந்து நிறைவேற்றினர். 'அரசரின் செல்வாக்கு அதிகரித்துவிட்டது; அதிகரித்துக்கொண்டே யிருக்கிறது; அதனைக் குறைத்தாக வேண்டு'[29]மென்று அத் தீர்மானம் வலியுறுத்தியது. ஆனால், அரசாங்கத்தின்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானங்கள் மீண்டும் மீண்டும் வந்தபிறகுதான், இரண்டாண்டுகள் உருண்டோடியபிறகே, நார்த் பிரபு பதவியிலிருந்து விலகினர்.

**ராக்கிங்காமின் இரண்டாவது மந்திரிசபை :** மீண்டும் விக்குகளையே அணுகவேண்டிய அவசியம் மன்னருக்கு ஏற்பட்டது. 1782ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் மீண்டுமொரு முறை ராக்கிங்காம் பிரபு பிரதமரானர். மந்திரிசபையில் இருந்தவர்கள் அடியோடு மாறிய சூழ்நிலை, அவரது புதிய மந்திரி சபையின் குறிப்பிடத் தகுந்த பண்பாகும். அநேகமாகப் பதவியேற்றவர் அனைவரும் புதியவரே. சான்சலர் பிரபுவாக இருந்த தர்லோ மட்டுமே நார்த் பிரபுவின் தலைமையில் பணியாற்றிய முக்கியமானவர்.

**ராக்கிங்காம், ஷெல்பர்ன் ஆகியோரின் சீர்திருத்தங்கள் :** 1782ஆம் ஆண்டில் சிவில் பட்டியல் சட்டத்தை (Civil Establishment Act) புதிய மந்திரிசபையே கொண்டுவந்தது. அரச செல்வாக்கைப் பொறுத்தவரை, அச் சட்டத்தின் விளைவு வியப்பதிர்ச்சி தரவல்லதாக இல்லை. இருந்தபோதிலும், ஒரு முக்கிய இயக்கத்தினை அது துவக்கிவைத்தது எனலாம். அதைப்பற்றி அண்மைக் கால அறிஞரொருவர் பின்வருமாறு குறிப்பிடுகின்றார் :[30] '1782ஆம் ஆண்டில் விக்குகள் கொண்டுவந்த சட்டத்திலோ, அல்லது பாராளுமன்ற வரலாற்றிலோ, பொருளாதாரச் சீர்திருத்தத்தின் உண்மைச் சிறப்பினைக் காண முடியாது என்ற முடிவுதான் கிடைக்கின்றது. பெரும்பாலும் விக்குகள் புறக்கணித்ததும், முக்கியமாக டோரிகள் நிறைவேற்றி வைத்ததுமான அரசாங்க அமைப்பினைத் திருத்தியமைக்கும் செயல்முறையைத் துவக்கிவைத்தது என்னும் வகையில் அச் சட்டம் முக்கியமாகிறது என்று கூறப்படுகின்றது. 'செல்வாக்குப்' பிரச்சினையை அடியோடு அழிக்க அச் சட்டம் முயலவில்லை. அத்தகைய செல்வாக்கினை அது அதிகரித்தது என்று சில சமயங்களில் தாக்கப்பட்டது. அரசாங்கத்தின்

செயலாட்சிக் குழுவினைப் பயனுள்ள வகையில் உருவாக்கு வதே அச் சட்டத்தின் நோக்கமாகும். ஆனால், அவ்வாறு செய்யும்போது, செயலாட்சிக்கும் சட்டமன்றத்திற்கும் இடையேயான உறவினை அது வெகுவாக மாற்றியமைத்தது. அரசரின் கருவியாக நிர்வாகக்குழு இருந்த நிலை மாறியது. அது பாராளுமன்றத்தின் கருவியாகத் திகழத் தொடங்கியது." எவ்வாறாயினும், அடுத்த ஜூலை மாதம் ராக்கிங்ஹாம் பிரபு மாண்டார். அதுபோது விக் கட்சியில் சாத்தம் பிரிவின் தலைவராக விளங்கிய ஷெல்பர்ன் ஏர்லையே கருவூலத் தலைமைப் பிரபுவாக மன்னர் நியமித்தார். இதனால் ராக்கிங்காம் பிரிவைச் சார்ந்த சார்லஸ் ஜேம்ஸ் ஃபாக்ஸ், பர்க், போர்ட்லண்டு கோமகன் ஆகியோர் உள்ளிட்ட பலர் மந்திரி சபையிலிருந்து வெளியேறிச் செயற்கையான எதிர்க்கட்சியாக விளங்கினர். பிரதமர் பதவியிலிருக்கும்போது ஒருவர் இறந்துவிட்டால் அவரது வாரிசைத் தெரிந்தெடுக்கும் உரிமை மன்னருக்குக் கிடையாது, காபினெட்டிற்கே உண்டு என்னும் பொருந்தாக் கோட்பாட்டினை அவர்களிற் சிலர் கொண்டிருந்தனர்.[31] 1783ஆம் ஆண்டு ஜனவரி மாதம் இருபதாம் தேதி வெர்செயில்ஸ் சமாதானத்தைச் செய்துமுடிக்கும்வரை ஷெல்பர்ன் பதவியில் வீற்றிருந்தார். இச் சமாதானத்தின்படி அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சுதந்திரத்தை எவ்வித வரையறையுமின்றி மூன்றாம் ஜார்ஜ் மன்னர் இறுதியாக ஏற்றுக்கொண்டார்.

**ஃபாக்ஸ், நார்த் கலப்பு மந்திரி சபை, 1783 :** அச் சமாதானத்தின் முன்னுரிமைகள் பாராளுமன்றத்தின் பரிசீல னைக்கு வந்தபோது, ஃபாக்ஸின் தலைமையிலிருந்த மனநிறைவு பெறாத விக்கு பிரிவினர், நார்த் பிரபுவின் ஆதரவாளர்களோடு இயற்கைக்கு மாறான வகையில் கூட்டுச் சேர்ந்தனர். காமன்ஸ் சபையில் தங்களுக்கு இருந்த பெரும்பான்மை பலத்தைக் கொண்டு ஷெல்பர்ன் பிரபுவை ராஜினாமா செய்யவைத்தனர்.

கலப்பு மந்திரி சபையை அமைப்பதில் வெற்றிகொண்ட தலைவர்களான 'தமது புதிய அடக்குமுறையாளர்களுக்கு' எதிராக மன்னர் கடுமையாகப் போராடினார். ஷெல்பர்ன் மந்திரிசபையில் அண்மையில் நிதியமைச்சராக இருந்த இளைய பிட்டினை[32] மந்திரிசபையை அமைக்குமாறு மன்னர் வேண்டிய தால் பயன் ஒன்றும் ஏற்படவில்லை. அதற்கு மாறாக, 1783ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் இரண்டாம் தேதியன்று போர்ட்லண்டு கோமகன், ஃபாக்ஸ், நார்த் பிரபு ஆகியோரைத் தலைவர்களாகக்

கொண்ட கலப்பு மந்திரி சபையை மன்னர் ஏற்கவேண்டிய தாயிற்று. மீண்டும் ஏற்பட்ட தனகளினுல் சிற்றமுற்ற ஜார்ஜ், தம்மால் இயன்றவரை மந்திரிசபையைக் குலைக்கத் தலைப் பட்டார். 'அரசரின் ஆப்த நண்பர்களைக்'கொண்டு பாராளு மன்றத்தில் எதிர்க் கட்சியினை உருவாக்குவதன் மூலமாக 1766ஆம் ஆண்டு கையாண்ட முறைகேடான சூழ்ச்சித்திறச் செயல்களை மீண்டும் கொண்டுவந்தார்.

**ஃபாக்ஸின் இந்திய மசோதா :** பிரபுக்கள் சபையில் ஃபாக்ஸ் கொண்டுவந்த இந்திய மசோதாவை முறியடிப்பதில் மன்னர் விடாப்பிடியாக இருந்தார். அதற்காக அரசாங்கச் செயலாளராக இருந்த டெம்பிள் பிரபுவிற்கு, மன்னரின் பெயராலேயே, அம் மசோதாவை எதிர்க்கும் அதிகாரமளித்தார். தமது அமைச்சர்களே கொண்டுவந்த மசோதாவிற்கு எதிராகப் பிரபுக்களின் ஆதரவைப் பெறும் அதிகாரத்தையும் அவருக்களித்தார். அத்தகைய நடவடிக்கைக்கான அதிகாரம் வழங்கும் வகையில் எழுதிய கடிதத்தில் மன்னர் பின்வருமாறு குறிப்பிட்டார்: 'இந்திய மசோதாவை ஆதரித்து வாக்களிப்பவர் மன்னரின் நண்பர்களாக இருக்கமுடியாது என்பதோடு, பகைவர்களாகக் கருதப் பெறுவர் என்று சொல்ல டெம்பிள் ஏர்லுக்கு அனுமதி உண்டு; இச் சொற்கள் போதிய சக்திவாய்ந்தவையாக இல்லையானுல், காரியம் கைகூடுவதற்குத் தேவையான சக்திவாய்ந்த சொற்களை டெம்பிள் ஏர்ல் பிரபு பயன்படுத்தலாம்.'[33] இத்தகைய நடவடிக்கையினுல் சிற்றமுற்ற காமன்ஸ் சபை, 1783ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் பதினேழாம் நாளன்று தீர்மானமொன்றை நிறைவேற்றியது. 'பாராளு மன்றச் சபைகளில் தீர்வு எதிர்நோக்கி நிற்கும் மசோதா அல்லது மற்றச் செயல்முறைமீது உறுப்பினர் அளிக்கும் வாக்கு களைப் பாதிக்கும் வகையில் மன்னருடைய கருத்தையோ அவர் தம் கருத்து என்று கொள்ளப்பட்டதையோ வெளியிடுவது பெருங்குற்றமாகும்; தவறுன நடத்தையுமாகும்; மன்னரின் தகுதிக்கு இழுக்குத் தேடுவதாகும்; பாராளுமன்றத்தின் ஆதார உரிமைகளை மீறுவதாகவும், அரசியல் அமைப்பிற்கு வெடி வைப்பதாகவும் அமையும்'[34] என்று அத் தீர்மானம் வலியுறுத் தியது. இம் மசோதா நிறைவேறிய அன்றே இந்திய மசோ தாவைப் பிரபுக்கள் சபை நிராகரித்தது. அதற்கடுத்த நாளில் அமைச்சர்களைப் பதவியிலிருந்து நீக்கினுர் மன்னர்.[35]

**1783ஆம் ஆண்டில் கலப்பு மந்திரி சபையைக் கலைத்தல் :** முக்கியமான பிரச்சினையொன்றில் பிரபுக்கள் சபையில் தோற்ற

போதிலும், காமன்ஸ் சபையில் பெரும்பான்மையினரின் ஆதரவைப் பெற்ற மந்திரி சபையைத் திடீரென்று அவமதிப்பான வகையில் கலைத்ததால், மன்னருக்கும் பாராளுமன்றத்திற்குமிடையே கடுமையான பூசல் தோன்றியது. மந்திரிசபையை அமைக்கும் பொறுப்பை ஏற்க இசைந்த வில்லியம் பிட்டின் மேதைத் தன்மையும், தளரா முயற்சியும், தகுதியுமே அத்தகைய இக்கட்டான நிலையிலிருந்து அரசரை மீட்டன. காமன்ஸ் சபையின் ஆதரவைப் பெற்ற மந்திரி சபையும் அரசருக்கும் பிரபுக்கள் சபைக்கும் பணியவேண்டுமென்பதைக் கலப்பு மந்திரிசபையின் வீழ்ச்சி தெளிவாக்கியது. நாட்டு மக்களின் ஆதரவைப் பெறவும், தேர்தலில் வெற்றி பெறவும் அரசருடையதும் பிரபுக்கள் சபையினுடையதுமான ஆதரவை அமைச்சரவை பெற்றிருந்தால், காமன்ஸ் சபையின் எதிர்ப்பிற்கிடையேயும் போதுமான காலத்திற்குப் பதவியில் நிலைக்கமுடியுமென்பதை பிட் மெய்ப்பித்தார். நம்பிக்கையில்லாத் தீர்மானங்கள் வந்தபோதிலும், நீதி அளிக்காது காலதாமதம் செய்வதன் மூலமாகப் பாராளுமன்றத்தைக் கலைப்பதைத் தடை செய்யப் பல முயற்சிகள் எழுந்தபோதிலும், இருபத்தைந்து வயதே நிரம்பிய இளமை கொண்ட பிரதமர், நாட்டு மக்களின் உற்சாகம் மிகுந்த ஆதரவைப் பெற்றார். நான்கு மாத காலத்திற்குள் மந்திரி சபைக்கு எதிராக ஒன்றிற்கு இரண்டு என்னும் வீதத்தில் பெரும்பான்மை கொண்ட எதிர்க்கட்சியானது ஒரே பெரும்பான்மை வாக்குகொண்ட கட்சியாகச் சுருங்கியது. டெம்பிள் நிகழ்ச்சி, கலப்பு மந்திரி சபையைக் கலைத்தல், எதிராகக் கண்டனத் தீர்மானங்கள் நிறைவேறிய பின்பும் பிட் தொடர்ந்து பதவியிலிருத்தல் ஆகியவை அனைத்துமே அரசியல் சட்டத்திற்கு விரோதமானவை என ஃபாக்ஸ் வற்புறுத்தினர். அதற்கு மறுமொழியாக 'மந்திரிகளை நியமிக்கவோ அல்லது நீக்கவோ உள்ள நேரடி அதிகாரம் சபைக்குரியது அன்று; அதனால் அமைச்சருக்கெதிராக இச் சபை இருந்தபோதிலும், அவ்வமைச்சர் பதவியில் தொடர்ந்திருப்பது முறைகேடானது அன்று' என்று பிட் குறிப்பிட்டார். அமைச்சர்கள்மீது குற்றம் சாட்டி அவற்றை நிரூபிக்காத வரையில் அவர்களைப் பதவியிலிருந்து விலக்குமாறு மன்னரை வேண்டும் உரிமை சபைக்குக் கிடையாது எனவும் அவர் அறிவித்தார்.[36] மந்திரி சபையை வீழ்த்த முறையற்ற முயற்சியில் ஈடுபட்டதற்காகக் காமன்ஸ் சபையினரைக் கண்டிக்கும் வகையில் பிரபுக்கள் சபையும் பிட்டுடன் சேர்ந்துகொண்டது. மீண்டும் பழைய பிட்டின் மாயம் வேலை செய்தது. பெருநகரங்களும் வாணிப நலன்களும் பிட்டை ஆதரித்தன. பொதுத் தேர்தலில்

மிகுதியான பெரும்பான்மையை அவர் பெற்றார். அதன் துணையுடன் அவர் பதினைந்து ஆண்டுகள் பதவியிலிருந்தார். இங்ஙனம் மன்னரும் மந்திரியும் முழுவெற்றி பெற்றனர். மன்னர் வெறும் அலங்காரப் பொருள்தான் என்ற பழைய விக்கு கருத்து மறைந்தது.[37] அடுத்த ஐம்பது ஆண்டுகளுக்கு நாட்டின் பிற சக்திகளுக்கெல்லாம் மேலான ஆதிக்கநிலை மன்னருக்கு ஏற்பட்டதோடு, அது தொடர்ந்தும் வந்தது. ஆனால், நார்த் பிரபுவின் மந்திரி சபை பதவியிலிருந்தபோது இருந்ததைப்போல மன்னருடைய விருப்பம் உயரிடம் பெற்றிருக்கவில்லை. பொது விவகாரங்களில் வழக்கமான பங்கினை அவர் பெற்றிருந்தபோதிலும், 'அவரைவிடத் திறமை மிகுந்தவரும், அரசாங்கக் கொள்கையில் பரந்த நோக்கங் கொண்டவரும், மேலான மனத்திட்பம் கொண்டவரும் இப்போது அமைச்சரானார்.' ஜார்ஜின் ஆட்சிக்காலம் முழுவதிலும், ஒரு சுதந்திர நாடு ஆளப்படுவதைப்போல, மிகுந்த திறமையும் மக்களின் ஆதரவையும் பெற்ற அரசியல் அறிஞர்களிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைக்காது, மன்னருடைய கருத்துகளுக்குப் பணிதல் என்ற பிரதான தகுதி கொண்டோரையே ஆதரிக்கும் நிலையிலிருந்த தனியாட்சி நிலவியது. அவரது அமைச்சர்களில் உயர்ந்த குறிக்கோள் கொண்ட மற்றொருவர் சாத்தம் பிரபுவே. அவ்வரசியல் அறிஞருடைய மகனுரை நம்பி, அவருடன் ஆலோசனை கலந்து, அவரது கொள்கையை ஏற்ற அரசர், அதே சமயத்தில் அமைச்சரின் உயர்ந்த பகுத்தறிவிற்குப் பணிந்தார்.[38] எனினும், அமைச்சர்கள் கொண்ட அரசாங்கப் பொதுக் கொள்கைமீது மன்னருடைய விருப்புகள் மிகுந்த செல்வாக்குச் செலுத்திவந்தன. ரோமன் கத்தோலிக்கர்களுக்கு விடுதலை அளிக்கும் மசோதா கொண்டு வருவதற்கு இசைவுதர விடாப்பிடியாக மன்னர் மறுத்த காரணத்தால், இறுதியில் 1801ஆம் ஆண்டில் பிட் ராஜினமா செய்ய வேண்டிவந்தது. மன்னர் மீது கொண்ட சொந்த முறையிலான மதிப்புக் காரணமாகத் தாம் மீண்டும் கத்தோலிக்கப் பிரச்சினையை எழுப்புவதில்லையென்று சிறிது காலத்திற்குப்பிறகு பிட் வாக்குறுதி தந்தார். 1804ஆம் ஆண்டில் அவர் மீண்டும் பதவி ஏற்றபோது மன்னர் முடிவாக மறுத்த காரணத்தால், மிஸ்டர் ஃபாக்ஸைக் காபினெட்டில் சேர்த்துக் கொண்டு மந்திரிசபையை வலுப்படுத்த பிட்டால் இயலவில்லை. 'உள்நாட்டுப் போர் வருவதானாலும், ஃபாக்ஸைத் தமது ஆலோசனை சபைகளில் அனுமதிப்பது இல்லையென்று தாம் உறுதியான முடிவெடுத்துவிட்டதாக' ஜார்ஜ் அறிவித்தார்.[39]

**பிரதம அமைச்சர் பதவிபற்றிப் பிட்டின் கருத்துகள் :** நீண்ட காலமாகப் பதவி வகித்த தமது அனுபவத்தைக்கொண்டு, பிரதம அமைச்சருடைய பணிகள், நடைமுறையில் அத்தியா வசியமானவை மட்டுமல்லாது ஆங்கில அரசியல் வாழ்க்கையில் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டனவும் நிலைநாட்டப்பெற் றனவுமான பகுதிகள் என்று இளைய பிட் வருணித்தார். எந்த ஓர் அதிகாரத்தைப் பயன்படுத்துவது குற்றமாகும் என்று பலர் எண்ணினர்களோ, எந்த ஓர் அதிகாரத்தைத் தமது ஆளுமை காரணமாகவே சாத்தம் பெற்றாரோ, அதே அதிகாரத்தை இப்போது அரசியல் அறிஞர்கள் நன்கறிந்த பதவியொன்றின் உடமையாகக் கோரிப் பெற்றார் இளைய பிட். தமது கருத்தை விளக்கி மிஸ்டர் அடிங்டனுக்குக் (Mr. Addington) கடிதம் எழுதுமாறு மெல்வில் பிரபுவிற்கு (Lord Melville) அவர் அதிகாரம் வழங்கினர். 1803ஆம் ஆண்டு எழுதிய கடிதத்தில், பின்வருவனவற்றில் பிட் தீவிரமாக இருந்தார் என, மெல்வில் குறிப்பிட்டார். நாட்டு விவகாரங்களை நடத்திச் செல்வதில் இன்றியமையாத் தன்மை இருப்பதால், கவுன்சில் சபையில் முதன்மைச் சக்தியையும், அரசருடைய நம்பிக்கையில் முதலிடத் தையும் பெற்ற, பலரறிந்த, உண்மையான அமைச்சர் வேண்டும். அதைக் குறித்துப் போட்டிப் பூசலோ அல்லது அதிகாரப் பிரிவினையோ இருப்பதற்கில்லை. பிரதம மந்திரி என்று பொதுவாக அழைக்கப்படுகின்றவரிடம் அத்தகைய அதிகாரம் இருக்கவேண்டும். அந்த அமைச்சர் நிதித் துறையின் தலை வராக இருக்கவேண்டும். பொதுக் கோட்பாட்டில் கட்புலனுகா உண்மை பொதிந்து கிடக்கின்றது என்றாலும், பல நிர்வாகத் துறைகளுக்கிடையே தொடர்பும், நேசபாவமும், ஆலோசனைப் பரிவர்த்தனையும் இருக்கமுடியுமென்பது அவரது இனிய அனுபவம். எனினும், துரதிருஷ்டவசமாக விட்டுக்கொடுக்கும் உணர்வோ அல்லது சலுகையோ சமாதானம் ஏற்படுத்த முடியாத வகையில் வேற்றுமைகள் தீவிரமடைந்துவிடுமானல், பிரதம அமைச்சரின் விருப்பார்வமே மேலோங்கி நிற்கவேண்டு மென்பதை உணர்ந்து அதனை அனுமதிக்கவேண்டும். அத்தகைய சூழ்நிலையில் அரசாங்கத்தில் உள்ள மற்ற உறுப் பினர்கள் அவர்களிடமிருந்து எதிர்பார்த்ததைப்போல மனமாரச் செயலாற்றவேண்டும்.[40]

அடுத்துத் தொடர்ச்சியாக வந்த ஹென்றி அடிங்டன் (1801), பிட் (1804), அறிவாளிகள் என்று அழைக்கப்பட்ட கிரன்வில் பிரபு,[41] சார்லஸ் ஜேம்ஸ் ஃபாக்ஸ், அடிங்டன் ஆகியோர் (1806), போர்ட்லண்டு கோமகன் (1807)

ஸ்பென்சர் பர்சிவல் (1809) போன்றோரின் மந்திரி சபைகளின்மீது மன்னருடைய சொந்தச் செல்வாக்கு முதன்மை நிலை பெற்றிருந்தது. மன்னரின் சித்தம் சிதறிய காரணத்தால் காப்பாளர் அரசாங்கத்தை ஏற்படுத்திய 1810ஆம் ஆண்டு வரையில் இந் நிலை தொடர்ந்து வந்தது. எந்தச் சந்தர்ப்பத்திலும் ரோமன் கத்தோலிக்கர்களுக்கு மேலும் சலுகைகள் வழங்கக் கோருவது இல்லையென்றும், அச் செய்தி பற்றி ஆலோசனைகூட அளிப்பது இல்லையென்றும் எழுத்து மூலமாக அறிவிக்கவேண்டுமென்று 1807ஆம் ஆண்டில் கிரன்வில் மந்திரிசபையைக் கேட்குமளவிற்கு மன்னர் தீவிரமாக நின்றார்.[42] சர் சாமுவேல் ரோமில்லி, பாராளுமன்றத்தில் நிலைநாட்ட முற்பட்டதைப்போல முறைகேடான அத்தகைய வாக்குறுதியினால் மிகுந்த கேட்டினையும் தீச்செயலையும் புரிந்த குற்றத்திற்கு எந்த மந்திரிசபையும் ஆளாகியிருக்கும்.[43] ஆனால், பணிவோடும் உறுதியோடும் அத்தகைய வாக்குறுதி அளிக்க அமைச்சர் மறுத்தனர்; அவ்வாறு மறுத்த மந்திரிகள் உடனே வெளியேற்றப்பட்டனர். இங்ஙனம் மந்திரி சபையை மன்னர் கலைத்தது இதுவே இறுதி முறையாகும்.[44]

இங்கிலாந்து மக்களில் பெரும் பகுதியினராக இருந்த பொது மக்களின் கருத்துகளைப் பிரதிபலிக்கின்ற மன்றமே காமன்ஸ் சபை என்பது முதலில் இல்லாத ஒன்று. ஆனால், மூன்றாம் ஜார்ஜ் மன்னரின் ஆட்சித் தொடக்கம், குறிப்பாக 1832ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டத்திற்குப் பிறகு அச் சபை உண்மை உருவினைப் பெறத் தொடங்கியது. அதனால் நிர்வாக ஆட்சியில் அரசருடைய செல்வாக்குப் படிப்படியாகக் குறைந்தது. எனினும், அவ்வப்போது அச் செல்வாக்குப் பயனுள்ள வகையில் மேலோங்கி நின்றது. நான்காம் ஜார்ஜ் ஆட்சியில் அரசரின் செல்வாக்கு உச்ச உயர்நிலையில் இருந்தது. பாராளு மன்றத்தின் ஆதரவைப் பெறும் வழியாக, மன்னருடைய ஆதரவையே நாட்டிலுள்ள இரு பெருங் கட்சிகளும் முதலில் நாடின. எனினும் புரட்சிக்குப்பின் அழியாது நின்றதும் மூன்றாம் ஜார்ஜ் மன்னர் ஆட்சியில் புதிய சக்தியும், விரிவும் பெற்றதுமான சுதந்திரக் கோனாட்சி, அன்னாருடைய மகனாரும் வாரிசுமான நான்காம் ஜார்ஜ் மன்னர் நீண்ட காலப் போராட்டத்திற்குப்பின் 1829ஆம் ஆண்டில் ரோமன் கத்தோலிக்க விடுதலை மசோதாவிற்கு இசைவுதந்த அன்றே முடிவுற்றது.

**மெல்போர்ன் பிரபுவைப் 'பதவியிலிருந்து நீக்குதல்' 1834 :** 1834ஆம் ஆண்டு நவம்பர் மாதம் மெல்போர்ன் பிரபுவின்

தலைமையிலான மந்திரிசபையை நான்காம் வில்லியம் திடீரென்று கலைத்துவிட்டார். காமன்ஸ் சபையில் நான்கில் ஒரு பங்கிற்கும் குறைவான ஆதரவைப் பெற்ற கட்சியைச் சார்ந்த சர் ராபர்ட் பீலிடம் (Sir Robert Peel) அரசாங்கத்தை அமைக்கும் பொறுப்பை ஒப்படைத்தார். இச் செயல்கள் மந்திரிகளைத் தேர்ந்தெடுப்பதில் பாராளுமன்றத்தின் விருப்பத்திற்கு மாறாகத் தமது சொந்தக் கருத்துகளையே வலியுறுத்த அவர் முயன்றார் என்று அக் காலத்தும், அதன் பிறகு நீண்ட காலத்திலும் நன்கறிந்த வட்டாரங்களில் நம்பப்பட்டது. ஆயின், பிரதமரைப் பதவியிலிருந்து விலக்கினார் என்ற பிரச்சினைக்கு இடமில்லை என்பது இப்போது தெளிவாகின்றது. கடைப்பிடிக்கக்கூடிய பல வழிகளை மெல்போர்ன், மன்னர் முன்பு வைத்தார். அவற்றில் எதை வேண்டுமானாலும் மன்னர் தேர்ந்தெடுக்கலாம் என்றோ அல்லது 'வேறு வழியினைக்' கடைபிடிக்கலாமென்றோ அவர் குறிப்பிட்டிருந்தார். விசித்திரமான இச் செயல்முறையின் பயனாக மந்திரி சபையை அமைப்பதற்காகப் பீலை அழைக்கும் 'மற்ற வழியை' மன்னர் பின்பற்றலானார்.[45]

புதிய பிரதமர் பாராளுமன்றத்தைக் கலைத்தார். பொதுத் தேர்தலில் மீண்டும் லிபரல் கட்சியே பெரும்பான்மைக் கட்சியாக வெளிவந்தது. முன்பிருந்ததைவிட அது எண்ணிக்கையில் குறைந்துவிட்டது என்றாலும், போதுமான வலிமை கொண்டதாகவும், முன்னைவிட ஒற்றுமை கொண்டதாகவும், நன்கு ஒழுங்கமைக்கப்பெற்றதாகவும் அது விளங்கியது. நாட்டு மக்களின் ஆதரவைக் கோரியதனால், தமக்கு எதிராக இருந்த காமன்ஸ் சபைப் பெரும்பான்மைக் கட்சியுடன், பீல் தீரமாகப் போராடினார். முன்னாளில் பிட் காட்டிய அதே திறமையோடும், அதே வாதங்களோடும்[46] தமது நிலையை பீல் விளக்கியபோதிலும், அவர் பதவியிலிருந்து வெளியேறவேண்டியதாயிற்று. ஒரு சில மாற்றங்களோடு பழைய மெல்போர்ன் மந்திரி சபையே மீண்டும் 1835ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பதவியேற்றது. பிட் வெற்றி பெற்ற இடத்தில் பீல்மட்டும் தோல்வியுற்றாரென்றால் அதற்குக் காரணம் 1832ஆம் ஆண்டு வந்த சிறப்பு வாய்ந்த சீர்திருத்தச் சட்டமே எனலாம். பதினெட்டாம் நூற்றாண்டில், பதவியிலிருக்கும் மந்திரிசபையானது வெற்றி பெற்றுவிட முடியும் என்று நம்பியிருக்கலாம். ஆனால், 1831ஆம் ஆண்டுத் தேர்தலில் அதற்குத் தோல்வியே ஏற்பட்டது. செல்வாக்கின் மூலமாகத் தேர்தலின் போக்கைத் திருப்ப முடியும் என்பதோடு பாராளுமன்றத்தைக் கலைத்தல் என்பது மன்னரிடமிருந்த சக்திவாய்ந்த ஆயுதமாக விளங்கியது. பீலும் இராணியாரும் 1832ஆம் ஆண்டிற்குப்

பிறகும் இப் பொருள்படும்படி பேசிவந்தனர்.[47] 1867ஆம் ஆண்டிற்குப் பிறகுதான் புதிய அரசாங்கத்தின் உண்மைச் சிறப்புத் தோன்றத் தொடங்கியது.

**பள்ளியறைப் பிரச்சினை, 1839:** மெல்போர்ன் மந்திரிசபை மீதான பொதுமக்கள் ஆதரவு குறையத் தொடங்கியதால், அம் மந்திரிசபை 1839ஆம் ஆண்டு பதவி துறக்கவேண்டிவந்தது. அரசாங்கத்தை அமைக்குமாறு ராபர்ட் பீலே மன்னர் அழைத்த தால் 'பள்ளியறைப் பிரச்சினை' என்ற சிக்கல் தோன்றியது. அநேகமாக அரண்மனைச் சேவகத்தில் இருந்த பெண்கள் அனை வரும் மெல்போர்ன் அமைச்சவையில் அங்கம் வகித்தவர் களுடைய உறவினர்களாகவோ அல்லது அவர்தம் ஆதரவாளர் களின் உறவினர்களாகவோ இருந்தனர். மகாராணியாரைச் சுற்றிலும் தமது அரசியல் எதிரிகளின் நெருங்கிய உறவினர் சூழ்ந்து நிற்பதால் ஏற்படக்கூடிய இடர்ப்பாடுகளை சர் ராபர்ட் பீல் நன்குணர்ந்தார். அதனால் இராணியாரின் பள்ளியறைத் தோழிகள் உட்பட அரண்மனை உயர்பதவிகளில் சில மாற்றம் செய்ய அனுமதியளிக்கவில்லையானால் மந்திரிசபையினை அமைக் கும் பொறுப்பினைத் தாம் ஏற்க முடியாது என அரசியாரிடம் அவர் அறிவித்தார். ஆயின், 'தமது உணர்ச்சிகளுக்கு வெறுப் பூட்டுவது வழக்கத்திற்கு மாறானது என்று தாம் கருதும் வழியைக் கடைப்பிடிக்க முடியாது' என அரசியார் மறுத்து விட்டார். இதில் மெல்போர்ன் பிரபுவும் அவரது சகாக்களும் அளித்த ஆலோசனைப்படியே அவர் நடந்துகொண்டார். அதனால் சர் ராபர்ட் பீல் பதவியேற்க மறுத்தார். எனவே, மேலும் இரண்டு ஆண்டுகளுக்கு மெல்போர்ன் மந்திரிசபையே தொடர்ந்து ஆட்சி செய்தது. சர் ராபர்ட் பீல், தீர்மானம் ஒன்றினைக் காமன்ஸ் சபைக்குக் கொண்டுவந்தார். அதன்பேரில் தங்களது நம்பிக்கையை அமைச்சரவை இழந்துவிட்டது என்பதையும், 'அத்தகைய சூழ்நிலையில் தொடர்ந்து பதவியி லிருத்தல் அரசியல் சட்டத்திற்கு முரணானது என்பதையும்' ஒருவாக்கு வித்தியாசத்தில் காமன்ஸ் சபையினர் வலியுறுத்தினர். அத்தகைய காமன்ஸ் சபையின் தீர்ப்பினை மாற்றியமைப் பதற்காகப் பொதுமக்களுக்கு விடுத்த விண்ணப்பம் தோல்வி யுறவே, 1841ஆம் ஆண்டில் மெல்போர்ன் ராஜினாமா செய்தார். பீல் பதவியேற்ற பிறகு பள்ளியறைப் பிரச்சினையினால் இடர்ப் பாடுகள் தோன்றவில்லை. அதன் பிறகு அரசியல் சட்டப்படி அவர் கொண்ட கொள்கையே சரியானது என்று அனைவரும் ஒப்புக்கொண்டனர்.[48]

**அரசியாரின் அறிக்கை, 1850:** பிரதம அமைச்சரான ஜான் ரஸ்ஸல் பிரபுவின் மூலமாக வெளிநாட்டு விவகார அமைச்சராக இருந்த பாமர்ஸ்டன் பிரபுவிற்கு **(Lord Palmerston)** 1850ஆம் ஆண்டு அரசியார் அனுப்பிய அறிக்கையானது, பொதுப்பணிகளில் தனிப்பட்ட முறையில் மன்னர் எடுத்துக் கொள்ளக்கூடிய பங்கு எத்தகையது என்பதற்கு அண்மைக் கால எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. அவ்வறிக்கையில் பின்வரும் செய்திகள் இடம்பெற்றன. இராணியார் எதற்கு இசைவு தந்தார்களோ, அதனைத் தெளிவாக அறிந்துகொள் வதற்காக என்று, ஒரு குறிப்பிட்ட செய்தியில் பாமர்ஸ்டன் பிரபு என்ன செய்ய எண்ணியுள்ளாரோ அதனைத் தெளிவாகக் குறிப்பிடுவது பின்னவரின் முதல் கடமையாகும். இரண்டாவ தாக, இராணியார் இசைவு தந்த ஒன்றினை அமைச்சர் தம் இச்சையாக மாற்றவோ திருத்தவோ கூடாது. அத்தகைய செயல் அரசியாருக்கிழைத்த நம்பிக்கைத்துரோகமாகவே கருதப்படும். அதனால் அமைச்சரைப் பதவியிலிருந்து நீக்கும் அரசியல் அமைப்புச் சார்ந்த உரிமையை அரசியார் பயன்படுத்த நேரிடும். மேலும், அந்த அமைச்சருக்கும் பிற அயல்நாட்டு அமைச்சர்களுக்குமிடையே பேச்சுவார்த்தைகள் நடந்து முக்கிய முடிவுகள் எடுப்பதற்கு முன்னால், அரசியாருக்கு அவ்வப் பொழுது அவை பற்றிய செய்தியை அனுப்ப வேண்டும். வெளி நாட்டுக் கடிதங்களையும் உரிய காலத்தில் அனுப்பி வைக்க வேண்டும். கடிதங்களை வெளிநாடுகளுக்கு அனுப்புவதற்கு முன்னால் அவற்றின் சாரத்தை அரசியார் நன்கு அறிவதற்குப் போதுமான காலம் தந்து, அன்னாரது இசைவிற்காக வாசகங் களை அனுப்பவேண்டும். இவ்வாறு அவ்வறிக்கை குறிப்பிட்ட போதிலும், ஓர் அமைச்சரைக் கட்டுப்படுத்துவதில் மற்றோர் அமைச்சருடைய, அதாவது, பிரதம அமைச்சருடைய ஆலோசனையின் பேரிலும் பொறுப்பிலுமே இராணியார் செய லாற்ற வேண்டியிருந்தது. எவ்வாறெனில், பயனுள்ள வகையில் ஆலோசனை அளிப்பதற்கு ஏற்ற வகையில் கடிதங்கள், பிற செய்திகள் ஆகியவற்றின் படிகள் பிரதம அமைச்சருக்கு அனுப்பிவைக்கப்பட்டன.[43]

**மந்திரியைப் பதவியிலிருந்து விலக்கும் அரசியல் அமைப்புச் சட்டம் சார்ந்த உரிமை:** இராணியாரின் அறிக்கையில் வலியுறுத் தப்பெற்ற, அமைச்சரைப் பதவியிலிருந்து நீக்கும் அரசியல் அமைப்புச் சட்டம் சார்ந்த உரிமையானது இப்போது நடை முறையில் பிரதமரும் அவரது காபினெட்டும் கொண்ட உரிமை யாகவே காணப்படுகின்றது. இங்ஙனம் தனிப்பட்ட உறுப்பினர்

மீது மன்னரின் மூலமாகக் காபினெட் சபை முழுவதும் ஒன்ருகச் சேர்ந்து நடவடிக்கை எடுக்க வழியேற்பட்டது. 1851ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் இரண்டாம் தேதி நடை பெற்ற ஃபிரெஞ்சுப் புரட்சிக்குச் சிறிது காலத்திற்குள் ஜான் ரஸ்ஸல் பிரபுவின் அரசாங்கத்திலிருந்து பாமர்ஸ்டன் பிரபு வெளியேற்றப்பட்டதிலிருந்து இந் நிலை தெளிவாகியது. காபினெட் சபை தீர்மானித்த தலையிடாக் கொள்கையை வலி யுறுத்தும் கடிதத்திற்கு மாருக அப்போது நடைபெற்ற புரட்சி பற்றிய கொள்கைக்குச் சாதகமான கருத்துகளை ஃபிரெஞ்சு தூதுவரிடம் பாமர்ஸ்டன் வெளியிட்டார் என்பதால் அவர் பதவியிலிருந்து வெளியேறவேண்டியதாயிற்று.[50]

**நிர்வாகக் குழுவின் அதிகார வளர்ச்சி :** மூன்ரும் ஜார்ஜ் மன்னரின் ஆட்சிக்குப் பிறகு நாட்டு அரசாங்கத்தில் மன்னருடைய சொந்த முறையிலான செல்வாக்குப் படிப்படி யாகக் குறைந்துவந்தபோதிலும், புரட்சியிலிருந்து இன்று வரையிலும் அமைச்சர் மூலமாக அரசர் செலுத்திய அதிகாரம் தொடர்ந்து வளர்ந்துவந்திருக்கின்றது. பேரரசின் பெருக்கமும், பொதுப்பணித் துறைகளின் பெருவளர்ச்சியும், பொதுத்துறை, படைத்துறை, சமயத்துறை ஆகியவற்றில் வளர்ந்துவந்த ஆதரவும், புகழ்ப் பட்டங்களைத் தாராளமாக வழங்குதல் போன்றவையும் நிர்வாகத் துறையின் செல்வாக்கை மேலோங்கச் செய்தன. அதே சமயத்தில் காவல் துறை அமைப்பு, அண்மைக் காலத்தில் தோன்றிய படைகளின் ஒன்றிப்பு, படைப்பதவி விலைக்கு விற்கப்படுவது நீக்கப்படுதல், போரமைச்சரின் மூலமாக அதிகாரம் செலுத்துவதற்கென்று துணைப்படைகளின் தலைமையும் அதன்மீதான அதிகார எல்லை யும் மன்னருக்கு மாற்றப்பட்டது ஆகியவற்றினுல் நிர்வாகத் துறையின்கண் வன்கண்மையான அதிகாரம் அதிகரித்தது. விக்டோரியா மகாராணியாரின் ஆட்சிக் காலத்தில், அரசியாரின் அதிகாரமும் செல்வாக்கும் பொறுப்பு வாய்ந்த அமைச்சர் களுடைய ஆலோசனையின்பேரிலேயே பொது நன்மைக்காகப் பகுத்தறிவுடனும் சட்டவரம்பிற்குட்பட்டும் பயன்படுத்தப் பெற்றதால், அவற்றினைக் குறைக்கும் முயற்சி ஏதும் எழவில்லை. மேலும், அரச பதவியிலிருந்து பெறும் அதிகாரத்தினின்றும் மாறுபட்ட மன்னரின் சொந்த முறையிலான அதிகாரம், உரிய வரையறைக்குட்பட்டிருந்த காரணத்தால், நமது முன்னேர் களின் பூசல்கள் அடிப்படையாக எழுந்த மன்னர் மீதான அழுக்காறு அநேகமாக இன்று மறைந்துவிட்டது என்றே கூறலாம்.

**கிளாட்ஸ்டனுடைய கருத்துகள் :** காபினெட் சபையானது ஒருபுறத்தில் மன்னருடனும், மறுபுறத்தில் பாராளுமன்ற சபைகளுடனும் மக்களுடனும் கொண்டுள்ள நுண்மையான உறவுகள்பற்றி நாம் இதுவரையில் குறிப்பிடவில்லை. அதே போன்று அச் சபையின் உறுப்பினர் ஒருவரோடு ஒருவர் கொண்டுள்ள உறவுகள் பற்றியும், அவர்கள் பிரதமரோடு கொண்டிருக்கும் உறவுநிலைகள் பற்றியும் குறிப்பிடவில்லை. காபினெட் அமைச்சர் மட்டுமே தகுதியுடன் விளக்கவல்ல செய்திகள் இவைகள். பத்தொன்பதாம் நூற்றாண்டுப் பழக்கத்தை விளக்கும் பழம்பெரும் வாசகமாகத் திகழ்வதும், சிறப்பு மிக்க தற்காலப் பிரதமர் கைப்பட எழுதியதுமான விளக்கமான, அதிகாரபூர்வமான விரிவுரை கிடைப்பது நமது நல்வாய்ப்பே யாகும். மிஸ்டர் கிளாட்ஸ்டன் கீழ்க்காணுமாறு குறிப்பிட்டுள்ளார்: 'பாராளுமன்றத்துடனும், காமன்ஸ் சபையின் மூலமாக மக்களுடனும் அமைச்சர்கள் கொண்டிருக்கும் தொடர்பின் மறுபடிவமே அரசருடனும் சிறப்பதிகாரத்துடனும் அவர்கள் கொண்ட தொடர்பு. இப்புறமும் அப்புறமும் இழுக்கும் போட்டிச் சக்திகளின் செல்வாக்கு அடிப்படையிலேயே அவர்களுடைய முடிவுகள் அமைகின்றன. பொறியியல் பாஷையில் சொல்வதானால், சக்திகளின் சேர்க்கையை அம் முடிவுகள் பிரதிபலிக்கின்றன. இப்படிப்பட்ட நிலையில் உள்ள அவர்கள், மன்னருக்குப் பற்றுறுதியோடு யோசனை கூறித் தொண்டாற்றுமாறு பாராளுமன்றச் சபைகளை ஊக்குவிக்கக் கடமைப்பட்டவர்கள். அதேபோன்று நாட்டு மக்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளுக்கிணங்க செயலாற்றுமாறு மன்னரைத் தூண்டுவதும் அவர்கள் பொறுப்பாகும். நாட்டைப் பொறுத்தவரையில் மன்னரும் மந்திரிகளும் கூட்டொருமையாகத் திகழ்வர். அவர்கள் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுக்க முடியும். ஆனால், அரசாங்கத்தை மாற்றியமைக்கும் சோதனையை மேற்கொள்ள முன்வரும் வரையில் தான் மன்னர் விட்டுக்கொடுக்க முடியும். மன்னரின் பெயரால் செய்யப்படும் யாவற்றிற்கும் முழுப் பொறுப்பு ஏற்றல் என்ற, அமைச்சர்களாக இருக்கும் வரையில் எச் சூழ்நிலையிலும் ஏற்க வேண்டிய சுமையினைத் தாங்க விரும்பாத வரையில்தான் மந்திரிகள் விட்டுக்கொடுக்க முடியும். ஆயின், மன்னருடன்தான் காபினெட் குழு ஒருங்கியைந்திருக்க வேண்டும் என்பது இல்லை; பிரபுக்கள் சபையுடனும் உறவு கொள்ளவேண்டியுள்ளது. எனினும், அவ் வுறவு முழு ஒற்றுமை நிறைந்த ஐக்கியம் கொண்டதாக இருக்கத் தேவையில்லை. ஏனெனில், நாட்டில் பெரிய சக்தியாகப் பிரபுக்கள் சபை விளங்கிய போதிலும்,

அரசாங்கத்திற்கு முட்டுக்கட்டையிட்டபோதிலும், வாக்களித்து மந்திரி சபையைக் கவிழ்க்க அதனால் முடியாது. சென்ற ஐம்பது ஆண்டுகளில் (1878) பிரபுக்கள் சபையின் ஆதரவை அவ்வப்போது இருந்த மந்திரி சபைகள் பெற்றது பதினைந்து ஆண்டுகளுக்குதான். ஆயின், காமன்ஸ் சபையின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கவேண்டுமென்பது மந்திரி சபையின் உடனடி முக்கியத் தேவையாகும். முழு அரசியற் கருத்து ஒருங்கிணைப்பு மூலமாகவோ அல்லது சூழ்நிலைக்கு ஏற்றவாறு வரையறையுடனோ அச் சபையின் நம்பிக்கையை எப்போதும் பெற்றிருக்கவேண்டும்.'

காபினெட் சபை உறுப்பினரைப் பற்றிக் குறிப்பிடும்போது மிஸ்டர் கிளாட்ஸ்டன் மேலும் பின்வருமாறு குறிப்பிட்டார்: 'அவர்களில் ஒவ்வொருவரும், அரசாங்கத்துறையின் நிர்வாகி, சட்டசபையின் உறுப்பினர், மன்னரின் நம்பிக்கைக்கு உரிய ஆலோசகர் என்ற மூன்று நிலைகளில் செயலாற்றுகின்றனர். இந்த மூன்று நிலைகளோடு நான்காவதையும் அமைச்சர்கள் இருவர் கொண்டு சேர்க்கின்றனர். ஏனெனின், பாராளுமன்றத்தின் இருசபைகளிலும் தலைவர் என்று அழைக்கக்கூடிய முக்கிய அமைச்சர்கள் இருப்பது இன்றியமையாததாகும். பிற பதவிகளைக் காட்டிலும் வரையறுக்கப்படாத நிலையில் இருப்பினும் அது முக்கியத்துவம் குறைந்தது அன்று. வரையறுக்கப்பெற்ற அதிகாரம் மிகக் குறைவாகக் கொண்ட அத் தலைவர், முக்கிய அரசாங்கக் காரியங்களில் ஆலோசனை கூறிப் பெரும்பான்மையில் அவற்றின் போக்கை நிர்ணயிக்கிறார். தமது சகாக்களின் செயல்களை ஒருங்கிணைத்து அவற்றைக் கண்காணித்துவருகின்றார். சடங்கு சார்ந்த செயல் முறைகளின் முதற் படியைத் துவக்குகிறார். இடர்ப்பாடுகள் தோன்றும் நிலையில் மன்றத்திற்கு ஆலோசனை வழங்குகிறார்.'

**காபினெட் சபைக்குள் உறவுநிலை :** 'முறையான வரையறை ஏதுமின்றிக் காபினெட் சபைக்குள் உறவு நிலைகளை நிர்ணயிக்கும் சீரமைவே பிரிட்டிஷ் அரசாங்கம் செயற்படுவதற்குக் காரணமானவற்றுள் மிக நேர்த்தியானது. ஒவ்வோர் அமைச்சரும் அரசரின் ஆலோசகரே. எனினும், காபினெட் சபை கூட்டொருமையாகும். தமது சகாக்கள் இன்றியோ அல்லது உண்மையில் அல்லது உய்த்துணரக்கூடிய நிலையில் சகாக்களுக்கு எதிராகவோ தனிப்பட்ட முறையில் ஒருவர் ஆலோசனை வழங்கமுடியாது. இவையெல்லாம் ஒருபுறமிருக்க, மற்றொரு புறத்தில் அரசாங்கத்தின் அலுவல்கள் நூறு மடங்காகப்

பெருகிவிட்ட நிலையில் அவை அனைத்தையும் முழு மந்திரி சபையின் பார்வைக்குக் கொண்டுவருவது இயலாத ஒன்ருகி விட்டது. அதனல் தமது துறை சார்ந்த அலுவல்களில் எவற்றிற்குச் சகாக்களின் இசைவு இருக்கிறது என்பதையும், அவர்களின் நேர்படியான இசைவினைப் பெறவேண்டிய நுண்மைவாய்ந்த, முக்கியமான, தனித் தன்மைவாய்ந்த அலுவல்கள் எவை என்பதையும் பிரித்து உணர்வது அமைச்சர் ஒவ்வொருவருடைய தலையாய கடமையாகின்றது. ஒவ்வோர் அமைச்சரும் காபினெட்டுடன் கொண்டிருக்கும் உறவுநிலைபற்றி இதுவரையில் பார்த்தோம். ஆனல், மிகக் குறைந்த அளவிலேயே அறியப்பட்டிருக்கின்ற அக் குழுவிற்கும் அதன் தலைவருக்கும் இடையேயான உறவுநிலைபற்றி இனிக் குறிப்பிடுவோம்.

'பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தலைவர் தலைமை அமைச்சர் அல்லர். சகாக்களின்மீது, முறையாகக் குறிப்பிடக்கூடிய அதிகாரம் அவருக்கில்லை. உறுப்பினரின் வாக்குகளைக் கணக்கிட்டுத் தமது போக்கினை காபினெட் அமைத்துக்கொள்ளும். அருமையாக அமைகின்ற சில வேளைகளில், அவருடைய வாக்கும் பிறருடையதைப்போலவே கணக்கிடப்படுகின்றது. ஆயினும், அவரது ஆலோசனையின்பேரிலேயே அமைச்சர்கள் நியமிக்கப் படுகின்ருர்கள் : பதவியிலிருந்து நீக்கப்படுகின்ருர்கள். 1841 முதல் 1846 வரை இருந்த சர் ராபர்ட் பீலின்கீழ் இருந்ததைப் போன்ற முழுநிறைவான அமைச்சரவையில் பிரதமர் அறியாமல் எந்தத் துறையிலும் மிகமுக்கியமான செய்திகள் தோன்றவோ அல்லது முழுமை அடையவோ செய்வதில்லை. காபினெட் குழுவிடம் சமர்ப்பிப்பதற்குமுன் முக்கிய அலுவல் எதுவும் பொதுவாக அவரிடம் செல்லும். அக் குழுவின் செயல்முறைகள் பற்றி அவரே மன்னருக்கு அறிவிப்பார். அரியணையில் அமர்ந்திருக்கும் மன்னர் பெருமானுடன் ஆலோசனை பல நடத்துவதும் அவரே. இவ்வாறு அளிக்கப்படும் அறிக்கைகளிலும் ஏற்படும் சந்திப்புகளிலும் காபினெட் சபைக்கு விரோதமாக அவர் நடந்துகொள்ளக்கூடாது. அச் சபையைப் பிளவுபடுத்தவோ அல்லது சகாக்கள் பெற்றிருக்கும் அரச ஆதரவைக் குலைக்கவோ கூடாது. எவ்வாறு அரசருக்கும் பாராளுமன்றத்தவர்க்கும் இடையில் நின்று, அவர்கள் இருவரிடத்தும் பற்றுறுதி கொண்டதாகக் காபினெட் குழு விளங்குகின்றதோ, அதே போன்று பிரதமரும், தமது சகாக்களுக்கும் மன்னருக்கும் இடையே நின்று, அந்த இரு சாராரிடமும் பற்றுறுதியுடன் இருக்கக் கடமைப்பட்டவர்.

'பிரதம அமைச்சர் பதவி துறக்கும்போது, காபினெட் சபையை ஒன்றுபடுத்தும் இணைப்பு இற்றுவிடுவதைப்போன்று, அச் சபையும் கலையவேண்டுமென்பது உறுதி. 1846ஆம் ஆண்டில் சர் ராபர்ட் பீலினுடைய செயல் சிறந்த எடுத்துக் காட்டாக அமைகிறது. அப்போது தானியச் சட்டங்களை நிறைவேற்றிய பிறகு மந்திரிசபை கலைந்தது. அச் சபையின் ஒன்றுபட்ட தீர்மானம் காரணமாக என்பதைவிடப் பீல் எடுத்துக் கொண்ட முயற்சியே என்று தெரியவருகின்றது. பிற அமைச்சர் ராஜினமா செய்கின்றபோது பதவி காலியாகின்றது. சில சூழ் நிலைகளில் ஓர் அமைச்சர் பதவி துறப்பதால் அரசாங்கமே கவிழும் அளவிற்குச் சக்திச் சமநிலை நொய்ம்மைகொண்டதாகவும் எளிதில் சிதறிவிடக்கூடியதாகவும் அமைவதும் உண்டு. ஆனல், ஒன்றில் பொது விதியாக இருப்பது மற்ருென்றில் விதிவிலக் காகவே அமைகின்றது. எந்தத் துறையில் இருக்கும் எந்தச் சகாவையும் மீறிச்செல்லும் உரிமை பிரதமருக்குக் கிடையாது. இருப்பினும், அவர்களின்மீது அவர் ஆதிக்கம் செலுத்துகிருர் என்று சொன்னல், அது அவர் கொண்ட செல்வாக்கின் மூலமாகத்தான். சூழ்ச்சித்திறனல் அவ்வாறு செய்யமுடிந்தது என்று கொள்ளத் தேவையில்லை. ஆனல், யாவற்றையும் நோக்கும்போது, இத்தகைய பெரும் பொருள் இத் துணை அளவிற்குச் சிறிய எதிருருவத்தை விட்டுச்சென்றது என்பதைப் பரந்த உலகில் வேறு எங்கும் காணமுடியாது. முறையான உரிமை அல்லது அதிகார வடிவில் சிறிதளவே காட்டக்கூடிய நிலையில் இத்துணைச் சக்தி பெற்ற ஒருவரையும் எங்கும் காண இயலாது.'[51]

காபினெட் வடிவில் அமைந்த பாராளுமன்ற அரசாங்கம் அமைக்கப்பெற்றதால் ஏற்பட்ட பல நன்மைகளில், அரசாங்கத் திற்கும் அதன் அமைச்சர்களுக்கும் ஆன பாதுகாப்பும் முக்கிய மானது. 'மன்னர் பிழை செய்வதில்லை' என்ற பழைய அரசியல் அமைப்புச் சார்ந்த கோட்பாடு இன்று எழுத்திற்கு எழுத்து உண்மையாகும். ஏனென்ருல், அவரது செயல்களெல்லாம் உண்மையில் அமைச்சரது செயல்களே. மேலும், அமைச்சர்கள் காமன்ஸ் சபைக்குப் பொறுப்பானவர்கள். பழங் காலத்தில் இருந்ததைப்போலச் சட்டத்தை மீறுவதனல் மட்டுமல்லாது தாங்கள் கொண்ட கொள்கையின் பொதுப் போக்கிற்கும் அவர்கள் மன்றத்திற்குப் பொறுப்பானவர். அக் கொள்கை காமன்ஸ் சபையின் பெரும்பான்மைக் கருத்திற்கு இயைந்த தாக இருக்கவேண்டும்; அல்லது சட்டங்கள்போல நடை முறையில் கட்டுப்படுத்தும் அரசியல் அமைப்புச் சார்ந்த மரபை

ஒட்டியதாக இருக்கவேண்டும். அவ்வாறு இல்லையானால் மந்திரிகள் பதவியிலிருந்து விலகவேண்டும். அரசாங்கத்திற்கும் மக்களுக்குமிடையேயான இணக்கத்திற்கு மந்திரிசபையின் மாற்றமே போதுமானதாகும்; புரட்சியோ அல்லது பாராளு மன்றக் குற்றச்சாட்டோ தேவையில்லை.

## அடிக்குறிப்புகள்

1. Blackstone எழுதிய, 'Commentaries', நூல் 1, அதி. 7. Stephen எழுதிய, 'Commentaries' (20ஆம் தொகுப்பு), அதி. i, பக்கம் 302. விரிவான ஆராய்ச்சிக்கு Holdsworth எழுதிய, 'History of English Law' என்னும் நூலில் அதி. x, பக்கங்கள் 340-425 பார்க்கவும்.

2. J. R. Green எழுதிய, 'Short History of the English People', பக்கம் 680.

3. Bagehot எழுதிய, 'English Constitution', பக்கம் 13.

4. Gladstone எழுதிய 'Gleanings of Past Years' என்னும் நூலின் அதி. i, பக்கம் 42, 233-ல் பின்வருமாறு காணப் படுகின்றது: 'தமது அமைச்சர்களின் ஆலோசனைகளிலும் செயல்முறைகளிலும் இராணியார் பொதுவாகக் கொண் டிருக்கும் செல்வாக்கு மிகுதியானது என்பதில் ஐயமில்லை. நிரந்தரமானதாகவும் செயல் திட்டம் கொண்டதாகவும் அது மாறியது; நாட்டிற்குப் பல நன்மைகளை அளித்தது. ஆனால், அரச ஆலோசகரின் பிளவுபடாப் பொறுப்பினை அது சிறிதும் குறைக்கவில்லை'.........ஆயின், 'அது நேர்மை உணர்விற்குரியதேயன்றி வன்கண் முறையானது அன்று; அமைச்சவையின் பகுத்தறிவு, விருப்பார்வம் ஆகியவற்றின் மூலமாக அது செயற்படுகின்றதே ஒழிய அதனை மீறியோ அல்லது அதற்கெதிராகவோ செயற்படுவதில்லை. ஏதோ ஓர் அரசாங்கத் துறையில் இறுதியான அல்லது முதன்மையான அல்லது சுதந்திரமான அதிகாரத்தைக் கோரும் ஒருவர் அரச பதவியை ஏற்கும் நாள் வருமானால், அந்நாளே முடியாட்சிக்குக் கேடுபயக்கும், இடர்விளைக்கும் நாளாகும்'. மிக அண்மைக் கால விளக்கத்தினை Frank Hardie எழுதிய, 'Political Influence of Queen Victoria (1935); A. Berriedale Keith எழுதிய, 'The Constitution from

Victoria to George VI' (1940), அதி. i, பக்கம் 132 ஆகிய வற்றில் காண்க.

5. Lecky எழுதிய, 'History of England', அதி. i, பக்கங்கள் 271—281.

6. Gladstone எழுதிய, 'Gleanings of Past Years', அதி. i, பக்கம் 85-ல், 'காபினெட் கூட்டத்தில் அரசர் அமர்ந்திருப்பதால், ஒன்று மன்னரின் தனியாட்சியாக அமையும். அதாவது, ஏற்றுக்கொள்ளத் தகுதி உடையது எது என்று அவர் நினைக்கின்றாரோ அத்தகைய இறுதி முடிவெடுக்கும் உரிமையை அவரிடம் அளிக்க வேண்டும்; அல்லது பொதுவான, கடுமையான, சில சமயங்களில் காரசாரமான விவாதங்கள் நடக்கும் சபையில் சம அந்தஸ்துள்ளவராக நுழைந்து தமது மதிப்பினை அவர் இழக்க வேண்டும். புகழ்பெற்ற காபினெட் சபைகள் உள்ளிட்ட எல்லாவற்றிலும் சில சமயங்களில் வாக்கெடுப்பு மூலமாக வன்றி வேறு வழிகளில் முக்கியப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முடிவதில்லையாகையால், வாக்களிக்கவும் வாக்கெடுப்பில் தோல்வியுறவும் தயாராக மன்னர் இருக்க வேண்டும்' என்று குறிப்பிடுவார்.

7. Lord Mahon எழுதிய 'History of England', அதி. iii, பக்கம் 280.

8. 16,000 ஹனேவிரிய துருப்புகளின் செலவிற்கும் பணம் ஒதுக்கும் தீர்மானம் வந்தபோது, 1742ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் பின்வருமாறு பிட் வலியுறுத்தினர்: 'பெருமை மிக்கதும், சக்தி வாய்ந்ததும், வெல்ல முடியாததும் ஆன இந் நாடு இகழத்தக்க தேர்வாள நாட்டின் ஒரு பகுதியாகக் கருதப்படுகின்றது என்பதும், நீண்ட காலத்திற்கு முன்பே உருவானதும் பின்பற்றப்படுவதுமான திட்டம் ஒன்றின் அடிப்படையில் துன்பம் மிகுந்த இந் நாட்டின் பொருளை அழிப்பதற்கென்றே இப் படைகள் அமர்த்தப்படுகின்றன என்பதும் இப்போது வெட்ட வெளிச்சமாகிவிட்டது'. Lord Mahon எழுதிய, 'History of England', அதி. iii, பக்கம் 207.

9. Lecky எழுதிய, 'History of England', அதி. ii, பக்கம் 380.

10. 'The Calendars of Treasury Books'-ன் மூலமாக இரண்டாம் சார்லஸின் வருவாய்கள் இன்று அறியக் கிடைக்கின்றன. David Ogg எழுதிய, 'Charles II', அதி. ii, பக்கம் 445 முதல். பிற்கால வரலாற்றிற்கு May எழுதிய, 'Constitutional History' (Holland தொகுப்பு), அதி. i, பக்கம் 152; Holdsworth எழுதிய, 'History of English Law', அதி. x, பக்கம் 482; M. A. Thomson எழுதிய, 'Constitutional History', அதி. iv, பக்கங்கள் 201—341; Anson எழுதிய, 'Law and Custom of the Constitution' அதி. ii, பகுதி ii, பக்கங்கள் 196—197; A. Berriedale Keith எழுதிய, 'The Constitution from Victoria to George' VI, அதி. i, பக்கங்கள் 40—45.

11. நம்புவதாக எதிர்க்கட்சி கூறியது.

12. முழுச் செய்திக்கு May எழுதிய, 'Constitutional History', பகுதி i, அதி. iv ; Anson எழுதிய, 'Law and Custom', பகுதி ii, அதி. viiஐப் பார்க்கவும்.

13. Pollock and Maitland எழுதிய, 'History of English Law', அதி. i, பக்கம் 383.

14. 1715ஆம் ஆண்டிலும் 1745ஆம் ஆண்டிலும் தோன்றிய புரட்சிக் கலகங்களுக்குப் பிறகு பறிமுதல் மூலமாக அரச நிலங்களின் பரப்புப் பெருகியது. ஆனால், மூன்றும் ஜார்ஜ் மன்னர் ஆட்சியின் முதல் இருபத்தைந்து ஆண்டுகளுக்குச் சராசரி 6,000 பவுன்களே குத்தகைப் பணமாகக் கிடைத்தன. அதன் பிறகு நிலத்தின் மதிப்பு உயர்ந்ததாலும், அவற்றை நிர்வகிப்பதில் முன்னேற்றம் தோன்றியதாலும், குத்தகையில் அளவு கூடுதலாயிற்று. 1798-ல் அவற்றின் மதிப்பு ஆண்டொன்றுக்கு 201,250 பவுன்களாகவும், 1812-ல் 283,160 பவுன்களாகவும் இருந்தது. 1820ஆம் ஆண்டில் உண்மையில் 314,852 பவுன்கள் கிடைத்தன. 1830-ல் 373,770 பவுன்கள் கிடைத்தன. 1860ஆம் ஆண்டிலோவெனின் அரசியாருக்கு அளிக்கப்பெற்ற செலவுப் பணத்தைவிட அதிகமாக, அதாவது, 416,530 பவுன்கள் கிடைத்தன. May எழுதிய, 'Constitutional History', அதி. i, பக்கம் 225. 1958—1959-ல் கருவூலத்திற்கு அரச நிலங்களிலிருந்து நிகரமாக 1,530,000 பவுன்கள் கிடைத்தன.

15. மூன்றும் ஜார்ஜ் ஆட்சியாண்டு 13, 40 சட்டத்தையும், நான்காம் ஜார்ஜின் நான்காம் ஆண்டுச் சட்டத்தையும், விக்டோரியாவின் 25, 26ஆம் ஆண்டுச் சட்டத்தையும் காண்க.

16. Royal Historical Society 1939ஆம் ஆண்டு வெளியிட்ட 'Handbook of British Chronology', மன்னுய முதல்வர்கள், பிற அரசாங்க அதிகாரிகளின் அண்மைக் காலப் பட்டியல் களைத் தருகிறது. 'Oxford History of England' என்னும் நூலின் பிற்சேர்க்கைகளிலும் மந்திரிகளின் பட்டியல்கள் தரப்பட்டுள்ளன. 1621—1625-ல் பதவியிலிருந்த பிஷப் ஜான் வில்லியம்ஸ் என்பாரே சமயத் துறையைச் சார்ந்த இறுதி மன்னுய முதல்வராவார். 1636 முதல் 1641 வரை பதவி வகித்த பிஷப் வில்லியம் ஜக்ஸன் என்பாரே சமயத் துறை சார்ந்த இறுதிக் கருவூலத் தலைவராக இருந்தவர்.

17. தாமஸ் இகர்டன் (Thomas Egerton) 1596ஆம் ஆண்டின் அரசாங்க முத்திரைக் காப்பாளராஞர். 1603ஆம் ஆண்டில் எல்லஸ்மியர் பிரபுவாகவும் மன்னுய முதல்வராகவும் வந்த அவர், 1617ஆம் ஆண்டில் தாம் இறக்கும்வரை இருபத் தோர் ஆண்டுகளுக்கு அரசாங்க முத்திரைக் காப்பாளராக விளங்கிஞர்.

18. Maitlant எழுதிய, 'English Law and the Renaissance' (1901), குறிப்பு 17. 1559ஆம் ஆண்டில் ஸ்பானியருடன் பேச்சுவார்த்தை நடத்தும்போது இப்பட்டத்தைப் பெற்ற தாக ஃபிரெஞ்சு நாட்டுச் செயலரான கிளாடி டி லே அபிபைன் (Claude de l' Aubepine) என்பார் ஒப்புக் கொண்டார். Declareuil எழுதிய, 'Histoire du droit Francais', பக்கம் 471, குறிப்பு 98. அதனை நாம் ஃபிரான்ஸிலிருந்து பெற்றிருக்கலாம். A. Coville and H. W. V. Temperley 1935ஆம் ஆண்டு தொகுத்த 'Studies in Anglo-French History'-ல் Basil Williams எழுதிய, 'Secretaries of State in France and England' என்னும் கட்டுரையைக் காண்க.

19. இப் பதவியின் வரலாற்றில் அதிகக் கவனம் செலுத்தப் பட்டது. N. H. Nicolas 1837-ல் எழுதிய, 'Observations on the Office of Secretary of State', 'Proceedings and Ordinances of Privy Council', அதி. vi, பக்கம் xcvii—cxl. T. F. Tout எழுதிய, 'Chapters in Administrative History',

அதி. vi, பக்கம் 397. 'English Historical Review', அதி. xxv, பக்கம் 430-ல் Dileleen எழுதிய, 'Secretaries in the Thirteenth and Fourteenth Centuries' என்னும் கட்டுரை. J. Otway-Ruthven எழுதிய, 'The King's Secretary and Signet Office in the Fifteenth Century' (1939). F. M. G. Evans எழுதிய, 'The Principal Secretary of State,' 1558—1680' (1923). Conyers Read எழுதிய, 'Mr. Secretary Walsingham' (1925). M. A. Thomson எழுதிய, 'Secretaries of State 1681—1782 (1932).

20. எட்டாம் ஹென்றியின் 31ஆம் ஆண்டுச் சட்டம். ஒரு பகுதியை Tannor எழுதிய, 'Tudor Constitutional Documents', 204ஆம் பக்கத்தில் காணலாம்.

21. 'State Papers of Henry VIII,' அதி. ii, பக்கம் 623. Tanner எழுதிய, 'Tudor Constitutional Documents,' 206—207.

22. சர் எட்வர்டு வோட்டனின் பயனுக்காக 1592ஆம் ஆண்டில் ராபர்ட் பீல் (Robert Beale) எழுதிய கட்டுரையை Conyers Read எழுதிய, 'Mr. Secretary Walsingham', அதி. i, பக்கம் 423—443-ல் காணலாம். ஏறக்குறைய அதே காலத்தில் Nicholas Faunt எழுதிய, 'English Historical Review', அதி. xx, பக்கங்கள் 490-508-ல் C. Hughes வெளியிட்டார். Tanner எழுதிய, 'Constitutional Documents of James I', 113—124-ல் பெரும் பகுதிகளைக் காணலாம். 1600ஆம் ஆண்டில் Dr. John 'Herbert எழுதியதாகக் கூறப்படும் அறிக்கையொன்று Protheroவின் 'Statutes and Documents'-ல் வெளியிடப்பட்டது. ராபர்ட் செசில் எழுதிய, சிறு கட்டுரை T. Park தொகுத்தளித்த 'Harleian Miscellany' -யிலும், Sir Walter Scott தொகுத்தளித்த 'Somers Tracts' -லும் காணலாம். Tanner-ன் நூலிலும் இதன் பகுதிகள் தரப்படுகின்றன. ஸ்காட்டிய அரசி மேரியைத் தூக்கிலிட்ட தற்காக டேவிஸ்மீது வழக்கு நடந்தபோது, 'இராணியாரின் (எலிசபெத்) எண்ணத்தை அறியவேண்டியது அவரது (டேவிஸ்) கடமையாகும்' என்று கூறப்பட்டது. இதனை E. S. M. Brook எழுதிய, 'Hatton', பக்கம் 312-ல் காண்க. 'English Historical Review', xlvi, பக்கங்கள் 632—636.

23. Tanner எழுதிய, 'James I', பக்கம் 127-ல் அரசாங்கச் செயலரின் பதவிப் பிரமாணம் காணப்படுகின்றது. ஆயின்,

பிரிவி கவுன்சில் சபையின் உறுப்பினரின் பதவிப் பிரமாணத்திலிருந்து அது வேறுபடுவதாகத் தெரிய வில்லை.

24. வேண்டாதாரை வெளியேற்றும், மன்னரின் கருவியாகத் திகழ்ந்த தலைமைச் சட்டப் பணி முதல்வரை, மனவுலைவு கொண்ட சாலிஸ்பரி ஆலோசனை கேட்டார். மன்னருடைய வார்த்தை அல்லது ஆணையன்றி வேறு அதிகாரம் ஏதும் இல்லாத அலுவலாளர் எத்துணை அளவிற்குப் பிழை செய்யலாம் என்று வினவினர். ஆயின், ஹோபார்ட்டின் (Hobart) மறுமொழி தெளிவற்றதாகவும் மனத்தளர்வு தோற்றுவிப்பதாகவும் அமைந்தது. பிரிவி கவுன்சிலர்களை சாலிஸ்பரி நெருங்கியபோது அன்னாருக்கு மன ஆறுதல் தர முடியாத வாக்குறுதி ஒன்றை அளித்தனர். அதாவது, அவர் மீது குற்றம் சுமத்துபவர்களின் பெயர்களையும் குற்றச் சாட்டுகளையும்பற்றி அவரிடம் அறிவிக்குமாறு மன்னரிடம் மனுச் செய்வதாக வாக்களித்தனர். G. Goodman எழுதிய, 'Court of King James', பக்கம் 42. Tanner எழுதிய, 'James I', பக்கம் 126—127. அரசாங்கச் செயலர்பற்றிய சாலிஸ் பரியின் கருத்து அரச முத்திரையையன்றி மன்னரின் வாய் மொழி ஆணையையே பெரிதும் குறிப்பதாய் அமைந்தது, ஃபிரஞ்சு நாட்டில் தோன்றிய நிலையை நினைவுறுத்துவதாக இருக்கின்றது. அந் நாட்டில் முதலில் மன்னருடைய கையொப்பத்திற்குச் சான்று அலுவலராக இருந்தவர்கள் அரச ஆணைக்கான செயலராக (Secretaries des Commandements du roy) விளங்கினர்.

25. 1590 முதல் 1596 வரை சிறிது காலத்திற்கு எலிசபெத் இராணியாரும் இப் பதவியை நிரப்பாது வைத்திருந்தார்.

26. அரச செயலர்களில் ஒருவர் புகழ்மிக்கவராக இருக்கும் போது அவரது சகாவாக இருப்பவர் அரசியல்வாதியாக இல்லாது நிர்வாகியாக இருக்கவேண்டும் என்பது நன்கு வேரூன்றிய வழக்காயிற்று.

27. Amson எழுதிய நூலின் அதி. ii, பகுதி i, பக்கம் 80-ல் வெளிநாட்டு விவகார அலுவலக ஏட்டிலிருந்து எடுத்தளிக்கப்பட்டது.

28. மற்ற அரசாங்கத் துறைகளிலிருந்து மாற்றப்பெற்ற பல சட்ட முறையான அதிகாரங்களைச் செலுத்துவதற்காக ஸ்காட்லாந்திற்கான அமைச்சர் பதவி Secretary for Scotland,

1885ஆம் ஆண்டில் விக்டோரியா இராணியாரின் 48ஆம், 49ஆம் ஆண்டுச் சட்டத்தின்மூலம் தோன்றியது. ஐந்தாம் ஜார்ஜின் 16ஆம், 17ஆம் ஆண்டுச் சட்டப்படி அது அரசாங்கச் செயலர் பதவியாக மாறியது. A. Berriedale Keith எழுதிய, 'British Cabinet System', பக்கம் 216 பார்க்க.

29. படையின் நிதிநிர்வாகத்தையே பழைய போர்ச்செயலர் முக்கியமாகக் கவனித்தார். இப் பதவிபற்றிய தெளிவற்ற வரலாற்றுக் குறிப்புகளை M. A. Thomson எழுதிய, 'Constitutional History', அதி. iv, பக் 441 அடிக்குறிப்பில் காண்க.

30. தனித்தனியான இந்தியா, பர்மா அலுவலகங்கள் ஒருவர் தலைமையில் இயங்கிவந்தன.

31. அதைச் சார்ந்த பணம் தரும் பதவிகளில் சில, குறைந்த ஊதியம் பெற்ற பதவிகளை வகித்தவர்களுக்கு அளிக்கப் பட்டன. வேறு சில முன்னாள் அமைச்சர்களுக்கு உபகாரச் சம்பளம் வழங்குவனவாக அமைந்தன.

32. தாம் கருவேலமரத்திலிருந்து தோன்றவில்லை என்றும், மாறாகக் காற்றாடி மரவகையிலிருந்து (the willow, not the oak) தோன்றியவர் என்றும் தொண்ணூறு ஆண்டுகளுக்கு டியூடர் ஆட்சியில் தாம் வாழ்ந்ததைப்பற்றி அவர் குறிப்பிட்டார்.

33. M. A. Thomson எழுதிய, 'Constitutional History', அதி. iv, பக்கம் 436-ல் பின்வருமாறு தரப்பட்டுள்ளன. சுங்கவரி, கலால்வரி, மது அனுமதிச் சீட்டுகள், பத்திர முத்திரை வரிகள், கண்ணாடிமீதான வரிகள், வாடகை வண்டிகளின் மீதான வரிகள், வீதிகளில் பொருள்களை விற்போர் மீதான வரிகள், உப்பாயம், நிலத்தீர்வை, வீட்டு வரி அதேபோன்று கணக்கிடுவதற்கென்று பழைய நிதித்துறை சார்ந்த அமைப்பை நீக்கிவிட்டுச் சிறப்பு ஆணைக்குழுக்கள் நியமிக்கப்பட்டன.

34. 'English Historical Review', அதி. xlvi, பக்கம் 600-ல் D. M. Gill எழுதிய, 'The Treasury, 1660—1714' என்னும் கட்டுரை; 'Cambridge Historical Journal', இதழ். iv, பக்கம் 94-ல் அதே அறிஞர் எழுதிய, 'The Treasury and the Customs and Excise Commissioners' என்னும் கட்டுரை. T. L. Heath எழுதிய, 'The Treasury'.

35. பதினெட்டாம் நூற்றாண்டின் இடைக்கால பட்ஜெட்டு களுக்கும் பெல்ஹாமின் கொள்கைக்கும் Basil Williams எழுதிய, 'The Whig Supremacy,' பக்கம் 315—318ஐப் பார்க்கவும்.

36. உயர் கடற்படைத் தலைமைப் பிரபுவாகக் கிளாரன்ஸ் கோமகன் விளங்கிய சிறிது காலம் தவிர (1827—1828) 1708ஆம் ஆண்டிலிருந்தே கடற்படைத் தலைமை அலுவலர் பதவி தொடர்ந்து வந்தது.

37. Amson எழுதிய மேலே குறிப்பிடப்பெற்ற நூலின் பகுதி i, பக்கம் 191.

38. 1939ஆம் ஆண்டில் F. M. Powicke தொகுத்தளித்த, 'Handbook of British Chronology', பக்கம் 81.

39. M. A. Thomson எழுதிய, 'Constitutionl History', அதி. iv, பக்கம் 435—436-ல் இதுபற்றிப் பார்க்கவும். Keir எழுதிய நூலின் 328ஆம் பக்கத்திலும், Edward Hughes எழுதிய 'Studies in Administration and Finance', பக்கம் 311-லும் மற்றத் துறைகளைச் சார்ந்த ஆதரவுகளைக் கட்டுப்படுத்தக் கருவூலம் மேற்கொண்ட முயற்சியைக் காணலாம்.

40. கருவூல பரோவான ஹார்விச்சின் (Harwich) மீது ஆதிக்கம் செலுத்த அஞ்சலகம் எவ்வாறு முயன்றது என்ற சுவையான செய்தியை Sir Lewis Namier எழுதிய, 'Structure of Politics,' அதி. ii, பக்கம் 441-ல் காணலாம்.

41. மேலே குறிப்பிட்ட M. A. Thomson-ன் நூல், பக்கம் 365. மானியங்கள் வழங்கும் விதம்பற்றித் தமக்குச் செய்திதர மறுப்பதால் 1754-ல் அமைந்த நியூகாசில் மந்திரி சபையில் சேரமுடியாது என்று கூறிய ஹென்றி ஃபாக்ஸின் பேருரையாடலை, Lord Mahon எழுதிய 'History of England', அதி. iv, பக்கம் 54—55-ல் காணலாம். 1937ஆம் ஆண்டின் அரசாங்க அமைச்சர் சட்டப்படி எதிர்காலத்தில் வரும் பிரதம அமைச்சரே கருவூலத் தலைமைப் பிரபு பதவியை வகிக்கவேண்டுமென்றாயிற்று.

42. இவற்றிற்கெல்லாம் J. Declareuil எழுதிய, 'Histoire generale du droit francais', பக்கம் 474—481ஐப் பார்க்க. A. Coville and H. W. V. Temperley தொகுத்

தளித்த, 'Studies in Anglo-French History'-ல் Leon Cahen எழுதிய, 'The Prime Minister in France and England,' என்னும் கட்டுரையையும் காண்க.

43. மேலே குறிப்பிடப்பெற்ற M. A. Thomson-ன் நூல், பக்கம் 109.

44. தலைமை அமைச்சரின் பிற தகுதிகள் ஃபிளியூரியிடம் இருந்தபோதிலும், தலைமை அமைச்சர் என்ற பட்டத்தை அவர் பெறவில்லை.

45. இந் நூலின் முதல் தொகுதியைக் காண்க. M. A. Thomson எழுதிய, 'Constitutional History', அதி. iv, பக்கம் 102, 211, 349 ஆகியவற்றில் 17ஆம், 18ஆம் நூற்றூண்டில் வாழ்ந்த பிரிவி கவுன்சில் சபைகள் பற்றியும், காபினெட் குழுக்கள் பற்றியும் பொதுவான விளக்கம் சிறப்புற அமைந்துள்ளது. E. R. Turner எழுதிய, 'The Privy Council and the Cabinet Council' என்னும் நூலின் நான்கு தொகுதிகளில் ஆதாரச் செய்திகள் ஏராளமாகத் தரப்பட்டுள்ளன. பத்தொன்பதாம் நூற்றூண்டிலிருந்து, இன்றுவரையான வரலாற்றிற்கு Sir Ivor Jennings எழுதிய 'Cabinet Government' என்னும் நூலும், A. Berriedale Keith எழுதிய, 'The British Cabinet System' என்னும் நூலும் பயன்படுகின்றன. W. Bagehot எழுதிய, 'The English Constitution' (1867)-ல் பண்டைய விளக்கம் காணலாம்.

46. Trenchard எழுதிய, 'Short History of Standing Armies' (1698), பக்கம் vii, viii. 'பெரிய குழுவினின்றும் வேறு படுத்திக் கூறவல்ல காபினெட் சபை என்னும் தொடரை முதலாம் சார்லஸின் ஆட்சிக் காலத்திலேயே காண முடிகின்றது' எனத் தாம் எழுதிய, 'Constitutional History', அதி. iii, பக்கம் 184-ல் ஹாலம் குறிப்பிடுகின்றூர். ஆயினும், அதற்கு முந்திய ஆட்சியிலேயே பேகன் பிரபுவின் கட்டுரைகளில் காபினெட் என்ற பெயர் வருகின்றது. 'ஆலோசனைக் கூட்டங்களில் ஏற்படும் இடர்ப்பாடுகள்' பற்றி பேகன் குறிப்பிடுகையில், 'இந்த இடர்ப்பாடுகளுக் காகவே இத்தாலிய நாட்டுக் கோட்பாட்டின்படியும், ஃபிரான்சில் சில மன்னர் காலத்திருந்த பழக்கத்தின் அடிப்படையிலும் காபினெட் சபைகள் புகுத்தப்பட்டன. ஆயின், நோயைவிடப் பரிகாரம் கேடு பயப்பதாகும்'

என்று விளக்கினர். இதனை, Spedding, Ellis, Heath ஆகியோர் 1858ஆம் ஆண்டு தொகுத்தளித்த Bacon எழுதிய, 'Works', அதி, vi, பக்கம் 424-ல் காணலாம்.

47. 'English Historical Review', xxx, பக்கம் 251-ல் E. R. Turner எழுதிய, 'The Privy Council of 1679' என்னும் கட்டுரை. Anson எழுதிய, 'Law and Custom', அதி. ii, பகுதி 1, பக்கம் 76.

48. இந் நூலில் மேலே காண்க.

49. 'Transactions of the Royal Historical Society' (1957), பக்கம் 137-ல் J. H. Plumb எழுதிய, 'Organisation of the Cabinet in the reiga of Queen Anne' என்னும் கட்டுரை.

50. M. A. Thomson எழுதிய, 'Constitutional History', அதி. iv, பக்கம் 214.

51. இந் நூலின் இரண்டாம் தொகுதியைக் காண்க.

52. இந் நூலின் இரண்டாம் தொகுதியைக் காண்க.

53. Macaulay எழுதிய, 'History of England', அதி. xxii.

54. 'Parliamentary History', அதி. vi, பக்கங்கள் 971—974. இப்போது அரசியல் பதவி வகிக்கும் அனைவரும் 'மந்திரி சபையில்' (Ministry) இடம் பெறுவர். அவர்களில் ஏறக்குறைய இருபதின்மரே காபினெட் குழுவில் உள்ளவர்கள்.

55. அக் காலத்தில் நல்ல கல்வியறிவு பெற்ற பிறரைப்போலவே வால்போலும் இலத்தீன் மொழியில் தேர்ச்சி பெற்றிருந்தார். பண்டைய பொதுமொழி ஒன்றின்மூலமாக அன்றய ஐரோப்பாவின் மொழிப்பிரச்சினையினால் இடர்ப்பாடு வெகுவாகக் குறைந்தது. இங்ஙனம் தமது ஹங்கேரியக் குடிமக்களிடம் 1741ஆம் ஆண்டில் மேரியா தெரிஸா இலத்தீன் மொழியில் உரை நிகழ்த்தினர். அம் மொழியை நன்கு கற்று, அதில் சரளமாகப் பேசும் திறம் பெற்ற அவர், வேறு சில சீமாட்டிகள் செய்வதைப்போலப் பகட்டிற்காக அதனைப் பயன்படுத்தவில்லை. இன்றளவும் ஹங்கேரிய

மக்களிடம் பொதுவழக்கில் இருக்கும் மொழியாகவும், நாட்டின் கொள்கைகளை எடுத்துரைக்கும் வல்லமை கொண்டதாகவும் அது விளங்குகிறது. Lord Mahon எழுதிய, 'History of England' (*1853*), அதி. iii, பக்கம் *127*. மேலும், டாக்டர் ஜான்சன் பாரிஸிற்குச் சென்று வால்டேருடன் (Voltaire) உரையாடியபோது, இருவரும் அறிந்த பொது மொழியாக இலத்தின் மொழியிலேயே உரையாடினர்.

*56.* *1914* முதல் *1918* வரை நடந்த போரின்போது அது வளர்ச்சியுற்றது. ஏற்கெனவே இருந்த பேரரசு பாதுகாப்புக் குழுவினின்றும் அது தோன்றியது. Keith எழுதிய, 'British Cabinet System', பக்கம் *131*. மன்னருக்குப் பிரதமர் எழுதும் காபினெட் கடிதம்பற்றியும் மேலே கண்ட நூலின் *411*ஆம் பக்கத்தில் காணலாம்.

*57.* *1820*ஆம் ஆண்டிலேயே 'மாட்சிமை மிக்க மன்னரின் எதிர்க்கட்சி' என்னும் தொடர் வருகின்றது. 'Times Literary Supplement' (*1948*), பக்கம் *429*.

*58.* இந் நூலின் இரண்டாம் தொகுதியில் காண்க.

*59.* இந் நூலின் இரண்டாம் தொகுதியில் காண்க.

*60.* Lord Mahon எழுதிய, 'History of England', அதி. i, பக்கங்கள் *394—395*.

*61.* உறுப்பினர் ஒருவருக்கொருவர் எதிராக அமர்தல் இடைக்காலத் திட்டமாகும். எதிர்க்கட்சி உறுப்பினர்கள் பதினெட்டாம் நூற்றாண்டிற்கு முன்பே மன்றத்தில் ஒரு புறமாக அமரும் பழக்கத்தினை மேற்கொண்டனர். இது பற்றி Dasent எழுதிய, 'Speakers' என்னும் நூலின் *262*ஆம் பக்கத்தில் காணலாம். ஆயின், இன்று ஆளுங்கட்சியருக்கு என்றிருக்கும் இடத்திலேயே (Treasury Bench) பிரிவி கவுன்சிலர் அனைவரும் அமர்ந்தனர். டியூடர் காலத்தில் சபாநாயகரின் அருகில் உட்கார்ந்தோருடைய முக்கியத்துவம்பற்றி முன்னரே கண்டோம். இங்ஙனம் வால் போலும், அவருக்கெதிரான கட்சியைத் தலைமை தாங்கி நடத்திச்சென்ற புல்டினியும் அக்கம்பக்கமாக அமர்ந்தனர். Lord Mahon எழுதிய, 'History of England', அதி. iii, பக்கம் *102*.

62. 'Yorkshire Archaeological Society, Records Series', Vol. cx-ல் உள்ள 'York Civic Records', அதி. v, பக்கங்கள் 7, 31, 87, 93 முதலானவற்றில் ஏராளமான எடுத்துக் காட்டுகள் காணப்படுகின்றன.

63. Sir William Yonge எழுதிய, 'Parliamentary History', அதி. xiii, பக்கம் 1076 முதல்; C. S. Emden எழுதிய, 'Select Speeches on the Constitution', அதி ii, பக்கம் 108.

64. 'Parliamentary History', அதி. xxxiii, பக்கம் 709; C. S. Emden எழுதிய அதே நூலில் அதி. ii, பக்கம் 135.

65. K. G. Feiling எழுதிய, 'History of the Tory Party', பக்கம் 364, 372, 409.

66. Feiling எழுதிய, 'History of the Tory Party', பக்கம் 364. கட்சியைத் தாக்குவது பாலிங்புரோக்கின் நூல்களில் முக்கியக் கருத்தாயுள்ளது. புரட்சியின்போது புகழ் வாய்ந்த பழிப்பிலக்கியமான 'The Character of a Trimmer' என்னும் நூலை, ஹாலிஃபாக்ஸின் மார்குவிஸ் பிரபுவான ஜார்ஜ் சவில் எழுதத் துவங்கினர்.

67. E. J. Payne தொகுத்தளித்த பர்க்கின், 'Select Works', அதி. i, பக்கம் 86. அதே நூலில் 'Measures and Men' என்னும் அதிகாரத்தையும், 279ஆம் பக்கத்தில் வரும் தொகுப்பாசிரியரின் குறிப்புகளையும் காண்க.

68. கிளாரண்டனின் அரசியல் அமைப்புப்பற்றிய கருத்துகளையும், அவரது வீழ்ச்சியின் முக்கியத்துவம்பற்றியும் Keith Feiling எழுதிய, 'History of the Tory Party', பக்கங்கள் 113—124; David Ogg எழுதிய, 'Charles II', அதி. i, பக்கங்கள் 189—451 ஆகியவற்றில் காண்க.

69. Keith Feiling எழுதிய, 'History of the Tory Party,' பக்கம் 154.

70. David Ogg எழுதிய, 'Charles II', அதி. ii, பக்கம் 529.

71. இந் நூலின் இரண்டாம் தொகுதியைக் காண்க.

72. Walcott எழுதிய, 'Essays in Honor of W. C. Abbott'-ல் 'English Party Politics', 1688—1714.

73. Feiling எழுதிய, 'History of the Tory Party,' பக்கம் 275.

74. அரசியல் கூறுகளுக்கு, Keith Feiling எழுதிய, 'History of the Tory Party', பக்கம் 343ஐப் பார்க்கவும். பிரிவி கவுன்சில் சபைபற்றிய துணைவாசகத்தில் உண்மையான கிளாரண்டன் கருத்துக் காணப்படுகின்றது.

75. G. M. Trevelyan எழுதிய, 'England Under Queen Anne', அதி. iii, பக்கம் 61.

76. இந் நூலில் மேலே உள்ள பகுதியில் காண்க.

77. May எழுதிய, 'Constitutional History,' அதி. i, பக்கம் 7.

78. 'போப்பின் ஆதரவாளரான ஓர் அரசரைப் பாதுகாவலராகக் கொண்ட ஆங்கிலத் திருச்சபைக்கு எப்போதும் ஆபத்துதான்' என்பது டோரி கட்சியின் கொள்கை என்பதை அடிசன் (Addison) தெளிவாகக் குறிப்பிட்டார். Lord Mahon எழுதிய, 'History of England', அதி. i, பக்கம் 169, அடிக்குறிப்பு.

79. 1716ஆம் ஆண்டில் ஏழாண்டுச் சட்டத்திற்கு எதிராக 162 டோரிகள் வாக்களித்தனர். அதனால் விக்கு சக்தி முடிவுற்றது. 1734ஆம் ஆண்டில் அச் சட்டத்தை ரத்து செய்வதற்கு ஆதரவாக 154 டோரிகள் வாக்களித்தனர். மூன்றும் ஜார்ஜின் முதல் பாராளுமன்றத்திற்கு, அரச ஆதரவாளர்களிடமிருந்து மாறுபட்ட 114 உண்மையான டோரிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். Keith Feiling எழுதிய, 'Second Tory Party', பக்கம் 2. 'Chatham' என்ற கட்டுரையில் கட்சிகளின் நிலை மாறியது என்பதை மெகாலே அறுதியிட்டுக் கூறுகின்றார். அவ்வாறு கூறுகின்ற இடத்திலே, 'இறுதியாக டோரிகள் உரிமை வேட்கை கொண்டவர்களாக நிமிர்ந்து நின்றனர். விக்குகள்தாம் அதிகாரத்தின் காலடியில் விழுந்து நெளிந்தார்கள்' என்று குறிப்பிட்டார். லெக்கியும் (Leckey) மஹோன் பிரபுவும் இத்தகைய வாத எதிர் வாதங்களைத் தொடர்ந்து மேற்கொண்டனர்.

80. மன்னர் அவரைப் பதவியிலிருந்து நீக்கி அயர்லாந்தின் துணைப்பிரபுவாக நியமித்தார்.

81. Mahon எழுதிய, 'History of Englnd', அதி. vii, viii-ல் இந்தச் சிக்கலான கதை வருகின்றது. J. H. Plumb எழுதிய, 'Life of Walpole' வெளிவரத் தொடங்கியது.

82. தலைமை நீதிபதி பிராட் என்பவர் நிதியமைச்சராக இருந்த குறுகிய இடைக்காலத்திற்குப் பிறகு 1721ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் மூன்றும் தேதியன்று வால்போல் இரண்டாவது முறையாக நிதியமைச்சரானார். மறுநாள் கருவூலப் பிரபுவாகப் பதவியேற்றார். 1741ஆம் ஆண்டு வரையில் இந்த இரு பதவிகளையுமே அவர் வகித்துவந்தார். (நிதித் துறைக்குப் பெயரளவினரான தலைவரை அளிக்கும் நோக்கத்தோடு 1757ஆம் ஆண்டிலும் 1767ஆம் ஆண்டிலும் மான்ஸ்ஃபீல்டு பிரபு அப் பதவியை ஏற்றிருந்தார். ('Adolphus எழுதிய, 'History of England', அதி. i, பக்கம் 305).

83. Basil Williams எழுதிய, 'Life of Stanhope', 'Carteret and Newcastle' ஆகியவற்றைக் காண்க.

84. வால்போலின் ஏற்பிசைவு பெற்ற மாற்று முறிகளைச் சான்றாகக் காட்டினர். அவற்றின் மூலம் தாமே பணம் பெறாது, அரசியல் ஆதரவாளரின் பெயருக்கு அவற்றை மாற்றிவிடுவது உகந்தது என வால்போல் கருதினார்.

85. 1730ஆம் ஆண்டில் அவை நடைபெற்றன. தமது ஓய்வு நேரத்தைப் பயிர்த் தொழில் வளர்ச்சியில் அவர் செலவிட்டார். டர்னிப் பயிரிடுவதில் அவர் அதிக அக்கறை காட்டியதால் நையாண்டியாக 'டர்னிப் டவுன்ஷெண்ட்' என்று அழைக்கப்பட்டார்.

86. Lord Mahon எழுதிய, 'History of England', அதி. ii, பக்கம் 255. வால்போல் துணை மந்திரியாக இருந்தபோது தமது தலைவரின் தென்கடல் மசோதாவை எதிர்த்துப் பேசினார்.

87. Lord Mahon எழுதிய, 'History of England', அதி. ii, பக்கம் 263.

88. கார்னெட்டிற்குப் பதிலாக இரண்டாம் லெப்டினென்ட் ஒருவர் நியமிக்கப்பட்டார். மேலே குறிப்பிடப்பெற்ற கோபாம் பிரபுவின் கூட்டாளிகளில் பிட்டும் ஒருவர் என்பது ஏற்கெனவே தெரிந்த செய்தியாகும். Lord Rosebery எழுதிய, 'Chatham's Early Life and Connections', பக்கம் 157-ல் சில ஊகங்களைக் காணலாம். அடுத்த ஏழு

ஆண்டுகளுக்கு இளவரசரின் சேவையில் பிட் இருந்து வந்தார்.

89. Lord Mahon எழுதிய, 'History of England', அதி. ii, பக்கம் 397.

90. அதே நூல், அதி. iii, பக்கம் 104.

91. போர் நடக்கும் சமயங்களில் யாகோபிய இயக்கம் மீண்டும் மீண்டும் தலைதூக்கியது. ஏனெனில், அப்போது அவர்களுக்கு ஆதரவாக அன்னியரின் தலையீடு இருக்க முடியும். அதன் காரணமாகத்தான் போரைத் தவிர்க்க வால்போல் முயன்றார். அதுபோது போலியாளருடன் வால்போல் இரகசியக் கடிதத் தொடர்பு கொண்டிருந்தார். இயற்கையான ஐயத்தோடும் வியப்போடும் அது ஏற்றுக்கொள்ளப் பட்டது. தீர்மானம் வந்தபோது டோரிகள் சபைக்கு வராது இருந்ததற்கு அது காரணமாயிருந்திருக்கலாம். மேலும், சபையில் இருந்த யாகோபியத் தலைவரான ஷிப்பன் மீது (Shippen) ஒரு வகையான இரகசிய ஆதிக்கத்தை வால்போல் பெற்றிருந்ததாகக் காணப்பட்டது. Lord Mahon எழுதிய, 'History of England', அதி. iii, பிற்சேர்க்கை l—li-ல் இக் கடிதத்தைக் காணலாம். 'வால்போல் இதில் மனமாரப் பங்கு கொண்டார் என்று ஐயுற்று யாரும் அவருக்கு அநீதி இழைக்கமாட்டார்கள் என மூன்றும் அதிகாரம், 34ஆம் பக்கத்தில் நூலாசிரியர் குறிப்பிட்டார். Lord Morley எழுதிய, 'Walpole', பக்கம் 231-ல், இவ் விவகாரத்தில் தொடர்பு கொண்டதால் வால்போலின்மீது தேவையற்ற ஐயப்பாடு தோன்றலாம் என்று வருகின்றது. அண்மைக் கால ஆராய்ச்சிகளிலிருந்து யாகோபியரை வால்போல் ஏய்த்தார் என்பது தெளிவாகிறது. 'The Dictionary of National Biography'-ல் I. S. Leadham எழுதியுள்ளதைக் கவனிக்கவும்.

92. விநோதமான இத் தொடருக்கு ஈடாக கொடால்பினையும் மார்ல்பரோவையும் குறித்தபோது, 'அரசியாரும் அவரது பிரதம அமைச்சர்களும்' என்று (the Queen and her Prime Ministers) வரும் தொடர் அமைகின்றது. 'The Times Literary Supplement', xxix, பக்கம் 214-ல், G. M. Trevelyan எழுதியது.

93. தமது சகாக்கள் ஏற்றுக்கொள்வார்களா என்று அவர் ஐயுற்ருர். 'வாலினுல் சுமந்து செல்லப்படும் பாம்புகளின் தலைகள் போன்றவர்தாம் கட்சிகளின் தலைவர்களும் என்ப தால்' ஐயுற்ருர். Lord Mahon எழுதிய, 'History of England', அதி. iii, பக்கம் 162.

94. 1727ஆம் ஆண்டில் மந்திரி சபை அமைக்க முயன்ற சர் ஸ்பென்சர் காம்ப்டன்தான் இவர். அதுபோது அவர் வால்போலின்கீழ்க் கவுன்சிலின் தலைவராக விளங்கினுர்.

95. Lord Rosebery எழுதிய, 'Chatham : Early Life and Connections', பக்கம் 177.

96. இருந்தபோதிலும், பன்னிரண்டு ஆண்டுகள் தலைமை வழக்குரைஞராகவும், மேலும் ஈராண்டுகள் தலைமைச் சட்டப் பணிமுதல்வராகவும் அவர் பெல்ஹாம் மந்திரி சபைகளில் பற்றுறுதியுடன் பணியாற்றினுர். அதன் பிறகு தான் மான்ஸ்ஃபீல்டு பிரபுவாக அரச நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாகப் பதவியேற்ருர்.

97. 1693 முதல் 1768 வரை வாழ்ந்த தாமஸ் பெல்ஹாம் ஹோலஸ் (Thomas Pelham Holles),. 1717—1724-ல் உள்படு கருமத் தலைவராகவும், 1724—1754-ல் அரசாங்கச் செயலராகவும், 1754—1756, 1757—1762-ல் கருவூலத் தலைமைப் பிரபுவாகவும், 1765-ல் அரசாங்க முத்திரைக் காப்பாளராகவும் பணியாற்றினுர். இங்ஙனம் அநேகமாக இடையருது தொடர்ந்து பதவி வகித்ததில் அவரை விஞ்சக் கூடியவர் பர்ளி பிரபு (Lord Burleigh) ஒருவரே. Basil Williams எழுதிய, 'Carteret and Newcastle'.

98. வால்போலின் எதிரியின் பேரன்.

99. சபையின் தலைவராக ஃபாக்ஸ் வரவேண்டுமென்று விழைந்தபோதிலும், ஆதரவு, சலுகைகள் ஆகியவற்றின் நிலையை வெளியிடக் கோமகன் மறுத்ததால், ஃபாக்ஸுடன் ஏற்கெனவே இருந்த பேச்சுகள் முறிந்துபோயின. 'ஒரு சிலர் சன்மானங்கள் பெற்று, மற்றவர் பெருது இருக்கும் போது, இதுபற்றி அறியாத நிலையில் உறுப்பினர்களிடம் எவ்வாறு பேசமுடியும்?' என்று ஃபாக்ஸ் வினவினுர். Lord Mahon எழுதிய, 'History of England,' அதி. iv, பக்கம்

35. இன்றியமையாது இருக்கின்ற செய்தி விளக்கம் இல்லாமலேயே சபையின் தலைவராக முயன்றபோது ஜார்ஜ் கிரன்விலும் இதே மொழியைப் பயன்படுத்தினர். Leckey எழுதிய, 'History of England,' அதி. iii, பக்கம் 205.

1. 'Candide' என்னும் நூலில், 'pour encourager les autres', என வால்டேர் குறிப்பிட்டார்.

2. பிட்டின் தலைமையில் சிறிது காலத்திற்குப் பிரதம மந்திரியாக இருந்தார் டிவோன்ஷயர் என்று கூறுவது எளிய வழக்காகும். Lord Rosebery எழுதிய, 'Chatham', பக்கம் 289 பார்க்கவும்.

3. தமது படைப்பிரிவை வால்போல் வெளியே கொண்டு சென்றபோது, கோபாம் பிரபுவான சர் ரிச்சர்டு டெம்பிள் என்பார் அரசியலில் புகுந்தார். அன்னுருடைய சகோதரி தான் கிரன்வில்களுக்கும் பிட்டின் மனைவிக்கும் தாயாவார். இந்த உறவு முறைகள்பற்றி Lord Rosebery எழுதிய, 'Chatham : Early Life', பக்கம் 130 பார்க்கவும்.

4. 'Chatham Correspondence', அதி. ii, பக்கங்கள் 296—297; Leckey எழுதிய, 'History of England', அதி. iii, பக்கம் 283.

5. 'Bedford Correspondence', அதி. iii, பக்கம் 333; Leckey எழுதிய நூல்.

6. சுதந்திரத் தன்மையையும் சிறுபிள்ளைத்தனத்தையும் குறிக்கும் பட்டமாக 'டோரி' என்னும் சொல் விளங்கிய போதிலும், விக்கு அமைச்சரின் பொதுவான ஆதரவை அவர்கள் பெறுதல் ஏற்புடையதாகவே இருந்தது. இங்ஙனம் தமது லிவர்பூல் நண்பர் ஒருவரை நியூகாசிலுக்கு அறிமுகம் செய்தபோது, 'இணங்காதாராகவும் நல்ல விக்காகவும் இருந்தபோதிலும் டோரிகளிடையே முக்கியத்துவம் வாய்ந்தவர்' என்று நூஜன்ட் (Nugent) குறிப்பிட்டார். பூட்டும் அவரது ஆள்களும் விளக்கம் தந்த உறுப்பினர் பட்டியல்களும் தெளிவற்றவையாகவே காணப்படுகின்றன. பெட்ஃபோர்டைச் சார்ந்த மிஸ்டர் ஆங்லி (Ongley) 'பெட்ஃபோர்டு', ஆனால், 'டோரியுமாவார்'. ராக்கிங்காமால் கொண்டுவரப்பட்டபோதிலும் யார்க்கைச் சார்ந்த ஆர்மிடேஜ் (Armytage) ஒரு டோரியே. Keith Feiling எழுதிய, 'The Second Tory Party', பக்கம் 72 பார்க்க.

7. வெஸ்ட்மின்ஸ்டரில் அமெரிக்கக் குடியேற்றங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கவேண்டுமென்று வந்த தீர்மானத்தின் விளைவாக அவரது கவனம் இப் பக்கம் திரும்பியது.

8. Lord Rosebery எழுதிய, 'Chatham', பக்கம் 258. 1874ஆம் ஆண்டில் தேர்தல் பிரசாரத்திற்காக மிஸ்டர் கிளாட்ஸ்டனுடைய முன்னேற்பாடுகள், ஷாப்ட்ஸ்பரி பிரபுவுக்குப் 'புதியவையாகவும், பொல்லாத விளைவு கொண்டவையாகவும்' தென்பட்டன. May-ன் Constitutional History', அதி. iii, பக்கம் 87. அதன் தொடர்ச்சியாக F. Holland எழுதியது.

9. இந் நிகழ்ச்சியின் உண்மை நிலையை Basil Williams எழுதிய, 'William Pitt, Earl of Chatham,' அதி. ii, பக்கங்கள் 112—114; English Historical Review, xxi, பக்கம் 119, 327-ல் காண்க.

10. Walpole எழுதிய, 'Memoirs,' அதி. i, பக்கம் 15. May எழுதிய, 'Constitutional History,' அதி. i, பக்கம் 13-ல் தரப்பட்டுள்ளது.

11. Lord Mahon, 'History of England', அதி. iv, பக்கம் 322.

12. Lord Ilchetser எழுதிய வாழ்க்கை விளக்க நூலாகிய, 'Henry Fox, Lord Holland' (1920).

13. Lord Mahon, 'History of England', அதி. v, பக்கம் 38. வெற்றி பெற்றதாகத் தெரிந்த வேளையில் அவர் ராஜினுமா செய்ததுபற்றிப் பல ஊகங்கள் எழுந்தன.

14. Lord Mahon எழுதிய, 'History of England', அதி. v, பக்கம் 33.

15. Lord Mahon எழுதிய, 'History of England', அதி. v, பக்கங்கள் 159—160.

16. அதே நூல், அதி. v, பக்கம் 176.

17. 'Bedford Correspondence,' அதி. iii, பக்கம் 224.

18. Macaulay எழுதிய, 'Essay on Chatham'.

19. 1770ஆம் ஆண்டில் தாம் எழுதிய நூலாகிய 'Thoughts upon the Present Discontents' என்பதில் பர்க்கினுடைய கண்மூடித்தனமான தாக்குதல்களிலிருந்துதான் அரசரின் நண்பர்கள் யார் என்பதை அதிகமாக அறிந்து கொள்ள முடிகிறது. Macaulay எழுதிய 'Essay on Chạtham' என்னும் நூலிலும் இவை பிரதிபலிக்கின்றன. பர்க்கின் ஒருதரப்பான பிரசுரத்திலிருந்து உண்மைச் செய்திகளைப் பிரித்து எடுப்பதற்கான முயற்சி பற்றிய செய்தியை Lord Mahon எழுதிய 'History of England', அதி. v, பக்கம் 178.

20. May எழுதிய 'Constitutional History,' அதி. i, பக்கம் 58. Correspondence of George III with Lord North, 1768—1783.

21. Lord Mahon எழுதிய 'History of England' அதி. v, பக்கம் 381. W. Baring Pemberton எழுதிய வாழ்க்கை விளக்க நூலான 'Lord North', H. Butterfield எழுதிய 'George III, Lord North and the People, 1779—1790'. R. Pares எழுதிய 'George III and the Politicians', 'Transactions of the Royal Historical Society' (1951) பக்கம் 127.

22. 'Parliamentary History,' xviii, பக்கம் 994 (1775). W. B. Pemberton எழுதிய 'Lord North,' பக்கம் 256.

23. பல செய்திகளில் காபினெட்டைக் கலக்காத கடற்படைத் தலைமைப் பிரபுவிற்கு கருவூலச் செயலராக இருந்த ராபின்சன் என்பார் 1777ஆம் ஆண்டில் எழுதிய கடிதம் 'Sandwich Records' (Navy Records Society), அதி. i, பக்கம் 240.

24. Fox Correspondence,' அதி. ii, பக்கம் 38. C. S. Emden எழுதிய 'The People and the Constitution,' பக்கம் 151. 'எல்லாவித மரியாதையுடன் மன்னரை நடத்தவேண்டும். ஆயின், இந் நாட்டு அரசரிடம் இருக்கக்கூடியது அதிகாரத்தின் நிலையே' என்று விக்கு பாணியிலேயே நார்த் குறிப்பிட்டார்.

25. Rockingham எழுதிய 'Memoirs,' அதி. ii, பக்கம் 179,

26. 1692ஆம் ஆண்டிலும் 1694ஆம் ஆண்டிலும்தான் மசோதாக்களை ஏற்க மறுக்கும் சிறப்புரிமை இறுதியாகப் பயன்பட்டது. முதலில் மூவாண்டு பாராளுமன்றத்திற்காக வந்த மசோதாவிற்கும், பிறகு பதவிகள் மசோதாவிற்கும் இசைவு தர மூன்றும் வில்லியம் மறுத்தார். அதேபோன்று ஸ்காட்லாந்து நாட்டுப் படை (Scotch Militia Bill) மசோதாவை 1707-ல் ஆன் அரசியார் ஏற்க மறுத்தார்.

27. Lord Brougham எழுதிய 'Statesmen of the Time of George III,' அதி. i, பக்கம் 85-ல் 1774ஆம் ஆண்டு, ஜுன் மாதம், 26ஆம் தேதி என்று வருகின்றது.

28. தள்ளுரிமையின் பிற்கால நிலைபற்றி பர்க், டிஸ்ரேலி, டைசி ஆகியோர் கொண்ட கருத்துகளைப்பற்றிய ஆராய்ச்சியை Sir Ivor Jennings எழுதிய, 'Cabinet Government', பக்கங்கள் 296—297-ல் காண்க.

29. 'Parliamentary History', xxi, பக்கம் 347. பொதுத்தேர்தல் வர இருந்த காரணத்தால், நார்த்தின் ஆதரவாளர் சிலர் டன்னிங்குடன் சேர்ந்து வாக்களித்தனர்.

30. D. L. Keir எழுதிய 'Economical Reform', 'Law Quarterly Review', பக்கங்கள் 368—373.

31. M. A. Thomson எழுதிய, 'Constitutional History,' அதி. iv, பக்கம் 371. 1754ஆம் ஆண்டில் பெல்ஹாம் இறந்த போது ஏற்பட்டதாகக் கொள்ளப்படும் முன்னிகழ்வினை ஆராய்கின்றது.

32. 1778ஆம் ஆண்டு மே மாதம் 11ஆம் தேதி சாத்தம் இறந்தார். அவரது இரண்டாம் மகனுரே இளைய வில்லியம் பிட்.

33. Duke of Buckingham எழுதிய 'Court and Cabinets of George III', அதி. i, பக்கம் 285.

34. 'Commons Journal', xxxix, பக்கம் 842.

35. May எழுதிய 'Constitutional History', அதி. i, பக்கங்கள் 67—71. இந் நூலின் பிற்பகுதியையும் காண்க.

36. C. S. Emden எழுதிய 'Speeches on the Constitution,' அதி. i, பக்கங்கள் 59—61. பொதுவாக Lecky எழுதிய 'History

of England,' அதி. v, பக்கங்கள் 242—260 ஐயும் பார்க்கவும்.

37. ராக்கிங்காம் பிரபு இறந்ததும் அரசாங்கப் பொறுப்பு இங்கிலாந்து 'அரசரின்மீது விழுந்தது என ஹொரேஸ் வால்போல் கூறினர். Lecky எழுதிய நூல், அதி. v, பக்கம் 164.

38. May எழுதிய 'Constitutional History,' அதி. i, பக்கம் 67.

39. Rose-ன் 'Diaries and Correspondence,' அதி. ii, பக்கங்கள் 156, 182. Horace Twiss எழுதிய 'Life of Eldon', அதி. i, பக்கம் 446.

40. Stanhope எழுதிய 'Life of Pitt,' அதி. iv, பக்கம் 24-ல் இக் கடிதம் உளது. 1879ஆம் ஆண்டுத் தொகுப்பில் அதி. iii, பக்கம் 111—112-ல் உள்ளது.

41. 1763 முதல் 1765 வரை பதவி வகித்த பிரதம அமைச்சரின் கடைசி மகன்.

42. 1807ஆம் ஆண்டு மார்ச் மாதம் 17ஆம் தேதி பக்கிங்காம் பிரபுவிற்கு கிரன்வில் பிரபு எழுதிய கடிதம். இதனை Buckingham எழுதிய 'Court and Cabinets of George III', அதி. iv, பக்கம் 143-ல் காண்க. வால்போலின்மீது அரச துரோகக் குற்றச்சாட்டு கொண்டுவருவதில்லை யென்ற வாக்குறுதியை இரண்டாம் ஜார்ஜ் பெற்றுக் கொண்டார்.

43. 'Parliamentary Debates', ix, பக்கம் 327.

44 1783ஆம் ஆண்டில்தான் முறையான பதவி நீக்கம் கடைசியாகச் செய்யப்பட்டது.

45. Sir Ivor Jennings எழுதிய, 'Cabinet Government', பக்கங்கள் 299—302. மெல்போர்ன் பதவியிலிருந்து நீக்கப்படுவதற்கு பீல் 'பொறுப்பானவரா' என்ற நுண்ணிய பிரச்சினைபற்றிய அவரது சொற்பொழிவை C. S. Emden எழுதிய 'Speeches on the Constitution', அதி. i, பக்கம் 16; Sir Ivor Jenning எழுதிய நூலில் பக்கங்கள் 338—340;

A. Berriedale Keith எழுதிய 'The Constitution' (1940), அதி. i, பக்கங்கள் 57—59 ஆகியவற்றைப் பார்க்கலாம்.

46. C. S. Emden எழுதிய 'Speeches on the Constitution' அதி. i, பக்கங்கள் 62—65, 66.

47. மேலே கூறிய Jennings எழுதிய நூலில் 313ஆம் பக்கம் ஆராயப்படுகின்றது.

48. நீண்டகாலமாக இருந்துவரும் ஏற்பாட்டின்படி இப்போது முக்கியமான காலங்களில் 'அரசவையில் சேவகியாக இருக்கும் ஆடை திருத்தும் அணங்கு மந்திரி சபையுடன் மாறுகின்றார்; ஆனால், அரசியாருடன் அதிகமாக நெருங்கிய தொடர்பு கொள்ளும் அந்தப்புரத் தோழிகள் அவர்களுடைய கணவன்மார்களின் அரசியல் தொடர்புகளைப் பற்றிய கவலையில்லாமல் நியமிக்கப்படுவதுடன் தொடர்ந்து பதவியில் இருந்து வருகிறார்கள்' என்று Gladstone எழுதிய 'Gleanings', அதி. i, 40-ல் காணப்பெறுகின்றது.

49. Martin எழுதிய 'Life of the Prince Consort', அதி. ii, பக்கம் 305. John Russell, Hansard ஆகியோரின் கருத்துரைகள், 'Debates' 3ஆம் தொகுதி, cxix. பக்கம் 91. May எழுதிய 'Constitutional History', அதி. i, பக்கம் 160. Ivor Jennings எழுதிய 'Cabinet Government', பக்கம் 276.

50. May எழுதிய அதே நூல், அதி. i, பக்கங்கள் 160—162.

51. 1878ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் 'North American Review'-ல் வெளிவந்த 'Kin beyond Sea' என்னும் கட்டுரை. அதே கட்டுரையை மீண்டும் 'Gleanings of Past Years', அதி. i, பக்கங்கள் 225, 235, 241, 242—244-ல் வெளியிட்டனர். தற்காலக் காபினெட் சபையின் செயல் முறைக்கு Sir Ivor Jennings எழுதிய 'Cabinet Government' ஐயும், A. Berriedale Keith எழுதிய 'The British Cabinet System' என்னும் நூலையும் காண்க. இவ்விரு நூல்களும் கடந்த நூறு ஆண்டு காபினெட் வரலாற்றைத் தருவனவாகும்.

# 20. சமுதாயத்திற்குரிய உரிமைகள்

## சமயச் சுதந்திரத்தின் வளர்ச்சி

ஒற்றுமையைத் தோற்றுவிப்பதற்காகத் திருச்சபை கையாண்ட முயற்சிகள் பிராட்டஸ்டென்டுகளிடையே இருந்த இணங்காதாரை ஒடுக்குதற்குப் பதிலாக அவர்களை ஊக்கு வித்து வளர்த்தது எனலாம். கடைசி இரு ஸ்டூவர்டு மன்னர்கள் காலத்தே எண்ணிக்கையிலும், அமைப்பிலும், அரசியல் செல்வாக்கிலும் அவர்கள் மிகுந்த வளர்ச்சியுற்றனர். 1688ஆம் ஆண்டில் புரட்சியைக் கொண்டுவருவதில் திருச்சபைக்குச் சிறந்த சேவைகள் புரிந்த இணங்காதாருக்குப் பரிசாகச் சமயப் பொறைச் சட்டம்[1] வந்தது.

**1689ஆம் ஆண்டுச் சமயப் பொறைச் சட்டம்:** புகழ்வாய்ந்த இச் சட்டத்தினால் சமயச் சுதந்திரம் வந்துவிடவில்லை. இங்கி லாந்து திருச்சபையை ஏற்கவேண்டுமென்று வற்புறுத்திய சட்டங்களை அது ரத்துச் செய்யவில்லை. மேலும் 1661ஆம் ஆண்டின் மாநகராட்சி சட்டம், 1673ஆம் ஆண்டின் சோதனைச் சட்டம்[2] ஆகியவை இணங்காதாரிடம் தோற்றுவித்த சமுதாய தகைமைக் குறைகளை அது நீக்கவுமில்லை. எனினும், பற்றுறுதிப் பிரமாணமும் ஏற்று, புனிதப் பொருள் மாறுபாட்டுக் கொள்கையை ஏற்பது இல்லையென்று அறிவித்தவர்கள் எல்லாம், திருச் சபைக் கூட்டங்களுக்கு வராது இருந்தாலும், தனியான இரகசியச் சமயக் கூட்டங்களுக்கு எதிராக நடைமுறையில் இருந்த சட்டங்களின்படி தண்டனைகள் வழங்குவதிலிருந்து விலக்கு அளிப்பதன் மூலமாக அரசாங்கச் சமயத்திற்கப்பால் பொது வழிபாடு செய்யும் உரிமையை, முதன்முறையாக இச் சட்டம் ஏற்றது. ‘கிறித்தவச் சமய மெய்வினை செய்துவைப்

பதற்கும், கூட்டங்களில் கொள்கை விளக்கத்திற்கும்,[3] ஒரே வழிபாட்டுமுறைச் சட்டமும் (Act of Uniformity) இரகசியக் கூட்டச் சட்டமும் விதித்த தடைகளில் இருந்து இணங்காதார் குருமார்களுக்கு விடுதலை கிடைத்தது. ஆயின், பிரமாணங்கள் எடுத்துக்கொள்வதோடு, மூன்றாவது பகுதியும் நான்காவது பகுதியின் ஒரு பிரிவும் நீங்கலாக உள்ள முப்பத்தொன்பது விதிகளில் கையெழுத்திடவேண்டுமென்ற நிபந்தனை இருந்தது.[4] பிரமாணங்களுக்குப் பதிலாக உறுதிமொழி யொன்றினை குவேக்கர் அளித்தால் போதுமானது. சமயக் கூட்டங்கள் கூடும் விடுதிகள் யாவற்றையும் பதிவு செய்துகொள்ளவேண்டு மென்பது உண்மையேயாயினும், அவ்வாறு பதிவு செய்து கொண்ட விடுதிகளில் கூடும் கூட்டங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கப்பெற்றது. சமயம் சாராத குடிமக்களை ஆங்கிலத் திருச்சபையை ஏற்குமாறு குற்றச் சட்டம் கட்டாயப்படுத் தாததும், இணங்காதாருடைய சமயச் சடங்குகளைச் செய்வதற் கென்று கூடுவதும், ஆங்கிலச் சமயப் பிரிவின்றி வேறு கிறித்தவ சமயப் பிரிவினைப் போற்றுதலும் குற்றமாகாது என்பதும் இச் சட்டத்தைப் பொறுத்தவரையில் 'சமயப் பொறையாகும்'. ஆயின், இத்தகைய குறுகிய பொருளில்கூட சமயப் பொறை, கத்தோலிக்கரைப் பொறுத்தவரை இல்லை. மேலும், பரவி அளிக்காது விடுதல்போன்ற இணங்காதாரின் பொதுத்துறைத் தகுதிக்குறைகள் தொடர்ந்துவந்தன.

எவ்வாறெனினும், முழு அளவில் சமயப் பொறை அளிக்கப் பெறவில்லை என்பது உண்மை. ரோமானிய கத்தோலிக்கரும். தனியொருமைக் கோட்பாட்டினரும் இச் சட்டத்திற்கு அப்பாற் பட்டவராக இருந்தனர். வெகுவிரைவிலேயே மேலும் பல தண்டனைகளுக்கு அவர்கள் உள்ளாயினர். 1698ஆம் ஆண்டில் சமய, பொதுத்துறை, படைத்துறை ஆகியவற்றிலே பதவி வகிக் கும்[5] தகுதியற்றவர்களாகத் தனியொருமைக் கோட்பாட்டினர் ஒதுக்கப்பெற்றனர். கத்தோலிக்கரோவெனின், பல கடுமையான தடைகளினால் தொல்லையுற்றனர்[6] தமது பதவியின் கடமைகளை நிறைவேற்றும் ரோமானிய கத்தோலிக்க குருமாரைக் கண்டு பிடித்துத் தருவோருக்கு 100 பவுன்கள் பரிசு வழங்குவதாக, 1699ஆம் ஆண்டு வந்த சட்டமொன்று கூறியது. மேலும், அச் சட்டத்தின்படி அத்தகைய குருமாரை நிரந்தரமாகச் சிறையில் அடைத்துவைக்கவும் வழியேற்பட்டது. கத்தோலிக்கர்களாக இருப்பவர்கள் தங்களுடைய சமயத்தைத் துறப்பதற்கான பிரமாணம் எடுத்துக்கொள்ளவில்லையானால், நிலம் வாங்கவோ அல்லது அதனை மரபுரிமையால் பெறவோ தகுதியற்றவர்

என்றும் அச் சட்டம் வலியுறுத்தியது. மேலும், அவ்வாறு செய்ய அவர்கள் மறுப்பார்களானல், அவர்களுடைய வாழ்நாள் முழுவதும், அவர்தம் சொத்துகளைப் பிராட்டஸ்டென்ட் சமயத்தைச் சார்ந்த நெருங்கிய உறவினர் பெறவேண்டுமென்றும் வகுத்தது. தங்கள் மக்களைக் கல்விக்காக வெளிநாடுகளுக்கு அனுப்பவும் அவர்களால் இயலாது.[7]

ஆன் அரசியாரின் ஆட்சியில் கடைசி நான்கு ஆண்டுகளில் டோரிகளுடைய ஆதிக்கம் உயர்ந்த காலத்தில், பிராட்டஸ் டென்டுகளில் இணங்காதார்களுக்கு ஏற்கெனவே அளிக்கப் பெற்ற சமயப் பொறை பெரிதும் பாதிக்கப்பெற்றது. முக்கிய மாகச் சிலவேளை இணக்கமசோதாவும்[8], (Occasional Conformity Act), பிளவுச் சட்டமும்[9] (Schism Act) பெருந்திங்கிழைத்தன. இணங்காதாரில் சிலர் தங்களுடைய சமயப் பிரிவினைப் போற்றிய அதே வேளையில் ஆங்கிலிக திருச்சபையின் சடங்குகளின்படி சமய மெய்வினையேற்கத் தயங்கவில்லை. சோதனைச் சட்டத்தைத் தட்டிக் கழிப்பதற்காக அவர்கள் சிலவேளைகளில் இணக்கம் தெரிவித்தனர். இதனைத் தடுப்பதற்கென்றே சிலவேளை இணக்கச் சட்டம் 1711ஆம் ஆண்டில் நிறைவேறியது. 1713ஆம் ஆண்டு நிறைவேறிய மற்றைச் சட்டம், ‘சமயத்தில் பிளவு விரிவடை வதைத் தடுக்கும் நோக்கத்தோடு’ வந்த ஒன்ருகும். இணங்கா தாரின் ஆதரவைப்பெற்று, வலிமையுற்று விளங்கிய விக்குகளின் அரசியல் ஆதிக்கத்தை அழிப்பதும், கல்வியை, ஆங்கிலத் திருச் சபையின் கட்டுப்பாட்டில் கொண்டுவருவதும் அச் சட்டத்தின் நோக்கங்களாயின. இணங்காதாருடைய கல்விச் சாலைகளை யெல்லாம் அழிப்பதன் மூலமாகக் குழந்தைகளுக்கு அவர் களுடைய சமயக் கொள்கைகளில் பயிற்சி அளிக்க முடியாத வாறு அச் சட்டம் செய்தது. இணங்காதார் கல்விக் கூடங் களில் சில ஏற்கெனவே புகழ்மிக்கு விளங்கிவந்தன.

**இழப்பீட்டுச் சட்டங்கள் (Indemnity Act):** எவ்வாறெனி னும், பிற்போக்கான இவ்விரு சட்டங்களும் முதலாம் ஜார்ஜ்[10] ஆட்சிக் காலத்தில், 1718ஆம் ஆண்டு தள்ளுபடியாயின. மேலும், இரண்டாம் ஜார்ஜ் ஆட்சியின் தொடக்க காலத்திலிருந்து மாநக ராட்சி சட்டம் சோதனைச் சட்டம்[11] ஆகியவற்றினல் தகுதியற்ற வராக இருந்தவர்களுக்கு ஆதரவாக ஆண்டுதோறும் நிறைவேறிய இழப்பீட்டுச் சட்டங்களின் மூலமாக அநேகமாக எல்லாப் பிராட்டஸ்டென்ட் இணங்காதாரும் பதவிகளில் அமர்ந்தனர். ஆன் அரசியார் காலத்தில், 1711ஆம் ஆண்டு வந்த பேரறிவிப்பு மூலமாகவும் 1715ஆம் ஆண்டின் புரட்சிக்குப்[12] பிறகுவந்த

சட்டத்தின் மூலமாகவும், அதேபோன்று 1745ஆம் ஆண்டின் புரட்சிக்குப் பிறகு வந்த அரச பேரறிவிப்பாணையின் மூலமாகவும் ரோமன் கத்தோலிக்கருக்கெதிரான கடுமையான சட்டங்கள் நடைமுறையில் பெருமளவு கடுமை குறைந்திருந்தன.

**ஹார்டுவிக் பிரபுவின் திருமணச் சட்டம், 1753:** 1753ஆம் ஆண்டில் ஹார்டுவிக் பிரபுவின் திருமணச் சட்டத்தினால் புறச் சமயத்தார்மீது புதிய தடைகள் தோன்றின. கள்ளத்தனமான மணங்களைத் தடைசெய்வதே அச் சட்டத்தின் உடனடி நோக்கமாக இருந்தது. ஆங்கில வாழ்க்கையில் இருந்த பல இழிவுகளைப் போக்கியதோடு திருமணச் சட்டத்தினைப் புதிய, திடமான அடிப்படையில் வகுத்த அச் சட்டம் இணங்காதாரின்மீது மேலும் சில தடங்கல்களைக் கொண்டுவந்தது. முன்பெல்லாம் தாங்கள் வழிபாடு நடத்தும் இடங்களிலேயே இணங்காதார் திருமணம் செய்துகொள்ள அனுமதி இருந்தது. ஆனால், யூதரும் குவேக்கரும் நீங்கலாக உள்ள மற்றையோரின் திருமணங்களெல்லாம் திருச்சபையிலேயே நடக்கவேண்டுமென்றும், அதனுடைய சடங்குகளின்படி திருச்சபை குருமாரால் நிறைவேற்றிவைக்கப்பெறுதல் வேண்டுமென்றும் அச் சட்டம் வலியுறுத்தியது.[13]

**மூன்றும் ஜார்ஜ் மன்னர் ஆட்சிக் காலத்தில் சமயப்பொறை:** மூன்றும் ஜார்ஜ் மன்னர் காலத்தில்தான் சமயம் சார்ந்த குற்றச் சட்டங்களின் கடுமையைத் தளர்த்தும் மெய்யான முயற்சி தோன்றியது எனலாம். அன்னாரது ஆட்சியின் தொடக்க காலத்தே லண்டன் நகரத்திற்கும் இணங்காதாருக்கும் இடையே எழுந்த வழக்கில் சமயப் பொறையின் பொதுக் கருத்துகளை முறை மன்றம் சார்ந்தவகையில், பிரபுக்கள் சபை வலியுறுத்தியது.[14] அச் சபையில் தீர்ப்பு வழங்குகையில் மேன்ஸ்ஃபீல்டு பிரபு பின்வருமாறு விளக்கினார்: 'ஒருவர் தம்மை இணங்காதார் என்று கூறிக்கொள்ளுதல் இப்போது குற்றமன்று. ஆங்கிலத் திருச்சபைச் சடங்குகளுக்கிணங்க, மெய்வினை ஏற்காததும் குற்றமன்று. உண்மையில், அவர் தமது மனச்சாட்சிக்கு எதிராக ஒன்றைச் செய்வதுதான் குற்றமாகும். தவறானதாக இருப்பினும் உண்மையான மனச் சாட்சியை ஒறுத்தல் என்பது நேர்மையின்பாற்பட்டதாகவோ அல்லது பொறுத்தமுடைமையாலோ கொள்ளப்படுவது அன்று. மாறாக, நேர்நிலையிலான சட்ட அடிப்படையில் அது அமையவேண்டும். ஆயின், சட்ட விரோதமான ஒன்றை இப்போது முறையானதாக சமயப் பொறைச் சட்டம் மாற்றியுள்ளது. இணங்காதாருடைய வழி

பாட்டு முறைக்கு இச் சட்டம் இசைவு தந்ததோடு, அதனை அனுமதித்தும் உள்ளது. தண்டனையிலிருந்து அதற்கு விலக்கு மட்டும் அளிக்காது, அத்தகைய முறையைச் சட்டப்படியான தாகவும் குற்றமற்றதாகவும் செய்துள்ளது. அதனால் அம் முறை நிலைநாட்டப்பெற்றுள்ளது. அதனைச் சட்டம் கண்டும் காணுததுபோல் இருப்பது என்பதில்லை. சட்டத்தின் பாது காப்பும் அதற்குண்டு. சமய ஒறுப்பினைவிட நியாயமற்றதும், மனித உரிமைகளுக்கு மாருனதும், கிறித்தவமயத்தின் உணர் விற்கும் கொள்கைகளுக்கும் வேருனதும், கொடுமையானதும், அநீதியானதும், ஒவ்வாததும் வேறென்றுமில்லை. இயற்கைச் சமயத்திற்கும், திருமறைக்கும், திண்மைக் கொள்கைக்கும் அது முரணுனதாகும்.'[15]

ரோமானிய கத்தோலிக்கரையும், பிராட்டஸ்டென்ட் இணங்காதாரையும் பொறுத்தவரையில் முறையாக இல்லா விடினும், குற்றச் சட்டங்கள் மெதுவாகத் தளர்ச்சியுற்றன. 1780ஆம் ஆண்டில் ஜார்ஜ் கோர்டன் தலைமையிலான, 'போப் சமயம்' கூடாது என்ற கலகங்கள் எழுவதற்கு முன்னேடியாக இருந்த 1788ஆம் ஆண்டைய ரோமன் கத்தோலிக்க விடுதலைச் சட்டமும், 1791ஆம் ஆண்டு நிறைவேறிய மற்றொரு சட்டமும்,[16] கத்தோலிக்கர் மீதான பல தடைகளையும், தண்டனைகளையும் நீக்கின. தங்களுடைய புனிதமான கடமைகளை நிறைவேற்றியதற் காக, குருமாரை நிரந்தரமாகச் சிறையிலிடும் வழக்கம் நின்றது. கல்விக்காக வெளிநாடு சென்ற வாரிசுகள், தங்களுடைய சொத்துகளை பிராட்டஸ்டென்ட் வாரிசுகளிடம் ஒப்படைத்து விடவேண்டுமென்ற நிர்பந்தத்திலிருந்து விடுபட்டனர். நிலம் வாங்கக்கூடாது என்ற தடையும் நீங்கியது. ஒருவகையான திருந்திய வழிபாட்டு உரிமையும் கல்வியும் வழங்க வழியேற் பட்டது. மேலாதிக்கப் பிரமாணம் எடுக்கவேண்டுமென்பதால், ரோமன் கத்தோலிக்கப் பிரபுக்கள் மேல் சபையில் அமரத் தடையிருந்தபோதிலும், 1678ஆம் ஆண்டுச் சட்டப்படி மன்னர் முன்னிலையில் அவர்கள் வரக்கூடாது என்ற தடை நீங்கியது.[17] சமயப் பொறைச் சட்டத்தின்கீழ் முப்பத்தொன்பது விதி களுக்கு ஓரளவு இணங்கவேண்டும் என்பதிலிருந்து, இணங் காதார் குருமாரையும், பள்ளி ஆசிரியர்களையும், 1779ஆம் ஆண்டின் இணங்காதார் குருமார் சட்டம் (Dissenting Ministers Act),[18] விடுவித்தது. அதேபோன்று சமயப் பொறைச் சட்டம் வற்புறுத்திய மிதமுள்ள உறுதிமொழிகள், அறிக்கைகள் ஆகிய வற்றினின்று 1812ஆம் ஆண்டில் வந்த சட்டம்[19] விடுதலை அளித்தது. அடுத்த ஆண்டில் வந்த சட்டம் ஒன்றினுல்[20]

தனியொருமைக் கோட்பாட்டினர் மீதிருந்த தடைகள் நீங்கின. மேலும் சமயப் பொறைச் சட்டத்தின் நலன்களிலிருந்து மும்மூர்த் கொள்கையை எதிர்த்தவரை விலக்கிவைத்ததையும், மூன்றும் வில்லியத்தின் ஒன்பதாம் ஆட்சியாண்டில் 'சமயப் பழிப்பையும், தெய்வ நிந்தனையையும் அழிப்பதற்காக' அவர்களுக்கு எதிராக வந்த வரையறைகளையும் நீக்கினர்.

எனினும், சோதனைச் சட்டத்தினாலும், மாநகராட்சி சட்டத்தினாலும் வந்த தடைகள் அப்படியேயிருந்தன. கடந்த காலச் சமய வெறியின் சின்னங்களாகத் திகழ்ந்த இவைகள் சமுதாயத்தில் மதிப்புற்று விளங்கிய பெரும் பிரிவினருக்கு அநீதி இழைத்ததோடு, கிறித்தவ சமயத்தின் புனிதமான சமய வினையைப் 'பதவியை அடையும் திறவுகோலாக, கள்ளச் சாவியாக'[21] மாற்றியமைப்பதன் மூலமாகச் சமய நலனுக்கே ஊறுசெய்வதாகவும் அமைந்தன. சிலவேளை இணக்கச் சட்டமும், பிளவுச் சட்டமும் வழக்கொழிந்த அதே சமயத்தில், சோதனைச் சட்டத்தையும் ரத்துசெய்ய, திருச்சபையாளரும், இணங்காதாரும் சமநிலையில் இருக்கவேண்டுமென்று அறிவித்த முதலாம் ஸ்டான்ஹோப் பிரபு, 1718ஆம் ஆண்டு அளவிலேயே முயற்சிசெய்தார். ஆனால், கடுமையான எதிர்ப்பு இருந்ததால், அச் சட்டத்தை ஒழித்துக் கட்டுவதற்கான தகுந்த தருணத்தை அவர் எதிர்நோக்கி இருக்கவேண்டியதாயிற்று. 1736ஆம் ஆண்டில், அச் சட்டத்தை ரத்து செய்யும் தீர்மானம் ஒன்றை புளுமர் (Plumer) என்பார் கொண்டுவந்தார். ஆயினும், தக்க சமயம் வரும்போது அதனை ஒழிப்பதற்கு ஒத்தாசை புரிவதாக வாக்களித்து அதன் மூலமாக இணங்காதார் ஆதரவைப் பல ஆண்டுகளாகப் பெற்றுவந்த வால்போலே அந்தத் தீர்மானத்திற்கு எதிராக வாக்களித்தார். அதன் காரணமாக அத் தீர்மானம் 128 பெருவாரி ஒட்டுகளால் தோல்வியுற்றது.[22] அதன் பின்னர் அரை நூற்றாண்டுக் காலம் கழிந்தபிறகு 1787ஆம் ஆண்டில் பீஃபாய் (Beaufoy) மற்றுமொருமுறை முயன்றார். 1789ஆம் ஆண்டிலும் அவர் முயற்சி செய்தார். ஆயினும், அவரது தீர்மானம் தோல்வியே கண்டது. அடுத்து 1790ஆம் ஆண்டில் ஃபாக்ஸ் முழு முயற்சி எடுத்துக்கொண்டார். எனினும், சோதனைச் சட்டத்தை விலக்குவதற்குக் கடுமையான எதிர்ப்பு இருந்த காரணத்தால் அவர் தம் வாதங்களெல்லாம் விழலுக்கிறைத்த நீராயின. நாற்பது ஆண்டுகள் கழிந்த பின்னரே நல்வாய்ப்புப்பெற்ற ஜான் ரஸ்ஸல் பிரபுவானவர், மற்றையோர் வீணாக முயன்று தோல்வியே கண்ட நிலையில், அச் சட்டத்தை ரத்து செய்வதில் 1828ஆம் ஆண்டு வெற்றி

பெற்றார். சோதனைச் சட்டத்தையும், மாநகராட்சிச் சட்டத்தையும் தள்ளுபடிசெய்ததால், இணங்காதார் மீதிருந்த சமுதாயத் தடைகள் இறுதியாக நீங்கின பொதுத் துறை, படைத் துறை, கூட்டுத் துறைப் பணிமனைகள் ஆகியவற்றில் பதவியேற்பதற்கு முக்கியத் தகுதியாகக் கருதப்பெற்ற மெய்வினைசார்ந்த சோதனைக்குப் பதிலாக, நிலைநின்ற நாட்டுத் திருச்சபையைக் குலைப்பதோ அல்லது அதற்கு ஊறு செய்வதோ இல்லையென்று 'உண்மைக் கிறித்தவ சமயத்தின்மீது' ஆணையாக அறிவித்தல் போதுமானது என்றாயிற்று.[23]

**1829ஆம் ஆண்டில் ரோமன் கத்தோலிக்கத் துயர் தீர்ப்புச் சட்டம்** (Roman Catholic Relief Act) : அடுத்து வந்த ஆண்டிலேயே ரோமன் கத்தோலிக்கத் துயர்தீர்ப்புச் சட்டம் நிறைவேறியது. 1801ஆம் ஆண்டில் அயர்லாந்துடனான ஐக்கியம் ஏற்பட்ட நாளிலிருந்து, யுனைடெட் கிங்டத்தின் குடிமக்களில் குறிப்பிடத்தகுந்த பிரிவினராக இருந்த ரோமன் கத்தோலிக்கர் மீது அரசியல் தடைகள் விதிக்கும் அநீதி தொடர்வது ஆகாது என்பது மேன்மேலும் தெளிவாகியது. ஆனால், கத்தோலிக்கரின் துயர்தீர்க்கும் தீர்மானம் கொண்டுவருவோர் எவராயினும் 'அவர் தமது தனிமுறையிலான வைரியாவார்' என்று மூன்றாம் ஜார்ஜ் அறிவித்தார். மேலும், கத்தோலிக்கருக்காக பிட் அளிக்க எண்ணிய சில தாராளச் சலுகைகளும் மூன்றாம் ஜார்ஜின் காலத்தில் கட்டாயமாகத் தள்ளிவைக்கப்பெற்றன. நான்காம் ஜார்ஜ் ஆட்சிக் காலத்தில் ஆண்டுதோறும் தேர்தல்களில் வைக்கப்பெற்ற இப் பிரச்சினை இடர்மிகுந்ததாயிற்று. டேனியல் ஓகானல் (Daniel O'Connell) நிறுவிய கத்தோலிக்கக் கழகம், ஐரிஷ் மக்களுடைய உணர்ச்சிகளைத் தொடர்ந்து தூண்டி வந்தது. அத்தகைய சூழ்நிலையில், உள்நாட்டுப்போர், அல்லது சலுகைகள் வழங்குவது என்பதில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டபோது, வெல்லிங்டன் பிரபுவின் தலைமையிலான டோரி மந்திரி சபை ஒரு மசோதாவைக் கொண்டுவந்தது. 1829ஆம் ஆண்டின் ரோமன் கத்தோலிக்கத் துயர் தீர்க்கும் சட்டம் அல்லது விடுதலைச் சட்டத்தை விக்கு கட்சியினரின் ஆதரவையும் பெற்று, இரு சபைகளிலும் அமைச்சரவை நிறைவேற்றியது. மிகுந்த தூண்டுதலுக்குப் பின்னரே, தயக்கத்தோடும் தடுமாற்றத்தோடும் நான்காம் ஜார்ஜ் அச் சட்டத்திற்கு இசைவு தந்தார். அது தாமதமாகவே வந்தது; எனினும், நிறைவானதாக விளங்கியது. மேலாதிக்கப் பிரமாணத்திற்கும், புனிதப் பொருள் மாறுபாட்டுக் கொள்கைக்கு எதிராகவும், கன்னி மேரியைப் போற்றுதற்கு

எதிராகவும் உறுதிமொழியளிப்பதற்குப் பதிலாக, போப்பினல் சமய விலக்கு செய்யப்பெறும் அரசரை அரியணையிலிருந்து நீக்குவது அல்லது கொலை செய்வது என்ற கொள்கையைக் கைவிட்டுப் பற்றுறுதிப் பிரமாணம் எடுத்துக்கொண்ட ரோமன் கத்தோலிக்கர் பாராளுமன்றத்தின் சபைகளிரண்டிலும் இடம் பெறலாம் என அச் சட்டம் வகுத்தது. நகராட்சிப் பதவிகள் அனைத்தையும், சமய முறைமன்றங்கள் நீங்கலாக உள்ள எல்லா நீதித்துறைப் பதவிகளையும், அரச காப்பாளர், இங்கிலாந்து, அயர்லாந்திற்கான மன்னுய முதல்வர்,[24] அயர் லாந்தின் லார்டு லெப்டினென்ட் முதலானவை நீங்கலாக உள்ள எல்லாப் பொதுத்துறை, அரசியல் சார்ந்த பதவிகளையும் அவர்கள் வகிக்கலாம் என்றும் அது கூறியது. இருந்த போதிலும் திருச்சபை ஆதரவில் ரோமன் கத்தோலிக்கருடைய தலையீட்டின்மீது, மேலும் சில தடைகளை அச் சட்டம் விதித்தது. ஜெசூட்டுகளும் துறவிகளும் அனுமதிச்சீட்டு இன்றி நாட்டிற்குள் வருவதை அது தடைசெய்தது. ஏற்கெனவே நாட்டில் வாழ்ந்திருந்த அதுபோன்ற துறவிகளின் விடுதிகள் பற்றிய கட்டுத்திட்டங்களையும் அது கொண்டுவந்தது.[25]

ரோமன் கத்தோலிக்கருடைய பள்ளிகள், வழிபாட்டு இடங்கள், அறநிலையங்கள் ஆகியவற்றிற்கும், அவைகளுக்கான சொத்துகளுக்கும், அவற்றில் பணிபுரிந்தோருக்கும், பிராட்டஸ் டென்ட் இணங்காதாருக்கு இருந்த அதே சட்டங்கள் பொருந்து மென்று வகுத்த சட்டமொன்று, 1832ஆம் ஆண்டில் நிறை வேறியது.[26] பெரும்பாலும் வழக்கொழிந்து, ஆனல் சட்டப் புத்தகத்தில் இடம்பெற்றிருந்த, கத்தோலிக்கருக்கு எதிரான பல சட்டங்களையெல்லாம் சில ஆண்டுகளுக்குப் பின்னர் நீக்கிய, தால், ரோமன் கத்தோலிக்கருக்கும் முழுச்சமயச் சுதந்திரம் அளிக்கவேண்டுமென்ற கொள்கை முழு வெற்றிபெற்றது.[27] 1926ஆம் ஆண்டிலும் மேலும் சில சட்டங்கள் ஒழிந்தன.[28] அது வரையில் 'மூடநம்பிக்கைகள்' என்பதால் தோல்வியுற்ற பொறுப் பாண்மைகளை ஆதரித்துச் சில முக்கிய முடிவுகளை முறை மன்றங்கள் எடுத்தன.[29]

இணங்காதாருக்கு இருந்த வாக்குரிமையை நிறைவு செய்தற் பொருட்டு மேலும் சில துணை நடவடிக்கைகள் தேவைப் பட்டன. 140 ஆண்டுகளில் தேர்ந்தெடுக்கப்பெற்ற குவேக்கர் களில் முதலாமவரான, ஜோசப் பீஸ் (Joseph Pease) என்பார் 1833ஆம் ஆண்டில் பிரமாணத்திற்குப் பதிலாக உறுதிமொழி அளித்தே காமன்ஸ் சபையில் அமர முடிந்தது. அதே ஆண்டில்

பிரமாணத்திற்குப் பதிலாக குவேக்கர், மொரேவியர் (Moravians), பிரிவினைவாதிகள் எல்லாம் உறுதிமொழி அளித்தால் போதுமானது என ஒரு சட்டம் வகுத்தது.[30]

**யூதர் மீதான தடைகள் :** முதலாம் எட்வர்டு காலத்தில் நாட்டிலிருந்து விரட்டப்பெற்ற யூதர்கள், கிராம்வெல் காலத்தில் திரும்பிவர முடிந்தது. ஆயினும், முன்னிலை மீட்சிக்குப் பிறகே அவர்கள் முறையாகக் குடியமர முடிந்தது. கிறித்தவ மெய்வினை பெற்றால்தான் குடியுரிமை உண்டு என்று, ரோமன் கத்தோலிக்கருக்கு எதிராக 1610ஆம் ஆண்டில் முதலாம் ஜேம்ஸ் கொண்டு வந்த சட்டமே, யூதர்கள் குடியுரிமை நலன்களைப் பெறுவதற்குத் தடையாக இருந்தது.[31] ஆயின், அடுத்துவந்த ஒரு சட்டத்தினால், வாணிப நலனையும் குடியேற்ற வளர்ச்சியையும் கருதி, அவர்களுக்கு ஓரளவு விதிவிலக்கு அளிக்கப்பெற்றது. அதன் மூலமாக அமெரிக்கக் குடியேற்றங்களில் தொடர்ந்தாற்போல் ஏழு ஆண்டுகள் வாழ்ந்த யூதர்களுக்கும், பிராட்டஸ்டெண்டு சமயம் சார்ந்த அன்னியருக்கும் விலக்கு அளிக்கப்பெற்றது.[32] இங்கிலாந்தில் அரசியல் தடைகள் இருந்தபோதிலும், ஆங்கில வாணிபப் பெருக்கம் காரணமாக அன்னிய யூதர்கள் பெருமளவில் வந்து குடியேறினர். இங்ஙனம் குடியேற்றங்களில் வாழ்ந்தோருக்கும், சணல் கயிறு உற்பத்தியில் ஈடுபட்டிருந்தோருக்கும், மெய்வினைச் சோதனையிலிருந்து வழங்கிய விலக்கினை, பாராளுமன்றம் சார்ந்த குடியுரிமைக்கு விண்ணப்பம் செய்துகொள்ளும் யூதர்களுக்கும் வழங்குதற்கான முயற்சியொன்று 1753ஆம் ஆண்டில் எழுந்தது. ஆனால், இத்தகைய மிதமான அளவில் சமயப் பொறை வழங்க வந்த சிறப்புவாய்ந்த யூதர் மசோதாவானது, அக் காலக் கருத்திற்கு முன்னேற்றமாக விளங்கியது. 'யூதர் வேண்டாம்! யூதர் வேண்டாம்! மர மிதியடி வேண்டாம்!' என்று மக்கள் கூக்குரல் எழுப்பினர். காமன்ஸ் சபையில் கடுமையான எதிர்ப்பிற்குப் பிறகு அம் மசோதா சட்டப் புத்தகத்தில் ஏறியபோதிலும், நாடு முழுவதிலும் பெரும் புயலைக் கிளப்பிய அச் சட்டத்தினை அடுத்துவந்த பாராளுமன்றக் கூட்டத் தொடரிலேயே தள்ளுபடி செய்யவேண்டியதாயிற்று.[33] ஆண்டுதோறும் நிறைவேறிய இழப்பீட்டுச் சட்டங்களின் மூலமாக இணங்காதாரைப் போலவே, யூதர்களும் நகர ஆட்சியில் சில பதவிகளைப் பெற்றனர். ஆயின், சோதனைச் சட்டத்திலிருந்தும், மாநகராட்சிச் சட்டத்திலிருந்தும் இணங்காதாருக்கு விலக்கு அளிக்கவென்று வந்த நான்காம் ஜார்ஜ் மன்னரின் ஒன்பதாம் ஆண்டுச் சட்டம், யூதர்மீது மேலும் சில தளைகளைப் பூட்டியது. மாநகர் ஆட்சிகளைப் பொறுத்த வரையில்,

இத் தளைகள் 1845ஆம் ஆண்டில்[34] நீங்கின. யூதர்களைப் பாராளு மன்றத்தில் அனுமதிப்பதற்கு எதிராக இருந்த ஒரே தடையும் நீண்ட நாள் போராட்டத்திற்குப் பிறகு 1858ஆம் ஆண்டு நீங்கியது. துறக்கும் பிரமாணம் எடுத்துக்கொள்ளும்போது 'கிறித்தவ சமயத்தின் மீது ஆணையாக' என்னும் சொற்களைச் சில சமயங்களில் தீர்மானம் மூலமாக நீக்கலாம் என்று பாராளு மன்றத்தின் இரு சபைகட்கும் அச் சட்டம் அதிகாரம் வழங்கியது.[35] ஆயினும், எந்தச் சமயத்தையும் சேராதவர் என்று இருப்பவர்களுக்கு அச் சட்டங்களினால் நன்மையேற் படவில்லையென்பதை மிஸ்டர் பிராட்லாவைப்பற்றிய (Mr. Bradlaugh) செய்தியிலிருந்து நன்குணரலாம்.[36]

**திருமணம் : பல்கலைக்கழகச் சோதனைகள் :** பிறப்பு, இறப்பு, திருமணம் ஆகியவற்றைப் பதிவு செய்யும் பொது அரசாங்கத் துறை ஒன்று 1836-ல் ஏற்பட்டது. பதிவு பெற்ற தங்களுடைய தொழுகைக் கூடங்களில் திருமணங்களை நடத்திக்கொள்ளலாம் என்று இணங்காதாருக்கு அனுமதி வழங்கிய சட்டமொன்றும் அதே ஆண்டில் நிறைவேறியது.[37] இறுதியாக 1871ஆம் ஆண்டில் பல்கலைக்கழகங்கள் சோதனைகள் சட்டத்தின் மூலமாக, இணங்காதாருக்கு இருந்த மீதமுள்ள தடைகளில் ஒன்று நீங்கியது. அதன்படி ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ், டர்ஹாம் ஆகிய பல்கலைக்கழகங்களில் எச் சமயப் பிரிவைச் சார்ந்தவராயினும், பட்டங்கள் பெறவும், சமயச்சார்பற்ற கல்வி சார்ந்த பதவிகளையும், கலாசாலைப் பதவிகளையும் பெறவும் வாய்ப்பு ஏற்பட்டது.[38]

**அயர்லாந்திலும் வேல்ஸிலும் திருச்சபை சார்ந்த அரசாங்கத் தொடர்பினை விலக்குதல் :** 1707ஆம் ஆண்டு தோன்றிய ஐக்கியத்திற்குப் பிறகு ஸ்காட்லாந்தில் பிரஸ்பிடீரிய சமயமே சட்டப்படியான சமயமாகத் திகழ்ந்தது. ஆனால், குடிமக்களில் பெரும்பான்மையோர் கத்தோலிக்கர்களாக இருந்த அயர்லாந் திலும், பெரும்பான்மையோர் இணங்காதாராகவிருந்த வேல்ஸி லும் ஆங்கிலத் திருச்சபையமைப்பே சட்டப்படியான சமயமாக இருந்தது. இத்தகைய வெளிப்படையான அநீதியை அழிப் பதற்காக அயர்லாந்து திருச்சபை சார்ந்த அரசாங்கத் தொடர் பினை 1869ஆம் ஆண்டிலும், வேல்ஸ் திருச்சபை சார்ந்த அரசாங்கத் தொடர்பினை 1914ஆம் ஆண்டிலும் விலக்கினர். ஆயினும், 1914ஆம் ஆண்டில் உலகப்போர் தொடங்கியதால், வெல்ஸில் திருச்சபை சார்ந்த அரசாங்கத் தொடர்பினை

விலக்குவதை ஒத்திப்போட்டனர். 1920ஆம் ஆண்டில்தான் அது நடைமுறைக்கு வந்தது.

**திருச்சபைத் திருக்கூட்டம்** (Convocation): சமயச் சீர்திருத்தத்தின் விளைவாக மன்னருக்கும் ஆங்கிலத் திருச் சபைக்கும் இடையே தோன்றிய ஒற்றுமையினால், இது வரையில் விளங்கிய ஆங்கில சமயத்தைச் சாராதார் அனைவர் மீதும் ஏற்பட்ட தடைகள் ஒருபுறம் தோன்றின. அதே சமயத்தில் மற்றொரு புறத்தில் திருச்சபை, தனது சுதந்தரத்தை முற்றிலும் இழந்தது. திருச்சபைத் திருக்கூட்டத்தின் கீழ் சபையில் இருந்த டோரிகளுடனும், உயர் திருச்சபை குருமாருடனும் இணைந்து பணியாற்ற இயலாத விக்கு அனுதாபிகளான, கட்டுப்பாடற்ற பலர் புரட்சியின் விளைவாக பிஷப்புகளாக அமர்ந்தனர். திருச்சபைத் திருக்கூட்டத்தின் ஆரம்பகால வரலாறுபற்றியும், மன்னருடனும் பாராளுமன்றத் துடனும் அது கொண்டிருந்த உறவினைப்பற்றியும் ஏற்கெனவே ஒருவாறு விளக்கினோம்.[39] எட்டாம் ஹென்றியின் 25ஆம் ஆட்சி ஆண்டு நிறைவேறிய குருமார் பணிவிணக்கச் சட்டம்[40] வந்த பிறகு, திருச்சபையும் அரசும் பாராளுமன்றத்தின் தனிப்பெரு அதிகாரத்திற்கு உட்பட்டதனால், தனிப்பட்ட சட்டமியற்றும் அதிகாரத்தைத் திருச்சபைத் திருக்கூட்டம் இழந்தது. எலிசபெத் இராணியார் காலத்தில் சமயம்சார்ந்த செய்திகளில் அக் கூட்டத்தைச் சில வேளைகளில் கலந்தாலோ சித்தல் வழக்கமாக இருந்தது. மேலும், 1563ஆம் ஆண்டு வந்த முப்பத்தொன்பது விதிகளை[41] அது உறுதி செய்தது. 1604ஆம் ஆண்டில்[42] மன்னர் வழங்கிய அனுமதிச்சீட்டின்பேரில் சில சமயவிதிகளைத் திருச்சபைத் திருக்கூட்டம் நிலைநிறுத்தியது. எனினும், அவ் விதிகளைப் பாராளுமன்றம் உறுதி செய்யாததால், அவை சமயம் சாராதாரைக் கட்டுப்படுத்த முடியாது. 1640ஆம் ஆண்டிலும் மேலும் சில கட்டுத்திட்டங்களைக் கொண்டுவரத் திருக்கூட்டம் முயன்றது. ஆனால், சமய வரிவிதிப்புப் பழக்கம், வழக்கொழிந்த 1664ஆம் ஆண்டி லிருந்து அத் திருக்கூட்டத்தில் விவாதங்கள் நடைபெறுவது அநேகமாக நின்றுவிட்டது. அதனுடைய செயலாண்மையைப் புதுப்பிக்கும் முயற்சிகள் புரட்சி தோன்றிய காலத்தில் தோன்றலாயின. முக்கியமாக 'ஆங்கிலத் திருச்சபைத் திருக் கூட்டத்தின் உரிமைகளும் சிறப்புரிமைகளும்' (The Rights and Privileges of an English Convocation) என்னும் நூலை எழுதிய வரும், பிற்காலத்தில் ரோசெஸ்டரின் பிஷப்பாக இருந்து, யாகோபிய சூழ்ச்சிகளில் பங்கு கொண்டதற்காக நாடுகடத்தப்

பெற்றவரும் ஆன அட்டர்பரி என்பார் பெருமுயற்சி செய்தார். இதற்கிடையில் பங்கோரின் பிஷப்பாக இருந்த ஹோட்லி என்பார் சமயச் சுதந்திரத்தை ஆதரித்து ஆற்றிய சொற்பொழிவைத் திருச்சபையின் திருக்கூட்டக் கீழ்சபை கண்டித்ததால் தோன்றிய வாக்குவாதம், ஒரு சமயக் கொந்தளிப்பையே உண்டுபண்ணியது. அதனால் 1717ஆம் ஆண்டில் முதலாம் ஜார்ஜின் அமைச்சர்கள், திருக்கூட்டத்தையே தள்ளி வைத்தனர்.[43] அதிலிருந்து ஒரு நூற்றாண்டிற்கு மேலாக முறையாக அழைப்புண்ட திருக்கூட்டம் கூடிய உடனேயே தள்ளிவைக்கப்பெற்றது. ஆயின், திருச்சபைச் செய்திகளை மீண்டும் விவாதிப்பதற்கான அனுமதியை 1850ஆம் ஆண்டில் அது பெற்றது. தம் மக்களுக்குப் பெற்றோரே ஆதரவாளராக இருப்பதைத் தடைசெய்த, 1604ஆம் ஆண்டில் வந்த 29ஆம் சமயவிதியை மாற்றும் அதிகாரத்தை, மன்னரின் அனுமதிச் சீட்டின் பேரில், 1861-ல் திருக்கூட்டம் பெற்றது. ஆயினும், அரசப் பெருமுத்திரையிட்ட உரிமை ஆவணத்தின் மூலமாக உறுதி செய்யப்பெறாத மாற்றங்கள் செல்லத்தக்கவையல்ல என்பதை மன்னரின் அனுமதிச் சீட்டே வலியுறுத்தியது. பொது வழிபாட்டுச் செய்திகளில் தீர்மானங்கள் கொண்டுவரும் உரிமையைத் திருக்கூட்டத்திற்கு அளிக்கும் பணித்திட்டக் கட்டளைகளை, 1872ஆம் ஆண்டில் அரசர் வெளியிட்டார். பிற்பாடு இவையெல்லாம் பாராளுமன்றச் சட்டமொன்றில் இணைந்தன. அச் சட்டமே விக்டோரியா இராணியாரின் 35, 36ஆம் ஆண்டுகளில் நிறைவேறிய ஒருமைப்பாட்டுத் திருத்தச் சட்டமாகும்.[44]

**1919ஆம் ஆண்டின் உரிமை வழங்கு சட்டம்** (The Enabling Act): திருச்சபைத் திருக்கூட்டத்தின் இரு சபைகளின் நடவடிக்கைகளிலும் சமயம் சாராதாருடைய ஒத்துழைப்பு இருப்பது விரும்பத்தக்கது என்ற எண்ணம் நீண்ட காலமாகவே இருந்துவந்தது. 'உரிமை வழங்கு சட்டம்' என்று பொதுவாக வழங்கப்பெறும் ஆங்கிலத் திருச்சபைக் கூட்டச் (அதிகாரங்கள்) சட்டத்தின் மூலமாக 1919ஆம் ஆண்டில் அவ்வெண்ணம் நிறைவேறியது. ஆங்கிலத் திருச்சபையின் தேசியக் கூட்டத்தை அமைக்கும் சட்டபூர்வமான அதிகாரத்தை அது வழங்கியது.[45] அக் கூட்டத்தில் பிஷப்புகள் சபையென்றும், குருமார் சபையென்றும், சமயம் சாராதார் சபையென்றும் மூன்று சபைகள் விளங்கின. கான்டர்பரி, யார்க் ஆகிய திருச்சபைத் திருக்கூட்டங்களின் மேல் சபையினரும், கீழ் சபையினருமே தேசியக் கூட்டத்தின்

முதலிரு சபையினராயினர். மூன்ருவதில் சமயத் தொடர்பற்ற பொதுமக்களின் பிரதிநிதிகள் நிறைந்திருந்தனர். அந்தந்தப் பகுதியில் கூடிய திருச்சபைக் கூட்டங்களில் தேர்ந்தெடுக்கப் பெற்று மாவட்டத் திருச்சபை மாநாட்டில் கூடி நின்றவரே தேசியக் கூட்டத்திற்கான பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தனர். ஆங்கிலத் திருச்சபை சார்ந்த செய்திபற்றித் தேசிய திருச்சபைக் கூட்டம் ஆராயலாம்; யோசனைகள் அளிக்கலாம். பாராளு மன்றத்தின் இரு சபைகளின் இசைவையும் மன்னருடைய இசைவையும் பெறும் யோசனைகள் பாராளுமன்றச் சட்டம்[46] போன்று பயனுள்ளவையாயின.

## பத்திரிகைச் சுதந்திரம்

புரட்சிக்குப் பிறகு மக்கள் பெற்ற அல்லது விரிவடைந்த அரசியல் சிறப்புரிமைகளில், பத்திரிகைச் சுதந்திரத்தைப்பற்றி ஆராயவேண்டும்.

**தணிக்கை (Censorship):** லாலார்டு (Lollard) குருமார் களுக்கும் எழுத்தாளர்களுக்கும் எதிராகத் திருச்சபை எடுத்த நடவடிக்கையினுல் ஆரம்பத்திலேயே சமயச் செய்திகளில் கருத் துரிமை தடைப்பட்டது என்பதுபற்றி ஏற்கெனவே கண்டோம்.[47] பதினைந்தாம் நூற்ருண்டில் அச்சு எந்திரம் கண்டுபிடிக்கப்பெற்ற உடனே இங்கிலாந்தில் மட்டுமன்றி, ஐரோப்பா முழுவதிலும் பத்திரிகைத் தொழில் கடுமையான தணிக்கைக்கு உட்பட்டது. இங்கிலாந்தில் சமயச் சீர்திருத்தத் திற்குப் பிறகு, சமயத்துறையிலான மேலாதிக்க மன்னரிடம் சென்றதைப் போலவே, சமயக் கொள்கைகள்பற்றிய பத்திரிகைத் தணிக்கையும் அவர் பொறுப்பாகியது. டியூடர் ஆட்சிக்காலத்தில் வந்த பல அரசத் துரோகக் குற்றச் சட்டங் களில், அரசத் துரோகமான செய்திகளை அச்சிடுவதும் அடங் கியது. செய்திகளை வெளியிட அனுமதி வழங்கும் அதிகாரியை நியமித்தல் அரசரின் சிறப்புரிமையாயிற்று. அந்த அதிகாரியின் இசைவாணையின்றி எதையும் சட்டப்படி அச்சிட்டு வெளியிட முடியாது. அனுமதியின்றி வெளியிடுவோருக்குத் தனிச் சிறப் பதிகார முறைமன்றங்கள் கடுமையான தண்டனைகள் வழங்கின. உரிமை ஆவணங்களும், தனிச் சிறப்புரிமைகளும் அச்சுத் தொழிலில் மேலும் தடைகளைப் புகுத்தின. 'ஸ்டேஷ னர்ஸ் கம்பெனி'யின் பழக்கத்திஞல் பதிப்புரிமை (copyright) சட்டத்திற்கான கால்கோள் இடப்பெற்றது.[48] மேரி அரசியார்

ஆட்சியில் விண்மீன் மண்டப முறைமன்றம் நிலைநிறுத்திய விதியின்படி, முதல் நிலையில், அத்தகைய தனியுரிமை ஸ்டேஷனர்ஸ் கம்பெனியின் அங்கத்தினர்கட்கு மட்டுமே இருந்தது. மேலும் அச்சகங்களின் எண்ணிக்கையும், அவற்றில் பணியாற்றும் அச்சிடுவோரின் எண்ணிக்கையும் திடமாக வரையறுக்கப்பெற்றன. முதலாம் எலிசபெத் அரசியரர் காலத்தில் கடுமையான தண்டனைகளின் கீழ் தணிக்கை செய்தனர். லண்டன், ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் தவிர மற்ற இடங்களில் அச்சிடத் தடை இருந்தது. தலைமை நீதிபதிகளின் அனுமதி பெற்றுப் பணியாற்றும் சட்டங்களை அச்சிடுவோரும் சில குறிப்பிட்ட சேவைகளுக்கென்று இராணியாரால் பெற்ற அச்சிடுவோரும் தவிர மற்றையோர், காண்டர்பரியின் ஆர்ச்பிஷப்போ அல்லது லண்டன் நகர பிஷப்போ 'பார்த்து, படித்து, அனுமதி வழங்கிய' பிறகே எதையும் வெளியிடலாம்.[49] திருச்சபை ஆட்சிக்கோ அல்லது நாட்டு அரசுக்கோ துரோகமானது அல்லது அவதூறானது என்று நீதிபதிகள் கருதுவார்களானல், அத்தகைய செய்திகளை அச்சிடத் துணிந்தவர்க்கு மரணதண்டனை அல்லது உறுப்புக் குறை தண்டனை அளிக்கப்பெற்றது.[50]

**ஆரம்பகால ஸ்டூவர்டுகள் : பொதுநிலத் துறைத்தனம்:** முதலாம் ஜேம்ஸின் ஆட்சியிலும், முதலாம் சார்லஸின் ஆட்சியிலும் மிகக் கடுமையான முறையில் அரசியல், சமய விவாதங்களை விண்மீன் மண்டப முறைமன்றம் ஒடுக்கியது.[51] விண்மீன் மண்டப சபையின் உரிமைக் கட்டளையொன்று 1637ஆம் ஆண்டு ஜூலை மாதம் வெளிவந்தது. அதன்படி, தலைமை அச்சகரின் எண்ணிக்கை இருபதுக்குமேல் போகக் கூடாது. அவர்கள் நன்னடத்தைக்காக ஈட்டுப்பணம் அளிக்க வேண்டும். அவர்கள் ஒவ்வொருவரும் இரண்டு அச்சு இயந்திரங்களை இரு தொழிற்பயிற்சி பெறுவோர் மட்டிலுமே வைத்திருக்கலாம். ஆயின், ஸ்டேஷனர்ஸ் கம்பெனியின் முன்னுள் தலைமை அச்சகராகவோ அல்லது பணியிலிருக்கும் தலைமை அச்சகராகவோ இருந்தால், அவர்கள் மூன்று அச்சு இயந்திரங்களையும், மூன்று தொழிற் பயிற்சி பெறுவோரையும் வைத்திருக்கலாம். மேலும், எழுத்து வடிப்போரில் நான்கு பேருக்கு மேல் வேலையிலமர்த்துதல் கூடாது. தகுதியற்றவர்கள் அல்லது அதுவரையில் தொழிற் பயிற்சி பெறாதவர்கள் அச்சடித்தல், ஏடுகட்டுதல், எழுத்து வடித்தல், அச்சு இயந்திரத்தின் பாகங்களையோ அல்லது அச்சுத்தொழிலுக்கான பொருள்களையோ செய்தால், கசையடி தருதல், தொழுமரத்தில்

இடுதல், சிறையிடல் போன்ற தண்டனைகளைப் பெறுவர். ஒருமுறை ஆய்ந்து அனுமதிபெற்ற நூலினை மீண்டும் அச்சிடுவதற்குப் புதிய அனுமதிச் சீட்டுப் பெறவேண்டும். வெளி நாடுகளில் இருந்துவரும் நூல்களை லண்டன் நகரத்திலேதான் இறக்குமதி செய்யவேண்டும். அவற்றையெல்லாம் கவனமாக ஆய்வதற்கென்று அதிகாரிகளைக் காண்டர்பரி ஆர்ச்பிஷப்பும், லண்டன் நகர பிஷப்பும் அமர்த்தினர். 'அரசத் துரோக மானவை, அவதூறானவை, உட்பிரிவினை வளர்ப்பவை' யாக உள்ள நூல்களைக் கைப்பற்றி அழிக்கும் அதிகாரமும் அவர்களிடம் இருந்தது. புத்தகக் கடைகளையும், தனியார் வீடுகளையும் அவ்வப்போது சோதனையிடும் அதிகாரமும் அவர்களுக்கு வழங்கப்பெற்றது. இருப்பினும், இத்தகைய தீய சகுனமுடைய காலத்தில்தான், முதலாம் ஜேம்ஸின் ஆட்சியிறுதியில், 'வீக்லி நியூஸ்' (Weekly Newes) என்னும் முதல் செய்தித்தாள் தலைகாட்டியது.[52] மன்னருக்கும் பாராளுமன்றத்திற்கு மிடையேயான போராட்டம் நடந்தபோது திரளான ஆய்வுக் கட்டுரைகளும் செய்தித்தாள்களும் வெளிவந்தன.[53] விண்மீன் மண்டப மன்றத்தை அழித்த நீள் பாராளுமன்றம், பத்திரிகைத் தணிக்கையைத் தொடர்ந்து செய்தது. மேலும், கொடுங்கோன்மை சார்ந்த உரிமை ஆணைகள் மூலமாக அரச கட்சியைச் சார்ந்த எழுத்தாளரையும், உயர் திருச்சபை எழுத்தாளரையும் ஒடுக்க முயன்றது. 'அச்சிடுவதில் தோன்றிய ஊழல்களை ஒழிப்பதற்காக' என வெளிவந்த உரிமையாள்களின்படி அனுமதிச்சீட்டுப் பெறாத அச்சகங்களைக் கண்டுபிடிப்பதற்காகவும், எழுத்தாளர்கள், அச்சிடுவோர், ஆகியோரைச் சிறைப்படுத்தவும், இரவாயினும் பகலாயினும், வீட்டுக் கதவுகளையும் பூட்டுகளையும் உடைத்தெறியும் அதிகாரத்தை அரசாங்க அதிகாரிகள் பெற்றிருந்தனர்.[54] இச்செயல் முறைகள் காரணமாக மில்டனின் 'அரியோபகிடிகா' (Areopagitica) வெளிவந்தது. தணிக்கையாளர் உண்மையை அழிக்க முயல்வது 'உயிருள்ள ஒன்றையன்றி, அழியாத்தன்மை பெற்ற ஒன்றினை வெட்டி வீழ்த்துவது போலாகும்' என அதில் எழுதினர். 'உண்மையை வெற்றி பெறுமாறு செய்வதற்குக் கொள்கைகள் தேவையில்லை; சூழ்ச்சித்திறங்கள் தேவையில்லை; அனுமதிச்சீட்டுகள் தேவையில்லை' யென்றும் விளக்கினர். மற்ற எல்லா உரிமைகளுக்கும் மேலாக மனச்சாட்சிக்கு ஏற்ற முறையில் அறிய, வெளியிட, தடையின்றி விவாதிக்க உரிமைவேண்டும்'[55] என்று பெருந்தன்மையோடு, ஆனால் பயனின்றி, வேண்டுதல் விடுத்தார். இருந்தபோதிலும்,

செய்திகளைத் தணிக்கை செய்யவேண்டியதன் அவசியத்தை மில்டன் ஒப்புக்கொண்டார். தணிக்கையாளர் பதவியையும் ஏற்றார்.[56]

**1662ஆம் ஆண்டின் அனுமதிச் சீட்டுச் சட்டம்:** முன்னிலை மீட்சிக்குப்பிறகு 1662ஆம் ஆண்டு ஏற்பட்ட அனுமதிச் சீட்டுச் சட்டத்தின் மூலமாக அச்சுத் தொழிலின் மீதான முழுக் கட்டுப்பாடும் அரசாங்கத்திடம் வந்தது. முதலில் மூன்று ஆண்டுகளுக்கென்றே நிறைவேறிய அச் சட்டம் புதுப்பிக்கப்பெற்றதால், 1679 வரை வழக்கிலிருந்தது. லண்டன் நகரத்திலும் யார்க் நகரத்திலும், இரு பல்கலைக் கழகங்களிலும்தான் அச்சிட முடியும். 1637ஆம் ஆண்டு விண்மீன் மண்டப மன்றம் வெளியிட்ட உரிமையாணைகளில் இருந்ததைப் போலவே, இச் சட்டமும் தலைமை அச்சகரின் எண்ணிக்கையை இருபதாக வரையறுத்தது. முதலிலேயே அனுமதிச் சீட்டு வழங்கப்பெறாத நூலையோ அல்லது துண்டு வெளியீடுகளையோ தனிப்பட்ட ஒருவர் வெளியிடல் கூடாது. சான்சலர் பிரபுவும், பொதுச் சட்ட முறைமன்ற நடுவரும் வெளியிடும் சட்ட நூல்களும், அரசாங்கச் செயலர் வெளியிடும் வரலாற்று அல்லது அரசியல் புத்தகங்களும், ஏர்ல் மார்ஷல் வெளியிடும் கட்டிய இயல் ஏடுகளும், காண்டர்பரி ஆர்ச்பிஷப் அல்லது லண்டன் நகர பிஷப் அல்லது பல்கலைக்கழகத் துணைவேந்தர்களில் ஒருவர் வெளியிடும் எல்லா நூல்களும் விதிவிலக்கு பெற்றவை.[57] அருவருக்கத்தக்க நூல்களை அச்சிட்டு வெளியிடுவோருக்கு அவரவர் குற்றத்திற்குத் தகுந்தாற்போலத் தூக்கிலிடல், உடலை நாலு கூறாக வெட்டுதல், உறுப்பழித்தல், தொழுமரத்தில் வதைத்தல், கசையடி தருதல், தண்டம் விதித்தல், சிறையிடல் போன்ற தண்டனைகளை அளித்தனர். அவர்களுடைய நூல்களையும் தூக்கிலிடும் பொதுப்பணியாளர் தீயிட்டுக் கொளுத்தினர்.[58] 1679ஆம் ஆண்டில் அனுமதிச்சீட்டுச் சட்டம் சிறிது காலத்திற்கு வழக்கொழிந்திருந்தது. அதுபோது மன்னருடைய அனுமதியின்றி அரசாங்கம் பற்றிய உண்மையான அல்லது பொய்யான புகழ்ந்து கூறும் அல்லது குற்றஞ்சாட்டும் செய்திகளை வெளியிடுதல் பொதுச் சட்டத்தின்படி குற்றமாகும் என்று தலைமை நீதிபதியான ஸ்க்ராக்ஸ் (Scroggs) என்பாரின் தலைமையிலான பன்னிரு நடுவர் அறிவித்தனர்.[59] அதன் விளைவாக எல்லாச் செய்தித் தாள்களும் தடைப்பட்டன. அரசாங்கத்தின் இரு வெளியீடுகளிலிருந்தே மக்கள் செய்திகளையும், அரசியல் இரகசியங்களையும் அறியவேண்டியிருந்தது. அவற்றில்

ஒன்ருன 'லண்டன் கெஜட்டில்' (London Gazette) விளக்கம் ஏதுமின்றிச் சிறிதளவே செய்திகள் வந்தன. மற்ளுெரு வெளியீடான 'அப்சர்வரில்' (Observer) செய்திகள் எதுமின்றி விளக்கங்களே வந்தன. செய்தித்தாள்கள் இல்லாதவிடத்துத் தலைநகரில் பொதுமக்கள் கருத்துகளை வெளியிடும் கருவிகளில் காஃபி விடுதிகளே முக்கியமாயின. மாநில நகரங்களில் வாழ்ந்தவரும், பெரும் பகுதியினரான நாட்டு நிலக்கிழார்களும், குருமாரும், அரசியல் நிகழ்ச்சிகள்பற்றி அறிந்துகொள்ள லண்டனில் இருந்துவரும் செய்தி மடல்களையே நம்பியிருந்தனர்.[60]

**அனுமதிச் சீட்டுச் சட்டம் 1695ஆம் ஆண்டில் காலாவதியாகியது:** 1685ஆம் ஆண்டில் இரண்டாம் ஜேம்ஸ் பட்டத்திற்கு வந்ததும் அனுமதிச் சீட்டுச் சட்டத்தை ஏழு ஆண்டுகளுக்குப் புதுப்பித்ததால் புரட்சியின்போது அது வழக்கிலிருந்தது. 1692ஆம் ஆண்டில் மீண்டும் ஓராண்டிற்கு, அடுத்த பாராளுமன்றத் தொடர் கூடும்வரையில் அதனைப் புதுப்பித்தனர். ஆனால், 1695ஆம் ஆண்டில் அதனை மீட்கும் முயற்சி தோன்றியபோது, காமன்ஸ் சபை நிராகரித்து விட்டது.[61] அதிலிருந்து பத்திரிகைத் தணிக்கையென்பது இங்கிலாந்துச் சட்டத்தின் ஒரு பகுதியாக இல்லாதொழிந்தது.

கொள்கையளவில் இப்போது பத்திரிகை சுதந்திரமானது. ஆனால், நடைமுறையில் பல வழிகளில் இன்னும் அது தடைப்பட்டே நிற்கின்றது. 1679ஆம் ஆண்டில் தலைமை நீதிபதியான ஸ்க்ராக்ஸ் நிலைநாட்டிய கொள்கையை, மேலும் மதிப்பிற்குரியவரான ஹோல்ட் (Holt) என்பார், 1704ஆம் ஆண்டில் உறுதி செய்தார்.[62] காமன்ஸ் சபையின் சிறப்புரிமைகளைப்பற்றிப் பேசும்போது, மன்ற விவாதங்களை வெளியிடுவதைத் தடுப்பதற்காகக் கேள்வி முறையற்ற தனது அதிகாரத்தைப் பாராளுமன்றம் பயன்படுத்திய விதம்பற்றி ஏற்கெனவே குறிப்பிட்டோம்.[63] மேலும் செய்தித்தாள்களைக் கட்டுப்படுத்த வேறு இரு வழிகளையும் அரசாங்கம் கையாண்டது. அவற்றில் முதலாவது, செய்தித்தாள்களின்மீது பத்திர முத்திரை வரி விதித்தல்; இரண்டாவது அவதூறு இலக்கியச் சட்டத்தைப் பயன்படுத்துதல். எவ்வாறெனினும், தணிக்கையிலிருந்து விடுதலை கிடைத்தவுடன் விரைவில் பத்திரிகைகள் பெருகின. இரகசியச் செய்திகளையும், அரசியல் விவாதங்களையும் இணைத்துத் தரும் தற்கால வடிவினை ஆன் அரசியார் ஆட்சிக் காலத்திலேயே செய்தித்தாள்கள் பெற்றன.[64] அதேபோன்று பருவ இதழ்களின் அறிவாற்றல் திறனும் மிகுந்திருந்தது.

அடிசன், ஸ்டீல், ஸ்விஃப்ட், பாலிங்புரோக் போன்ற எழுத்தாளர்களின் மேதைத் தன்மையினால் அவற்றின் செல்வாக்கு வளர்ந்தது.

எனினும், வெகுவிரைவிலேயே கட்சிப்பூசலின் கருவியாகப் பத்திரிகைகள் மாறின. மேலும், அவை பயன்படுத்திய கீழ்த்தரமான மொழி காரணமாக அரசாங்கத்தாரின் திடமான எதிர்ப்பையும் கிளறின. அதிகாரத்திற்கு வந்த கட்சியினர், எதிர்க்கட்சியை ஆதரித்த வெளியீடுகளை யெல்லாம் அரசத் துரோகமான அவதூறுகள் என்று கூறி அவற்றை அழிக்கவே முயன்றனர்.

**செய்தித் தாள்களின்மீது பத்திர முத்திரைக் கட்டணம்:** அனுமதிச் சீட்டுச் சட்டத்தைப் புதுப்பிக்கலாம் என்றும் சிலர் யோசனை கூறினர். ஆயினும், நடைமுறைக்கு ஒவ்வாதது என அதனைக் கைவிட வேண்டியதாயிற்று. அதற்குப் பதிலாகப் பத்திரிகையைப் பொதுவாகக் கட்டுப்படுத்தவும், சிறிய செய்தித்தாள்களை அழிக்கும் நோக்கத்தோடும், செய்தித் தாள்களின் மீதும், விளம்பரங்கள் மீதும் பத்திர முத்திரைக் கட்டணத்தை அரசாங்கம் விதித்தது. ஆன் அரசியாரின் பத்தாம் ஆட்சியாண்டில் முதலாம் பத்திர முத்திரைக் கட்டணச் சட்டம் நிறைவேறியது.[65] இழிவான பருவ இதழ்கள் புழக்கத்தில் வராது தடுப்பதற்கும், வருவாய் இனமாக அமைவதிலும் அது பயனுள்ளதாக இருந்ததால், மெதுவாகக் கட்டணத்தை நான்கு பென்ஸிற்கு உயர்த்தினர். இதற் கிடையில் செய்தித்தாள்கள் அல்ல என்று கூறிக்கொண்டு, அரசியல் செய்திகளையும், கொள்கை துறப்புகளையும் ஏழை மக்களிடையே பரப்பும் வகையில், ஆய்வுக் கட்டுரைகள் ஏராளமாக மக்களிடையே உலவின. இத்தகைய கட்டணம் செலுத்தாத ஆய்வுக் கட்டுரைகளும், பிற பருவ இதழ்களும் கட்டணம் செலுத்தவேண்டுமென்பதை மூன்றும் ஜார்ஜ் ஆட்சியின்போது வந்த ஆறு சட்டங்கள் (Six Acts) என வழங்கப்பெற்றவற்றுள் ஒன்று வலியுறுத்தியது.[66] பத்திர முத்திரைக் கட்டணம் செலுத்தாது ஏமாற்றியவர் பலர். 1832ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டம் நிறைவேறும் வரையில் அரசாங்கத்திற்கும் கள்ளப் பத்திரிகைகளுக்கு மிடையே போராட்டம் தொடர்ந்து நடைபெற்றது. மூன்றும் ஜார்ஜ் காலத்தில் உயர்த்தப்பெற்ற விளம்பரக் கட்டணத்தின் விதத்தினை 1833ஆம் ஆண்டில் குறைத்தனர். 1853ஆம் ஆண்டில் அதனை அடியோடு நீக்கினர். செய்தித் தாள்களின்

மீதான பத்திர முத்திரைக் கட்டணமும், 1836ஆம் ஆண்டில் ஒரு பென்ஸாகக் குறைந்தது. 1855ஆம் ஆண்டில் அது அடியோடு நீங்கியது.[67] பிற்காலத்தில் பொதுமக்கள் கல்வி வளர்ச்சியில் பெருந்தடையாக இருந்த காகித வரியையும் 1861ஆம் ஆண்டில் அரசாங்கம் நீக்கியது.[68]

**அவதூறு இலக்கியச் சட்டம் :** பத்திரிகைச் சுதந்திரத்தை ஒடுக்குவதில் பத்திர முத்திரைக் கட்டணச் சட்டத்தைக் காட்டிலும் சக்தி வாய்ந்த கருவியாகத் திகழ்ந்தது, குற்ற இயல் சார்ந்த அவதூறு இலக்கியச் சட்டமேயாகும். மூன்றாம் வில்லியம், ஆன் ஆகியோர் ஆட்சியில் இச் சட்டத்தை அரசாங்கம் தீவிரமாக நிறைவேற்றிவைத்தது. ஆனால், முதலிரண்டு ஜார்ஜ் மன்னர் ஆட்சிக்காலங்களில் பத்திரிகைகள் பொதுவாக அதிக சுதந்திரத்தை அனுபவித்தன எனலாம். ஏனெனில், அவற்றின் தாக்குதல்களை சர் ராபர்ட் வால்போல் பொருட்படுத்தவில்லை. மேலும் எல்லாக் கட்சியைச் சார்ந்த அரசியல் எழுத்தாளர்களையும் வெளிப்படையாகவே அவர் வெறுத்துப் பேசினார். மூன்றாம் ஜார்ஜ் பட்டமெய்திய பிறகு அரசியல் நடவடிக்கைகளில் பொதுமக்கள் அதிக அக்கறை காட்டத் தொடங்கினர். ஊழல் மிகுந்த காமன்ஸ் சபையில் போதுமான பிரதிநிதித்துவம் இல்லையெனக் கண்ட அவர்கள், தங்களது கருத்துகளைப் பத்திரிகைப் பத்திகளில் வெளியிடத் தலைப்பட்டனர். அதனால் அக்காலத்திலிருந்தே பத்திரிகைகள், வல்லமை மிகுந்த அரசியல் சக்தியாக மிக விரைவில் வளர்ச்சியுற்றன.

**'நார்த் பிரிட்டன்' 45ஆம் எண் (No. 45 of the North Briton) :** மீண்டும் அரசாங்கத்துடன் பத்திரிகைகள் போராட்டம் தொடர்ந்தது இயற்கையே. 'நார்த் பிரிட்டன்' பத்திரிகைகளில் வில்க்ஸின் கடுமையான தாக்குதல்களின் பயனாக, பிரதமரான பூட் பிரபு 1763ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் எட்டாம் தேதியன்று பதவியிலிருந்து வெளியேற வேண்டியதாயிற்று. அப் பத்திரிகையின் 45ஆம் இதழ் இரு வாரங்கள் கழித்து, அதாவது ஏப்ரல் மாதம் 23ஆம் தேதியன்று வெளிவந்தது. பாராளுமன்றத்தை ஒத்திப்போட்டு மன்னர் நிகழ்த்திய உரையையும், சிறிது காலத்திற்கு முன்னர் தான், அதாவது 1763ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் பத்தாம் நாளன்று, ஏற்பட்ட பொதுமக்கள் விரும்பாத பாரிஸ் சமாதானத்தையும் அவ்விதழில் கடுமையான, இழிவுபடுத்தும் வாசகங்களைக் கொண்டு ஆய்வுக் கட்டுரை வெளிவந்தது.

45ஆம் எண்ணுள்ள வெறுக்கத்தக்க இதழை எழுதி அச்சிட்டோரின் பெயர் குறிப்பிடாது, அவர்களைக் கண்டு பிடித்துச் சிறை செய்வதற்கான பொதுப் பற்றுணையை, சிறப்பதிகாரத்தைப் பயன்படுத்தி அரசாங்கம் வெளியிட்டது. இத்தகைய பற்றுணை மூலமாக சந்தேகத்தின் பேரில், வில்க்ஸ் உள்பட நாற்பத்தொன்பதின்மர் சிறையிடப்பெற்றனர். அதனை எழுதியவர் வில்க்ஸ்தான் என்பதை அறிந்தவுடன் அவர்மீது அவதூறு இலக்கிய வழக்கினை அரச நீதிமன்றத்தில் கொண்டு வந்தனர்; அவ் வழக்கில் தீர்ப்பும் வழங்கப்பெற்றது.[69] ஆயின், பாராளுமன்ற உறுப்பினர் என்ற முறையிலான சிறப்புரிமையால்[70] விடுதலை பெற்ற வில்க்ஸ் அரசாங்கத் துணைச் செயலரான மிஸ்டர் உட் (Mr. Wood) என்பார் மீது வழக்குத் தொடுத்தார். அவருக்கு எதிராக வந்த பற்றுணை செல்லுபடியாகாது[71] என்ற அடிப்படையில், 1000 பவுன்கள் இழப்பீடாக அவருக்குக் கிடைத்தன. நான்கு நாட்களுக்குப்பின் ஐயப்பாட்டின் மீது சிறையிடப்பெற்ற அச்சாளர்களில் ஒருவரான டிரைடன் லீச் (Dryden Leach) என்பவர் அரச அதிகாரிகள் மீது வழக்குத்தொடுத்து, 400 பவுன்களை இழப்பீடாகப் பெற்றார். 1765ஆம் ஆண்டில் அரச முறை மன்றத்தில், விதி விலக்கு மசோதா ஒன்றை ஆதாரமாக வைத்து விவாதித்தபோது, 'கேடுபயக்கும் பழக்கமாக இருக்கும் ஒன்று பழமை காரணமாக புனிதமடையாது'[72] என்று அறிவித்த மேன்ஸ்ஃபீல்டு பிரபுவும், வேறு மூன்று நடுவரும், பொதுப் பற்றுணை சட்டவிரோதமானது என்று வலியுறுத்தினர்.

**பொதுப் பற்றுணைகள் :** அரசாங்கச் செயலர் வெளியிட்ட சோதனை செய்யும் பொதுப் பற்றுணையின் பேரில் தமது நூல்கள் அனைத்தையும் பத்திரிகைகளையும் பறிமுதல் செய்த அரசாங்க அதிகாரிகளின் மீது, 'மானிடர்' அல்லது பிரிட்டிஷ் ஃபிரிஹோல்டர்' (Monitor, or British Freeholder) என்ற பத்திரிகையின் சந்தேகத்திற்கிடமான ஆசிரியர் ஜான் எண்டிக் (John Entick), 1765ஆம் ஆண்டில், வழக்கொன்று தொடுத்தார். அவ் வழக்கில் அரசாங்கத்திற்கு எதிராகத் தீர்ப்பு அமைந்தது. விண்மீண் மண்டப மன்றத்தின் பழக்கத்தின் அடிப்படையில் எழுந்ததும், இரண்டாம் சார்லஸ் காலத்து அனுமதிச்சீட்டுச் சட்டம் வழக்கொழிந்த காலத்திருந்து அநியாயமாகத் தொடர்ந்து வருவதுமான இத்தகைய பொதுப் பற்றுணைகள் முற்றிலும் முறைகேடானவை என்று காமன்ஸ் ப்ளீஸ் (Commons Pleas) என்னும் உயர் நீதிமன்றத்தின் தலைமை நடுவரான காம்டன்

பிரபு (Lord Camden) முடிவு செய்தார்.[73] அரசாங்கத்தின் பின்வரும் வாதங்களை அந் நீதிமன்றம் ஏற்க மறுத்தது: (1) பொது நலனுக்கு அவசியமாகிறது என்பதால், சோதனை யிடுவதற்கான இத்தகைய அதிகாரங்களைப் பயன்படுத்துவது நியாயமே. (2) அவைகள் 'அண்டர்சனில் உள்ள விதி,'[74] களின்படி மன்னுடைய முதல்வரால் அல்லது அரசாங்கச் செயலர் அலுவலகத்தால் வெளியிடப்பெறுபவை. (3) நீண்டகாலமாக வழக்கிலிருப்பவையாதலால், அவை நியாயமானவையே. இத்தகைய விவாதங்கள் வந்தபோது, முறைமன்றத்தில் நீண்டகாலமாக வழக்கிலிருக்கும் ஒன்று சட்டமாகலாம் என்றும், பொதுச் சட்டமே அம்முறையில்தான் உருவானது என்றும் நீதித்துறை சாராத அலுவலகத்தில் வழக்கில் இருப்பதனாலேயே, ஒன்று சட்டமாகிவிட முடியாதென்றும் வலியுறுத்தப்பெற்றது.

**1769ஆம் ஆண்டு வந்த ஜூனியஸின் 'கடிதம்' ('Junius Letter')** : வில்க்ஸிற்கும், ஒருசில அச்சாளருக்கும் எதிராகவந்த செயல்முறைகளினால் ஏற்பட்ட பரபரப்பு அடங்குவதற்குள் 1769ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 19ஆம் தேதி, 'மார்னிங் அட்வைசர்' (Morning Adviser) என்னும் பத்திரிகையில் ஜூனியஸ் என்ற பெயரில் எழுதப்பெற்ற புகழ் வாய்ந்த 'மன்ன ருக்கான கடிதம்' (Letter to the King) வெளிவந்தது. அதன் காரணமாக புரட்சிக்காலந்தொட்டு அவதூறு இலக்கியச் சட்டத் திற்கு நீதிபதிகள் எத்தகைய தீவிர, விரிவகலமான விளக்கத்தைக் கொண்டார்கள் என்பதில் மக்களுடைய கவனம் திரும்பியது. ஏற்கெனவே 1731ஆம் ஆண்டில் 'கிராஃப்ட்ஸ்மென்' (Craftsman) பத்திரிகையில் அவதூறுச் செய்தியை வெளியிட்டதற்காக ஏற்பட்ட ரிச்சர்டு ஃபிராங்க்லின் வழக்கில், குற்றச்சாட்டில் எப்போதும் குறிப்பிடப் பெறும் பொய்ம்மை என்பது, அவதூறு இலக்கியம் ஆகவேண்டும் என்பது இல்லை எனக் கொள்ளப் பெற்றது. குற்றஞ்சாட்டப்பெற்ற வாசகங்களின் உண்மைத் தன்மையை நிரூபிக்கும் சான்று எதையும் ஏற்க, ரேமாண்டு பிரபு திடமாக மறுத்தார்.[75] ஜூனியஸின் கடிதத்தின் மறுபதிப்பை விற்ற புத்தகக் கடைக்காரரான ஜான் அல்மோன் (John Almon)[76] வழக்கில் மேலும் இரு கொள்கைகளை முறை மன்றங்கள் நிலை நிறுத்தின. (1) இசைவு தரவில்லையென்பதை அல்லது உடந்தையாக இருக்கவில்லையென்பதை மெய்ப்பிக்காத வரையில் அவதூறு இலக்கியத்தை வெளியிடுவோர் அவர் களுடைய பணியாட்களின் செய்கைகளுக்கும் பொறுப்பானவர்: அதன் பிறகு குற்றச்சாட்டினின்றும் விடுவிக்கும் பாங்கான சான்றுகளை ஏற்பதில்லை யென்றும், பணியாளர் வெளியிடும்

அவதூறு இலக்கியமே முதலாளியின் குற்றத்திற்குச் சான்றாகும் என்றும் நீதிபதிகள் தீர்மானித்தனர். (2) ஓர் அவதூறு இலக்கியம் குற்றமுள்ளதா என்பதைத் தீர்மானிக்கும் பொறுப்பு நடுவருடையதே யென்றும், அது வெளியிடப் பெற்ற உண்மையை ஆய்வதும், குற்றச்சாட்டிலே குறிப்பிடப்பெற்ற பொருளையே அந்த அவதூறு இலக்கியம் உணர்த்துகின்றதா என்பதையுமே ஜூரர்கள் நிர்ணயிக்க வேண்டுமென்றும் மேன்ஸ்ஃபீல்டு பிரபு வலியுறுத்திக் கூறினார். 'மன்னருக்கான கடிதத்தை' முதலில் வெளியிட்டவரான உட்ஃபாலின் (Woodfall)[77] வழக்கில், சட்டத்தின் இத்தகைய விளக்கத்தை வேராறுப்பதற்காகவே 'அச்சிட்டு வெளியிட்ட குற்றம் மட்டுமே அவர் செய்தார்' என ஜூரர்கள் தீர்ப்பளித்தனர். தெளிவற்றது என இத் தீர்ப்பை நீதிமன்றம் கருதியதால், புதிய வழக்குத் தொடர்வது அவசியமாகியது. அடுத்து வந்த காலத்தில் அதே கடிதத்தை மறுபதிப்பு செய்த மில்லர்,[78] வேறுசில அச்சாளர் மீது வழக்குத் தொடர்ந்தபோது, அவர்கள் குற்றவாளிகள் அல்ல என ஜூரர்கள் துணிவுடன் அறிவித்தனர்.

**அவதூறு வழக்குகளில் ஜூரர்களின் உரிமைகள் :** இந்த வழக்குகளில் நீதிபதிகள் கொண்ட கொள்கை, சட்ட விளக்கம் என்னும் வகையில் சரியானதே எனினும், அரசாங்கத்தின் தன்மை பற்றியும் குடிமக்களின் உரிமைகளின் எல்லை பற்றியும் அக்காலத்தவர் கொண்டிருந்த கருத்திற்கு அது முற்றிலும் மாறுபட்டிருந்தது. மேலும் பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் அக் கொள்கையைக் கடுமையாகக் கண்டித்தனர். 1783ஆம் ஆண்டில் எழுந்த செயின்ட் அசாபின் கோயில் குரு (Dean of St. Asaph)[79] வழக்கில் அவதூறு வழக்குகளில் ஜூரர்களின் உரிமையெனப் பெருந்தன்மையோடும் திறமையாகவும் நிலைநாட்டிய எர்ஸ்கின் என்பார், வாரன் ஹேஸ்டிங்ஸின் மீதான[80] அரசத் துரோகக் குற்றச்சாட்டில் காமன்ஸ் சபை கையாண்ட முறைபற்றி, 'அவமதிப்பும் அவதூறும் நிரம்பிய இலக்கியத்தை' வெளியிட்டதை எதிர்த்து 1789ஆம் ஆண்டில் எழுந்த ஸ்டாக்டேல் (Stockdale) வழக்கிலும், அதனை நிலைநிறுத்த முற்பட்டார். இறுதியாக, 1792ஆம் ஆண்டில் ஜூரர்களின் உரிமைகள்பற்றி நீதிபதிகள் கொண்டிருந்த கருத்தினை ஃபாக்ஸின் அவதூறு இலக்கியச் சட்டம் நடைமுறையில் மாற்றியமைத்தது. அவதூறுபற்றிய வழக்கு அல்லது செய்தி முழுமையும் ஆராய்ந்து குற்றமுடையதா அல்லது குற்றமற்றதா எனப் பொதுவாகத்

தீர்ப்பளிக்கும் உரிமை ஜூரர்களுக்கு உண்டு என அச் சட்டம் வகுத்தது.[81]

**1792ஆம் ஆண்டில் ஃபாக்ஸ் கொண்டுவந்த அவதூறு இலக்கியச் சட்டத்தின் பயன் :** அரசத் துரோகமான அவதூறு பற்றிய சட்ட முறையிலான வரையறை, அன்றும் இன்றும் விரிவகலமுடையதாகும். அதனைக் குறைக்கவோ அல்லது வரையறுக்கவோ ஃபாக்ஸின் சட்டமும் முயலவில்லை. மாருகச் செயல்முறை சார்ந்ததாகவே அதன் பயன் அமைந்தது. ஆயினும், அது ஒரு குறிப்பிட்ட வெளியீடு, அரசத் துரோக அவதூறுதானு என்பதுபற்றிக் கூறும் உரிமையை நீதிபதியிடமிருந்து ஜூரர்களிடம் மாற்றியது. அதனுல் ஸ்டூவேர்டு, விண்மீன் மண்டலமென்ற காலங்களின் நினைவுச் சின்னங்களான, பழைய வழக்குகளில் கண்ட தீவிர விளக்கங்களைக் கற்று அறிந்த நீதிபதிகள், வழக்குரைஞர்கள் ஆகியோரைக்காட்டிலும் பொதுமக்களின் கருத்தினை அதிகமாகப் பிரதிபலிக்கக்கூடிய கருத்துகளைக் கொள்ளத்தக்க பன்னிருவர் முடிவெடுக்கும் உரிமையை அச் சட்டம் வழங்கியது. அவதூறு வழக்குகளில் தண்டனை பெற்ரேரின் எண்ணிக்கையை அச் சட்டம் குறைக்கவில்லை. நூறு ஆண்டுகளுக்கு முன்னர் யாகோபிய கருத்துகளைக் கொண்ட எழுத்தாளர்மீது ஜூரர்கள் கடுமையாக இருந்தார்கள் என்பதை நிகழ்ச்சிகள் எடுத்துக்காட்டின. குற்றமற்றவர் என ஜூரர்கள் அறிவித்தால், அதுவே இறுதியானது. ஆனுல், ஒரு செய்தியினை வெளியிடுதல் சட்டப்படி அவதூருனதா அல்லவா என்பதை நீதிபதி ஏற்குமாறு செய்வதற்குத் தீர்ப்பினைத் தடுத்து நிறுத்தும் தீர்மானத்தின் மூலமாக, பிரதிவாதியின் உரிமைக்கு உட்பட்டதாகவே இருக்கவேண்டும் ஜூரர்கள் அளிக்கும் குற்றத் தீர்ப்பு என்பதை ஃபாக்சின் சட்டமே வலியுறுத்தியது. 'பொதுவாகப் பேசுகின்றபோது, நடவடிக்கை எடுக்கப்படுமானுல், வெளியிடப்பெற்ற செய்தி அவதூருனது அன்று என நீதிமன்றத்தைக்கொண்டோ அல்லது ஜூரர்களைக்கொண்டோ அறிவிக்குமாறு ஒருவர் செய்யக்கூடுமானுல், அவர் விரும்பும் எதையும் வெளியிட முடியும் எனக் கூறுவதில் உண்மை பொதிந்து கிடக்கின்றது.'[82]

**பிற்போக்கான காலம், 1792—1832 :** அரசியல் எழுத்தாளரைச் சூழ்ந்திருந்த ஆபத்து, அரசத்துரோக அவதூறு இலக்கியச் சட்டம் ஒன்றுமட்டுமன்று. மூன்ரும் ஜார்ஜின் ஆட்சியில் முதல் முப்பது ஆண்டுகளில் வேகமாக வளர்ச்சியுற்ற கருத்துச் சுதந்திரத்திற்குத் தடையேற்பட்டது. ஃபிரெஞ்சுப்

புரட்சியாளர்களின் செயல்முறைகளினால் ஆங்கிலக் குடிமக்களில் பெரும்பாலோரிடையே ஜனநாயகத்தைப்பற்றிய பீதி பரவியது. இங்கிலாந்திலேயே வாழ்ந்த எண்ணிக்கைக் குறைவான, ஆனால், தொல்லைதரும் கூட்டத்தினராக இருந்த சமுதாய, அரசியல் சீர்திருத்தவாதிகளின் தீவிரச் செய்கைகளினால் அத்தகைய பீதி மேலும் பரவியது. பழிசார்ந்த, அரசத் துரோகமான இலக்கியங்கள் மக்களிடையே உலவி வருவதைப்பற்றி அவர்கள் எச்சரிக்கையாக இருக்கவேண்டுமென்று கூறிய பேரறிவிப்பாணை ஒன்றை 1792ஆம் ஆண்டில் அரசாங்கம் வெளியிட்டது. அத்தகைய இலக்கியங்களின் ஆசிரியர்கள், அச்சாளர்கள், அவற்றை ஊக்குவித்தவர்கள் ஆகியோரைக் கண்டுபிடிக்குமாறு மாஜிஸ்டிரேட்டுகளை அவ்வாணை கேட்டுக்கொண்டது. அதிலிருந்து கருத்துச் சுதந்திரத்தின் வளர்ச்சியில் பிற்போக்கான காலம் தொடங்கியது எனலாம். 1832ஆம் ஆண்டில் சீர்திருத்தச் சட்டம் நிறைவேறும்வரை, 'அந் நிலை நீங்கவில்லை. அக்காலப் பகுதியில் பத்திரிகைகளின்மீது ஏராளமான வழக்குகள் வந்தன. கிளர்ச்சியூட்டும் அல்லது அரசத் துரோகமான பேச்சுகளை அரசாங்கம் கடுமையாக ஒடுக்கியது.[83] செய்தித்தாள்களைக் கட்டுப்படுத்தும் விஷயத்தில் சட்டமன்றமும் அடிக்கடி அக்கறை காட்டியது.

**1832ஆம் ஆண்டிலிருந்து பத்திரிகைச் சுதந்திரம் :** ஆயின், பத்திரிகைச் சுதந்திரம் 1832ஆம் ஆண்டு முதல் முழு அளவில் நிலைநாட்டப்பெற்றது. அரசாங்கத்தின் செயல்களையும், பொது வாழ்வில் ஈடுபட்டிருப்பவரையும், பொதுக் காரியங்களையும் ஆயும்போது, குறைகூறவும் கண்டிக்கவும் பத்திரிகைகளுக்கு மிகுந்த உரிமை தரப்பட்டது. 1843ஆம் ஆண்டில் நிறைவேறிய காம்பெல் பிரபுவின் (Lord Cambell) அவதூறு இலக்கியச் சட்டப்படி அவமதிப்பான அவதூறு வழக்குத் தொடரப் பெற்றுள்ள பிரதிவாதி ஒருவர், தாம் வெளியிட்ட செய்தி உண்மையானது என்றும், அது பொதுமக்களின் நலனுக்காக வெளிவந்தது என்றும் வாதிட வழி ஏற்பட்டது. மேலும் பணியாளர்களுடைய அதிகாரபூர்வமற்ற செய்கைகளுக்கு ஆன குற்றப் பொறுப்பினைப் பதிப்பாளரே ஏற்கவேண்டுமென்ற கடுமையான விளக்கம் தந்த அல்மோன் வழக்கின்[84] தீர்ப்பை அச் சட்டம் மாற்றியமைத்தது. தமது அதிகாரமோ அல்லது இசைவோ இன்றி, தமக்குத் தெரியாமலே அச்சிடப்பெற்றது என்றும், தமது அக்கறை குறைவாலோ அல்லது கவனக் குறைவாலோ அது ஏற்படவில்லை என்றும் எல்லா வழக்குகளிலும் பிரதிவாதி விவாதிக்கலாம்.[85] பத்திரிகைத்

தணிக்கையைப் போலவே அவதூறு இலக்கியத்திற்காக அரசாங்கம் வழக்கு தொடுத்தல் என்பது கடந்தகாலச் செயலாகவே இப்பொழுது காட்சியளிக்கின்றது. இறுதியாக, அடக்குமுறைக் கொள்கை கைவிடப்பெற்றது. 'கூரறிவாளரைத் தண்டித்தல் அவர்கள் அதிகாரத்தை வளர்ப்பதாகும் என்றும், தடைசெய்யப்பெற்ற இலக்கியம் உண்மையென்னும் நெருப்பாகும் என்றும், அதனை மிதித்து அழிக்க எண்ணுவோர் முகத்திலேயே அது தெறிக்கும் என்றும்'[86] கூறிய பேகன் பிரபுவின் முதுமொழியின் உண்மையை, இறுதியாக அரசாங்கத்தார் நடைமுறையில் ஏற்றுக்கொண்டனர்.

எவ்வாறெனினும், பத்திரிகைச் சுதந்திரப் பிரச்சினை தீர்ந்துவிட்டதென்று கொள்ள முடியாது. விட்டுக்கொடுத்து சமரசம் செய்துகொண்டாலன்றி அப்பிரச்சினை தீருவதற்கில்லை. சூழ்நிலைகளுக்கேற்ப விட்டுக்கொடுத்துச் சமரசம் செய்து கொள்வதில் மாறுதல்கள் தோன்ற முடியும். நம்முடைய காலத்தில், அரசத் துரோகமான அவதூறு இலக்கியச் சட்டத்தின்மீது அல்லாது, அண்மைக் காலத்தில் வெளிவந்தவையான 1911, 1920ஆம் ஆண்டின் அரசாங்க இரகசியக் காப்புச் சட்டங்கள், 1934ஆம் ஆண்டின் அரசியல் அமைதிக் கேட்டினைத் தூண்டும் சட்டம் (Incitement to Disaffection Act) போன்றவற்றின் மீதுதான் விவாதங்கள் எழுகின்றன.

## விண்ணப்பம் செய்துகொள்ளும் உரிமை

குடிமக்கள் கொண்டிருந்த பெருமதிப்பு வாய்ந்த உரிமைகளில் மன்னரிடமும், பாராளுமன்றத்திடமும் விண்ணப்பம் செய்துகொள்ளும் உரிமையும் ஒன்றாகும். ஆரம்பகாலத்திலிருந்தே அவ்வுரிமையைக் குடிமக்கள் கொண்டாடியதாகத் தெரிகிறது. ஆயினும், பல நூற்றாண்டுகளாகத் தனிமுறையிலான அல்லது தலத்துக் குறைபாடுகளை நீக்குவதற்காகவே நடைமுறையில் விண்ணப்பங்கள் பயன்பட்டன. பிற்காலத்தில் ஒப்புரவு நீதிமன்றங்களும், பாராளுமன்றத் தனியார் சட்டங்களும் அளித்த கழிவுகளையே அவ் விண்ணப்பங்கள் வேண்டின. பெரும் புரட்சி தோன்றிய காலத்தில்தான் அரசியல் செய்திகளுக்காக விண்ணப்பங்கள் விடுத்தல் வழக்கத்திற்கு வந்தது. பெருந்திரளான மக்கள் கையெழுத்திட்டு அனுப்பிய ஏராளமான விண்ணப்பங்கள் முதலாம் சார்லஸுக்கும், நீள் பாராளுமன்றத்திற்கும் சென்றன,

நீள் பாராளுமன்றத்தின் ஆரம்ப காலத்தில் பலதிறப்பட்ட கூட்டத்தினர் விடுத்த விண்ணப்பங்களில் இருந்த அச்சுறுத்தலை மனத்தில் கொண்டே, அநேகமாக 1661ஆம் ஆண்டில் கட்டுப்பாட்டுச் சட்டம் ஒன்றினை நிறைவேற்றியிருக்கவேண்டும்.[87] அதாவது, இரண்டாம் சார்லஸின் பதின்மூன்றும் ஆட்சியாண்டின் முதல் சட்டத்தினை நிறைவேற்றியிருக்கவேண்டும். பாராளுமன்றக் கூட்டத்தொடரை அடிக்கடி தள்ளி வைத்ததன்பேரில், நாட்டுமக்கள் அதிருப்தி கொண்டிருந்த காரணத்தால், பாராளுமன்றத்தைக் கூட்டவேண்டுமென்று கோரி ஏராளமானவர் கையெழுத்திட்ட விண்ணப்பங்களை அனுப்புதற்கான பெரு முயற்சிகள் 1679ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் எழுந்தன. அதை அடுத்து அத்தகைய விண்ணப்பங்களை அனுப்புவோர் தண்டனைக்குள்ளாவர் என்னும் அரச அறிவிப்பாணை பிறந்தது. இதனால் ஓரளவு தடையேற்பட்டபோதிலும், விண்ணப்பங்களை அனுப்புவது அடியோடு நின்றுவிடவில்லை. அதன் காரணமாகப் பாராளுமன்றத்தைக் கூட்டவேண்டுமென்பதற்காக அனுப்பப் பெறும் விண்ணப்பங்களை வெறுத்து மாற்றுக் கடிதங்களை கிராண்ட் ஜூரி என்னும் ஆய்வுக் குழுக்களும், மாஜிஸ்டிரேட்டுகளும், வேறு பல குழுக்களும் அனுப்பிவைத்தன. அதிலிருந்து பிற்காலத்தில் விக்குகளென்றும் டோரிகளென்றும் வழங்கப்பெற்ற இரு பிரதான கட்சிகளுக்கு அக்காலத்தே 'விண்ணப்பதாரர்கள்' (Petitoiners) என்றும் 'வெறுப்போர்' என்றும் பெயர்கள் வந்தன.

ஏழு பிஷப்புகள் வழக்கில், மறைந்த மன்னர் அதனை மறுப்பதற்கு முயன்றதனால், மன்னருக்கு விண்ணப்பம் செய்யும் குடிமகனின் உரிமையை உரிமைகள் மசோதா வெளிப்படையாகவே வலியுறுத்தியது. ஆயினும், நீண்டகாலத்திற்கு அத்தகைய கருத்து வெளியிடும் முறையைப் பாராளுமன்றம் கண்டித்துவந்தது. தனது வேலைகளில் தலையிடுவதை அச்சபை அடியோடு வெறுத்தது. அத்தகைய தலையீட்டிலிருந்து தனது உரிமையைக் காத்துக்கொள்வதில் அது குறியாய் இருந்தது.

**காமன்ஸ் சபைக்கான விண்ணப்பங்கள் :** மக்கள் குரலை மதிக்குமாறும், அவர்களுடைய பற்றுறுதிமிக்க 'முறையீடுகளை அளிப்பு மசோதாக்களாகக் கொண்டுவருமாறும்' காமன்ஸ் சபையினை வேண்டி விண்ணப்பங்கள் விடுத்த கென்ட் பகுதியைச் சார்ந்த ஐவரை, 1701ஆம் ஆண்டின் மன்றக் கூட்டத்தொடர் முடியும் வரையில் சிறையிலிடுமாறு காமன்ஸ்

சபை ஆணையிட்டது. சபையின் பெரும்பான்மைக் கருத்துகளுக்கு மாறானவற்றை வெளியிடும் விண்ணப்பங்களைத் தள்ளுபடி செய்தனர் என்பது கவனிக்கத்தக்கது.

விண்ணப்பஞ் செய்யும் உரிமை என்பது ஆதரவான பதிலைப் பெறும் உரிமை என்பதன்று. 1772ஆம் ஆண்டில் முப்பத்திரண்டு விதிகளை ஏற்பதில் இருந்து விலக்குவேண்டுமென்று குருமார்கள், சட்டம், மருத்துவம் போன்ற பல துறைகளைச் சார்ந்தவர்கள் ஆகியோரில் ஏறக்குறைய 250 பேர் கையெழுத்திட்டு அனுப்பிய மிதமான விண்ணப்பத்தை பெரும்பான்மை வாக்குகளால் காமன்ஸ் சபை நிராகரித்தது. எனினும், ஏழாண்டுகள் கழித்து, 1779ஆம் ஆண்டில் பாராளுமன்றம், பொருளாதாரச் சீர்திருத்தத்திற்கென்று பரவலான நன்கு திட்டமிட்ட முயற்சி தோன்றியதன் விளைவாக விண்ணப்பம் வருவதற்கான பொது முறை ஒன்று உருவாகியது. அதில் யார்க்ஷயர் உரிமைக்குடியினர் காட்டிய வழியை வேறு பல முக்கியக் கவுன்டிகளும், பிரதான நகரங்களும் பின்பற்றத் தொடங்கின. இதைப்பற்றி சர் எர்ஸ்கின் மே என்பார் பின்வருமாறு குறித்துள்ளார்: 'பொது மசோதாக்களிலும், பொதுக்கொள்கை சார்ந்த செய்திகளிலும், பாராளுமன்றத்தின் கவனத்தை வலிந்து ஈர்க்கக்கூடிய தற்கால விண்ணப்ப முறையின் தொடக்கம் என்று இதனைக் கொள்ளலாம் விண்ணப்பங்களின் மூலமாகப் பொதுவான நோக்கத்தினை அடைவதற்காக நாட்டின் பல பாகங்களிலும் ஒத்த குழுக்கள் தோன்றின. அவற்றைத் தொடர்ந்து, பாராளுமன்றத்தில் பலர் ஒன்று சேர்ந்து திட்டமிட்ட தீர்மானங்கள் வந்தன. நமது அரசியல் அமைப்பில் பலமுறை வெற்றிகரமாகப் பயன்படுத்தப் பெற்ற ஓர் அமைப்பு, அதுபோதுதான் உருவாகியது.[88]

1782ஆம் ஆண்டில் குவேக்கர்கள் விடுத்த விண்ணப்பம் ஒன்றைத் தொடர்ந்து அடிமை வாணிபத்தை ஒழிப்பதற்காக எழுந்த பேரியக்கம், பாராளுமன்ற நடவடிக்கைகளின்மீது விண்ணப்பங்களின் நேரடியான செல்வாக்கு எத்துணை அளவிற்கு இருந்தது என்பதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. ஆயினும், பிற்காலத்தில் பெரும் இயக்கங்களில் எல்லாம் இன்றியமையாது இடம் பெற்ற விண்ணப்பங்கள், நான்காம் ஜார்ஜ் ஆட்சியின் பிற்பகுதியிலிருந்துதான் அத்தகைய நிலையையெய்தின. விண்ணப்பம் செய்துகொள்ளும் உரிமையை முழுதுமாக ஏற்றுக்கொண்டதோடு, 'யார் வேண்டுமானாலும் விண்ணப்பஞ் செய்துகொள்ளலாம் என்றும் ஏற்பட்டது,

மேலும், சபையின் முறைகளுக்கு இசைவான, கண்ணியத்தோடு கூடிய விண்ணப்பம் எதையும் பாராளுமன்றம் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றாயிற்று. அதே சமயத்தில் இரண்டாம் சார்லஸின் பதின்மூன்றாம் ஆண்டின் சட்டம் அநேகமாக வழக்கொழிந்தது. மேலும், வன்முறையான, கிளர்ச்சி மிகுந்த விண்ணப்பங்களைத் தடைசெய்ய எழுந்த அச் சட்டத்தை நடைமுறையில் கொண்டுவரவோ அல்லது அதனுடைய நிபந்தனைகளுக்கு விண்ணப்பங்கள் உட்பட்டு இருக்கின்றனவா என்று வினவவோ, சாதாரணச் சூழ்நிலைகளில், கனவுகூடக் காணமுடியாது'.[89]

குடிமக்களுடைய மனத்தில் அல்லது ஒரு பிரிவினரின் மனத்தில் கலக்கம் விளைத்த செய்திகளின்மீது, மன்றத்தின் கவனத்தைத் திருப்பியதோடு, அவ் வழியில் முழு விவாதம் எழுவதற்கு வாய்ப்பினைத் தந்த காரணத்தால், காமன்ஸ் சபைக்கு வந்த விண்ணப்பங்கள் சிறிது காலத்திற்குப் பயனுள்ளவையாக விளங்கின. ஆயின், பிற்காலத்தில் அவற்றின் எண்ணிக்கை பெருகியதால் அவை தொல்லை தருபவையாகவும், சபையின் பணியைக் குலைப்பனவாகவும் மாறின. எனவே, வருங்காலத்தில் விண்ணப்பங்களை விவாதித்தல் கூடாது என்று 1839ஆம் ஆண்டு தீர்மானித்தனர்.

பாராளுமன்றத்தில் பிரச்சினைகளை எழுப்புவதற்கு மாற்று வழிகள் இருப்பதால், விண்ணப்பம் சார்ந்த வழிமுறை வீழ்ச்சியுற்றபோதிலும், பேரிழப்பு நேரவில்லை. தாற்காலிகமான செய்திகள் பத்திரிகைகளின் வாயிலாக வெளிவந்தன. அதே போன்று காமன்ஸ் சபையில் கேள்வி பதில் மூலமாகவும் அவை வெளிவந்தன. முன்பெல்லாம் விண்ணப்பங்களை மிகுதியாகப் பயன்படுத்திய பிரிவு நலன்கள், இப்போது வேறு யுக்திகளைப் பயன்படுத்த முடியும்.[90] அதுவன்றிப் பொதுநலஞ்சார்ந்த பொதுப் பிரச்சினைகளை அரசியல் கட்சிகளில் ஒன்று ஏற்று வாதிடுவது வழக்கமாகியது.

## பாதுகாப்புப் படைகளும் காவற் படையும்

மன்னர் வசமிருந்த படைகளின் அளவிற்கும், குடிமக்களின் சமுதாய உரிமைகளின் அளவிற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்ற கருத்து மெள்ளத் தலை தூக்கியது. நன்கு வகுத்த, எண்ணிக்கையில் மிகுதியான படைகளின் துணை

கொண்டே வாழ்ந்தவையாகக் காணப்பெற்ற கட்டற்ற முடியாட்சிகள் ஐரோப்பாவில் உருவானதை ஆங்கிலேயர் கண்டபோது அக் கருத்து வலிவடைந்தது. எனவே, பதினேழாம், பதினெட்டாம் நூற்றாண்டுகளில் நிலைப்படையின் அளவினை மக்கள் உன்னிப்பாகக் 'கவனித்தனர். அதனோடு ஒவ்வோர் ஆண்டும் பாராளுமன்றத்தில் அதைப்பற்றிய நீண்ட விவாதங்களும் நடைபெறலாயின. சாதாரணமாகப் பத்திரிகைக் குழுக்கள் ஆதரிக்கும் ஆள்கள் இன்னும் அரசியல் செல்வாக்குப் பெறும் வாய்ப்பினைப் பெறாத காரணத்தால், தம்மிச்சையாக வருவோரைச் சேர்த்துக்கொள்வது அல்லது வலுக்கட்டாயமாகச் சேர்த்துக்கொள்வதுபோன்ற படைக்கு ஆள் எடுக்கும் முறை முக்கியமானதாகக் கருதப்பெறவில்லை.

படைகளைச் சேர்ப்பதற்காக இருந்த அமைப்பும், அவ்வாறு உருவான படைகளும் தனித்தனியான இரு வழிகளில் பயன்பட்டன என்பதை நாம் நினைவுகூர்தல்வேண்டும். முதலில் உள்நாட்டு அமைதியைப் பாதுகாக்கும் பொறுப்பு இருந்தது. கொள்ளைகள், கிளர்ச்சிகள், கலகங்கள் தோன்றும்போது அவற்றினை ஒடுக்கவேண்டும் என்பது முக்கியமாகும். குற்றங்களைத் தடுக்கின்ற வகையில் தளராத, தொடர்ந்த கண்காணிப்புச் செய்யவேண்டும் என்பது இல்லை. அமைதிக் காலங்களில் கடற் கொள்ளைக்காரர்களிடமிருந்து கப்பல்களைக் காக்கவும் வேண்டும். இரண்டாவதாக இதைக்காட்டிலும் தீவிரமான போர்புரியும் பணியும் படையினருக்கு இருந்தது. ஸ்காட்லாந்தின்மீதோ அல்லது ஐரோப்பாக் கண்டத்திலோ பொதுவாகப் படையெடுத்துச் செல்லவேண்டியிருந்ததால் நாட்டிற்கு வெளியில்தான் படையினரின் பணி மிகுதியாக இருந்தது எனலாம். ஆயின், அன்னியப் படையெடுப்புகளுக்கு எதிராகக் கடல் சார்ந்த கவுன்டிகளைப் பாதுகாப்பதும், அன்னிய நாட்டவர் அல்லது கடற்கொள்ளைக்காரர்கள் அடிக்கடி நடத்தும் கொள்ளைகளிலிருந்து கரையோர மாவட்டங்களைக் காத்தலும் படையினரின் பொறுப்புகளாக இருந்தன.

**படைகள் திரட்டப்பெற்ற விதம்:** இரு வழிகளில் மன்னர் படைகளைத் திரட்டினர்.

(1) நிலங்களைக் கொள்வதற்கான உடைமை உரிமையுடையவரும், மன்னருடைய குடிமக்களாக இருப்பவரும் படைப்பணி செய்யக் கடமைப்பட்டவர். அவர்களை அரசாங்கம் அழைத்தது. அதன் காரணமாக அவ்வாறு எழுந்த படைகள்

இருவகைப்படும். அவற்றில் நிலத்தைக் கொள்வதற்கான உடைமை உரிமையினால் கட்டுண்டு, நாட்டிற்குள்ளும் வெளியிலும் மன்னருக்குச் சேவைசெய்யும் நிலமானிய முறைசார்ந்த உட்குடிகள் ஒரு பிரிவாக அமைந்தனர். 1640ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்திற்கெதிராக சார்லஸ் மேற்கொண்ட படையெடுப்பொன்றில் அவர்கள் இறுதி முறையாக அழைப்புப் பெற்றனர். ஆயின், படைசார்ந்த உடைமை உரிமைகளை ஒழித்த இரண்டாம் சார்லஸின் பன்னிரண்டாம் ஆண்டின் சட்டத்தினால் அப் பிரிவு மறைந்தது. இரண்டாவது பிரிவாக இருந்தது நாட்டுப் படை. அப் படையினர் உள்நாட்டில் பணிபுரியவே கட்டுப்பட்டவர்கள். அவர்களைப்பற்றி ஏற்கெனவே விளக்கமாகக் கண்டோம்.[91] இவ்விரண்டிலுமே சில வரையறைகள் இருந்தபோதிலும் படைச்சேவகம் கட்டாயமானது.

(2) ஒப்பந்த அடிப்படையில், தம்மிச்சையாகப் படையில் சேர்ந்து போர் ஏற்படுங் காலத்தில் பணிபுரிந்தவர் மற்றப் பிரிவினர். இத்தகைய படையினரும் இருவகைப்பட்டனர்: (a) ஒருசில அரண்கொண்ட இடங்களில் வைக்கப்பெற்றுச் சிறிய அளவிலே இருந்த காவற் படைகளும், மன்னரின் மெய்க்காப்பாளராக விளங்கிய சிறுபடையினரும் அநேகமாக நிரந்தரமாகப் பணிபுரிந்தவர் ஆவர். ஐக்கியத்திற்கு முன்னால் லண்டன் கோட்டை, போர்ட்ஸ்மவுத் (Portsmouth), டோவர், டில்பரி (Tilbury) போன்ற அரண் சூழ்ந்த நகரங்களிலும், அதன்பிறகு ஸ்காட்லாந்தின் எல்லையில் அமைந்த பெர்விக் (Berwick) போன்ற நகரங்களிலும் அத்தகைய காவற்படைகள் இருந்தன. (b) குறிப்பிட்ட நெருக்கடி காலங்களில் உதவிச் சம்பளம் பெறும் படையினராக வந்தவரே மற்றையோர். அத்தகைய படையினரை, நிலமானியமுறை இருந்த காலத்திலேயே வெளிநாட்டுப் படையெடுப்புகளுக்காக ஆங்கில மன்னர்கள் பயன்படுத்தினர்.

உடைமை உரிமையால் வரும் படைச் சேவைபற்றியும், அதன்மீதான சட்டமுறையான வரையறைகள்பற்றியும் ஏற்கெனவே கூறினோம்.[92] ஆயினும், உடைமை உரிமை காரணமாகப் போரிடக் கட்டுப்பட்டவர்களையன்றி மற்றையோரையும் கட்டாயமாகப் படையில் சேர்க்கும் பழக்கத்தை, முதலாம் எட்வர்டும் இரண்டாம் எட்வர்டும் பலமுறை கையாண்டனர். எனினும், இங்கேயும் படைச் சேவகத்தின் தன்மைபற்றியும் பதவிக் காலம்பற்றியும் பல ஐயப்பாடுகள் இருந்தன. அதனால் மூன்றும் எட்வர்டின் முதல் பாராளு

மன்றத்தில் சட்டம் ஒன்று நிறைவேறியது. அதன்படி மன்னருடைய முன்னோர்கள் காலத்தில் இருந்திருந்தாலொழிய, இனி ஒருவரையும் படைக்கலந் தாங்கிப் போரிடுமாறு நிர்ப்பந்தம் செய்தல் கூடாது ; அவசியம் ஏற்பட்டாலொழிய அல்லது புதிய பகைவர் திடீரென்று நாட்டிற்குள் புகுந்துவிட்டாலொழிய யாரையும் அவர் வாழும் ஷயரைவிட்டு வெளியேறுமாறு வற்புறுத்தக் கூடாது ; மேலும், பண்டைக் காலத்தில் நாட்டுப் பாதுகாப்பிற்காகச் செய்யப்பெற்ற வகையிலேயே இதுவும் அமைதல்வேண்டும். எட்வர்டும் படைகளைத் தருமாறு கவுன்டிகளுக்கும், முக்கிய நகரங்களுக்கும் ஆணையிட்டாரே ஒழிய, தனிப்பட்ட மனிதரை அவர் அதிகமாக அழைக்கவில்லை. சேவை செய்யவேண்டியவரில் ஒரு பகுதியினரை மட்டும் அழைப்பது நோக்கமாக இருந்திருக்கலாம். மற்றையோர்க்குப் படைச் சேவைக்குப் பதிலாகப் பொருள் தரவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இவ்விதம் போர்க்களத்திலிருந்த படைகளின் பராமரிப்பிற்கு அவர்கள் அளித்த பணம் உதவியது. இவ்வாறு நிதி பெறுவது என்பது பாராளுமன்றத்திற்கு விரோதமானது என்ற கண்டனத்திற்குள்ளாகியது. புதிய தேவையைச் சமாளிப்பதற்கென்று மூன்றும் எட்வர்டின் 25ஆம் ஆண்டின் சட்டத்தைப் பாராளுமன்றம் நிறைவேற்றியது. பாராளுமன்றத்தில் பொதுவாக இசைந்து வகுக்கப்பெற்றால் அன்றி, உடைமை உரிமை கொண்ட வில்வீரரையோ, அல்லது மற்றப் படைவீரர்களையோ யாரும் திரட்டக்கூடாது என அச் சட்டம் வலியுறுத்தியது. நான்காம் ஹென்றியின் ஆட்சிக் காலத்தில் இவ்விரு சட்டங்களுமே உறுதியாயின. அயல் நாட்டுப் போருக்கென்று படைதிரட்டும் ஆணையாளர்கள் வலுக்கட்டாயமாக ஆளெடுப்பதைச் சிறிது காலத்திற்குக் கைவிட்டனர். உயர்ந்த நிலையில் உள்ள செல்வாக்குப் பெற்றவர்களுடன் தொழில் முறையில் ஒப்பந்தம் செய்து அவர்களின் மூலமாக அதிக ஊதியம் கொடுத்துப் படைதிரட்டும் முறை வழக்கிலிருந்தது. ஆனால், உதவிச்சம்பளம் பெற்ற படையினால் பெருத்த செலவு ஏற்படுவதால், அப் படையின் அவசியம் தீர்ந்தவுடனே மன்னர் அதனைக் கலைத்தனர். இங்ஙனம் நிலைப்படையினால் வரும் இடரிலிருந்து நாடு தப்பியது.

**டியூடரின் வற்புறுத்தல் :** நாட்டிற்கு வெளியே படைச் சேவை புரிவதற்காகக் குடிமக்களை நெருக்கும் சிறப்பதிகாரத்தைக் கட்டற்ற டியூடரின் ஆட்சியில் மீண்டும் காணமுடிகின்றது. நாட்டில் அமைதியை நிலைநிறுத்துவதற்கென்று படையையும், அதைச்சார்ந்த விரோதமான

சட்டத்தையும் எலிசபெத் இராணியார் பயன்படுத்தினர்.[93] அத்தகைய அதிகாரத்தை முதலாம் சார்லஸ் பயன்படுத்தியதால் தான் அவரது ஆட்சியின் பதினாறும் ஆண்டில் கட்டாயமாகப் படைக்கு ஆளெடுப்பதற்கெதிரான சட்டம் ஒன்று வந்தது.[94] நிலைப்படை ஒன்றை உருவாக்குவதே, சார்லஸ் மன்னருக்கும் ஸ்ட்ராஃபோர்டிற்கும் பெரு நோக்கமாக இருந்தது. ஆனால், இந்த வழியிலேதான் ஐரோப்பாவில் உரிமை பெற்ற நாடுகளெல்லாம் வல்லாட்சிகளாக மாறின என்பதை நன்குணர்ந்த பாராளுமன்றத்தில் இருந்த பொதுமக்கள் ஆதரவைப் பெற்ற கட்சியானது, அதனைத் திடமாக எதிர்த்து நின்றது.

**உள்நாட்டுப் போர் :** படைகளின்மீது யாருக்கு அதிகாரம் உண்டு என்ற பிரச்சினையின்மீதுதான் இறுதியாக உள்நாட்டுப் போர் துவங்கியது. நமது நாட்டில் நிலைப்படை முறை தோன்றியதே உள்நாட்டுப் போரின்போதுதான். 'காப்பாளப் பிரபு' என்னும் பட்டத்தை கிராம்வெல்லிற்கு அளித்த 1653ஆம் ஆண்டின் அரசாங்க அமைப்புப் பத்திரத்தில், 30,000 வீரர் அடங்கிய முறையான படையை வைத்துக் காப்பதற்கு வகையேற்பட்டது. படையின் துணைகொண்டு நாட்டைத் தமது பிடியில் கிராம்வெல் வைத்திருந்த காரணத்தால், நிலைப்படையின்மீது எல்லாக் கட்சியினரும் ஒருவகை ஆழ்ந்த வெறுப்பினைக் கொண்டனர். முன்னிலை மீட்சி தோன்றிய காலத்தில் பொதுநலத் துரைத்தனத்தின் படையைக் கலைக்குமாறு கூக்குரல் எழும்பியது. இரண்டாம் சார்லஸ் மனமின்றி அதற்கு இசைந்தார்; எனினும், தளபதி மாங்கின் (Monk) கோல்டிஸ்ட்ரீம் (Coldstream) என்னும் காலாட்படைப் பிரிவும், மற்றொரு குதிரைப்படைப் பிரிவும் தொடர்ந்து மன்னருடைய சேவையில் இருந்துவந்தன. டன்கிர்க்கிலிருந்து (Dunkirk) வந்த படையினரைக்கொண்டு மற்றுமொரு படைப் பிரிவும் உருவாகியது. 1662ஆம் ஆண்டில் 5,000 வீரர்களைக் கொண்டு, காவற் படைகள் என்று அழைக்கப்பெற்ற இவைகள்தாம் தற்காலப் பாதுகாப்புப் படையின் மூலங்களாக விளங்கியவை.[95]

**புரட்சியின்போது நிலைப்படையின் நிலை :** ஒரு குதிரைப் படைப் பிரிவையும், இரு காலாட்படைப் பிரிவுகளையும் கொண்ட டாஞ்சியர் (Tangier) காவற்படையை இரண்டாம் சார்லஸ் ஆட்சியின் இறுதியில், அதாவது, 1684ஆம் ஆண்டில் இங்கிலாந்திற்குத் திரும்ப அழைத்துக்கொண்டதன் விளைவாக

இங்கிலாந்தின் நிலைப்படையில் 7,000 காலாட் படையினரும் 1,700 குதிரைப் படையினரும் நிறைந்திருந்தனர். பெரு நிலைப்படையின் துணைகொண்டு வரம்பற்ற மன்னராகத் திகழ இரண்டாம் ஜேம்ஸ் முயன்றார். மான்மௌத் கலகத்தைச் சாக்காக வைத்துப் படையினரின் எண்ணிக்கையை 30,000-க்கு அவர் உயர்த்தினார். லண்டன் நகர மக்களை அச்சுறுத்துதற்காகப் பெரும் பாசறை ஒன்றை ஹன்ஸ்லோவில் (Hounslow) அவர் நிறுவினார். சட்டத்தின் வாசகத்திற்கும் உணர்விற்கும் மாறான வகையில், படையிலிருந்து ஓடிவிடுவோருக்கு மரணதண்டனை அளிக்குமாறு முறைமன்ற நடுவர்களைத் தூண்டினார். ஆயினும், இரண்டாம் சார்லஸ், இரண்டாம் ஜேம்ஸ் ஆகிய இருவரது ஆட்சிகளிலும் தனிப்பட்ட செயல் நோக்கங்களுக்காக அவ்வப்போது திரட்டிய படைகளை நிரந்தரமாக வைத்திருப்பதை வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் பாராளுமன்றம் எதிர்த்துவந்தது. டச்சுப் போருக்காக 1667ஆம் ஆண்டில் அவசர அவசரமாக 12,000 புதிய படையினரைத் திரட்டவேண்டி வந்தபோது, சமாதானம் ஏற்பட்டவுடனே அப் படையினைக் கலைத்துவிடுதல் வேண்டும் என்று காமன்ஸ் சபையினர் ஏக மனமாகத் தீர்மானம் இயற்றினர். அதேபோன்று 1673ஆம் ஆண்டில் இரண்டாவது டச்சுப் போருக்காகப் புதிய படைகளுக்கான வழிவகை செய்தபிறகு, 'தேசியப் படையைத் தவிர வேறு நிலைப்படையைத் தொடர்ந்து வைத்திருப்பது, மக்களுக்கு வெறுப்பளிப்பதாகவும் தீங்கிழைப்பதாகவும் ஆகும்' என்ற தீர்மானத்தைக் காமன்ஸ் சபை இயற்றியது. ஃபிரான் சுடனான போர் என்னும் சாக்கில் 1678ஆம் ஆண்டில் திடுமென 20,000 படையினரைத் திரட்ட இரண்டாம் சார்லஸ் முயன்றார். அதுபோது மேற்கொண்ட பணி முடிந்தவுடன் அப்படையினைக் கலைத்துவிடவேண்டுமென்ற நிபந்தனையின்பேரில்தான், காமன்ஸ் சபை நிதி ஒதுக்கியது. 'நிலைப்படை ஒன்றினை அமைத்து, அதைக்கொண்டு நாட்டை ஆளத் திட்டமிட்டார்' என்பது கிளாரண்டன்மீதான அரசத்துரோகக் குற்றச்சாட்டில் முக்கிய வாசகக் கூறுகளில் ஒன்றாகும்.

**கலகச் சட்டம்:** அமைதிக் காலத்தில் பாராளுமன்றத்தின் இசைவு இன்றி நாட்டிற்குள் நிலைப்படையைத் திரட்டுவதோ அல்லது வைத்திருப்பதோ முறையற்றது என்பதை உரிமைகள் மசோதா தெளிவாக அறிவித்தது. 1689ஆம் ஆண்டில் ஓராண்டிற்கு என்று நிறைவேறி, அதன்பின் ஆண்டுதோறும்[96] புதுப்பிக்கப்பெற்றுவரும் கலகச் சட்டத்தில் இவ்வறிவிப்பு முறையாக இடம்பெற்றது. அதனோடு இந் நாட்டில் இராணுவச்

சட்டத்தின் மூலமாகவோ அல்லது நன்கு அறிந்ததும் நிலை நிறுத்தப்பெற்றதுமான இந் நாட்டுச் சட்டப்படி சரியிணை யானவரால் (peers) அன்றி வேறு வகையிலோ, அமைதிக் காலத்தில் ஒருவர் தண்டனைக்குள்ளாதல் கூடாது; சான்று களை ஆராயாது மரண தண்டனையோ, உறுப்புக்குறை தண்டனையோ அளித்தல் ஆகாது எனவும் அச் சட்டம் அறிவித்தது. அதன் பிறகுதான் நாட்டையும் அதைச்சார்ந்த நிலப்பகுதிகளையும் காப்பதற்கான படை திரட்டுவதற்கும், இராணுவச் சட்டப்படி அரசாங்கத் துருப்புகளுக்கெனப் போர்க்கால விதிகளை உருவாக்கும் அதிகாரத்தை மன்னருக்கு அளிக்கும் வகையிலும் ஆன யோசனைகள் அச் சட்டத்தில் இடம் பெற்றன.[97]

**புரட்சிக்குப்பின் படையின் நிலை :** புரட்சிக்குப்பின் பாராளு மன்றத்தின் விருப்பத்தைச்சார்ந்தே படைப்பராமரிப்பு இருந்த போதிலும், மூன்றும் வில்லியத்தின் ஆட்சிக் காலத்தில் நிலைப்படையினை மக்கள் மிகுதியாக வெறுத்த காரணத்தால், ரிஸ்விக் உடன்படிக்கைக்குப் பிறகு மன்னரின் டச்சுக் காவல் படையைக் கலைத்துவிடவேண்டுமென்றும், இங்கிலாந்தின் பாதுகாப்பிற்கான படையை 7,000 ஆகவும், அயர்லாந்தின் காப்பிற்காக 12,000 ஆகவும் குறைக்க வேண்டுமென்றும், 1697ஆம் ஆண்டில் காமன்ஸ் சபை வற்புறுத்தியது. பிற்காலத்தில் 7,000-லிருந்து 10,000 ஆக இங்கிலாந்து காவல் படை உயர்ந்தது. நிலைப்படை வைத்திருக்கும் கருத்தினை ஓரளவு மக்கள் ஏற்றுக்கொள்வதற்கு மார்ல் பரோவின் பெருவெற்றிகள் காரணமாயிருந்தன. மேலும், போலி யாளர் (Pretender) உயிருடன் இருந்த காலத்தில் நாட்டைவிட்டு வெளியேறிய ஸ்டுவர்டுகளின் ஸ்காட்டிய ஆதரவாளர்களும், பிற ஆதரவாளர்களும் புரட்சிக் கலகத்தில் ஈடுபடாது தடுப்பதற் காகவும் நிலைப்படை தேவையாயிற்று. எனினும், முதலாம் ஜார்ஜ் மன்னர் காலத்திலும், பதினெட்டாம் நூற்றுண்டின் இறுதிவரையிலும் மைனர்கா, ஜிப்ரால்டர் ஆகிய இடங்களில் இருந்த காவற் படைகளை உள்ளிட்டு, ஆனால், அயர்லாந்துப் படைகள் நீங்கலாக, அமைதிக் காலப் படையில் 17,000-க்கும் சற்று அதிகமான வீரரே இருந்தனர். விடுதியாளருடைய பொறுப்பிலும், பொதுமக்களுடைய பொறுப்பிலும் படை யினரைத் தங்குமாறு செய்ததால் பல தொல்லைகள் ஏற்பட்டன. ஆயினும், படைவீடுகளை அமைக்கும் அனுமதி தரப் பாராளு மன்றம் பெரிதும் தயங்கியது. காரணம், அப் படைவீடுகள் கொடுங்கோல் ஆட்சியின் கருவிகளாகத் திகழக்கூடும் என்னும்

அச்சமேயாகும். இரண்டாம் ஜார்ஜ் ஆட்சி எட்டாம் ஆண்டுச் சட்டத்தை நிறைவேற்றியதன் மூலமாக இராணுவத்தின்மீது தனக்கு இருந்த பொறுமையைக் காமன்ஸ் சபை வெளிப் படுத்தியது எனலாம். அதன்படி தேர்தல் நடக்கும்போது, தலைநகரம் அல்லது காவற் படை கொண்ட நகரங்கள் தவிர மற்ற இடங்களில் இரு மைல்களுக்குள் படைகள் வரக்கூடாது. வெஸ்ட்மின்ஸ்டரில் நடைபெற்ற தேர்தலை ஒட்டி நடைபெற்ற சில கிளர்ச்சிகளை அடக்குதற்கு எனப் படையினைப் பயன் படுத்திய காரணத்தால், 1741ஆம் ஆண்டில் காமன்ஸ் சபையில் மற்றொரு தீர்மானம் நிறைவேறியது. 'பாராளுமன்ற உறுப்பினரின் தேர்தலின்போது முறையான படையினர் வந்திருப்பது குடிமக்களின் சிறப்புரிமைகளை மீறுவதாகும்; தேர்தல்களின் சுதந்திரத்தன்மையை வெளிப்படையாகக் குலைப்பதாகும்; நாட்டின் அரசியல் அமைப்பையும் சட்டங் களையும் அவமதிப்பதாகும்' என அத் தீர்மானம் விளக்கியது. மேலும், அத்தகைய குறுக்கீட்டிற்குக் காரணமானவர்கள் சபைக்கு அழைக்கப்பெற்றனர். சபாநாயகரின் கடிந்துரையை அவர்கள் மண்டியிட்டு ஏற்கவேண்டியிருந்தது.

தெளிவற்ற, முறையாய் அமையாத, கடுமையான இராணு வச் சட்டமே போர் விதிகளினால் ஏற்பட்டன என்று கூறி எதிர்த் ததற்குக் காரணம் இருந்தது. கலகச் சட்டத்தைத் திருத்திய தோடு, அதற்குப் பதிலாக 1879ஆம் ஆண்டில் படைச்சட்டத் தைக் கொண்டுவந்து, அதனை ஆண்டுதோறும் புதுப்பித்தல் மூலமாக அக் குறை நீங்கியது. அச் சட்டத்தில் போர் விதிகள், படைச்சட்டத் தொகுப்பு வடிவில் தரப்பெற்றன. இன்று பாதுகாப்புப் படை, விமானப்படை (ஆண்டுதோறுமான) சட்டமே அதற்குப் பதிலாக வழக்கிலுள்ளது.

ஃபிரஞ்சுப் புரட்சியும் தீவக்குறைப் போரும் (Peninsular War) நிலைப்படையை நாட்டு மக்கள் ஏற்குமாறு செய்ததோடு, ஒரு பெரிய நிலைப்படையை வைத்திருக்க வேண்டுமென்னும் ஆவலைப் பலரிடையே, குறிப்பாக நாட்டுப்புறக் கனவான் களிடையே தூண்டின. தற்காப்பிற்காகவே இருக்கும் படையின் மூலமும், முன்பு இருந்ததைவிடப் பன்மடங்கு பெரிதாக இருக்கவேண்டுமென்பதை அண்மைக் காலத்தில் நடைபெற்ற பெரும்போர்கள் புலப்படுத்தின.[93]

**சீர்திருத்தங்கள் :** 1890ஆம் ஆண்டிலிருந்து, அடுத்தடுத்து வந்த மந்திரிசபைகள் அனைத்தும், தற்காலப் போர்முறைகளின் தேவைகளுக்கும் மாறிய நிலைக்கும் ஓரளவு ஒத்த வகையில்

பிரிட்டிஷ் படைகளைப் போர் அமைச்சர் மூலமாக, மாற்றியமைக்கும் திட்டங்களைக் கொண்டுவந்தவண்ணம் இருந்தன. அவற்றில் சில சிறிது காலத்திற்கே நிலைத்தன. ஐரோப்பியப் பெருஞ் சக்திகளிலேயே கிரேட் பிரிட்டன் தான் தனது பண்டைக் கால, காலத்திற்கொவ்வாத படை ஆட்சியில் மாற்றத்தை வரவேற்க அதிகம் தயங்கியது. கடலாதிக்கத்தை அது நம்பியிருந்தது அந் நிலைக்கு ஓரளவு காரணமெனலாம். கட்டாயப் படைதிரட்டுக் கொள்கை அல்லது வயதுவந்தவர் அனைவரும் படையில் சேவை செய்யக் கடமைப்பட்டவர் என்னும் கருத்தினை ஆங்கில மக்கள் ஏற்க மறுத்தனர் என்பதும் ஓரளவு காரணமாகும். இதனை உறுதியாக அறிந்துகொள்ள யாரும் முற்படவில்லையெனினும் இத்தகைய எண்ணம் இருந்தது எனக் கொள்ளப்பெறுகின்றது. ஆன் அரசியார் காலத்தே வந்த பல சட்டங்களின்படி,[99] வேலையற்ற, உடல் வலிமை கொண்ட மக்களைப் படையில் சேருமாறு வற்புறுத்த முடிந்தது. மேலும், படையில் சேவைசெய்ய ஒப்புக்கொள்வதன்மூலமாகத் தண்டனை பெற்றவர்களோ அல்லது குற்றஞ்சாட்டப்பெற்றவர்களோ அவற்றிலிருந்து ஒருவாறு தப்பமுடிந்தது. படைச் சீர்திருத்தம் பற்றி ஆலோசனை கூறுதற்கென்று பாராளுமன்ற இரு சபைகளும் 1890ஆம் ஆண்டில் ஓர் உயர் ஆணைக்குழுவினைத் துவக்கியது, படையினை அநேகமாக ஒரு தேசிய அமைப்பாகச் செய்யும் முதல் முயற்சி எனலாம்.

**ஹார்ட்டிங்டன் (Hartington) ஆணைக்குழு:** ஹார்ட்டிங்டன் பிரபுவின் தலைமையிலான இக்குழு அளித்த அறிக்கையின் விளைவாகப் படை ஆட்சி புதிய அடிப்படையில் அமைக்கப்பெற்றது.[1] நிலப்படையையும் கடற்படையையும் இணைந்து வேலை செய்யுமாறு செய்வது ஒரு முக்கிய நோக்கமாகும். அதனை நிறைவேற்றுவதற்காக இரு பிரிவுகளின் அமைப்பிலும் பல சீர்திருத்தங்கள் தேவையாயின. ஆணைக்குழுவின் அறிக்கையில் கண்ட யோசனைகளை 1895ஆம் ஆண்டில் நடைமுறைக்குக் கொண்டுவந்தனர். படைத்தலைமை முதல்வருக்கும் மேலாக, காபினெட் அமைச்சர் ஒருவரின் தலைமையிலான பேரரசு பாதுகாப்புக்குழு (Committee of Imperial Defence) உருவாகியது. படைத்தலைமை முதல்வருக்குப் பதிலாக முக்கியமான நிர்வாகச் செய்திகளைக் கவனிப்பதற்கென்று படைத்துறை ஆய்வு மன்றம் தோன்றியது. இந்த மாற்றங்கள் மிக முக்கியமானவை. தீவிர விளைவுகள் கொண்டவை. அதுவரையில் படைகளின் உயர் தலைவரான மன்னரின் பிரதிநிதியாக இருந்தவர் படைத் தலைமை முதல்வர் ஆவார். மேலும், நாட்டின் படைகளைக்

கட்டுப்படுத்தவும் மேற்பார்வை செய்யவுமான அதிகாரங்களைக் காபினெட்டின் பேரரசு பாதுகாப்புக் குழுவிடம் ஒப்படைத்ததில், நிலைப்படையினை ஒரு தேசிய அமைப்பாக ஏற்றுக் கொண்டதும் அடங்கியது. படைத்தலைமை முதல்வர் யாருடைய பிரதிநிதியுமல்லர் ; அவர் ஒரு நிர்வாகப் பொறுப்பை ஏற்ற அதிகாரியே. பாதுகாப்புக் குழுவின் உறுப்பினரான அவர், தம்மிடம் ஒப்படைக்கப்பெற்ற காரியங்களைச் செய்துமுடிப்பதில் அக் குழுவின் அதிகாரத்திற்கு உட்பட்டவராகவும், அதனிடம் பொறுப்புள்ளவராகவும் விளங்குபவர். அக் குழுவின் மூலமாக அவர் பாராளுமன்றத்திற்குக் கட்டுப்பட்டவராவார். பிற்காலத்தில் பேரரசு பாதுகாப்புக் குழுவானது அரசாங்கத் துறையாக மாறியது. இத்தகைய திட்டம் ஜெர்மானிய திட்டம்போன்றதாகும் 'லாண்டஸ்வர்டிடிகங்ஸ்கொமிஸ்ஸன்' (Landesverteidigungs-kommission) என்னும் ஜெர்மானிய முன்மாதிரியை ஒத்ததாகும் நமது தேசியப் பாதுகாப்புக் குழு. படைத்தலைமை முதல்வரும் ஜெர்மானியப் படைத்தலைவரைப் போன்றவரே. 1895ஆம் ஆண்டில் கேம்பிரிட்ஜ் கோமகன் ஓய்வு பெற்றதோடு பழைய படைத்தலைமை முதல்வர் பதவியும் முடிவுற்றது. அதன் பிறகு புதிய அமைப்பு நடைமுறைக்கு வந்தது. இதிலிருந்து நமது பாதுகாப்பு வரலாற்றில் புதிய சகாப்தம் தோன்றியது. நிலைப்படை தேசியப் படையாகியது. பழைய நாட்டுப் படை உள்ளிட்ட எல்லாத் துணைப்படைப் பிரிவுகளும் அதில் அநேகமாக இணைந்துவிட்டன. அப்போது போர்ச் செயலராக இருந்த ஆர்னல்டு ஃபார்ஸ்டர் (Arnold Forster) என்பார், இப் புதிய படையமைப்புத் திட்டத்தின் கீழ், முறையான இராணுவத்தை இரு பிரிவுகளாகப் பிரிக்கும் யோசனையை அளித்தார். அவற்றில் (1) பொதுச் சேவைப்படை, (2) உள்நாட்டுச் சேவைப்படை என்பன அடங்கும். வெளிநாட்டில் படைச்சேவை செய்யும் நோக்கத்தோடு எழுந்த முதல் வகைப் படையில், நீண்ட கால சேவை செய்வோர் சேர்ந்திருந்தனர். புதுப் படைப் பயிற்சி நிலையத்தில் ஆறு மாதங்களும், நேரடியான போர்ச்சேவையில் எட்டரை ஆண்டுகளும், சேமப் படையில் மூன்று ஆண்டுகளும் அவர் பணிபுரியவேண்டும். உள்நாட்டுச் சேவைப்படையோவெனின் அந்தந்தப் பகுதிகளைச் சார்ந்திருந்தது. சேவைக்கென்று எடுத்த ஆள்களும், ஒருசில நாட்டுப் படைப்பிரிவுகளும் அதில் சேவைசெய்தனர்.

**ஹால்டேன் சீர்திருத்தங்கள் :** ஒருமைப்பாட்டினர் மந்திரி சபைப் பதவியிலிருந்து விலகுவதற்குமுன் மேலே கூறிய திட்டம் நடைமுறைக்கு வரவில்லை. புதிய அரசாங்கத்தில் போர்

அமைச்சராக வந்த ஹால்டேன் பிரபு புகுத்திய புதிய கருத்துகளைக்கொண்ட மசோதா ஒன்று விரைவில் சட்டமாகியது. அது ஏழாம் எட்வர்டின் ஏழாம் ஆண்டு நிறைவேறிய, 1907ஆம் ஆண்டின் பிரதேச, சேமப் படைகள் சட்டமாகும் (Territorial and Reserve Forces Act, 1907). பின்வரும் முக்கியக் கூறுகள் அதில் இடம் பெற்றன. (a) முறையான படைவீரர், முறையான சேமப்படையினர், தனிப்பட்ட சேமப் படையினர் ஆகியோரைக்கொண்ட 168,000 அதிகாரிகளும், பிற படைவீரரும் நிறைந்த நேரடியாகப் போரில் பங்குகொள்வதற்கான படையும்; (b) நேரடியாகப் போரில் பங்குகொள்ளும் படையினரைப்போலவே வெளிநாடுகளில் பணிபுரியக் கடமைப்பட்டவரும், பழைய நாட்டுப் படையிலிருந்து சேவைக்கு வந்தவருமான 80,000 வீரரைக்கொண்ட சிறப்புப் படையும்; (c) 315,000 வீரரைக்கொண்ட, தம்மிச்சையாக வருவோரும் குடியானவரும் நிறைந்த பிரதேசப் படையும் அமைய அச் சட்டம் வழிவகுத்தது. பிரதேசப் படையின் எண்ணிக்கை எப்போதுமே அந்த உச்ச எண்ணிக்கையை அடைந்ததில்லை. நான்கு ஆண்டுகளுக்கு என்று சேர்ந்த இப் படையினர் வெளிநாடுகளில் சேவைசெய்யவேண்டுவதில்லை. கவுன்டி கழகங்களே இப் பிரதேசப் படையினைத் திரட்டியதோடு அதனைப் பராமரிக்கும் பொறுப்பையும் ஏற்றன. கவுன்டியிலுள்ள பிரதேசப் படைத் தலைவர்கள், கவுன்டி, பரோ மன்றங்களிலிருந்து படை ஆய்வுக் குழுவினால் நியமிக்கப்பெற்ற பிரதிநிதிகளும், படை ஆய்வுக்குழுவினால் நியமனம்பெற்ற தலைவர், உப தலைவர், கூட்டத் தலைவர், செயலாளர், பொருளாளர் ஆகியோரும் அத்தகைய கழகங்களில் இடம்பெற்றனர். பிரதேசப் படையின் பகுதியாக விளங்கும் படைப் பயிற்சிக் கூடங்கள், துப்பாக்கிப் பயிற்சிக்கான இலக்கு மேடுகள் (butts), பிற பொருள்கள், தளவாடங்கள் ஆகியவற்றை அக் கழகங்களே அளித்தன. இத்தகைய மாற்றங்களால் முறையான படையின் எண்ணிக்கை குறைந்தது. இவ்வித ஏற்பாடுகளை நிறைவுசெய்தற்பொருட்டுப் பல படைப் பிரிவுகளைக் கலைக்கவேண்டியதாயிற்று. பழைய நாட்டுப் படையினர் பிரதேசப் படையின் ஒரு பகுதியாக விளங்கவில்லை. அதற்கு மாறாக, அந்தந்தப் பகுதிகளில் இருந்த படைப் பிரிவுகளின் 'சிறப்புச் சேமப்படையோடு' அவர்கள் இணைந்தனர் என்பதை முன்னரே கண்டோம். 1921ஆம் ஆண்டுச் சட்டத்தின்படி சில வகையான சேமப் படையினர் 'நாட்டுப் படை' என்று பெயர் பெற்றபோதிலும், பழமையானதும், வரலாற்றுச் சிறப்புக் கொண்டதுமான நாட்டுப் படையானது, ஏழாம் எட்வர்டின் ஏழாம் ஆண்டுச் சட்டத்தின்

விளைவாகப் பிற படைகளோடு இணைந்துவிட்ட காரணத்தால், அது இன்று வழக்கிலில்லை. ஆயின், இத்தகைய படையாட்சி நீடித்து வாழுமா என்பது நிச்சயமாகக் கூறமுடியாத ஒன்றாகும். கிரேட் பிரிட்டனிலும், பல குடியேற்ற நாடுகளிலும் முதல் உலகப் போரின்போது கட்டாயப் படைச்சேவை புகுத்தப் பெற்றது.[2]

**கட்டாயத் தேசிய சேவை :** இரண்டாவது உலகப் போர் நெருங்கியதால், கட்டாயப் படைச் சேவை செய்யவேண்டுமென்ற கருத்து விரிவடைந்தது. முதல்முறையாகச் சமாதான காலத்தில் இராணுவச் சேவையைக் கட்டாயமாக்கிய படைப் பயிற்சிச் சட்டம் (The Military Training Act) 1939ஆம் ஆண்டு மே மாதம் 25ஆம் தேதி நிறைவேறியது. செப்டம்பர் மாதம் 3ஆம் தேதியன்று இதற்குப் பதிலாக 1939ஆம் ஆண்டின் தேசிய சேவை (பாதுகாப்புப் படைகள்) சட்டம் நிறைவேறியது. அது மேலும் விரிவகலமான திட்டத்தைக் கொண்டுவந்தது. கட்டாய ராணுவ சேவைக்கு ஈடாகத் தொழில்களில் கட்டாயத் தேசிய சேவை செய்யவேண்டுமென்றும், ஆண்களைப்போலவே பெண்களும் கட்டாயத் தேசிய சேவை செய்யவேண்டுமென்றும் வகுத்த மேலும் சில சட்டங்கள் இரண்டாவது உலகப் போர் நடந்துகொண்டிருந்தபோது உருவாயின.

**காவற்படையினர் :** உள்ளூர்க் காவற் படையினை வைத்துக் கலகங்களை அடக்கிய பண்டைக் காலக் கவுன்டிகள் கொண்டிருந்த அதிகாரம் (Posse Comitatus) படைசார்ந்ததாகவும், பொதுத்துறை சார்ந்ததாகவும் அமைந்தது. சாதாரணச் செயல்நோக்கங்களுக்கு, ஊதியம் பெறாத, ஆனால், வலுக்கட்டாயமாகப் பதவியில் அமர்த்தப்பெற்ற ஊர்காவலரே அமைதியைக் காக்கும் பொறுப்பினை ஏற்றிருந்தார். எலிசபெத் அரசியாரின் காலத்திலிருந்து பதினெட்டாம் நூற்றாண்டுவரையிலும் பெண் ஊர்காவலரும் பணிபுரிந்தனர்.[3] வின்செஸ்டர் சட்டப்படி அமைந்த இரவு, பகல் காவல் காக்கும் அதிகாரிகளையே நகரங்கள் நம்பியிருந்தன.[4] ஆனால், அவர்கள் வயோதிகராகவும் சுறுசுறுப்பற்றவராகவும் இருந்தனர்.[5] ஊதியம் அளித்துக் காவலாளர்களை[6] அமர்த்துவதற்காகத் தனிப்பட்ட வரி விதிப்பதற்கான அதிகாரத்தைத் தலச் சட்டங்கள் மூலமாகப் பெரு நகரங்கள் பெற்றன. லண்டன் நகரின் பிரிவுகளின் பெருக்கமும் பெருநகரத்திற்குரிய தனிப்பட்ட பிரச்சினைகளும் ஓர் ஆபத்தான நிலையைத் தோற்றுவித்தன. அதனைச் சமாளிப்பதற்கென்று 1829ஆம் ஆண்டில் பீலினுடைய நகரக் காவற்

படைச் சட்டம் நிறைவேறியது.[7] உள்துறை அமைச்சர் இவ்வித அதிகாரங்களைக் கொள்வதைப்பற்றிய பெருங்கவலை இருந்தது. ஆயினும், லண்டன் நகரம் முழுவதையும் ஒரு காவற் படையின் கீழான பகுதி எனக் கொள்ள வழிவகுத்த அத் திட்டமே, பிரச்சினையைப் போக்கவல்ல ஒரே வழியாக இருந்தது. 'காவற்படை' (Police) என்பதே அன்னிய நாட்டுக் கருத்தாகும். போர்ப்படைகளைக் காட்டிலும் 'காவல்படையின்' வலிமையைக் கொண்டே நிலைநின்ற சில ஐரோப்பியப் பிற்போக்கு அரசுகளை ஆங்கிலேயருக்கு நினைவுறுத்துவதாகவும் அது அமைந்தது. ஆயின், அத் திட்டம் பயனுள்ளதாயிருந்தது. அதன் விளைவாகக் குற்றங்கள் இழைக்கும் கூட்டங்கள் மாநில நகரங்களை நோக்கிச் சென்றன. நகர ஆட்சிக் கழகங்களில் சீர்திருத்தம் ஏற்பட்டதாலும், சுறுசுறுப்பான காவற் குழுக்களை அமைத்ததாலும், குற்றம் புரிவோர் மேலும் புறநகர்ப் பகுதிகளுக்கும், நாட்டுப்புறங்களுக்கும் குடியேறத் தொடங்கினர். அங்கே அவர்களால் தோன்றிய பிரச்சினையை அமைதிகாண் நடுவரால் சமாளிக்க முடியவில்லை. சில கவுன்டிகளில்தான் கவுன்டி காவற் படையினர் பணியாற்றினர். பிறவற்றில் அத்தகைய படையினர் இல்லை. 1856ஆம் ஆண்டுவரையில் இத்தகைய அரைகுறைக் கூறுகளிலிருந்து நாடு முழுவதற்குமான திட்டம் உருவாகவில்லை. அவ்வாண்டில்தான் கவுன்டி, பரோ காவற்படைச் சட்டத்தின்[8] (County and Borough Police Act) மூலமாக மேற்பார்வை செய்யும் அதிகாரங்களை உள்துறை அலுவலகம் பெற்றது. அமைச்சரவை உளவறிய முற்படும் என்னும் அச்சம் மீண்டும் எழுந்தது. அத்தகைய அச்சத்தை மிகைபடுத்திக் கூறினர்கள் என்றபோதிலும், அது முற்றிலும் ஆதாரமற்றது என்று கொள்வதற்கில்லை.

**கடற்படை :** அரசக் கடற்படையானது டியூடர் காலத்தில்தான் உருவாகியது என்றபோதிலும், இரண்டாம் எட்வர்டும் மூன்றும் எட்வர்டும்கூடச் சில கப்பல்களைச் சொந்தமாக வைத்திருந்தனர் என்பதையும், சில நிரந்தர அதிகாரிகளை ஊதியத்திற்கு அமர்த்தியிருந்தனர் என்பதையும் கவனித்தல் நன்று.[9] நெருக்கடி காலங்களில் கடற்படைக்குத் துணையாகத் தென் கரையிலுள்ள துறைமுகப் பட்டினங்கள் (Cinque Ports), கப்பல்களையும் ஆள்களையும் தந்துதவவேண்டும். அதே போன்று மாலுமிகளாக இருப்பவர்கள் கட்டாயக் கடற்படைச் சேவை செய்யக் கடமைப்பட்டவராகையால் அவர்களையும் திரட்டி கடற்படையில் சேர்த்தனர். கப்பல் கட்டுந் தொழிலில், தொழில்துறை சார்ந்த வளர்ச்சி ஏற்பட்டபொழுதுதான்

சாதாரண வாணிபக் கப்பல்களைக் காட்டிலும் மேலான போர்க் கப்பல்கள் தனியாக உருவாயின. இங்ஙனம் நிலையான கடற்படை தோன்றுவது அவசியமாகியது. இவையெல்லாம் துறைமுகப் பட்டினங்களையும் கரையோரப் பகுதிகளையுமே சார்ந்தவை என்று நெடுங்காலமாக வந்த மரபுபற்றியும், கப்பற் பணத்திற்கான கட்டளைகள் மூலமாகக் கடற்படை மூலமான பாதுகாப்புப் பளுவை நாட்டின் எல்லாப் பகுதிகளும் ஏற்கு மாறு செய்ய முதலாம் சார்லஸ் முயன்றதுபற்றியும் ஏற்கெனவே கண்டோம்.[10] இதையும், நீதிமன்றங்கள் ஏற்ற,[11] கடற்படையில் சேவை செய்வதற்காக வற்புறுத்தும் பழக்கத்தையும் தவிர அரசியல் அமைப்புச் சார்ந்த பிரச்சினை எதையும் கடற்படை தோற்றுவிக்கவில்லை. நிலப்படையின்மீது பொதுமக்கள் கொண்டிருந்த அவநம்பிக்கை கடற்படையின்மீது ஏற்படவில்லை.

## அன்னிய நாட்டவரும் குடியுரிமை அளிப்பும்

முடிவாகச் சமுதாய உரிமைகளற்ற அன்னியரின் நிலைபற்றி நோக்குவோம். அன்னிய நாட்டைச் சார்ந்தவருக்குச் சமுதாய உரிமைகள் மறுக்கப்பெற்றதற்குப் பல காரணங்களுண்டு. நாட்டின் பணத்தை வெளியே கொண்டுசெல்லும் இடர்தரும் செயலையே குறியாகக்கொண்ட வணிகராகப் பலர் விளங்கினர். சிலசமயங்களில் அவர்கள் கொடுவட்டி வாங்குவோராயிருந்தனர். ரோமிலிருந்து வெறுக்கத்தக்க ஆணைகளோடும் அவற்றிற்கான வழிவகைகளோடும் வந்த சமய குருமாராக அவர்களில் சிலர் இருக்கலாம். அவர் பகைவராகவும் இருக்கலாம். புரட்சிக்குப் பிறகு அவருடைய இறைமை நூலும் வாணிபமும் வெறுப்பினைத் தோற்றுவிக்கக்கூடும்.

**பொதுச் சட்டஞ் சார்ந்த தடைகள்:** ஃபிரான்சுடன் போர் தொடுத்த ஆங்கில மன்னர்கள், இங்கிலாந்தில் வாழ்ந்த ஃபிரஞ்சுக்காரர் அல்லது நார்மானியருடைய நிலங்களைக் கைப்பற்றிக் கொண்டனர். முதலில் இடைக்கால நடவடிக்கையாக இருந்த அது, அன்னியர் நிலம் வைத்திருக்கக்கூடாது என்னும் விதியாகவே வளர்ந்தது.[12] சொத்தினை அன்னியர் மரபுரிமையாகப் பெறமுடியாது; அவர் மூலமாகச் சொத்திற்கு உரிமை கொண்டாடவும் முடியாது. எனவே, அவர் உண்மையில் வழக்குத் தொடரமுடியாது என்பது தெளிவாகிறது. கடன்

கொடுத்தல் போன்றவற்றில் அவர் சொந்த முறையிலான வழக்கினைத் தொடரும் வாய்ப்பற்றவர் என லிட்டில்டன் அறிவித்தார். அரசாங்கப் பதவியையும் அன்னியர் வகிக்க இயலாது. குற்றச் சட்டத்திற்கு அவர் உட்பட்டபோதிலும், அதனுடைய முழுப் பாதுகாப்பு அவருக்குக் கிட்டவில்லை.[13] இங்ஙனம் அவரது நிலை மிக இடர்மிகுந்ததாக இருந்தது. தனி முறையிலான விலக்கீடுகள் வாயிலாகத்தான் அவரது நிலை ஓரளவு பொறுத்துக்கொள்ளக்கூடியதாக இருந்தது. இத்தகைய விலக்கீடுகள் பலதிறப்பட்டவையாகும். நாம் ஏற்கெனவே கண்டவாறு, ஒருசில பொதுவான காப்புச் சட்டக் கூறுகள் பேருரிமைப் பத்திரத்தில் (Magna Carta)[14] இடம்பெற்றன. இடைக்கால முடிவில் நட்பு நாடுகளுடன் ஏற்பட்ட உடன் படிக்கைகளில் இச் செய்திபற்றிய வழிவகைகள் இடம் பெற்றன. பல சமயங்கள் பாதுகாப்போடு செல்வதற்கான கடிதங்களைத் தனிப்பட்ட அன்னியர் பெற்றிருந்தனர்.[15] இங்கிலாந்தில் வணிகக் குழுக்களும், நகர ஆட்சி மன்றங்களும் வாணிபத் துறையில் கட்டுப்பாடான தனியுரிமை அனுபவித்து வந்த காரணத்தால், அன்னிய நாட்டு வணிகர்கள் தீவிரமாகப் பாதிக்கப்பெற்றனர். சில சமயங்களில் மன்னரிடமிருந்து சிறப் புரிமைகள் கொண்ட குழுக்களை அன்னிய வணிகர் அமைத்துக் கொண்டனர். ஹான்சா (Hansa) இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்கியது. ஆயினும், இங்கிலாந்தில் வாழ்ந்த அயல்நாட்டவர் மிகுதியான வரிவிதிப்பிற்கும் பல வெறுப்பூட்டும் தடைகளுக்கும் உள்ளாயினர். குறிப்பாகச் சில்லறை வாணி பத்தில் அவர்கள் பெருந் தடைகளுக்குட்பட்டனர். அவர்கள் கடைகளையோ, வாழும் மனைகளையோ குத்தகைக்கு எடுத்துக் கொள்வதை மேலும் தடைசெய்யும் சட்டம் ஒன்றும் வந்தது. எட்டாம் ஹென்றியின் 32ஆம் ஆட்சியாண்டில் வந்த இச் சட்டம் அன்னியரை எப்போது வேண்டுமானாலும் அரசர் வெளி யேற்றலாம் என்றும் வகுத்தது. முதலாம் எலிசபெத் அரசி யாரின் ஆட்சியில், 1575ஆம் ஆண்டில்தான் அன்னியரை விரட்டும் இவ்வதிகாரம் இறுதி முறையாகப் பயன்படுத்தப் பெற்றது.

**தங்கி வாழும் உரிமையும் குடியுரிமையும் அளித்தல்** (Denization and Naturalisation) : மன்னர் அளித்த உரிமை ஆவணத்தின் மூலமாகத் தங்கி வாழும் உரிமையையோ அல்லது பாராளு மன்றம் இயற்றிய சொந்த முறையிலான சட்டப்படி குடியுரிமையையோ பெற்றதனால் அந்நிய நாட்டவன் ஓரளவு ஆங்கிலக் குடிமகனாகலாம். பாராளுமன்றச் சட்டம் மூலமாக வந்த குடியுரிமை பெற்றவர் நிலம் வைத்திருக்க முடியும் என்பதோடு,

அதனைப் பிறரிடமிருந்து மரபுரிமையால் அடையவும், குடியுரிமை பெறுவதற்கு முன்போ அல்லது பின்போ பிறந்த அவர்தம் குழந்தைகளுக்குச் சொத்துரிமையை வழங்கவும் இயலும். எவ்வாறாயினும், 1610ஆம் ஆண்டில் முதலாம் ஜேம்ஸின் ஏழாம் ஆட்சி ஆண்டில் சட்டமொன்று நிறைவேறியது. பாராளுமன்றத்தின் முன்னால் பற்றுறுதிப் பிரமாணமும் மேலாதிக்கப் பிரமாணமும் எடுப்பதோடு, இறைவாக் குறுதியும் முதலில் கொடுத்தாலன்றி ஒருவர் குடியுரிமை பெறமுடியாது என்பதை அச் சட்டம் வலியுறுத்தியது.

ஹாலந்து நாட்டிலிருந்து தம்முடன் வந்த ஆதரவாளர்களை ஆங்கில நாட்டு அரசாங்கத்தின் உயர் பதவிகளில் அமர்த்திய மூன்றாம் வில்லியத்தின் செயல் காரணமாக, அன்னிய நாட்டவரான அரசர்மீதும், அவர்தம் ஆதரவாளர்மீதும் கொண்ட நியாயமான ஐயுறவின்பேரில் அன்னியர்மீது பல தடைகளை விதித்த அரசுரிமை நிர்ணய சட்டத்தின்[16] இரண்டாவது, மூன்றாவது சட்ட வாசகங்களைப்போலவே அரசியல் அமைப்புச் சார்ந்த யோசனைகளின் ஐந்தாவது சட்ட வாசகமும் அமைந்தது. எவ்வாறாயினும், அத்தகைய உணர்ச்சி குறைவாகவோ அல்லது மிகுதியாகவோ எப்போதும் இருந்துவந்தது எனலாம். மேலே கூறிய ஐந்தாவது சட்ட வாசகத்தினால் அன்னியர் அனைவரும் பாதிக்கப்பெற்றனர். தங்கி வாழும் உரிமை பெற்றோரும், குடியுரிமை அளிக்கப்பெற்றோரும் கூடத் தப்பமுடியவில்லை. முதலாம் ஜார்ஜின் முதலாண்டுச் சட்டம் இதனை 1715ஆம் ஆண்டில் வலியுறுத்தியது. 'மேலே கூறப்பெற்ற சட்டத்தில் (அரசுரிமை நிர்ணயச் சட்டம்) உள்ள குறிப்பிடப்பெற்ற சட்ட வாசகத்தை முழுதுமாக, சிதையாது காத்தற் பொருட்டு' என 1715ஆம் ஆண்டின் சட்டம் விளக்கியது. குடியுரிமை வழங்குவதற்காகக் கொண்டு வரப்படும் மசோதாவில், அதில் வரும் அன்னியர் பாராளுமன்றத்தில் அமரவும், தடைசெய்யப்பெற்ற பதவிகளையோ அல்லது பொறுப்புகளையோ வகிக்கவும் தகுதியற்றவர் என்ற துணை வாசகம் இடம் பெறவேண்டுமென்று அச் சட்டம் வற்புறுத்தியது. ஆயின், தனிப்பட்ட நபர்களுக்குக் குடியுரிமை அளிக்க வல்ல தனியார் மசோதாக்களைக் கொண்டுவரலாம் என்று வகுத்தனவும், ஏற்கெனவே நிறைவேறியனவுமான பாராளுமன்றச் சிறப்புச் சட்டங்களினால் இச்சட்டத்தில் கண்ட வழிவகைகளையும் முதலாம் ஜேம்ஸின் ஏழாம் ஆண்டுச் சட்டத்தின் வழிவகைகளையும், செயல் தடையற்ற பிற்காலப் பாராளுமன்றங்கள் சில சமயங்களில் நீக்கிவைத்தன. எல்லா அன்னியப் பிராட்டஸ்டென்டுகளுக்கும் குடியுரிமை வழங்கிய ஆன் அரசி

யாரின் ஏழாம் ஆண்டுச் சட்டம் 1708ஆம் ஆண்டில் நிறைவேறியது. ஆயின், மூன்றுண்டுகளுக்குப் பிறகு அச் சட்டம் தள்ளுபடியாயிற்று. முதலாம் ஜேம்ஸின் ஏழாம் ஆண்டுச் சட்டம் கோரியபடி, இறைவாக்குறுதி எடுத்துக்கொள்ளாமலேயே அன்னியநாட்டு யூதர்களுக்குக் குடியுரிமை வழங்க வழி செய்த இரண்டாம் ஜார்ஜின் 26ஆம் ஆண்டுச் சட்டமான புகழ்பெற்ற 'யூதர் மசோதா', 1753ஆம் ஆண்டில் வெளிவந்தது. ஆனால், அதன் விளைவாகப் பொதுமக்களின் வெறுப்பு மிகுதியான காரணத்தால் அடுத்து வந்த பாராளுமன்றக் கூட்டத் தொடரிலேயே அச் சட்டம் ரத்தாகியது.[17] இறுதியாக, முதலாம் ஜேம்ஸின் ஏழாம் ஆண்டின் சட்டம் வலியுறுத்திய இறைவாக்குறுதிச் சோதனை தேவையற்றது என்பதை நான்காம் ஜார்ஜின் ஆறும் ஆண்டின் சட்டம் 1825ஆம் ஆண்டில் நிலைநாட்டியது. மேலும், முதலாம் ஜார்ஜின் முதலாண்டுச் சட்டத்தில் கண்ட குடியுரிமை சார்ந்த மசோதாக்கள்பற்றிய வழிவகையையும், விக்டோரியா அரசியாரின் 7, 8ஆம் ஆண்டின் சட்டம், 1844-ல் நீக்கியது.

**அன்னியர்மீது கட்டுப்பாடு :** ஆங்கில மக்களுடைய நலனைக் காப்பதற்காகவும், காப்பதாக நினைத்துக்கொண்டும் அன்னியர் மீது சில தடைகளை விதித்திருந்தபோதிலும், நாட்டின் பாதுகாப்பிற்குத் தேவையானல் அவர்களை வெளியேற்ற அரசாங்கம் உரிமை கொண்டாடியபோதிலும், அன்னிய அரசாங்கங்களுக்கு எதிராக அத்தகையோருக்கு அளிக்கும் உரிமையை ஆங்கில அரசாங்கம் விடாது பாதுகாத்துவந்தது. ஆனால், 1793ஆம் ஆண்டில் ஃபிரஞ்சுப் புரட்சியின்போது, பெருமெண்ணிக்கையில் வந்த அரசியல் அகதிகளில் சிலர், இங்கிலாந்தில் அரசாங்கத்திற்கெதிராக ஜனநாயகக் கழகங்களோடு இணைந்திருந்தனர் என்ற ஐயம் எழுந்த காரணத்தால், மூன்றும் ஜார்ஜின் 33ஆம் ஆண்டின் சட்டமாகிய அன்னியச் சட்டம் (Alien Act) நிறைவேறியது. அன்னியர் அனைவரையும் கடுமையான கண்காணிப்பில் வைக்கவும், சந்தேகப்பட்டவரை நாட்டிற்கு வெளியே அனுப்ப உள்துறைச் செயலர் அதிகாரம் பெறவும் அச் சட்டம் வகைசெய்தது. ஓராண்டிற்கு என்றே நிறைவேறிய அன்னியர் சட்டமானது அவ்வப்பொழுது புதுப்பிக்கப்பெற்றது. ஆனால், 1802ஆம் ஆண்டில் தாற்காலிகமாக ஏற்பட்ட சமாதானத்தின் போது அச் சட்டத்தின் மிகக் கடுமையான யோசனைகள் தளர்த்தப்பெற்றன. அந்த ஆண்டில்தான் 'ஃபிரெஞ்சு அரசாங்கத்திற்குப் பெரும் ஐயுறவினை ஏற்படுத்தவல்ல அரசியல் கருத்துகளையும் செயற் பாங்கினையும் கொண்ட பிஷப்புகளையும்

பிறரையும், ஃபிரஞ்சு அரசர்களையும் அவர்களுடைய ஆதரவாளர்களையும் பிரிட்டிஷ் டொமினியன்களிலிருந்து வெளியேற்ற வேண்டுமென்று நெப்போலியன் ஆணவத்தோடு அறைகூவல் விடுத்தான். ஃபிரான்ஸில் அந்த அரசாங்கத்திற்கு விரோதமான சில செய்தித் தாள்களைப் பரப்புவதிலே பங்குகொண்ட M. ஜார்ஜஸ் (Georges) என்பவனைத் தவிர நமது ஐரோப்பியப் பகுதிகளிலிருந்து வெளியேற்ற நமது அரசாங்கம் திடமாக மறுத்துவிட்டது. மீண்டும் போர் தொடர்ந்ததும் அன்னியச் சட்டமும் புதுப்பிக்கப்பெற்றது. அதேபோன்று 1814ஆம் ஆண்டில் சமாதானம் ஏற்பட்டபோது அச் சட்டத்தின் கடுமை தளர்ந்தது. திருந்திய வடிவிலும் அதனைப் புதுப்பிப்பதற்கு 1816ஆம் ஆண்டிலிருந்து பாராளுமன்றத்தின் கடுமையான எதிர்ப்பு இருந்துவந்தது. இறுதியாக 1826ஆம் ஆண்டில் அச் சட்டம் கைவிடப்பெற்றது.

**குடியுரிமை அளிப்புச் சட்டம், 1844** : இதற்கிடையில் விக்டோரியா அரசியாரின் 7, 8ஆம் ஆட்சியாண்டில், அதாவது, 1844-ல் வந்த ஹட்டினுடைய சட்டத்தினால் (Hutts Act) அன்னியருக்குக் குடியுரிமை வழங்குவதற்கு வழியேற்பட்டது. இருசபைகளின் உறுப்பினராதல் அல்லது பிரிவி கவுன்சில் சபையில் அங்கம் வகித்தல் அல்லது சான்றிதழில் குறிப்பிடப் பெற்ற உரிமைகள், தகுதிகள் ஆகியவை தவிர, இங்கிலாந்தில் பிறந்த பிரிட்டிஷ் குடிமக்கள் பெற்றிருக்கும் எல்லா உரிமைகளையும் தகுதிகளையும் பெறுவதற்கு வேண்டிய பற்றுறுதிப் பிரமாணத்தை உள்துறைச் செயலரிடமிருந்து அன்னியர் பெறும் வாய்ப்பினை அச் சட்டம் ஏற்படுத்தியது. ஆயின், விக்டோரியா அரசியாரின் 34, 35ஆம் ஆட்சியாண்டுகளில் தோன்றிய 1870ஆம் ஆண்டின் குடியுரிமை அளிப்புச் சட்டம் ஹட் சட்டத்தை ரத்து செய்தது. அதனால் அன்னியருடைய நிலையும், குடியுரிமை பெற்ற மக்களின் நிலையும் அடியோடு மாறின. மேலும், நாட்டில் பிறந்த முன்னோர்கள் வழிவந்த குடிமக்களன்றிப் பிறர் சட்ட முறையிலான அதிகாரம் பெற்றவரல்லர் என்னும் பழைய வாசகத்தைப் பொய்யாக்கியது. புகழ் வாய்ந்த கால்வின் வழக்கிலும்[18], அதன் பிறகு வந்த வழக்கிலும் வந்த பற்றுறுதி, அன்னியர் ஆகியோர் பற்றிய விளக்கங்கள் இன்று வரலாற்றுச் செய்திகளாகவே விளங்குகின்றன. இன்றைய சட்டப்படி, யுனைடெட் கிங்டத்தின் இயற்கையான குடிமக்களைப் போலவே எல்லா விதமான (பிரிட்டிஷ் கப்பல்களைத் தவிர) நிலவரச் சொத்துகளையும், தனிப்பட்ட சொத்துகளையும் வாங்கவும், பெறவும்,

வைத்திருக்கவும், விற்கவுமான உரிமையை அன்னியர் பெறமுடியும். ஆனல், அரசாங்கப் பதவியோ அல்லது நகராட்சிக் கழகம், பாராளுமன்றம் போன்றவற்றிற்கான வாக்குரிமையோ சாதாரணமாக அவர்களுக்கில்லை. ஆயின், மன்னரின் முக்கிய அரசாங்கச் செயலர் ஒருவரிடமிருந்து குடியுரிமைச் சான்றிதழைப் பெற்ற அன்னியர், யுனைடெட் கிங்டத்தில் வாழும் இயல்பான குடிமக்களைப்போலவே எல்லா அரசியல் உரிமைகளையும், பிற உரிமைகளையும், சிறப்புரிமைகளையும் கொண்டு, எல்லாக் கடமைகளுக்கும் கட்டுப்பட்டவராவர். அதேபோன்று இயல்பான குடிமகன் தன்னிச்சையாக அன்னிய நாட்டுக் குடியுரிமையைப் பெற்ருல் 'சட்டப்படி அவர் அன்னியராவார்' என்றும், அப்படிப்பட்டவர் அரசாங்கச் செயலரின் அனுமதியின் பேரில் மீண்டும் பிரிட்டிஷ் குடியுரிமையைப் பெறலாம் என்றும் அச் சட்டம் வகுத்தது. பிரிட்டிஷ் நாட்டுரிமைப் பண்பு, அன்னியர் நிலைபற்றிய சட்டம் (British Nationality and Status of Aliens Act) 1914ஆம் ஆண்டில் நிறைவேறியது. அதனல் 1870ஆம் ஆண்டின் சட்டம் வழக்கொழிந்தது. 1914முதல் 1943ஆம் ஆண்டுவரையிலான பிரிட்டிஷ் நாட்டுரிமைப் பண்பு, அன்னியர் நிலைச் சட்டங்கள் தாம் அன்னியரைப்பற்றிய சட்டதிட்டங்களைக் கொண்டிருக்கின்றன.[19]

## அடிக்குறிப்பு

1. வில்லியம், மேரி ஆகியோரின் முதலாம் ஆட்சியாண்டுச் சட்டம்.
2. இந் நூலின் முன்பக்கங்களைக் காணவும்.
3. இந் நூலின் முன்பக்கங்களைக் காணவும்.
4. 34, 35, 36, 20ஆம் விதியின் ஒரு பகுதி ஆகிய விதிவிலக்கு அளிக்கப்பெற்றவை திருச்சபையின் தனித்த கொள்கைகளை விளக்கவல்லவையாகும்.
5. மூன்ரும் வில்லியத்தின் ஒன்பதாம் ஆட்சியாண்டுச் சட்டம்.
6. வில்லியம், மேரி ஆகியோரின் முதலாம் ஆட்சியாண்டுச் சட்டம் (1689).

7. மூன்றும் வில்லியத்தின் பதினோராம் ஆட்சியாண்டுச் சட்டம்; மூன்றும் வில்லியத்தின் 13, 14ஆம் ஆட்சி யாண்டுச் சட்டம்.

8. ஆன் அரசியாரின் பத்தாம் ஆட்சியாண்டுச் சட்டம். ராபர்ட்சன் எழுதிய, 'Documents' என்னும் நூலின் பக்கம் 187 பார்க்க.

9. ஆன் அரசியாரின் பதின்மூன்றும் ஆட்சியாண்டுச் சட்டம். ராபர்ட்சனின் நூலில் 190ஆம் பக்கம் பார்க்கவும். H. Mclachlan எழுதிய, 'English Education Under the Test Acts: Nonconformist Academies, 1662—1820' என்னும் நூலையும் காண்க.

10. முதலாம் ஜார்ஜின் ஐந்தாம் ஆட்சியாண்டுச் சட்டம். இணங்காதார் தொழுகைக்காகக் கூடும் இடத்திற்கு லண்டன் நகர மேயர் பெருமானும் பிரஸ்பிடீரிய சமயத்தவருமான சர் ஹம்ப்ரி எட்வின், 1697ஆம் ஆண்டில் தமது பரிவாரங்களோடு சென்றது திருச்சபையாளருக்குப் பேரவமானம் இழைத்ததாகும். இத்தகைய அவமதிப்பு மீண்டும் நேராது பார்த்துக்கொள்வதற்காக முதலாம் ஜார்ஜின் ஐந்தாம் ஆட்சியாண்டுச் சட்டம் வந்தது. சில வேளை இணக்க மசோதாவை அது ரத்து செய்தது. இங்கிலாந்து திருச்சபை தவிர வேறு தொழுகைக் கூட்டங்கள் நடைபெறும் இடங்களுக்கு, மேயர், அரசரின் மாவட்டப் பகர ஆள் (bailiff), வேறு மாஜிஸ்ட்ரேட் ஆகியோர் சமய வழிபாட்டிற்கென்று தங்கள் பதவிக்குரிய அங்கியோடு அல்லது சின்னங்களோடு செல்லக் கூடாது என அச் சட்டம் வகுத்தது. அப்படி மீறிச் செல்பவர்கள் எத்தகைய அரசாங்கப் பதவியையும் வகிக்க அருகதையற்றவராவர். ஆயின், 1871ஆம் ஆண்டு வந்த சட்டத் திருத்த மசோதாவினால் அச் சட்டம் ரத்தாகியது.

11. 1728ஆம் ஆண்டில்தான் முதலாவது இழப்பீட்டுச் சட்டம் நிறைவேறியது. அதிலிருந்து 1828ஆம் ஆண்டில் சோதனைச் சட்டமும், மாநகர ஆட்சிச் சட்டமும் நீக்கப் பெறும்வரையில், சில விலக்குகள் தவிர, அது போன்ற சட்டங்கள் ஆண்டுதோறும் வந்தன.

12. முதலாம் ஜார்ஜின் முதலாம் ஆட்சியாண்டுச் சட்டம்.

13. இரண்டாம் ஜார்ஜின் 26ஆம் ஆட்சியாண்டுச் சட்டம். Robertson எழுதிய, 'Documents', பக்கம் 223. இச் சட்டத்தினால் நீக்கப்பெற்ற பழைய திட்டத்தின் தீமைகளுக்கு Lecky எழுதிய, 'History of England', அதி. ii, பக்கம் 115 பார்க்கவும்.

14. லண்டன் சார்ந்த சேம்பர்லினுக்கும் அலன் ஈவான் ஸுக்கும் இடையேயான வழக்கு (1767). இரண்டாம் சார்லஸின் பதின்மூன்றாம் ஆட்சியாண்டில் வந்த மாநகர ஆட்சிச் சட்டப்படி பதவியேற்ற ஓராண்டுக் காலத்திற்குள் ஆங்கிலத் திருச்சபை சம்பிரதாயப்படி இறைவாக்குறுதி எடுத்துக் கொள்ளாததால் தகைமைக் குறை ஏற்பட்டது எனும் அடிப்படையில் மாவட்ட அதிகாரியின் கடமையைச் செய்ய மறுத்ததற்காக, 1748ஆம் ஆண்டின் துணைச் சட்டத்தின் பிரகாரம், தண்டம் விதித்ததை அடுத்தே முதலில் இவ்வழக்கு மாவட்ட அதிகாரியின் மன்றத்திற்கு வந்தது. எதிர்வாதிக்குச் சாதகமாகப் பிரபுக்கள் சபை தீர்ப்பளித்தது.

15. 'Parliamentary History', xvi, பக்கங்கள் 313—327.

16. மூன்றாம் ஜார்ஜின் 18ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்; மூன்றாம் ஜார்ஜின் மூன்றாம் ஆட்சியாண்டுச் சட்டம்.

17. இரண்டாம் சார்லஸின் 30ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

18. மூன்றாம் ஜார்ஜின் பத்தொன்பதாம் ஆட்சியாண்டுச் சட்டம்.

19. மூன்றாம் ஜார்ஜின் ஐம்பத்திரண்டாம் ஆட்சியாண்டுச் சட்டம்.

20. மூன்றாம் ஜார்ஜின் ஐம்பத்துமூன்றாம் ஆட்சியாண்டுச் சட்டம்.

21. Cowper எழுதிய, 'Works' என்னும் நூலின் அதி. i, பக்கம் 80.

22. Lord Mahon எழுதிய, 'History of England', அதி. i, பக்கம் 488; அதி. ii, பக்கம் 280,

23. நான்காம் ஜார்ஜின் ஒன்பதாம் ஆட்சியாண்டுச் சட்டம். Robertson எழுதிய, 'Documents', பக்கம் 312.

24. பிற்காலத்தில் எச் சமயத்தைச் சார்ந்தவராயினும் ஐரிஷ் மன்னுய முதல்வராக வரலாம் என்ருகியது. ஆங்கில மன்னுய முதல்வர்மீது பிற்காலச் சட்டம் எத்தகைய விளைவினைத் தோற்றுவித்தது என்பது தெளிவாகவில்லை. 1943ஆம் ஆண்டு மே மாதம் 11ஆம் தேதி பிரபுக்கள் சபையில் எழுந்த விவாதத்திற்கு சைமன் பிரபு அளித்த விடையைக் காண்க.

25. நான்காம் ஜார்ஜின் பத்தாம் ஆட்சியாண்டுச் சட்டம். Robertson எழுதிய, 'Documents', பக்கம் 317.

26. நான்காம் வில்லியத்தின் 2, 3ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

27. விக்டோரியா அரசியாரின் 7, 8ஆம் ஆட்சியாண்டுச் சட்டம் (1844); விக்டோரியா அரசியாரின் 16, 17ஆம் ஆட்சியாண்டுச் சட்டம் (1846).

28. 1926ஆம் ஆண்டின் ரோமன் கத்தோலிக்கத் துயர்தீர்ப்புச் சட்டம். ஐந்தாம் ஜார்ஜின் 16, 17ஆம் ஆட்சியாண்டில் வந்தது.

29. போர்னுக்கும் (Bourne) கேனுக்கும் (Keane) இடையேயான வழக்கு (1919). 'Re Caus' (1934), அதி. 162.

30. நான்காம் வில்லியத்தின் 3, 4ஆம் ஆட்சியாண்டில் வந்தது. விக்டோரியா அரசியாரின் 1, 2ஆம் ஆட்சியாண்டில் வந்த சட்டத்தையும் காண்க.

31. இந் நூலின் பின்வரும் பக்கங்களில் பார்க்கவும்.

32. இரண்டாம் ஜார்ஜின் 13ஆம் ஆட்சியாண்டில் வந்தது (1739). 'Parliamentary History', xiv, பக்கம் 1373. Lecky எழுதிய, 'History of England', அதி. i, பக்கம் 262.

33. Lord Mahon எழுதிய, History of England', அதி. iv, பக்கங்கள் 35—37. இந் நூலின் பிற்பகுதியிலும் காண்க.

34. விக்டோரியா அரசியாரின் 8, 9ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

35. விக்டோரியா அரசியாரின் 21, 22ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்; 23, 24ஆம் ஆட்சியாண்டுச் சட்டம். 'உண்மைக்

கிறித்தவ சமயத்தின் மீது ஆணையாக' என்ற வாசகங்களை நீக்கிப் புதிய பிரமாணம் எடுக்க விக்டோரியா அரசியாரின் 29, 30ஆம் ஆட்சியாண்டுச் சட்டம் வழிவகுத்ததால், யூதர் களுக்கும் மற்ற உறுப்பினர்களுக்குமிடையே இருந்த வேற்றுமைகள் அனைத்தும் நீங்கின.

36. Anson எழுதிய, 'Law of the Constitution', அதி. i, பக்கம் 95. 1888ஆம் ஆண்டு நிறைவேறிய 'பிரமாணங்கள் சட்டம்'.

37. நான்காம் வில்லியத்தின் 6, 7ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

38. விக்டோரியா அரசியாரின் 34, 35ஆம் ஆட்சியாண்டுச் சட்டம். 1920ஆம் ஆண்டில் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் டிவினிடி பட்டம் (Degree in Divinity) பெற இணங்காதார் உரிமை பெற்றனர்.

39. இந் நூலின் முதலாம் தொகுதியைக் காண்க.

40. இந் நூலின் இரண்டாம் தொகுதியைக் காண்க.

41. இந் நூலின் இரண்டாம் தொகுதியைக் காண்க.

42. இந் நூலின் இரண்டாம் தொகுதியைக் காண்க.

43. சமய குருமார் திருக்கூட்டத்தின் இடைநிறுத்தம் பற்றியும், பாங்கோர் சிக்கலின் விளைவுபற்றியும் Norman Sykes எழுதிய, 'Church and State in the Eighteenth Century,' 287—314ஆம் பக்கங்களில் காண்க. இன்றளவும் அடிப்படையாக இருக்கும் 'State of the Church' என்னும் நூலில் சமயக் குருமார் திருக்கூட்ட வரலாற்று மூலச் செய்திகளையெல்லாம் தொகுப்பதற்கு வில்லியம் வேக் (William Wake) என்பார் அட்டர்பரியை மறுத்துப் பேசினார்.

44. Hallam எழுதிய, 'Constitutional History', அதி. iii, பக்கங்கள் 242—247; Anson எழுதிய, 'Law and Custom of the Constitution', தொகுதி ii, பகுதி ii, பக்கம் 263.

45. ஐந்தாம் ஜார்ஜின் 9, 10ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

46. Stephen எழுதிய, 'Commentaries' (20th ed.), அதி. i, பக்கம் 522. Berriedale Keith எழுதிய, 'The Constitution' (1940), அதி. ii, பக்கம் 429.

47. இந் நூலின் இரண்டாம் தொகுதியில் காண்க.

48. Holdsworth எழுதிய, 'History of the English Law', அதி. vi, பக்கம் 360-ல் ஒழுங்குபடுத்தும் கூறுகளையும்; அதி. iv, பக்கங்கள்—496, 511—512-ல் குற்றஞ்சார்ந்த கூறுகளையும்; அதி. v, பக்கம் 205-ல் அவதூறு இலக்கியச் சட்டத் துவக்கத்தையும் காண்க.

49. 1586ஆம் ஆண்டு வெளிவந்த விண்மீன் மண்டப உரிமைக் கட்டளைகள்.

50. முதலாம் எலிசபத் அரசியாரின் காலச் சட்டம். இந் நூலின் இரண்டாம் தொகுதியில் ஸ்டப், உடால் (Udal), பரோ, கிரீன்வுட், பென்ரி ஆகியோரின் வழக்குகளைக் காணவும்.

51. இந் நூலின் இரண்டாம் தொகுதியில் காண்க.

52. நிகலஸ் போர்ன், தாமஸ் ஆர்ச்சர் என்பாருக்காக அச்சிடப் பெற்ற 1623ஆம் ஆண்டு, மே மாதம், 23ஆம் தேதியிட்ட 'Weekly News'; May எழுதிய, 'Constitutional History' அதி. ii, பக்கம் 240.

53. 1640 முதல் முன்னிலை மீட்சிவரையிலான இருபது ஆண்டுகளில் அச்சகங்களிலிருந்து 30,000-க்கும் மேற்பட்ட செய்தித் தாள்களும் அரசியல் குறிப்பேடுகளும் வெளி வந்தன. பிரிட்டிஷ் பொருட்காட்சிச்சாலையில் 2,000 தொகுதிகளாக வைக்கப்பெற்றிருக்கும் 'Thomason Collection'-ல் அவற்றைக் காணலாம். (G. K. Fortescue 1908ஆம் ஆண்டில் வெளியிட்ட நூல் குறிப்பேடு).

54. W.M. Clyde எழுதிய, 'The Struggle for Freedom of the Press from Caxton to Cromwell, 1934' என்னும் நூலில் காண்க.

55. Milton எழுதிய, 'Areopagitica: A Speech for Liberty of Unlicensed Printing' என்னும் கட்டுரையை 1863ஆம்

ஆண்டில் தொகுத்து வெளியிடப்பெற்ற, 'Works' என்னும் நூலில், ivஆம் அதிகாரத்தில் காணலாம்.

56. Clyde எழுதிய, மேலே குறிப்பிடப்பெற்ற நூல், பக்கங்கள் 79—80.

57. இரண்டாம் சார்லஸின் பதினான்காம் ஆட்சியாண்டுச் சட்டம்; Robertson எழுதிய, 'Documents', பக்கம் 60.

58. ஜான் டுவின் வழக்குகளை, 'State Trials', அதி. vi, பக்கம் 659-ல் காண்க. கீச்சின் வழக்குகளை அதே நூலின் 710ஆம் பக்கத்தில் காண்க. ஹாரிஸ், ஸ்மித், கர்டிஸ், கார், செல்லியர் ஆகியோர் வழக்குகளை அதே நூல், அதி. vii, 926—1043ஆம் பக்கங்களில் காண்க. May எழுதிய, 'Constitutional History', அதி. ii, பக்கம் 242.

59. 1680ஆம் ஆண்டு எழுந்த ஹாரிஸ், கார் ஆகியோரின் வழக்குகளுக்கு 'State Trials', பக்கங்கள் 929—1127ஐக் காணவும். David Ogg எழுதிய, 'Charles Ii', அதி. ii, பக்கம் 515. என்டிங்கிற்கும் காரிங்டனுக்கும் இடையே எழுந்த வழக்கில் மன்னரின் நீதிமன்றத் தலைமை நடுவரான காம்டன் பிரபு தீர்ப்பளித்த 1765ஆம் ஆண்டு வரையில் நேர்மைக் கேடான இக் கருத்திற்கு எதிராக நீதிமுறை சார்ந்த கண்டனம் எழவேயில்லை. என்டிங்க் வழக்கினை, 'State Trials', 1030ஆம் பக்கத்தில் காணலாம். Broom எழுதிய, 'Constitutional Law', பக்கம் 558 – 623.

60. Macaulay எழுதிய, 'History of England', தொகுதி i, அதி. iii, பக்கங்கள் 360, 380.

61. அளிக்கப்பெற்ற வினோதமான காரணங்களை Holdsworth எழுதிய, நூலின் நான்காம் அதிகாரத்தில் 375—376ஆம் பக்கங்களில் காணலாம்.

62. அரசுக்கும் டட்சினுக்கும் (Tutchin) இடையேயான வழக்கு; 14 'State Trials', பக்கம் 1095.

63. இந் நூலின் முன்பக்கங்களில் காணலாம்.

64. 'Daily Courant' என்னும் முதல் தினச்செய்தித் தாள் 1709ஆம் ஆண்டில் வெளியாகியது.

65. ஆன் அரசியாரின் பத்தாம் ஆட்சியாண்டுச் சட்டம் (1711).

66. 1819ஆம் ஆண்டில்; 83ஆம் அடிக்குறிப்பைக் காண்க.

67. 'History of the Times', அதி. ii, பக்கங்கள் 194, 200-ல் முத்திரைகளின் உருவ நேர்படிகள் காணக்கிடக்கின்றன.

68. இந் நூலின் முன் வந்த பக்கங்களைக் காண்க.

69. அரசுக்கும் வில்க்ஸிற்கும் இடையேயான வழக்கு.

70. இந் நூலின் முன் வந்த பக்கங்களைக் காண்க.

71. வில்க்ஸிற்கும் உட்டிற்கும் (Wood) இடையேயான 1765ஆம் ஆண்டு எழுந்த வழக்கு. 19 'State Trials', பக்கம் 1153. Broom எழுதிய, 'Constitutional Law', பக்கம் 524.

72. லீச்சிற்கும் (Leach) மனிக்கும் (Money) இடையே 1765ஆம் ஆண்டு எழுந்த வழக்கு. 19 'State Trials,' பக்கம் 1001. Broom எழுதிய, 'Constitutional Law', பக்கம் 524.

73. என்டிங்கிற்கும் காரிங்டனுக்கும் இடையே 1765ஆம் ஆண்டில் எழுந்த வழக்கு. 19 'State Trials', பக்கம் 1030. Broom எழுதிய, 'Constitutional Law', பக்கங்கள் 558—623. Keir and Lawson எழுதிய, 'Cases in Constitutional Law', பக்கம் 145. Holdsworth எழுதிய, 'History of English Law', அதி. x, பக்கம் 661. பிற்காலத்தில் 1861ஆம் ஆண்டு வந்த களவுச் சட்டம் சோதனையிடுவதற்கான ஆணைகளை ஒழுங்கு செய்தது. தனிப்பட்ட செயல் நோக்கங்களுக்காக வந்த வேறு பல சட்டங்களும் அவற்றினை ஒழுங்கு செய்தன.

74. இந் நூலின் இரண்டாம் தொகுதியில் காண்க.

75. அரசுக்கும் ஃபிராங்க்ளினுக்கும் இடையேயான வழக்கு (1731), 17 'State Trials', பக்கம் 626. Holdsworth எழுதிய நூலின் அதி. xiii, பக்கம் 344. J. F. Stephen எழுதிய, 'History of Criminal Law', அதி. ii, பக்கம் 324. வால்போலுக்கு எதிராக புல்டினியும் பாலிங்புரோக்கும், 'The Craftsman என்னும் பத்திரிகையை நடத்தினர்.

76. அரசுக்கும் அல்மோனுக்கும் இடையே 1770ஆம் ஆண்டு எழுந்த வழக்கு. 20 'State Trials', பக்கம் 803. Holdsworth எழுதிய நூலின் அதி. x, பக்கம் 675. Stephen எழுதிய நூலின் அதி. ii, பக்கம் 324.

77. அரசுக்கும் உட்ஃபாலுக்கும் இடையே 1770ஆம் ஆண்டில் எழுந்த வழக்கு. 20 'State Trials', பக்கம் 870.

78. அரசுக்கும் மில்லருக்கும் இடையே 1770ஆம் ஆண்டில் எழுந்த வழக்கு; 20 'State Trials', பக்கம் 895.

79. அரசுக்கும் ஷிப்லிக்கும் இடையே 1783-ல் எழுந்த வழக்கு; 21 'State Trials', பக்கம் 847. Holdsworth எழுதிய நூலின் அதி. x, பக்கங்கள் 677—688; Stephen எழுதிய நூலின் அதி. ii, பக்கங்கள் 330—343. இவற்றில் இது பற்றிய முழு விளக்கத்தையும் ஆய்வையும் காணலாம்.

80. அரசுக்கும் ஸ்டாக்டேலுக்கும் இடையே எழுந்த வழக்கு (1789); 22 'State Trials', பக்கம் 237.

81. மூன்றும் ஜார்ஜின் 32ஆம் ஆண்டுச் சட்டம். Grant Robertson எழுதிய, 'Documents,' பக்கம் 272; Holdsworth எழுதிய நூலின் அதி. x, பக்கங்கள் 688—696.

82. Holdsworth எழுதிய நூல், அதி. x, பக்கம் 692.

83. நாட்டில் குழப்பமான நிலை இருந்த காரணத்தால் அரசாங்கத்தின் ஆலோசனையின்பேரில் 1819ஆம் ஆண்டு நிறைவேறிய அடக்குமுறைச் சட்டங்களின் தொகுப்பே ஆறு சட்டங்களாகும். படைக்கலங்களைப் பயன்படுத்தப் பயிற்சி அளிப்பதை முதல் சட்டம் தடைசெய்தது. குழப்பம் நிறைந்த கவுன்டிகளில் சோதனையிட்டு, படைக் கலங்களைக் கைப்பற்றும் அதிகாரத்தைக் குற்ற நடுவரிடம் அளிக்க இரண்டாவது சட்டம் வகை செய்தது. அரச நீதிமன்றத்தில் சிறு குற்றம் சாட்டப்பெற்ற எதிர்வாதியின் மேல் முறையீட்டு உரிமையை மூன்றுவது சட்டம் பறித்தது. 'அரசத் துரோகமான கூட்டங்கள் சட்டம்' (Seditious Meetings Act) என அழைக்கப்பெற்ற நான் காவது சட்டப்படி நிர்வாகத்தினர் வழக்கு மீறிய அதிகாரங்

களைப் பெற்றனர். மேலும், கடுமையான நிபந்தனைக்குட்பட்டல்லாது பொதுமக்களின் குறைபாடுகளை விவாதிப்பதற்கென்று ஐம்பது பேருக்குமேல் கூடும் கூட்டங்களை அச் சட்டம் தடைசெய்தது. அரசத் துரோகமான அல்லது பழிசார்ந்த அவதூறு இலக்கியங்களை வெளியிட்டதற்காகக் குற்றம் சாட்டப்பெற்ற பதிப்பாளரிடமிருந்தோ அல்லது மற்றவரிடமிருந்தோ அத்தகைய இலக்கியங்களின் படிகளைக் கைப்பற்றும் அதிகாரத்தை முறைமன்றங்களுக்கு வழங்கியது ஐந்தாவது சட்டம். அதே குற்றத்தினை இரண்டாவது முறை செய்தால் தண்டம் விதித்தல், சிறையிடல், நாடுகடத்தல் போன்ற தண்டனைகளை அவர்கட்கு முறைமன்றங்கள் அளிக்கலாம் என்றும் அச் சட்டம் வகுத்தது. ஆறுவது சட்டமோவெனின், பத்திரிகைகளின் மீதான பத்திர முத்திரைக் கட்டணத்தை மலிவான அரசியல் கட்டுரை ஏடுகளின்மீதும் பருவ இதழ்களின் மீதும் விதித்தது. ஐந்து ஆண்டுகளுக்கு என்று வரையறுக்கப்பெற்ற அரசத் துரோகமான கூட்டங்கள் சட்டத்தையும், 1822ஆம் ஆண்டு மார்ச் மாதம், 25ஆம் தேதி காலவதியான படைக்கலப் பறிமுதல் சட்டத்தையும் (Seizure of Arms Act) தவிர மற்றவை நிரந்தரமானவை. அரசத்துரோகமான அவதூறு இலக்கியங்கள் சட்டம் விதித்த நாடுகடத்தல் தண்டனை 1830-ல் நான்காம் ஜார்ஜின் 11ஆம் ஆண்டிலும், நான்காம் வில்லியத்தின் முதலாம் ஆண்டிலும் வந்த சட்டத்தினால் ரத்தாகியது. குறிப்பாக W. H. Wickwar எழுதிய, 'The Struggle for the Freedom of the Press, *1819—1832*' என்னும் நூலைக் காண்க.

84. இந் நூலிலேயே சில பக்கங்களுக்கு முன்னால் காணவும்.

85. விக்டோரியா அரசியாரின் 6, 7ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

86. பத்திரிகைச் சுதந்திரத்திற்கு Hunt எழுதிய, 'Fourth Estate'; Andrews எழுதிய, 'History of British Journalism'; Hallam எழுதிய, 'Constitutional History', அதி. iii, பக்கங்கள் 2—6, 166—168; May எழுதிய, 'Constitutional History', அதி. ii, பக்கங்கள் 238—383 காண்க.

87. இந் நூலின் இரண்டாம் தொகுதியில் காண்க.

88. May எழுதிய, 'Constitutional History', அதி. ii, பக்கம் 63.

89. Broom எழுதிய, 'Constitutional Law', பக்கம் 511. எவ்வாறுயினும், 1780ஆம் ஆண்டில் 'போப்பின் ஆதிக்கத்தை எதிர்த்து எழுந்த கலகங்களில் பங்கு கொண்டதற்காக ஜார்ஜ் கோர்டன் பிரபு வழக்கில் தீர்ப்பளித்த மான்ஸ்ஃபீல்டு பிரபு, இரண்டாம் சார்லஸின் சட்டம் ரத்தாகவில்லையென அறிவித்தார். தங்களுடைய விண்ணப்பங்களைச் சுமந்து கொண்டு பாராளுமன்றத்தை நோக்கிச் சென்ற பெரும் எண்ணிக்கைகொண்ட உரிமைப் பத்திர விண்ணப்பதாரர்களைத் தடைசெய்யும் அவசியம் நேர்ந்தபோது, 1848ஆம் ஆண்டில் அதனை எடுத்துக்காட்டினர். பொது விண்ணப்பங்கள்பற்றி Anson எழுதிய, 'Law and Custom', அதி. i, பக்கம் 371ஐப் பார்க்கவும்.

90. Sir Ivor Jennings எழுதிய, 'Parliament', அதி vii-ல் இவை பற்றிய அறிவாற்றலோடும் ஏற்கும் வகையிலும் கூடிய விளக்கம் காண்க.

91. இந் நூலின் முதல் தொகுதியைக் காண்க.

92. இந் நூலின் முதல் தொகுதியைக் காண்க. மூன்றும் எட்வர்டின் ஐம்பது ஆண்டு ஆட்சிக் காலத்தில் 1327ஆம் ஆண்டில்தான் கிலமானியப் படைகள் அமைக்கப் பெற்றன. J. F. Willard and W. A. Morris என்பார் தொகுத்தளித்த, 'English Government at Work', அதி. i, பக்கம் 344-ல் A. E. Prince எழுதிய, 'The Army and the Navy' என்னும் கட்டுரையில் விளக்கமான செய்தியைக் காணலாம்.

93. இந் நூலின் இரண்டாம் தொகுதியைக் காண்க.

94. இந் நூலின் இரண்டாம் தொகுதியைக் காண்க.

95. Fortescue எழுதிய, 'History of the British Army', அதி. i, பக்கம் 289.

96. விதிவிலக்கு மிக அருமையே. Holdsworth எழுதிய நூலின், அதி. vi, பக்கம் 241, அடிக்குறிப்பு 2; அதி. x, பக்கம் 378, அடிக்குறிப்பு 10 ஆகியவற்றைப் பார்க்கவும்.

97. வில்லியம், மேரி அரசியார் ஆகியோரின் முதலாம் ஆட்சியாண்டுச் சட்டம், Robertson எழுதிய, 'Documents',

பக்கம் 108, Holdsworth எழுதிய நூலின், அதி. x, பக்கம் 379.

98. Anson எழுதிய, 'Law and Customs', பகுதி ii, அதி. ii, பக்கம் 8; Hallam எழுதிய, 'Constitutional History', அதி. iii, பக்கம் 105–106, 259—263; Maitland எழுதிய, 'Constitutional History,' பக்கம் 447—459.

99. ஆன் அரசியாரின் 2, 3ஆம், 3, 4ஆம் ஆட்சியாண்டில் வந்த சட்டங்களும் பிறவும். 'பட்டியலில்' சேர்க்கப்பெற்ற இரவலர் ஒவ்வொருவருக்கும் இரவலர் கண்காணிகளுக்கும் 3 பவுன்கள் வழங்க 1708ஆம் ஆண்டின் சட்டம் வழி செய்தது. Max Beloff எழுதிய, 'Public Order' (1938), பக்கங்கள் 118.

1. Anson எழுதிய நூலின் பக்கம் 203.

2. 1916ஆம் ஆண்டில் வந்த படைப்பணிச் சட்டம் (Military Service Act); அதே ஆண்டு வந்த மற்றொரு 'படைப்பணிச் சட்டம்'; 1918ஆம் ஆண்டில் வந்த 'படைப்பணிச் சட்டம்' (2); அவற்றின் அடியாக வந்த விதிமுறைகள்.

3. Holdsworth எழுதிய நூல், அதி. x, பக்கம் 153. S. A. H. Burne எழுதிய, 'Staffordshire Quarter Sessions Rolls,' அதி. iv, பக்கம் 186.

4. இந் நூலின் முதலாம் தொகுதியில் காண்க.

5. நாவலாசிரியரின் ஒன்றுவிட்ட சகோதரரும் அந்தகருமான சர் ஜான் ஃபீல்டிங் என்பார், 'வாணிபஞ் செய்யும் அமைதி காண் நடுவர்', திறமையற்ற காவலர் போன்ற தீமைகளை மனத்திண்மையோடும் திறமையோடும் சமாளித்தார். அன்னாருடைய வாழ்க்கை விளக்க நூலை R. Leslie-Melville 1934ஆம் ஆண்டில் வெளியிட்டார். 1933ஆம் ஆண்டில் வெளிவந்த B. M. Jones எழுதிய, 'Henry Fielding, Novelist and Magistrate' என்னும் நூலையும் காண்க.

6. L. Radzinowicz எழுதிய, 'History of Criminal Law' (1950, மூன்று தொகுதிகள் முன்னேறிவருகின்றன) என்னும் நூலில், பதினெட்டாம் நூற்றாண்டிலும் பத்தொன்பதாம்

நூற்றுண்டிலும் இருந்த காவற்படையின் விளக்கமான வரலாற்றினைக் காணமுடியும்.

7. நான்காம் ஜார்ஜின் பத்தாம் ஆட்சியாண்டுச் சட்டம்.

8. விக்டோரியா அரசியாரின் 19, 20ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

9. J. F. Willard and W. A. Morris என்பார் தொகுத்தளித்த, 'English Government at Work' என்னும் நூலில் அதி. i, பக்கம் 377-ல் A. E. Prince எழுதிய, 'The Army and the Navy' என்னும் கட்டுரையைக் காண்க.

10. இந் நூலின் இரண்டாம் தொகுதியினைக் காண்க.

11. Holdsworth எழுதிய நூலின் அதி. x, பக்கம் 381; Foster's 'Broadfoot's Case (1743)', 154; 'Barrowe's Case' (1811), 14 East 346.

12. இவ் விநோதமான கதையினை Pollock and Maitland எழுதிய, 'History of English Law', அதி. i, பக்கம் 461—463-ல் காணலாம்.

13. Holdsworth எழுதிய நூல், அதி ix, பக்கம், 93—94.

14. இந் நூலின் முதலாம் தொகுதியைக் காண்க; 'Carta Mercatoria' (1303).

15. A. Beardwood எழுதிய 'Alien Merchants in England' (1931)-ல் கடிதங்களின் மாதிரிகளையும் விளக்கத்தையும் காணலாம்.

16. இந் நூலின ஆரம்பப் பகுதியில் காண்க.
17. இந் நூலின் முன்வந்த பக்கங்களில் காண்க.

# 21. தல ஆட்சியும் சமுதாயப் பணித்துறைகளும்

இங்கிலாந்தில் மத்திய அரசு எத்துணைப் பழைமையா னதோ, அத்துணைப் பழைமையானது தல ஆட்சியும் என்பது ஏற்கெனவே கூறியவற்றிலிருந்து வெளிப்படும். அதனுடைய வரலாறு நீண்டது மட்டுமல்லாது அதன் ஆரம்ப காலம் தெளி வற்றதாகவும், தற்காலத்தை நெருங்க நெருங்கச் சிக்கல் மிகுந்ததாகவும் அமைந்துள்ளது. பத்தொன்பதாம் நூற்றாண்டு வரையில் சில விதிகளையும் அமைப்புகளையும் நீக்கப் பாராளு மன்றம் தயங்கிய காரணத்தால் சிக்கலின் பெரும் பகுதி தோன்றியுள்ளது. சோதனைகளும் சீர்திருத்தங்களும் எழுந்த போதிலும், அவையெல்லாம் பல நூற்றாண்டுகளாக வந்த சிதைவுகளுக்கிடையே பணியாற்ற வந்த கூடுதலான மேலாண்மை அரசியல் அமைப்புகள், பிற அமைப்புகள் வடிவிலேயே வந்தன. அதனால் தல ஆட்சிப் பிரச்சினைகளை ஒரு காலத்திற்குப்பின் மற்றொரு காலத்தவர் தீர்க்க முனைந்ததன் விளைவாக, அடுத்து வந்த பல நிலைகளில் உள்ள அமைப்புகளைக் காணமுடிகின்றது. பண்டைய கவுன்டி, ஹண்ட்ரட் (Hundred), பட்டினம், பரோ ஆகிய பொது அரசியல் அமைப்புக் குழுமங்களே பழைய தல ஆட்சித் திட்டத் தில் இடம்பெற்றிருந்தன. அவற்றின் அதிகாரங்களும் கடமை களும் முற்றிலும் மரபாக வந்தவையே. மன்னரிடமிருந்தோ, பாராளுமன்றத்திடமிருந்தோ, அல்லது வேறு ஏதாகிலும் ஒரு மத்திய அமைப்பிலிருந்தோ அவை வரவில்லை. மாறாக, பொதுச் சட்டம் என வழங்கும் பெருமளவில் உள்ள மரபாக வந்த கருத்து கள், பழக்கங்கள் ஆகியவற்றின் ஒரு பகுதியாகவே அவை விளங்கின. இவற்றில் சில நிலமானிய முறையினால் மாற்றமடைந் தன. நிலமானிய முறை சார்ந்த நிலப்பிரிவுகள் இன்றும் வழக்கில் உள. ஒரு காலத்தில் நிலமானிய அடிப்படையில் வாக்குரிமை பெற்றிருந்த ஈலி தீவு (Isle of Ely) இன்று கவுன்டி கவுன்சி

லோடு விளங்குகின்றது. நமது பண்டைக் கால அமைப்புகளைப் போலவே இவற்றிலும் அதிகாரப் பிரிவுகள் இல்லை. சட்டமியற்றும் அதிகாரத்தையும், நீதிமுறை சார்ந்த அதிகாரத்தையும், நிர்வாகம் செய்யும் பொறுப்பையும் அவை ஏற்று நடத்தின. தனித்த பண்புகள் கொண்ட பிரிவுகளில், வழக்கிற்கிணங்க, அவற்றின் தேவைக்கேற்ற முறையில் தல அரசாங்கத் திட்டத்தை அமைத்துக்கொள்ளுதல் என்பது எப்போதும் நடைபெற்ற ஒன்று. எஸ்ஸக்ஸிலும் கென்டிலும் இருந்த சதுப்புத் தாழ்நிலச் சட்டமும், கார்ன்வாலிலும் பிற சுரங்கமுள்ள இடங்களிலும் இருந்த வெள்ளீயச் சுரங்கச் சட்டமும், தென் கரைத் துறைமுகங்கள் சார்ந்த சட்டங்களும் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

தல ஆட்சி அமைப்புகளின்மீது கூடுதலான பொறுப்புகளை அல்லது அதிகாரங்களை நடு அரசு தந்தது அடுத்த கட்டமாகும். இரு வழிகளில் இது நடைபெற்றது. பகுதி ஒன்றை பரோவாக அமைப்பதற்கு அல்லது ஏற்கெனவே உள்ள பரோவிற்கு அதிகப்படியான அதிகாரங்களை அளிப்பதற்குக் கையாளப்பெறும் உரிமைப் பத்திரம் வழங்குதல் ஒரு வழி. மற்றொரு வழியோ வெனின், சட்டத்தின் வாயிலாக இங்ஙனம் நகரங்களில் பொதுவாகக் காவல் செய்வதற்கு வகைசெய்த வின்செஸ்டர் சட்டம் 1285ஆம் ஆண்டில் நிறைவேறியது. இடைக்காலத்திற்குப் பிறகு பாரிஷ்களுக்கு அதிகாரம் வழங்கிய பல சட்டங்கள் வெளிவந்தன.

தீவிரமான முறையொன்றும் வழக்கிலிருந்தது. அதன்படி தல ஆட்சியின் சில பணிகளை நடு அரசே ஏற்று, அப்பணிகளைத் தனது ஆள்களைக் கொண்டே நிறைவேற்ற முனைந்தது. நடு அரசின் நியமனம் பெற்ற அவ்வாள்கள், தலத்திலிருந்து பணியாற்றினர். மிகப் பழங்கால அதிகாரியாக விளங்கியவர் மாவட்ட அதிகாரி போன்ற ஷெரீஃபே. ஆயின், தலவேலைகளைக் கவனிப்பதற்காக, பழைய அமைப்புகளுக்குக் கட்டுப்படாது பெருமளவில் சுதந்திரமாக உயர் ஆணையாளர் குழுக்கள் பலவற்றை விரைவிலேயே மன்னர் நியமித்தார். பொதுச் சாக்கடை ஆணைக்குழுக்கள், தொழிலாளர் நடுவர், குறிப்பாக அமைதிகாண் நடுவர் ஆகியோர் இவ்வகையைச் சார்ந்தவர். ஆரம்ப காலத்தில் மன்னரின் தனிச்சிறப்பதிகாரத்தின் மூலமாகவே அவர்கள் அதிகாரம் பெற்றனர். எனினும், பிற்காலத்தில் சட்ட ரீதியான அதிகாரங்களையும் பெருமளவில் அவர்கள் கொண்டனர்.

இத்தகைய அமைப்பினை உருவாக்குதற்கு அல்லது அமைப்பதற்குப் பலவிதமான செல்வாக்குகள் காரணமாயின. பாராளுமன்றப் பதவிகள் விரும்பத்தக்கனவாக மாறியபோது பல இடங்களில் பரோ ஆட்சியே பாராளுமன்றத் தொகுதியாக இருந்த காரணத்தால் பல தீமைகள் விளைந்தன. அதன் விளைவாகக் காமன்ஸ் சபைக்கு உறுப்பினரைத் தேர்ந்தெடுத்து அனுப்புவதைத்தவிர மற்றச் செயல் நோக்கங்களைப் பொறுத்தவரையில் பரோவின் அரசியல் அமைப்புச் சீர்குலைந்தது போலாயிற்று. இங்ஙனம் பாராளுமன்ற அகராதியில் 'சீர்குலைந்த' பரோக்களாக இருந்தவை, தல ஆட்சியின் கூறுகள் என்ற வகையிலும் செயலற்றுச் சீர்குலைந்திருந்தன. அதன் காரணமாக முனைப்பான தல ஆட்சியை விரும்பிய நகர மாந்தர் மேயர் பதவியையும், நகர ஆட்சிக் கழகத்தையும் விட்டு வேறு இடங்களை நாடவேண்டியதாயிற்று. உதாரணமாகப் பாராளுமன்றம் நிறைவேற்றிய தல சட்டங்களினால் உருவான தனிப்பட்ட குழுக்களை அவர்கள் நாடினர். இதே நிலைதான் ஓரளவு குறைந்த அளவில் கவுன்டி ஆட்சியிலும் இருந்தது. இதற்கு மாறாக இக்காலத் தல ஆட்சி முறையின் பல கூறுகளின் தாயாக, தகு மாதிரியாக விளங்கிய இரவலர் சட்டஞ் சார்ந்த திட்டத்தை உருவாக்க வேண்டிய தேவை மேன்மேலும் பெருகியதன் விளைவாகத் தல ஆட்சியில் சோதனைகள் செய்யவும், வளர்ச்சி தோன்றவும் தூண்டுதல் பெருமளவு ஏற்பட்டது.

இறுதியாக, ஆரம்ப காலத்தில் தன்னிச்சையாக இயங்கிய குழுக்கள் ஆற்றிய பல பணிகளைப் பிற்காலத்தில் மத்திய அல்லது தல ஆட்சிப் பிரிவுகள் மேற்கொள்ளத் தொடங்கின. மருத்துவக் குழுமங்களும், வகையார் சட்டங்களும், தங்கள் தங்கள் குழு உறுப்பினர்கட்கு ஓரளவு உதவி அளித்தன. பல வகையான அற நிலையங்களும் மருத்துவ மனைகளும் பல்கிப் பெருகின. அதுபோது மத்திய அரசாங்கத்தின் கையில் உள்ள வாணிபம், கைத்தொழில் ஆகியவற்றின் மீதான கட்டுப்பாடுகள் திட்டத்தையும் வணிகக் குழுக்களே நிர்வகித்தன. இத்தகைய நிலைக்குக் கல்வித்துறையே சிறந்த எடுத்துக் காட்டாக அமைகிறது. முதலில் தன்னிச்சையாகப் பணியாற்றிய குழுக்கள் பெருமளவில் தொடங்கி வைத்த கல்வி வளர்ச்சியை இன்று மத்திய, தல ஆட்சி அலுவலகங்கள் கவனித்து வருகின்றன.

**பரோக்கள் (Boroughs) :** ஒவ்வொரு நகரமும் தனது குறிக்கோளை அடைவதிலேயே நாட்டங் கொண்டிருந்த நிலையில், இடைக்கால பரோக்களின் வரலாற்றில் பல தல மாறுபாடுகளைத் தான் அதிகமாகக் காணமுடிகிறது. எனினும், பெருமளவு

பொதுவாகவுள்ள சில கூறுகளும் இல்லாமலில்லை. மேயர் என்னும் ஃபிரெஞ்சுப் பட்டத்தைத் தாங்கிய அலுவலாளர், பல நகரங்களில் தலைவராக விளங்கினர். பதின்மூன்றாம் நூற்றாண்டில், பன்னிரண்டு, இருபத்துநான்கு அல்லது வேறு எண்ணிக்கையுள்ள வணிகரைக்கொண்ட சபைகளைப் பல இடங்களில் காண முடிகின்றது. மெய்ட்லண்டு நினைப்பதைப் போல இவையெல்லாம் புதிய உருவில் வந்த பழைய ஹண்ட்ரட் சபை தானா (Hundred Court), அல்லது டெய்ட் (Tait) குறிப்பிடுவதைப்போல ஃபிரெஞ்சு கம்யூன்களிலிருந்து மேயரையும், கட்டுக்கோப்பையும் பெற்று விளங்கியவையா என்பது கடினமான பிரச்சினையாகும்.[2] எப்படியாயினும், ஏறக்குறைய 1300-ல் சிலவராட்சி சார்ந்ததாகவே பரோ ஆட்சி அமைந்தது. பதினான்காம் நூற்றாண்டில்தான் தல பிரமுகர்களுக்கு எதிரான பொதுமக்கள் இயக்கங்கள் பல நகரங்களில் தோன்றலாயின.

**பொதுச்சபை** (Common Council): அத்தகைய பொது மக்கள் இயக்கம் காரணமாக லண்டன் நகரில் 1376ஆம் ஆண்டில் பொதுச் சபை ஒன்று உருவாகியது. பதினைந்தாம் நூற்றாண்டிலும், பதினாறாம் நூற்றாண்டிலும் அதை முன் மாதிரியாக வைத்துப் பல நகரங்களில் பொதுச்சபைகள் தோன்றின. நகர ஆட்சியில் அதிக முக்கியத்துவம் இல்லாத நகரமாந்தர்க்கும் ஓரளவு பங்கு அளிப்பதே இத்தகைய பொதுச்சபைகளின் நோக்கமாகும். ஒருசாரார் பொருளாதாரச் சக்தியை வைத்திருந்த நேரத்தில் ஒரு சிலரிடம் அரசியல் சக்தியை ஒப்படைக்கும் முயற்சியாக அது அமைந்தது. சிறிதுகால வெற்றிக்குப் பின் அம் முயற்சிக்கு எதிர்ப்புத் தோன்றியது. எனினும், முதலில் பெற்ற நன்மைகள் யாவும் நசித்துவிடவில்லை. மேலும் பல நகரங்களில் இருசபைகள் நிரந்தரமாயின. அவற்றில் மிகுதியாகப் பொதுமக்களைச் சார்ந்ததாக இருந்த சபையில் பழைய சபையில் இருந்ததைப்போல இருமடங்கு உறுப்பினர் இருந்தனர்.[3] பிரபுக்கள் சபையில் வந்த திருத்தங் காரணமாக, 1835ஆம் ஆண்டின் மாநகர ஆட்சிகள் சட்டத்தில் ஏற்றுக்கொள்ளப்பெற்றிருக்கும் 'நகரத்தந்தையர்' (Alderman) கவுன்சில் சபை உறுப்பினர் (Councilor) என்ற இரு அமைப்புகளின் கட்டுக்கோப்புகளும் இன்றளவும் காணக்கிடக்கின்றன.

இடைக்காலத்து பரோக்களின் அதிகாரங்களை வரையறுத்தல் எளிதன்று. ஆரம்பகாலங்களில்[4] மிகுதியாக மதித்து, கவனத்தோடு போற்றப்பெற்றவை பிந்திய நூற்றாண்டுகளில்

சிறப்பிழந்தன. சில அதிகாரங்கள் வீழ்வதற்கு பரோக்களே காரணமாயின. எடுத்துக்காட்டாக, வாணிபத்தின்மீதும், கைத் தொழில்மீதும் பரோ விதித்த கட்டுப்பாட்டினால், அவைகள் நகரின் புறப்பகுதிகளிலும், நாட்டுப்புறங்களிலும் தஞ்சமடைந் தன. அதனால் நகருக்குள் வளர்ச்சியற்ற தேக்கநிலை தோன்றியது. எவ்வாறெனினும், தல ஆட்சி அதிகாரங்களில் இத்தகைய தெளிவற்ற நிலை இருந்தது நல்லதற்கே எனலாம். முக்கியமாகச் சிலவற்றைச் செய்ய முனைப்பான பரோக்கள் முன்வரும்போது அவைகள் அவ்வாறு செய்யக் கூடாது என்பதற்குச் சட்டப்படியான காரணத்தைக் காட்டமுடியாது. இங்ஙனம் வீதிகளை விளக்குதல், விளக்கு வைத்தல், தீயணைக்கும் படைகளைப் பராமரித்தல், குழாய்களில் நீர் அளித்தல், இரவலரைக் கவனிப்பதற்கென்று ஊதியம் பெறும் மருத்துவரை அமர்த்துதல், வேலை இழந்தோருக்கு உதவி யளித்தல், அந்தந்தக் காலங்களில் அரிதாகவும், அகவிலை கொண்டவையாகவும் மாறக்கூடிய நிலக்கரி, மெழுகுவத்தி ஆகிய பொருள்களைச் சேகரித்து வைத்தல் போன்ற பல பொறுப்புகளை ஏற்ற பரோக்களைப் பதினாறும் நூற்றாண்டில் காணமுடிகிறது.[5]

பதினேழாம் நூற்றாண்டில் நாட்டின் அரசியல் கொந்தளிப் பில் பரோக்கள் மூழ்கி இருந்தன. தல ஆட்சியில் மிகுந்த ஆற்றல்வாய்ந்த சிலரைச் சோதனைச் சட்டமும் மாநகர ஆட்சிச் சட்டமும் பதவியிலிருந்து விலக்கி வைத்தன. உரிமை யேது வினா (quo warranto) வழக்குகளின் மூலமாக பரோ உரிமைப் பத்திரங்களை ஸ்டுவர்டு மன்னர்கள் தாக்கினர். பாராளுமன்ற வாக்குரிமை என்னும் அழிவு தரும் நன்கொடையினால் பல பரோக்கள் சீர்குலைந்தன. இதற்கிடையில், மிகச்சிறிய பணியையும் பாராளுமன்றத்தின் தலச் சட்டத்தின் மூல மாகவே நிறைவேற்றமுடியும் என்ற கருத்திற்குக் காரணமான, சட்டம் சார்ந்த கொள்கையில், மாறுதல் ஏற்பட்டதாகத் தோன்றியது. ஆரம்பகாலங்களில் அவசியமற்ற தாக இருந்த இச் செயல்முறை, காலதாமதம் விளைப்பதாகவும், பெருஞ் செலவு பிடிப்பதாகவும் இருந்தது. மற்ற அமைப்பு களின் மிகுதியான செயல் திறம், பரோவின் சோர்ந்த நிலையை ஒருவாறு சரி செய்தது. இங்ஙனம் பரோ உயர் ஆணைக்குழு இருந்த இடங்களில் அமைதிகாண் நடுவர் பயனுள்ள நீதி மன்றங்களாகத் திகழ்ந்தனர். அதே போன்று பல வகையான சட்டஞ் சார்ந்த அதிகாரங்களைப் பாரிஷ்கள் பெற்றுப் பணியாற்றி

வருகின்றன. பயனுள்ள செயல் வேண்டுமென்று பெரும் பகுதியினர் விரும்புவார்களேயானால், வரி விதிக்கும் சட்ட பூர்வமான அதிகாரத்தோடு கூடிய 'மேம்பாட்டு உயர் ஆணைக்குழுக் களை' (improvement commissioners) அமைத்துக்கொள்வதுதான் சிறந்த வழியாகும்.

**1835ஆம் ஆண்டின் நகராண்மைக்கழக ஆட்சிச் சட்டம்** (Municipal Corporations Act): 1828ஆம் ஆண்டில் சோதனைச் சட்டத்தையும், மாநகரஆட்சிச் சட்டங்களையும் நீக்கியதிலிருந்தும், தல ஆட்சியையும், பாராளுமன்றத்திற்குப் பிரதிநிதிகளை அனுப்பும் பணிகளையும் முழுதுமாகப் பிரித்து வைத்த 1832ஆம் ஆண்டின் பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டம் நிறைவேறியதிலிருந்தும், பரோ வரலாற்றின் நவீனகாலம் தொடங்கியது. அப்போதுதான் 1835ஆம் ஆண்டின் நகராண்மைக் கழக ஆட்சிச் சட்டம்[6] வருவதற்கு வழி துலங்கியது. இச் சட்டம் வளர்ந்த நிலையில் 1882ஆம் ஆண்டின் நகராண்மைக் கழக ஆட்சிச் சட்டமாக உருவெடுத்தது. அந்நிலையில் நகரங்களில் இருந்த சிலவராட்சி நீங்கியது. மேயர், நகரத்தந்தையர், கழக உறுப்பினர் ஆகியோரே ஆட்சிப் பொறுப்பை ஏற்றனர். நகர சபையினால் தேர்ந்தெடுக்கப்பெறும் மேயர் ஓராண்டுக் காலத்திற்குப் பதவிவகிப்பவர், நகர சபையின் அளவில் மூன்றில் ஒரு பகுதியினரான நகரத்தந்தையர், சபை உறுப்பினரால் தேர்ந்தெடுக்கப்பெற்று, ஆறு ஆண்டுகள் பதவி வகிக்கின்றனர். உரிமை பெற்ற நகர மாந்தர் மூன்றாண்டுகட்கு ஒருமுறை நகரசபை உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கின்றனர். இங்ஙனம் உருவாகிய ஆட்சிக்குழு, மாநகரச் சொத்துகளை மேற்பார்வை செய்யவும், காவற்படையினைப் பராமரிக்கவும், நகரத்தின் பொதுவான காரியங்களை நிர்வகிக்கவுமான பொறுப்புகளை ஏற்றுள்ளது. பரோவை நல்ல முறையில் ஆட்சி செய்யவும், சமுதாயத் தொந்தரவுகளை நீக்குவதற்குமான துணை விதிகளை அக் குழு செய்யலாம். அவற்றினை மீறுவோரின்மீது 5 பவுன்களுக்கு மிகாத தண்டம் விதிக்கலாம். பாராளுமன்ற வாக்குரிமை போன்று குறைந்த எண்ணிக்கை ஒன்றினால் குறிக்கப்பெறாது, ஒரு வீதத்தில் வரி செலுத்தும் மனையை வைத்திருத்தல் என்னும் அடிப்படையில்தான் நகராண்மைக் கழக வாக்குரிமை அமைந்தது என்பதும், கழகக் கணக்குகளையெல்லாம் பரிசீலனை செய்து வெளியிட வேண்டுமென்ற ஆணையும், பழைய வாணிப உரிமைகள் மறைந்ததும், கழக நடவடிக்கைகளை வெளியிடுதல் ஆகியவை இச் சட்டத்தின் சிறப்புக் கூறுகள் ஆகும். ஆயின், பரோவின் பொது அதிகாரங்

களை இச் சட்டம் அதிகமாக விரிவு செய்யவில்லை. தல ஆட்சி சார்ந்த வேலைகளை நடைமுறையில் செய்த அவ்வப் பணிகளுக்கென்று அமைந்த குழுக்கள் விரும்பினால் தங்களுடைய பொறுப்புகளை நகராண்மைக் கழகத்திடம் ஒப்படைக்கலாம் என இச் சட்டம் வகுத்தது. ஆனால், பிற்காலத்தில் சுகாதார மேலாணைக் குழு நெருக்கும் வரையில் தலத்தில் பணியாற்றிய குழுக்கள் தங்களது அதிகாரங்களை விட்டுக் கொடுக்கத் தயங்கின. இறுதியில் பரோக்கள்தாம் சட்டப்படியான சுகாதார அதிகாரம் பெற்றவை என்பதைச் சட்டசபை நிலைநாட்டியது.[7] விரிவான பல சட்டங்களைத் தொகுத்து வெளியிடும் வகையான், 1882ஆம் ஆண்டின் நகராண்மைக் கழகங்கள் ஆட்சிச் சட்டம் வெளிவந்தது.[8]

**கவுன்டி (கோட்டம்) (County)**: காலப்போக்கில் பரோக்கள் பெற்ற தொல்லைகளே ஏறக்குறைய பண்டைக்கால கோட்ட அல்லது கவுன்டி அமைப்பினையும் பாதித்தன. விரிவகலமான அதிகார எல்லை கொண்ட முறை மன்றமாக ஒரு காலத்தில் கவுன்டி விளங்கியது. ஆனால், நீண்ட நாள்களுக்கு முன்பே சிறு சிறு பொது வழக்குகளை விசாரிக்கும் முறை மன்றமாகக்கூட இல்லாத நிலைக்குப் பல கவுன்டிகள் தாழ்ந்துவிட்டன. சிறு கடன் வழக்குகளைத் தீர்த்துவைக்கும் முறைமன்ற அதிகாரத்தை 1750ஆம் ஆண்டில் மிடில்செக்ஸ் கவுன்டி தனிச் சட்டம் ஒன்றின் மூலமாகப் பெற்றது.[9] 1846ஆம் ஆண்டு நிறைவேறிய 'கோட்ட முறைமன்றங்கள் சட்டத்தினால்'[10] இது போன்ற திட்டம் எல்லாக் கவுன்டிகளுக்கும் பொருந்துவதாயிற்று. கவுன்டி முறைமன்றத்தைப்பற்றித்தான் இச் சட்டம் குறிப்பிட்டதே ஒழிய கோட்டத்தின் தல ஆட்சிபற்றி அது ஒன்றும் குறிப்பிடவில்லை. சிறப்பு ஆணையாளர்கள், வரிகொடுப்போர் சங்கத்தார் போன்றவர் கையில் தல ஆட்சி அதிகாரங்களை ஒப்படைத்த பழைய நகராண்மைக் கழகங்களைப் போலவே, கவுன்டி முறைமன்றம், ஷெரீஃப், துணைப்பிரபு ஆகியோரைக் கொண்ட கவுன்டி ஆட்சி அமைப்புகளும் அதிகாரங்களை இழந்தன. அமைதிகாண் நடுவரே முக்கிய ஆட்சிக் கூறுகளாகத் திகழ்ந்தனர். அவர்தம் ஆரம்ப கால வரலாற்றினை ஏற்கெனவே கண்டோம்.[11] காலம் செல்லச் செல்லக் குற்ற இயல் நிர்வாகத்தில் மட்டுமன்றி இரவலர் சட்ட நிர்வாகத்திலும், பொதுத் தல ஆட்சியிலும் அவர்களுடைய பொறுப்புகள் சட்ட மூலமாகப் பெருமளவு அதிகரித்தன. வகுக்க இயலாத, பெருமளவிலான, தெளிவற்ற நிலையில் உள்ள சட்டங்களினால் அவர்கள் விரிவகலமான, பலதிறப்பட்ட அதிகாரங்களைப் பெற்றனர்.

பதினாறும், பதினேழாம் நூற்றாண்டுகளில் பிரிவி கவுன்சிலுக்கும் அமைதிகாண் நடுவருக்கும் இடையறாத, நெருங்கிய தொடர்பினை ஏற்படுத்தியதன் மூலமாக, அமைதி காவலரை உண்மைப் பொருளில் தனது கையாளாகச் செய்துகொள்வதில் மத்திய அரசு வெற்றிபெற்றது. பதினெட்டாம் நூற்றாண்டில் தல ஆட்சிப் பொறுப்பிலிருந்து பிரிவி கவுன்சில் சந்தடியின்றி விலகிக் கொண்டது. அதனால் அமைதிகாண் நடுவரே தங்களுக்குத் தெரிந்த வழி முறைகளைக் கையாண்டு, கவுன்டி ஆட்சிப் பொறுப்பினை அநேகமாக முழுதும் ஏற்றனர். அத்தகைய சுமையை அவர்கள் ஆண்மையோடு தாங்கினர். அவர்கள் நீண்ட நேரம் கடுமையாக உழைத்தனர். வெஸ்ட்மினிஸ்டரில் இருந்து அறிவுரையோ அல்லது கைதேர்ந்த உதவியோ இன்றி அரசாங்கம் சார்ந்த மிகக்கடுமையான பிரச்சினைகள் சிலவற்றை அவர்கள் சமாளித்தனர். இரண்டாவது வாசிப்பிற்கு முன் மசோதாக்களைப்பற்றிக் கருத்துரை வழங்குதற்கு என்று அவற்றை அமைதிகாண் நடுவரிடம் அனுப்பிவைத்ததன் மூலமாக, அவர்களைத் தனித்துறைத் திறமை வாய்ந்தவர் எனப் பாராளுமன்றம் கருதிவந்தது என்பது தெரியவருகின்றது.[12] சாதாரணமான சட்ட முறை மன்றங்களின் மூலமாக மத்திய அரசாங்கத்திற்கும் அமைதிகாண் நடுவருக்கும் இடையே முக்கியத் தொடர்பு ஏற்பட்டது. வழக்காறுகளின் மூலமான நீதிமன்றங்களின் கட்டுப்பாடு தீமை விளைப்பதாகவே இருந்தது.[13]

குற்ற வழக்குகளில் விரிவான அதிகாரம் பெற்றிருந்ததோடு, இரவலர் சட்ட நிர்வாகம், நெடுஞ்சாலைகள், மதுபான விடுதிகளுக்கு அனுமதிச் சீட்டு வழங்குதல், பொதுவான அமைதியை நிலைநாட்டுதல் போன்ற அதிகாரங்களும், சட்டத்தின் வாயிலாக, அமைதிகாண் நடுவருக்குக் கிடைத்தன. சிறிது காலத்திற்குப் பஞ்சாலைகளை மேற்பார்வையிடும் அதிகாரமும் அவர்களிடம் இருந்துவந்தது.

1835ஆம் ஆண்டில் ஏற்பட்ட நகராண்மைக் கழக ஆட்சிச் சீர்திருத்தத்தினால் கோட்ட ஆட்சிச் சீர்திருத்தப் பிரச்சினையும் எழுந்தது. எனினும், இரு பிரச்சினைகளும் மிகவும் மாறுபட்டவை. பரோ கவுன்சிலைப்போன்ற சபையைக் கோட்டத்தில் ஏற்படுத்தவேண்டுமானால், நல்ல சாலைகளும் மலிவான ரெயில்வேக்களும் இருக்கவேண்டுவது அவசியம். அப்படியிருந்தும், குறைபாடுகள் இருந்த நிலையிலும், கோட்டத்தில் இருந்த அமைதிகாண் நடுவர்கள் சிறந்த முறையில் சேவை

செய்தனர். அதனால் கவுன்டி ஆட்சி மேலாய்வுகளைச் சமாளித்து நின்றது. இங்ஙனம் ஊழல்மிகுந்த செயலற்றுக்கிடந்த பல நகர ஆட்சிகளுக்கும், கோட்ட ஆட்சிகளுக்கும் இடையே மிகுந்த இடைவெளி யிருந்தது.[14] அரசாங்கத்தின் அதிகாரத்தை அதிகரிப்பதற்கும், ஐரோப்பாவில் இருந்ததாக எண்ணிய சிறு தலக் கொடுங்கோலாட்சியாளர்களை உருவாக்குவதற்கும் எதிரான வழிவழியாக வந்த அச்சம் எப்போதும் இருந்து வந்தது. உள்துறை அலுவலகம்போன்ற அமைப்புகளுக்கு அமைதிகாண் நடுவர்களின் அதிகாரங்களிற் சில மாற்றப் பெற்றன. ஆனால் 1888 ஆம் ஆண்டுவரையில் பழைய திட்டமே முக்கியமாக நடைமுறையில் இருந்தது எனலாம்.[15] பல சட்டங்களின் மூலமாக அமைதிகாண் நடுவர் வரிவீதங்கள் விதிப்பதில் விரிவான அதிகாரங்களைக் கொண்டது, எந்த வகையான பிரதிநிதித்துவமுமின்றி வரி கொள்ளும் திட்டமாக அமைந்தது குறிப்பிடத் தகுந்ததாகும்.

**இரவலர் சட்டத்தின் வரலாறு:** தல ஆட்சி அதிகாரங்களைப் பெற்றோ அல்லது இயற்கையில் கொண்டோ பணியாற்றிய பண்டைக்கால ஆட்சியமைப்புகளைப்பற்றி இதுவரை ஆராய்ந்தோம். தொடர்ந்துவரும் பிரச்சினையைக்கொண்ட வேறு வகையான வளர்ச்சிபற்றி இனி ஆராயவேண்டும். புதுவகையான அமைப்புகளையும், ஆட்சிமுறை சார்ந்த ஏற்பாடுகளையும் உருவாக்கவேண்டிய அளவிற்கு நாட்டில் நெருக்கடியான நிலையை அப் பிரச்சினை தோற்றுவித்தது. இவற்றில் இரவலர் சட்டத்தின் வரலாறு மிகப் பழமையானதோடு, சிறந்த எடுத்துக்காட்டாகவும் அமைகின்றது. பொதுச் சுகாதாரம் ஆரம்பக் கல்வி போன்ற செய்திகளிலும் பிற்காலத்தில் ஓரளவு அதனை ஒத்த முறைகள் கையாளப்பெற்றன. அதன் விளைவாகப் பொதுப் படையில் தல ஆட்சியோடு தொடர்புகொள்ளாமல் தத்தமது சிறப்புப் பணிகளையே மேற்கொண்ட அரசாங்க அமைப்புகள் தோன்றலாயின.

நார்மானியர் காலத்திற்கு முன் ஏழ்மையைப் போக்குவதற்கு அரசாங்கம் நேரடியாக முயலவில்லை. ஆனால், திருச்சபைக்கு அளிக்க வேண்டிய கோவிலகமகன்மையைச் செலுத்த வேண்டுமென்பதற்காக, சட்ட முறையிலான கட்டுப்பாடுகளைக் கொண்டு வருவதன் மூலமாக இரவலரின் இடர்தீர்வதற்கான மறைமுகமான வழிவகையை அரசாங்கம் மேற்கொண்டது எனலாம். ஒவ்வொரு கிறித்தவ சமயத்தானும் தனது பொருளில் பத்தில் ஒரு பங்கினை ஆண்டவன் சேவைக்கென அளித்தல் சமயக்

கடமையாகும் என்னும் நம்பிக்கையைக் கிறித்தவ குருமார் கவனமாக வளர்த்தனர். அத்தகைய நம்பிக்கையின் அடிப் படையில் தன்னிச்சையாக அளித்தனவாக ஆரம்ப கால கோவிலகமகன்மைகள் அமைந்தன. 'ஆனுல், சமயச் சார்பான தண்டனைகள் மூலமாக இவற்றைத் தண்டுவது முடியாத ஒன்று என்பதோடு, விரும்பத்தக்கதுமன்று' என ஸ்டப்ஸ் (Stubbs) என்பார் குறிப்பிடுவார்.[16] மேலும் அவர் குறிப்பிடும்போது 'பழக்கம் அல்லது வருவாயைத் திருச்சபை, குருமார், இரவலர் ஆகியோரிடையே சாதாரணமாகப் பகிர்ந்தளிக்கும் பிஷப்பின் விருப்பம் ஆகியவையன்றி, உண்மையான செலவினை நிர்ணயிக்கும் ஏது எதுவுமில்லை. ஐரோப்பாவிலும், இங்கிலாந் திலும் எட்டாம் நூற்ருண்டிலிருந்துதான் கோவிலக மகன்மை சட்ட ரீதியான கடமையென்பது ஏற்பட்டது. யாவரும் கோவிலக மகன்மை அளிக்கவேண்டுமென்றும், அதிலிருந்து வந்த வருவாயை பிஷப்பே பகிர்ந்தளிக்க வேண்டுமென்றும் மாமன்னர் சார்லஸ் கி.பி. 779ஆம் ஆண்டில் ஆணையிட்டார். கி.பி. 787ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் கூடிய போப்பின் தூதுவர்கள் சபைகளில் கோவிலக மகன்மை கட்டாயமாக்கப் பட்டது. மன்னரும் நிலமானியப் பிரபுக்களும் அச் சபைகளுக்கு வந்து அதனை உறுதிசெய்த காரணத்தால் விடான் மகாசபையின் அதிகாரத்தைப் பெற்ற கட்டளைபோலாயிற்று. அதுமுதல் பல சட்டங்கள் அதனை வலியுறுத்திவந்தன. மாவட்டக் கிறித்தவத் தலைமைக் கோவில் அதனைப் பெற்றது என்றும், பிஷப்பே அதனைப் பகிர்ந்தளித்தார் என்றும் தெரியவருகிறது' என்று கூறினுர். கோவிலக மகன்மையைப் பங்கிடும் முறையை இரண்டாம் எதல்ரெட்டின் (Ethelred II) சட்டமொன்று குறிப் பிட்டது. அதன்படி பண்டைக்கால வழக்கிற்கிணங்க, மூன்றில் ஒரு பகுதி திருச்சபை அமைப்புகளுக்கும், மூன்றில் ஒரு பகுதி கிறித்தவ குருமாருக்கும், மீதி இரவலருக்கும் செல்லவேண்டிய தாயிற்று.[17] கோவிலகமகன்மை மீதான சமய குருமாரின் முன்னுரிமை, 1200ஆம் ஆண்டில் சமய குருமாரின் சபை கூடும்வரையில் தெளிவாக வலியுறுத்தப்பெறவில்லை.[18] உயிர் வாழ்வதற்கு வேண்டிய வகையில்லாது எவரும் இறந்துவிடாது, ஊர் குறுமாரும், திருச்சபை அதிகாரிகளும், பாரீஷ்வாழ் மக்களும் பாதுகாக்கவேண்டிய கடமை கொண்டவர் என்பதை 'அமைதிகாண் நடுவரின் கண்ணுடி' (Mirror of Justices) என்னும் நூல் தீரத்துடன் சுட்டிக்காட்டியது.[19] ஆனுல், கட்டாயமாக நிறைவேற்றுதற்கான வழி இல்லாத நிலையில் கோவிலகமகன்மை அளித்தல் என்னும் கடமையானது திருந்தா ஒன்ருகவே இருந்தது. எனினும், பலவகையான திருச்சபை

மானியங்களைப் பெறுபவர் என்னும் வகையில் குருமாரும், குறிப்பாக மடத்துக் குழுக்களும் கோவிலகமகன்மையிலும் பெரும்பகுதியைக் கொண்டனர். ஆயின், துரதிருஷ்டவசமாக 'கண்மூடித்தனமான, பயன் கருதாது உதவி செய்யும் உணர்வினுல்' வகைதொகையற்ற முறையில் பிச்சையிடும் வழக்கத்தை அவர்கள் கடைப்பிடித்தனர். அதன் காரணமாக வேலையின்றிச் சுற்றித்திரியும் பிச்சைக்காரரின் எண்ணிக்கை பெருகியது. அவர்களை ஒடுக்குவதற்காகக் கடுமையான சட்டங்களை ஓயாது இயற்றவேண்டியதாயிற்று. உடலுரமுள்ள இரவலருக்கு, தானம் என்னும் பேரால் பிச்சையிடுதல் கூடாதென்றும், சொந்தமாக வாழும் வகையற்றவர் படையில் சேரவேண்டுமென்றும், இல்லையானுல் சிறையில் அடைக்கப்பெறுவர் என்றும் மூன்ரும் எட்வர்டின் தொழிலாளர் சட்டம் வகுத்தது. கட்டுத்திட்டங்களுக்கு உட்பட்டுப் பிச்சையெடுப்பதை இரண்டாம் ரிச்சர்டின் பன்னிரண்டாம் ஆட்சியாண்டுச் சட்டம் அனுமதித்தது. குறிப்பிட்ட தல எல்லைக்குள் 'பிச்சையெடுப்பதற்கு வறிய ஆண்களுக்கும், பெண்களுக்கும் சான்றிதழ்கள் வழங்கவும் அது வகைசெய்தது.

**எட்டாம் ஹென்றியின் இரவலர் சட்டங்கள்** : இரவலரைப் பொறுத்தவரையில் ஏறக்குறைய அதே கொள்கைதான் எட்டாம் ஹென்றியின் காலத்திலும் இருந்தது என்ருலும் அதன் கடுமை அதிகரித்தது. உடல் வலிமை கொண்டவரைப்போலவே வயதானவர்களும், செயலிழந்தவர்களும், பிச்சைக்காரர்களாகவோ, வேலையின்றி ஊர்சுற்றுபவர்களாகவோ இருப்பின், அவர்கள் தங்கள் தங்கள் பிறந்த இடங்களுக்குச் செல்லவேண்டுமென்று எட்டாம் ஹென்றியின் 22ஆம் ஆண்டுச் சட்டம் ஆணையிட்டது. சில குறிப்பிட்ட மாவட்டங்களுக்குள் 'வயோதிகரும் செயலிழந்தவர்களும்' பிச்சையெடுப்பதற்கான அனுமதிச் சீட்டுகளை அமைதிகாண் நடுவர் வழங்கலாம் என வகுத்தது. ஆனுல், தங்களுடைய மாவட்ட எல்லையை மீறும் அனுமதிச் சீட்டுப் பெற்ற இரவலரையும், அனுமதிச் சீட்டுப் பெருத எல்லாப் பிச்சைக்காரரையும் கசை கொண்டு அடிக்கவேண்டும் அல்லது ரொட்டியும் நீரும் மட்டுமே அளித்து, மூன்று பகல், மூன்று இரவுகளுக்குத் தொழுமரத்திலிடவேண்டுமென்று அச்சட்டம் வலியுறுத்தியது. எட்டாம் ஹென்றியின் 27ஆம் ஆட்சியாண்டுச் சட்டப்படி தத்தம் அதிகார எல்லைக்குள் இருந்த வயது முதிர்ந்தும், செயலிழந்தும் உள்ள இரவலரைத் தன்னிச்சையாக வரும் தானங்களைக்கொண்டு எல்லா மாநகரங்களும், கோட்டங்களும், பாரிஷ்களும் காக்கவேண்டுமென்ருயிற்று.

மேலும், அவைகள் உடலுரமுள்ளவரை வேலை வாங்கவேண்டு மென்று அச் சட்டம் வலியுறுத்தியது. ஆயின், வேலை செய்ய மறுக்கும் உடலுரமுள்ள பிச்சைக்காரருக்கும், திடகாத்திரமான ஊர் சுற்றிகளுக்கும் முதல் முறை தவறுக்காகக் கசையடி தண்டனையும், இரண்டாம் முறை தவறுக்காகக் காது அறுப்பு தண்டனையும், மூன்றும் முறை தவறுக்காகத் தூக்குத் தண்டனையும் அளிக்கவேண்டுமென்றும் வகுத்தது. வகை தொகையற்ற முறையில் தானமளித்தால், தானமாக அளித்த பொருளைப்போல் பத்து மடங்குப் பொருள் பறிமுதல் செய்யப் படும் என்றும் அச் சட்டம் கூறியது. ஆனால், ஞாயிறுதோறும் எல்லாத் திருச்சபைகளிலும் பொருளைத் திரட்ட வேண்டு மென்றும் தானங்களை வழங்க மக்களை குருமார் தூண்ட வேண்டுமென்றும் அது வேண்டிக்கொண்டது.

**மடங்களை ஒடுக்குதல்:** வேலையின்றி ஊர்சுற்றும் பிச்சைக் காரர்கள் பெற்றுவந்த முக்கியமான ஆதரவு, மடங்கள் ஒடுக்கப் பெற்றதால் மறைந்தது. மூப்படைந்த, செயலிழந்த இரவலருக்கு ஆதரவு தரவும், உடல் உரமிக்க, திடகாத்திரமான பிச்சைக்காரர் களுக்குத் தண்டனையும் அளிப்பதற்காக ஏற்கெனவே இருந்த வழிவகைகளைக் கடுமையாக, ஈவிரக்கமின்றிச் செயற் படுத்துவதற்கான பல சட்டங்களை, ஆறும் எட்வர்டு ஆட்சிக் காலத்திலும், முதலாம் எலிசபெத் அரசியாரின் ஆட்சிக் காலத்தி லும் நிறைவேற்றினர்.

**1601ஆம் ஆண்டின் சட்டம்:** இறுதியாக 1601ஆம் ஆண்டில் இரவலருக்கு உதவிசெய்வதற்காக, முறையான தலவரிவிதிப்பினைப் புகுத்திய முதலாம் எலிசபெத் அரசியாரின் 43ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்[20] நிறைவேறியது. இங்ஙனம் தற்கால இரவலர் சட்டத்திற்கான அடிக்கல் நாட்டப்பெற்றது. தமது எல்லைக்குள் இருக்கும் இரவலரைக் காக்கும் பொறுப்பு பாரிஷ்களைச் சார்ந்தது. அதற்காக பாரிஷ் புலன்களின்மீது தீர்வை விதிக்கவேண்டும். அண்டையில் உள்ள அமைதிகாண் நடுவர் இருவரால் ஆண்டுதோறும் நியமனம் பெறும் நான்கு செல்வாக்குள்ள வீட்டுச் சொந்தக்காரர்களையும், திருச்சபைக் காவலர்களையும் கொண்ட 'இரவலர் கண்காணிப்பாளர்' (overseers of the poor) அத் தீர்வையை விதிக்கவேண்டும். கொண்ட தீர்வையைப் பின்வருமாறு பயன்படுத்த வேண்டும்: (1) தங்களைக் காத்துக்கொள்ளும் வகையற்றவர்கள் உடலுரம் கொண்டவர்களாக இருப்பின், அவர்களுக்கு வேலையளித்தல். (2) நொண்டி, முடம், மூப்பு, குருடு போன்றோரையும், வேலை

செய்யமுடியாத ஏழைகளையும், பெற்றோர், பிள்ளைகள், தாத்தா, பாட்டிகள் ஆகியோருடைய காப்பு அற்ற ஏழைகளையும், துணையுதவி தந்து காத்தல்.

முதலாம் எலிசபெத் அரசியாரின் 43ஆம் ஆட்சியாண்டுச் சட்டத்தில் இரு கொள்கைகளைக் காணமுடியும். மூப்படைந்தவருக்கும், முடமானவர்கட்கும் துணை உதவியளித்து, உடலுரமுள்ள இரவலருக்கு வேலையளித்தல் என்பது ஒன்று. இதனைத் தல அடிப்படையில் செய்யவேண்டும். அதாவது, ஒவ்வொரு பாரிஷும் தனது எல்லைக்குள் வாழ்ந்தவர்களுக்கு வகை செய்தல் வேண்டும் என்பது இரண்டாவது. வேலைசெய்ய முடியாத அல்லது விரும்பாத இரவலர் அவரவர் வாழும் குறிப்பிட்ட பகுதிகளிலேயே வாழவேண்டுமென்று வற்புறுத்தும் சட்டங்கள் சில ஏற்கெனவே நிறைவேறி யிருந்தன. அதாவது, ஒரு பகுதியில் பிறந்தவரோ அல்லது ஓராண்டு முதல் மூன்றாண்டு வரை ஏதோ ஒரு குறிப்பிட்ட காலத்திற்குத் தங்கியிருப்பவரோ, அப் பகுதியைவிட்டு வெளியேறுதல் கூடாது. ஆனால், வேலை தேடிச்செல்லும் உடலுரமும் சுறுசுறுப்பும் கொண்ட இரவலர் தங்கள் விருப்பம்போல் எங்குவேண்டுமானாலும் செல்லலாம். பல பாரிஷ்களில் எலிசபெத் அரசியாரின் சட்டத்தைப் பல ஆண்டுகளுக்குத் தவறான முறையிலும், ஒழுங்கற்ற வகையிலும் கொண்டு செலுத்திய காரணத்தால், நல்லமுறையில் ஆட்சி நடந்த பாரிஷ்களுக்கு இரவலர் குடியேறினர். இத்தகைய நியாயமற்ற சுமையிலிருந்து அப் பாரிஷ்களை விடுவிப்பதற்காக, இரண்டாம் சார்லஸின் 14ஆம் ஆட்சியாண்டில், அதாவது 1662-ல் சட்டமொன்று வந்தது. பாரிஷில் குடியேறுதற்கு என்று புதிதாக வந்தவர் பாரிஷுக்குப் பாரமாக இருப்பவர் என்று, நாற்பது நாட்களுக்குள், திருச்சபை அதிகாரிகளோ அல்லது இரவலர் கண்காணிப்பாளரோ புகார் செய்வாராயின், அத்தகைய இரவலரை அவர் பிறந்த பாரிஷுக்கோ அல்லது அதற்கு முன் நாற்பது நாட்களுக்காவது தங்கி வாழ்ந்த இடத்திற்கோ திரும்ப அனுப்ப அமைதிகாண் நடுவர் இருவரின் ஆணை போதும் என அச் சட்டம் வகுத்தது. இங்ஙனம் பிற் காலத்தில் நிறையச் சட்டங்களுக்கும் வழக்குகளுக்கும் பொருளானபோதிலும், இரவலருக்குத் துணை உதவி அளிப்பதோடு நெருங்கிய தொடர்பு கொண்ட குடியேற்றச் சட்டம் தோன்றலாயிற்று. ஒரு நூற்றாண்டிற்கு மேலாக மேற் பார்வையாளரின் தடையற்ற நிர்வாகத்தின் கீழ் இரவலர் துணை உதவி பல வழிகளில் தொடர்ந்து நடைபெற்றது. ஆயின், இரவலர் சட்டத்தைப் பயனுள்ளவகையில் செயலாற்றும்

கடமையைச் செய்வதில் அவர்கள் முழுத் தகுதி கொண்டவர் அல்லர் என்பதைப் பல சான்றுகள் நிரூபித்தன.

**பதினெட்டாம் நூற்றுண்டில் வந்த சட்டங்கள்:** முதலாம் ஜார்ஜின் ஒன்பதாம் ஆட்சியாண்டுச் சட்டம் அதாவது, 1722ஆம் ஆண்டின் சட்டம் வீடுகளை வாங்கவோ அல்லது குத்தகைக்கு எடுக்கவோ அல்லது இரவலரை வேலைக்கு அமர்த்தவும், அவர்கள் தங்குவதற்கான வசதி செய்துதரவும் என ஒப்பந்தம் செய்யவோ பாரிஷின் திருச்சபை அதிகாரிகளுக்கும், மேற்பார்வையாளருக்கும் அதிகாரம் வழங்கியது. அவர்கள் பாரிஷின் வரிசெலுத்துவோர் சங்கத்தின் இசைவினைப் பெறவேண்டுமென்றும் அச் சட்டம் கூறியது. மூன்று சிறு பாரிஷ்கள் ஒரே பணிமனையை நிறுவ அனுமதி தந்தது. அளிக்கப்பெற்ற விடுதியில் தங்க மறுக்கும் இரவலருக்குத் துணை உதவி கிடையாது எனவும் வலியுறுத்தியது. மூன்றும் ஜார்ஜின் 22ஆம் ஆட்சியாண்டில், அதாவது, 1782ஆம் ஆண்டில் நிறைவேறிய மிஸ்டர் டேவிஸ் கில்பர்டினுடைய சட்டப்படி (Mr. Davies Gilbert's Act) வீட்டுமனைச் சொந்தக்காரர்கள், குடியிருப்போர் ஆகியோரில் மூன்றில் இரு பங்கினர் இரவலர் சட்டத்தை ஏற்றுக்கொண்ட பாரிஷ்களில், இரவலர் கண்காணிகளுக்குப் பதிலாகப் பாதுகாப்பாளர்களை நியமிக்கலாம் என்றும், தங்கள் தங்கள் எல்லையிலுள்ள இரவலரைப் பராமரிப்பதற்கும், வேலை தருதற்கும், தங்கும்வசதி செய்து தருதற்கும் உகந்த தன்னிச்சையான கூட்டிணைப்புகளை அவைகள் ஏற்படுத்திக் கொள்ளலாம் என்றும் ஏற்பட்டது. தெரிந்தெடுத்த வரி கொடுப்போர் எனப் பெயர் பெற்ற (select vestry) செல்வாக்குள்ள குடும்பத் தலைவர்களிடம் இரவலர் காப்புப் பொறுப்பை ஒப்படைக்கும் அதிகாரத்தைப் பாரிஷ்களுக்கு வழங்கிய சட்டம் 1819ஆம் ஆண்டில் வந்தது. மூன்றும் ஜார்ஜின் 59ஆம் ஆட்சி ஆண்டில் வந்த இச் சட்டப்படி இரவலர் கண்காணிகளெல்லாம் தெரிந்தெடுத்த வரிகொடுப்போர் குழுவின் அறிவுரைப்படி நடக்கக் கட்டுப்பட்டவர் என்பது வலியுறுத்தப்பெற்றது.

**தெரிந்தெடுத்த வரிகொடுப்போர் குழுக்கள்:** இரவலர் சட்டங்கள்படி வந்த பொறுப்புகளை நிறைவேற்றுதற்கு இடையருது வேலை செய்யவேண்டியிருந்தது. பண்டைக்கால அமைப்பின் வழிவந்தவர்களே திருச்சபை அதிகாரிகள். ஆனல், இரவலர் சட்டங்களினல் தோன்றியவர்களே கண்காணிகள். அதேபோன்று திருக்கோயில் துணைத் தொழுகையிடத்தில் கூடிய பாரிஷின் சங்கக் கூட்டத்தினுடைய கடமைகளில் பெரும்

பகுதி, சட்டத்தின் மூலமாக வந்தவையே. இத்தகைய நெருக்குதல் காரணமாக, வரி கொடுப்போர் சங்கத்தின் தன்மை, மாற்றங்களுக்கு உட்படுவது அவசியமாயிற்று. அதே போன்று தெரிந்தெடுத்த வரி கொடுப்போர் குழுவின் வளர்ச்சியைச் சட்டமும் அங்கீகரிக்க வேண்டியதாயிற்று. 'அரசின் பிம்பமாக, மறு பிரதியாகவே ஒவ்வொரு பாரிஷூம் விளங்கிற்று' என்று எர்ஸ்கின் மே குறிப்பிட்டார்.[21] மேலும் அவர் குறிப்பிடுகையில், 'அதனுடைய ஆட்சியில் நிலம், திருச்சபை, பொதுமக்கள் ஆகியோர் பங்கு கொண்டனர்; அதன் சமுதாயத்தில் செல்வர்களின் ஆட்சிக் கூறுகளும், மக்களாட்சிக் கூறுகளும் இணைந்தே இருந்தன. வரி கொடுக்கும் பாரிஷ் மக்கள் அனைவரும் திருக்கோயிலின் துணைத் தொழுகையிடத்தில் கூடி, தலக்காரியங்களை நிர்வகிக்கலாம் எனப் பொதுச் சட்டம், தனக்கே உரித்தான பேரெளிமைத் தன்மையோடு, இசைவு தந்தது. ஆயின், இத்தகைய பொதுமக்கள் தொடர்பு கொள்ளும் வழக்கம் பல பாரிஷ்களில் சிறிது சிறிதாக வழக்கொழிந்தது. பொதுமக்களுக்குக் கட்டுப்படாது, சுயமாகத் தேர்ந்தெடுத்துக் கொண்ட சிலர், வரிகள் விதிக்கவும், பாரிஷ் நிதியை நிர்வகிக்கவும், பிற தலப் பொறுப்புகளை ஏற்கவும் ஆன உரிமை கொண்டாடினர். எதிர்ப் பேதுமின்றி இணக்கத்தைப் பெற்ற இத்தகைய அதிகாரப் பறிப்பு, மரபுவழக்காகவும் மாறியது. பொதுச் சட்டத்திற்குற்ற விலக்காகவும் இதனை நீதிமன்றங்கள் ஏற்றுக்கொண்டன. அதனால் தங்களது உரிமைகளை மக்கள் பறிகொடுத்தனர். அவர்களுக்குப் பதிலாகத் தெரிந்தெடுத்த வரிகொடுப்போர் குழுக்கள் அதிகாரஞ் செலுத்தின' என்று விளக்கினர். 1818ஆம் ஆண்டில் வந்த ஸ்டர்கஸ் போர்னின் சட்டமும், (Sturges Bourne's Act) 1831ஆம் ஆண்டில் வந்த சர் ஜான் ஹாப்ஹௌஸின் வெஸ்ட்ரி சட்டமும் (Sir John Hobhouse's Vestry Act) தல ஆட்சியில் இருந்த அத்தகைய குறையை ஒருவாறு நிவர்த்தி செய்ய முயன்றன.

கட்டாய வற்புறுத்தல் இல்லாமலேயே அதிகாரங்களை வழங்கும் சட்டங்களாகவே கில்பர்டின் சட்டமும், தெரிந்தெடுத்த வரி கொடுப்போர் குழுச்சட்டமும் அமைந்ததால், பெரும்பாலான பாரிஷ்களில் இரவலர் துணை உதவியைக் கண்காணிகளே நிர்வகித்து வந்தனர். இரவலர் உதவிக்கு என வந்த மதிநுட்பமும், எளிமையும் கொண்ட இரவலர் உதவித் திட்டமானது, தொழில் திறமையற்ற கண்காணிகளின் நிர்வாகத்தில், நாட்டிற்குப் பெருங்கேடு பயக்கும் அளவிற்கு வளர்ந்துவிட்டது. அதுபற்றி எர்ஸ்கின் மே[22] பின்வருமாறு குறிப்பிட்டார்: 'நாட்டிலுள்ள தொழிலாளர் அனைவரும் பிச்சைக்காரர் நிலையை நோக்கி விரைந்

தோடினர். சொத்துகளும் அழிவினை எதிர்நோக்கி நின்றன. இத்தகைய கேட்டினை விளைத்த திட்டம், நன்கொடை அடிப்படையில் எழுந்ததாகத்தான் கொள்ளப்படுகின்றது. ஆயின், மனித இனத்தினை மாசு படுத்தவல்ல இதைவிடத் தீங்கு விளைவிக்கும் திட்டத்தினைக் கெடுமதியாளர் யாரும் தீட்டியிருக்க முடியாது. வறியருக்கும், வயோதிகருக்கும், நோய்வாய்ப்பட்டவர்க்கும், செயலிழந்தோர்க்கும் துணை உதவி நல்கும் நோக்கத்தோடு எழுந்த நிதியைப் 'பிச்சை கேட்டவருக்கெல்லாம் மனம் போனபடி பகிர்ந்தளித்தனர். ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் நேர்மையான தொழிலை ஆதாரமாகக் கொள்வதற்குப் பதிலாக பாரிஷையே எதிர்நோக்கக் கற்றிருந்தனர்.'

**1834ஆம் ஆண்டின் இரவலர் சட்டத் திருத்த மசோதா :** இரவலர் சட்டங்களின் நிலைபற்றியும் அவற்றின் நிர்வாகம் பற்றியும் ஆராய்வதற்கு என முந்திய ஆண்டில் பாராளுமன்றம் கோரியதற்கிணங்க அமைக்கப்பெற்ற அரச உயர் ஆணைக் குழுவின் சிபாரிசுகளின்பேரில், 1834ஆம் ஆண்டில் இரவலர் சட்டத் திருத்த மசோதா என்ற முக்கியமான சட்டம் நிறைவேறியது. அதுவே நான்காம் வில்லியத்தின் 4, 5ஆம் ஆட்சி ஆண்டுகள் சட்டமாகும். பென்தாமின் (Bentham) ஆர்வமிக்க சீடரான எட்வின் சாட்விக் (Edvin Chadwick) என்பார் சுறுசுறுப்பான உறுப்பினராகப் பணிபுரிந்தது அந்தக் குறிப்பிடத்தக்க உயர் ஆணைக் குழுவின் சிறப்பியல்புகளில் ஒன்ருகும். மத்திய அரசின் கட்டுப்பாட்டில் தல அரசு இயங்கவேண்டுமென்ற கொள்கையை அவர் திடமாக வலியுறுத்தியவர். பொது அரசாங்கச் செயல்முறையினுல் தல அதிகாரிகளின் பணிக்கு மத்திய அரசிலுள்ள நிபுணர் வழிகாட்டியாக அமைய வேண்டுமென்று வாதிட்டவர்.

**பணிமனைச் சோதனை :** அன்னுரது தூண்டுதலின்பேரில் வந்த புதிய சட்டம், 'அனுதைகளுக்கே துணை உதவி அளிக்க வேண்டுமென்ற எலிசபெத் இராணியாரின் சட்டக் கருத்தையே அடிப்படையாகக் கொண்டிருந்தது. உண்மையான தேவையையும் போலியையும் வேறுபடுத்திக் காட்டுவது அதன் நோக்கமாகும். பணிமனையில்தான் அதற்கான சோதனையை நடத்த முடியும். அதுவரையில் பொதுவாக ஏழைகளுக்கான துணை உதவி, உள்ளூரைச் சார்ந்தே இருந்தது. வயோதிகரும் அனுதைகளும், வெளியில் துணையுதவி பெறமுடியாத பிறரும், பாரிஷ் பணிமனையில் தஞ்சம் புகுந்தனர். அதுபோது உடலுரமுள்ளவருக்கு வெளியில் துணை யுதவி கிடைப்பது அடியோடு நின்றது. பணிமனையில் புகுவதற்கு விருப்பம் தெரிவிப்பதை

வைத்தே அவர்களின் தேவைகள் நிரூபணமாயின. இத்தகைய சோதனையை நன்கு அமைத்த பாரிஷ்கள் சில ஏற்கெனவே வெற்றிகரமாக நடத்தின. அதுதான் இப்போது பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பெற்றது. ஆயின், முறையாக அமையாத பாரிஷ் பணிமனைகளுக்கு மாருகப் பல பாரிஷ்கள் இணைந்து அவை அனைத்திற்கும் பொதுவான ஐக்கியப் பணிமனைகள் எழுந்தன. இரவலர்பற்றிய தல நிர்வாகத்தை, தேர்ந்தெடுத்த பாதுகாப்பாளர் குழுக்களிடம் ஒப்படைத்தனர். லண்டனில் உள்ள மத்திய உயர் ஆணையாளர் குழு ஒன்று பொது மேற்பார்வை செய்யும் பொறுப்பினை ஏற்றது.[23]

ஆங்கில அரசாங்கத்தில் புதுமையாக வந்தவர் உயர் ஆணையாளர்கள். அவர்கள் விரிவகலமான அதிகாரங்களைக் கொண்டிருந்தனர். ஆணைகள் இடவும், கட்டுத்திட்டங்கள் விதிக்கவும் அதிகாரம் பெற்றனர். தலப் பாதுகாப்பாளர் குழுக்கள் நியமித்த அதிகாரிகளை அவற்றினைக் கலக்காமலேயே பதவியிலிருந்து நீக்கவும், மேற்பார்வை செய்தல், தணிக்கை நடத்துதல் திட்டத்தின் மூலமாக விரிவான கட்டுப்பாடு செய்யவும் அதிகாரம் கொண்டிருந்தனர். பென்தாமின் கொள்கைக்குச் சிறந்ததோர் வெற்றி இச் சட்டத்தின் வாயிலாகக் கிடைத்தது. ஐந்து ஆண்டுகளுக்கு என்று இரவலர் சட்ட உயர் ஆணையாளர் நியமனம் பெற்றனர். சாட்விக் செயலராகப் பதவியேற்ருர். ஆயின், 1847ஆம் ஆண்டுவரையில் அவ்வப்போது அக் குழுவின் பதவிக் காலம் நீடித்தது. 1847ஆம் ஆண்டில்தான் அதற்குப் பதிலாக இரவலர் சட்டக் குழு (Poor Law Board) என்ற அமைப்பினை விக்டோரியா அரசியாரின் 10, 11ஆவது ஆட்சியாண்டுச் சட்டம் உருவாக்கியது. கவுன்சிலின் தலைமைப் பிரபு, அரச முத்திரைப் பிரபு, உள்துறைச் செயலர், நிதியமைச்சர் ஆகியோரையும், அவ்வப்போது மன்னர் நியமிக்கும் நபர்களையும் அக் குழு கொண்டிருந்தது. அக் குழுவின் தலைவர் முதல் முறையாக அமைச்சராகவும் பாராளுமன்ற உறுப்பினராகவும் வர முடிந்தது இச் சட்டத்தின் பயனுகத்தான். இச் சட்டம் நிறைவேறிய மூன்று ஆண்டுகளுக்குள் இரவலரின் துணை உதவிக்காக ஆண்டு தோறும் செலவான தொகையில் மூன்று மில்லியன் பவுன்கள் 1834ஆம் ஆண்டில் குறைந்தன என்ற உண்மையே, இதனுடைய நலம் தரும் பயன்களை எடுத்துக்காட்ட வல்லது. இச் சட்டத்தின் கூறுகளிற் சில பிறகு தளர்த்தப்பட்டு இருக்கின்றன. ஆயின், பொதுத் திட்டத்திற்குப் புறம்பாக, ஆனல், அதனோடு ஒத்தவகையில் செயலாற்றும் வண்ணம் தனியார் நன்கொடையினைத் திறமையுடன் அமைத்து இரவலர் துணை

உதவிக்கு என ஒத்தாசையாகக் கொண்டு வரும் வரையில் பணி மனைச் சோதனையைத் தளர்வேதும் இன்றி எல்லா இடங்களிலும் கொண்டுவருவது இயலாததாயிருந்தது. தாற்காலிகமாக இடரில் ஆழ்ந்திருக்கும் சுறுசுறுப்பான, உண்மையிலேயே உதவி பெறத் தகுதியுடையவருக்கு உதவி செய்வதன்மூலம் அவர்கள் பிச்சைக்காரர்களாக மாறுவதைத் தடுக்க முடியும்.

சுருங்கக் கூறுமிடத்து 1834ஆம் ஆண்டுவரையில் இரவலர் சட்ட வரலாறு முற்றிலும் தலக் கொள்கை அடிப்படையே கொண்டிருந்தது. ஒவ்வொரு பாரிஷும் அதனதன் எல்லைக்குள் வாழ்ந்த இரவலருக்கு ஆதரவு காட்டியது. முக்கியமாகப் பயிர்த் தொழிலை மேற்கொண்ட ஒவ்வொரு பிரிவிலும் பணி யாற்றிய அமைதிகாண் நடுவர் குழுவே, உகந்த பொருளாதார, சமுதாயக் கொள்கைகளை வகுத்துச் செயலாற்றின. முழு ஆட்சியையும் ஒழுங்குசெய்து, கட்டுப்படுத்தும் புதிய தேசிய அமைப்பு இருக்கவேண்டியது அவசியம் என்று ஆகும்வரை இந் நிலையே தொடர்ந்துவந்தது.

**பொது உதவி :** இரவலர் துணைவுதவிபற்றிய சட்டமுறையி லான ஏராளமான யோசனைகளை, 1927ஆம் ஆண்டு வந்த இரவலர் சட்டம் தொகுத்தளித்தது. ஐந்தாம் ஜார்ஜின் 17, 18ஆம் ஆட்சியாண்டுச் சட்டமாகிய அது, ஏறக்குறைய அறுபது சட்டங் களை அடியோடும், முப்பத்தொன்பது சட்டங்களை ஓரளவும் ரத்துச் செய்தது. இரவலர் சங்கங்களில் பாதுகாப்பாளர் குழுக் கள், இரவலர்ச் சட்ட நிர்வாக அதிகாரத்தைத் தொடர்ந்து வைத் திருக்க இச் சட்டம் அனுமதித்தது. ஆனால், 1930ஆம் ஆண்டில் பாதுகாப்பாளர் குழுக்களின் அதிகாரம் பறிபோயிற்று. 1929ஆம் ஆண்டு நிறைவேறிய தல ஆட்சி சட்டப்படி அவற்றி னுடைய அதிகாரம், கவுன்டிகளுக்கும் கோட்ட பரோ கவுன்சில் சபைகளுக்கும் மாறியது. அதிகார மாற்றத்திற்குத் தேவையான திருத்தத்தோடு ஐந்தாம் ஜார்ஜின் 20, 21ஆம் ஆட்சியாண்டுகளில் வந்த இச் சட்டம் 1927ஆம் ஆண்டுச் சட்டத்தை நீக்கியது.[24] இன்று பொது உதவி என்னும் பேரால்தான் இரவலர் துணை உதவி வழங்கப்பெறுகின்றது. 1930ஆம் ஆண்டிலிருந்து அவ்வப்போது திருத்தப்பெற்ற பொது உதவி ஆணையின் மூலமாக அதன் நிர்வாகம் நடைபெறுகின்றது. கோட்டங்களெல்லாம் மாவட்டங்களாகப் பிரிந்தன. ஒவ்வொரு மாவட்டத்திலும் முப்பத்தாறுக்கும் மேற்படாத உறுப்பினரைக் கொண்ட ஆலோசனைக் குழுக்கள் பணிபுரிந்தன. கவுன்டி கவுன்சிலர்கள், பட்டின மாவட்டக் கவுன்சிலர்கள், இடர் களைவதில் அனுபவம் பெற்றவர்கள் முக்கியமாக முன்னாள்

பாதுகாப்பாளர்கள் ஆகியோர் அடங்கிய அக் குழு விடம் வெளிப்புறத் துணை உதவிப் பொறுப்பில் பெரும் பகுதி ஒப்படைக்கப்பெற்றது. இதுபோன்ற ஆலோசனைக் குழு லண்டன் மாநகரத்தில் இல்லை எனினும், அதுபோன்ற அமைப்பு களை பரோக்களில் லண்டன் கவுன்டி கவுன்சில் நியமிக்கலாம். மேலும், மகப்பேறு, குழந்தை நலம் ஆகியவை சார்ந்த பணிகளைக் கட்டுப்பாடு செய்யும் அதிகாரத்தை பரோ கவுன்சில்களுக்கும் அளிக்கலாம்.

**1848ஆம் ஆண்டின் பொதுச் சுகாதாரச் சட்டம் :** 'பொதுச் சுகாதாரம்' (Public health) என நீண்ட காலமாக வகுக்கப் பெற்ற பல நடவடிக்கைகளும் ஏறக்குறைய இரவலர் சட்டம் போன்றதொரு வளர்ச்சிப் போக்கினைக் கொண்டிருந்தன. மீண்டும் எட்வின் சாட்விக்கின் அயராத தலைமையில்தான் இத்தகைய வளர்ச்சி தோன்றியது. இவ்விரண்டிற்கும் உள்ள முக்கிய வேற்றுமை என்னவெனில், இரவலர் சட்டத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, பொதுச் சுகாதாரம் அண்மைக் காலத்ததாகக் காட்சியளிக்கின்றது. மேலும், எங்கு முக்கியமாக வேண்டுமோ அங்குப் பொதுச் சுகாதாரம் இல்லை. அதாவது, தொழிற் புரட்சியினுல் தோன்றிய 'மக்கட்பெருக்கம் மிகுந்த புதிய பகுதிகளில்', மரபாக வந்த தல ஆட்சியோ அல்லது அமைப்புகளோ இல்லாததால், அங்குப் பொதுச் சுகாதாரம் குடி கொள்ளவில்லை. எனவே, ஏற்கெனவே இருந்த அமைப் புகளைக் கட்டுப்படுத்துவது என்பதைக் காட்டிலும், இல்லாத இடங்களில் புதிய அமைப்புகளை ஏற்படுத்துவதே பொதுச் சுகாதாரப் பிரச்சினையாக இருந்தது. வாந்திபேதி என்னும் தொத்து நோய் பெருங்கவலை அளித்துவந்தது. பொதுச் சுகாதாரமும் ஏழ்மையும் தொடர்புடைய பிரச்சினைகளே என இரவலர் சட்ட உயர் ஆணைக்குழு வற்புறுத்திக் கூறியது. சாட்விக் உருவாக்கிய புதிய பதிவு செய்யும் முறையினுல் முதன் முறையாகக் கணக்கெடுக்கும் வழி கையாளப்பெற்றது.[25] அதன் விளைவாக 1845ஆம் ஆண்டிலும், 1847ஆம் ஆண்டிலும் வந்த மசோதாக்கள் தோல்வியுற்ற பிறகு வந்த 1848ஆம் ஆண்டின் பொதுச் சுகாதாரச் சட்டத்தினுல் சாட்விக்கினுடைய அதிகாரவர்க்க ஆட்சி ஓரளவு நிறைவு பெற்றது.

சுகாதாரப் பொது ஆட்சிக்குழுவென்னும் மத்திய அலுவலகத்தை அச் சட்டம் உருவாக்கியது. தல சுகாதாரக் குழுக்களே (Local Boards of Health) தல நிர்வாகத்தை கவனித்துக் கொண்டன. ஓர் இடத்தில் வாழும் மக்களின் வேண்டுகோளின் படி இத்தகைய புதிய அமைப்புகளை அச் சட்டம் கொண்டுவந்

தது. ஆண்டு ஒன்றிற்கு ஆயிரத்திற்கு இருபத்து மூன்றிற்குமேல் மரணத்தீர்வை உயர்ந்துள்ள இடங்களில் இவ்வித அமைப்பு களை மத்தியக் குழுவே கட்டாயமாகப் புகுத்தியது. அச் சட்டத்தை ஏற்றுக்கொண்ட பரோ, சுகாதார அதிகாரத்தைப் பெற்றது. 1834ஆம் ஆண்டின் இரவலர் சட்டத்தைப் போலவே பரோ கவுன்சில் அல்லாத தல அதிகாரிகளைத் தெரிந்தெடுப்பதில் நிறைய வரி செலுத்துவோருக்கு ஆறுக்கும் மேற்படாத கூடுதலான வாக்குகளை அளிக்கும் திட்டம் வழக்கிலிருந்தது. கழிவு நீர் கால்வாய்கள், சாலை சுத்திகரிப்பு, விளக்கு வைத்தல், தெருக்களை ஒழுங்குசெய்தல், குடிநீர் அளித்தல், மயானங் களைக் கண்காணித்தல், சமூக விரோதமான வியாபாரத்தைத் தடுத்தல் போன்றவை, பொதுச் சுகாதாரக் குழுக்களின் முக்கியப் பொறுப்புகளாகும். தலத்தின் துணைச் சட்டங்கள் அரசாங்கச் செயலர் ஒருவரால் வலியுறுத்தப்பெறுதல்வேண்டும். மத்திய அலுவலகத்திலும், தல அலுவலகத்திலும், சமுதாயத்திற்குக் கேடு பயப்போரைக் கண்காணிக்கவும், தீர்வைகள் விதிக்கவும் ஆன அதிகாரங்கள்கொண்ட ஊதியம் பெறும் அலுவலாளர் இருந்தனர்.

பொதுச் சுகாதார மசோதா சபைக்கு வந்தபோது தீவிர மான எதிர்ப்பு இருந்த காரணத்தால், மிகக் குறுகிய வரம்பிற்குட் பட்டே அது நிறைவேறியது. ஆயினும், ஒரு புதிய சக்தி வேலை செய்ய ஆரம்பித்துவிட்டதை மக்கள் அதிர்ச்சியுடன் உணரத் தொடங்கினர். அதனல் 'ஒருமுகப்படுத்தலுக்கு' வெகுவிரைவி லேயே எதிர்ப்பு வளர்ந்தது. தல ஆட்சி அமைப்புகள் சுதந்திர மானவை என்னும் விந்தையான அரசியல் அமைப்பைச்சார்ந்த புதுப் புனைவிற்கான[26] கருவியை ஆங்கிலோ-சாக்சானிய வரலாற்றில் காண முற்பட்டனர். முதலாம் ஜேம்ஸிற்கு எதிராகப் பொதுச் சட்டத்தை, கோக் பயன்படுத்தியதைப் போலவே, இரவலர் சட்ட உயர் ஆணையாளருக்கும், சுகாதாரப் பொது ஆட்சிக் குழுவுக்கும், எதிராகவும் ஆங்கிலோ-சாக்சானிய சட்டங்களை டூல்மின் ஸ்மித் (Toulmin Smith) கையாண்டார். பண்படாத தல ஆட்சியின் மீட்பிற்கான முயற்சி மிகத் தீவிர மடைந்தது. அதனல் 1854ஆம் ஆண்டில் சுகாதாரப் பொதுச் சபை கலைக்கப்பெற்றது. பல சமயோசித நடவடிக்கை களுக்குப் பிறகு இறுதியாக 1858ஆம் ஆண்டில் தல ஆட்சி சட்டம் நிறைவேறியது.[27] மத்திய அரசாங்க அலுவலகங்களின் அதிகாரங்களைக் குறைத்துத் தல ஆட்சி சபைகளின் அதிகாரங் களை அச் சட்டம் மேலோங்கச் செய்தது. இதுபோது பிரிவி கவுன்சில் சபையும் உள்துறை அலுவலகத்தில் தல ஆட்சிப்

பிரிவும் மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்களைத் தங்களிடையே பகிர்ந்துகொண்டிருக்கின்றன.

இவற்றை யெல்லாம் பொதுவாக ஆராய்ந்தால், 19ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியின் நடைமுறைக்கு இயைந்த தாகச் செய்யவேண்டுமென்ற முயற்சியில் தல ஆட்சி பலப்பல பிரிவுகளாகச் சிதறுண்டதுபோலத் தோன்றும் தலத்தினைக் காணும்போது, பொதுச் சுகாதாரம், பாதுகாப்பாளர், மேம்பாட்டு ஆணையாளர், நெடுஞ்சாலை வட்டங்கள், சிறு குற்றத் தீர்ப்புப் பிரிவுகள், பரோக்கள், கவுன்டிகள் சார்ந்த குழுக்கள் பல்கிப்பெருகி இருந்தன. அவைகள் வெவ்வேறான வாக்குரிமை முறைகளைக் கையாண்டன; தனித்தனியாகத் தீர்வை விதித்தன; தனியாகப் பணியாளரைக்கொண்டிருந்தன; சிக்கல் மிகுந்த பூகோள வட்டங்களில் செயற்பட்டன. அவற்றின் நடவடிக்கை களிற் சில கட்டாயமற்றனவாகவும், மற்றவை கட்டாய மானவையாகவும் விளங்கின. ஆயின், இரவலர் சட்ட ஆட்சிக் குழு, உள்துறை அலுவலகம், பிரிவி கவுன்சில், மருத்துவ அலுவலகம் அல்லது வாணிப ஆட்சிக் குழு போன்றவற்றின் மூலமாக மத்திய அரசு அவற்றின்மீது கட்டுப்பாடு கொண் டிருந்தது.

**1871ஆம் ஆண்டின் தல ஆட்சிக் கழகம்** (Local Government Board): இங்ஙனம் சிதறுண்டு கிடந்தவற்றை உரிய முறையில் இணைத்து, எளிமையும் பயனும் மிகுந்த ஒரு புதிய திட்டமாக அமைத்துத் தல ஆட்சியைப் புதுப்பிப்பதே அடுத்த கட்டத்தில் காணக்கூடியது. தல ஆட்சியைப் புதுப்பிக்க வேண்டுமென்று திடமான அறிக்கையொன்றை அரச சுகாதார ஆய்வுக் குழுவொன்று, 1871ஆம் ஆண்டில் வெளியிட்டது. அதன் விளைவாக 1871ஆம் ஆண்டில் தல ஆட்சிக் குழு உருவாகியது.[28] இச் சட்டத்தின் விளைவாகக் கலைக்கப்பெற்ற இரவலர் சட்ட ஆட்சிக் குழுவின் அதிகாரங்களையும் பல மத்திய அரசாங்கத் துறைகளிடமிருந்து மாற்றப்பெற்ற அதிகாரங் களையும் தல ஆட்சிக் கழகம் ஏற்றது. இத்தகைய ஒருமுகப் படுத்தப்பெற்ற மத்திய அரசாங்க அமைப்பிற்கு உகந்த முறையி லான சட்டங்களும் வந்தன. 1875ஆம் ஆண்டின் பொதுச் சுகாதாரச் சட்டத்தின் மூலமாகத் தொகுக்கப்பெற்றவையும்,[29] பழைய சட்டங்கள் பலவற்றில் திருந்திய வடிவம் பெற்ற வையுமே அச் சட்டங்கள். தல ஆட்சி அமைப்புகளிலும் ஓரளவு ஒருமைப்பாட்டினைத் தோற்றுவிக்கவும் அச் சட்டம் முயன்றது. நகரசபையைச் சுகாதாரத்திற்குப் பொறுப்பான தல அதிகாரி யாகச் செய்ததால், பரோவைப் பொறுத்தவரையில் அச் சட்டம்

வெற்றி பெற்றது ; பரோவிற்கு வெளியே அவ்வாறு செய்வது மிகக் கடினமாகும். எனவே, பொதுத் தல ஆட்சியை ஓரளவு ஒத்திருந்த பாதுகாப்பாளரிடமே பொதுச் சுகாதாரப் பொறுப்புகளை அச் சட்டம் ஒப்படைத்தது.

நாட்டுப்புறங்களில் வாழ்ந்த ஏராளமான மக்களுக்கு வாக்குரிமை வழங்கிய 1884ஆம் ஆண்டு வந்த சீர்திருத்தச் சட்டத்தின் விளைவாக கவுன்டி ஆட்சிப் பிரச்சினை மேலோங்கி நின்றது. ஐம்பது ஆண்டுகள் முயற்சிக்குப்பின்[30] 1888ஆம் ஆண்டில் தல ஆட்சிச் சட்டம் இறுதியாக நிறைவேறியது.

**1888ஆம் ஆண்டின் தல ஆட்சிச் சட்டம், கவுன்டி சபைகள்:** தற்போது இங்கிலாந்திலும் வேல்ஸிலும் நிலவும் கவுன்டிகளிலுள்ள தல ஆட்சித் திட்டத்தினை 1888ஆம் ஆண்டின் தல ஆட்சிச் சட்டம் அநேகமாக நிலைநாட்டியது எனலாம். விக்டோரியா அரசியாரின் 51, 52ஆம் ஆட்சியாண்டுகளில் வந்த இச் சட்டம் கவுன்டிகளின் காரியங்களை நிர்வகிக்கும் அதிகாரத்தினை அமைதிகாண் நடுவரிடமிருந்து பறித்தது. அவர்களுக்குப் பதிலாகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற கவுன்டி கவுன்சில்களிடம் அவ்வதிகாரத்தினை ஒப்படைத்தது. மூன்றுவித ஆட்சிப் பிரிவுகளில் வழங்கும் தல ஆட்சியை இச் சட்டம் திருத்தி அமைக்க முயன்றது; அவற்றில் மிகப் பெரியது கவுன்டியாகும். இரண்டாவதாக வந்தவை நகர அல்லது நாட்டுப்புறத்தைச் சார்ந்த சுகாதார மாவட்டங்கள்; நகர மாவட்டங்களாக இருந்த பரோக்களும் அவற்றில் அடங்கின. இறுதியாக வந்தவை பாரிஷ்களாகும். கவுன்டி கவுன்சிலர்கள், கவுன்டி தந்தையர், தலைவர் ஆகியோர் அடங்கியதே கவுன்டி கவுன்சிலாகும். கவுன்சிலர்களை கவுன்டி வாக்காளர்கள் மூன்றாண்டுகளுக்குத் தேர்ந்தெடுத்தனர். தலைவரையும், கவுன்டி தந்தையாரையும், கவுன்சிலே தேர்ந்தெடுத்தது. முன்னாளில் அமைதிகாண் நடுவர் கவனித்துவந்த கவுன்டியின் முழு நிர்வாகப் பொறுப்பையும், கவுன்டி கவுன்சில் என்னும் பிரதிநிதித்துவம் கொண்ட புதிய சபைக்கு இச் சட்டம் மாற்றியது; இதற்கு விதிவிலக்காக இருந்தது காவற்படையே. அப் பொறுப்பின் ஒரு பகுதியே கவுன்சிலுக்கு வந்தது. காவற்படையைக் கட்டுப்படுத்தும் அதிகாரம், குற்ற வழக்கு மன்றமும், கவுன்டி கவுன்சிலும் அமைத்த கூட்டு ஆணைக் குழுவிடம் வந்துசேர்ந்தது. ஆயின், 1933ஆம் ஆண்டுவந்த தல ஆட்சிச் சட்டம், 1888ஆம் ஆண்டுச் சட்டத்தை அநேகமாக மாற்றீடு செய்தது எனலாம்.

1918ஆம் ஆண்டின் மக்களின் பிரதிநிதித்துவ சட்டமும், 1945ஆம் ஆண்டின் மக்களின் பிரதிநிதித்துவ சட்டத்தின் முதலாவது, இரண்டாவது பிரிவுகளும் தற்போதுள்ள தல ஆட்சித் தொடர்பான வாக்குரிமையை முறைசெய்தன. எந்த வித சட்டமுறையிலான தகைமைக் குறையற்ற வயதுவந்த ஆணும் பெண்ணும் தல ஆட்சித் தொகுதிக்கான வாக்காளராகப் பதிவு செய்துகொள்ளமுடியும். அந்த வட்டத்தில் நிலத்தையோ அல்லது குடிமனையையோ சொந்தமாக அல்லது குத்தகைக்காரராக, தகுதி பெறுதற்கு நிர்ணயிக்கப்பெற்ற காலத்தில் இறுதிநாளில், அவர் வைத்திருக்கவேண்டும். மேலும், அந்த வட்டத்தில் தகுதி பெறுவதற்கு நிர்ணயிக்கப்பெற்ற காலமாகிய மூன்று மாதங்களுக்கும் அவர் நிலத்தையோ அல்லது குடிமனையையோ கொண்டிருக்கவேண்டும். அல்லது அந்த வட்டம் நிர்வாகம் சார்ந்த கவுன்டியாகவோ அல்லது கவுன்டி பரோவாகவோ இல்லையானுல், முழுதுமாகவோ அல்லது ஒரு பகுதியாகவோ அவ் வட்டம் அடங்கிய நிர்வாகம் சார்ந்த கவுன்டியிலோ அல்லது கவுன்டி பரோவிலோ அவர் அவ்வாறு வாழ்ந்திருக்கவேண்டும். தட்டுமுட்டுச் சாமான்களற்ற அறைகளில் தங்கியிருப்போரும் குத்தகைக்காரர் எனக் கருதப் பெற்றனர். தல ஆட்சி வட்டத்திற்கான பாராளுமன்ற வாக்காளராகும் தகுதி பெற்றவர், பிரபுவாக இல்லையானுல், தல ஆட்சி வாக்காளர் ஆகலாம். பெண் வாக்காளர்கள் குறைந்தது 30 வயதாவது நிரம்பியவராக இருக்கவேண்டுமென்று 1918ஆம் ஆண்டின் சட்டம் வகுத்தது. 1928ஆம் ஆண்டில் வந்த மக்களின் பிரதிநிதித்துவ (சம வாக்குரிமைச்) சட்டம் [Representation of the People (Equal Franchise) Act] பெண்களின் மீதான அத் தடையை நீக்கியது. வாக்காளரின் வாழ்க்கைத் துணைவர்மீது அச் சட்டம் விதித்த ஒருவிதத் தகுதியை 1945ஆம் ஆண்டுவந்த சட்டத்தின் இரண்டாம் பிரிவு நீக்கியது.

ஏற்கெனவே ஆங்கில பரோக்களில் மட்டுமே இருந்த ஆட்சியமைப்பினைக் கூடுமானவரையில் கவுன்டிகளுக்கும் அளிக்க வேண்டுமென்பதே 1888ஆம் ஆண்டின் தல ஆட்சிச் சட்டத்தின் முக்கியக் குறிக்கோளாகும். இடையருது தொடர்ந்து வருகின்ற கழகமாகக் கவுன்டி கவுன்சில் உருவாகியது. மாண்டவர் உரிமைக் கட்டுப்பாட்டுநிலையில் அனுமதிச்சீட்டு இன்றியே நிலத்தை வைத்திருக்கும் அதிகாரத்தோடு பொது முத்திரையையும் கவுன்டி கவுன்சில் பெற்றது. இங்ஙனம், முன்னுளில் குற்ற வழக்குமன்றம் நிர்வகித்த ஆட்சி சார்ந்த பொறுப்புகள் கவுன்டி கவுன்சிலிடம் மாறின. ஆயினும், பாதுகாப்பாளர்

குழுக்களிடம் இரவலர் சட்ட ஆட்சியும், பள்ளி ஆட்சிக் குழுக்களிடம் கல்வியும் விடப்பெற்றன.[31]

**நகர, நாட்டுப்புற மாவட்டச் சபைகள்:** ஒவ்வொரு நிர்வாகக் கவுன்டியும், நகர மாவட்டங்களாகவும், நாட்டுப்புற மாட்டங்களாகவும் பிரிந்து, ஒவ்வொரு பிரிவிலும் இருந்த கவுன்டி வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற கவுன்சில்களைக் கொண்டு இருக்குமாறு, 1894ஆம் ஆண்டின் தல ஆட்சிச் சட்டமும், பெருமளவில் அதற்கு மாற்றீடாக வந்த 1933ஆம் ஆண்டின் தல ஆட்சிச் சட்டமும் செய்தன. துப்புரவு, நோய்கள் பரவாமல் தடுத்தல், கழிவுநீரை வெளியேற்றுதல் போன்ற பொதுச் சுகாதாரத்தைப் பேணுவதே மாவட்டச் சபைகளின் தலையாய பொறுப்பாக இருந்தது. பிரதான சாலைகளாக இல்லாத பிற நெடுஞ்சாலைகளையும், வீட்டு வசதி செய்து கொடுத்தல் போன்றவற்றையும் அவைகள் நிர்வகித்தன. நகர மாவட்டத்தில் இணையாத பாரிஷ்களில், பாரிஷ் சபைகள் அமையவும் அச் சட்டம் வகைசெய்தது. பாராளுமன்ற வாக்காளர் பட்டியலில் அல்லது தல ஆட்சி வாக்காளர் பட்டியலில் இடம்பெற்ற பாரிஷில் வாழும் மக்களை அச் சபை உறுப்பினராகக் கொண்டிருந்தது. இரவலர் கண்காணிகளை நியமித்தல், பாரிஷின் நூல்களையும் ஆவணங்களையும் பாதுகாத்தல், சமய ஆணையாளர் பொறுப்பில் இல்லாத பிற பாரிஷ் சொத்துகளை நிர்வகித்தல், தெருவிளக்கு வைத்தல், காவல் செய்தல், குளியலறைகளும் கழுவும் இடங்களும் அமைத்தல், சவ அடக்கத் திடல்களை ஏற்படுத்துதல் போன்றவையே பாரிஷ் சபையின் முக்கியப் பொறுப்புகளாகவும் அதிகாரங்களாகவும் இருந்தன. பழைய வரி கொடுப்போர் சங்கங்களை மக்களாட்சி அடிப்படையில் திருத்தி அமைப்பதே இச் சட்டத்தின் முக்கிய நோக்கமாகும்.

**லண்டன் கவுன்டி கவுன்சில்:** 1888ஆம் ஆண்டில் லண்டன் கவுன்டி கவுன்சிலுடன் வந்த லண்டன் நகர நிர்வாகக் கவுன்டியை இருபத்தெட்டு நகர பரோக்களாகப் பிரிக்க, 1899ஆம் ஆண்டின் லண்டன் நகர ஆட்சிச் சட்டமும், அதற்கு மாற்றீடாக வந்த 1939ஆம் ஆண்டின் லண்டன் நகர ஆட்சிச் சட்டமும் வகை செய்தன. அச் சட்டத்தின் கீழ் மன்னய ஆணைகளின்பேரில் நகர பரோக்களுக்கு என்று நகரசபைகள் அமைந்தன. கவுன்டி கவுன்சிலின் சில பொறுப்புகளோடு மாவட்ட ஆட்சிக் குழுக்களின் அதிகாரங்களையும் பொறுப்புகளையும் அந் நகரசபைகள் பெற்றன.

**கல்வி :** மரபாக வந்த தல ஆட்சி அமைப்புகளுக்கும், இரவலர் துணையுதவி, பொதுச் சுகாதார ஒழுங்கு என்னும் இரு பழைய 'சமுதாயப் பணிகள்' தோற்றுவித்த தேவைகளுக்கு மிடையே இருந்த உறவினை இதுவரையில் ஆராய்ந்தோம். தனிப்பட்ட வரலாறுகொண்ட வேறுபல பணிகளும் சுவையான அரசியல் அமைப்பு சார்ந்த சுட்டுப் பொருள்களைக்கொண்டு இலங்கின. இங்கே பொதுக் கல்வி என்ற ஒன்றைமட்டும் ஆராயலாம்.

பதினெட்டாம் நூற்றாண்டின் இடைக்காலம் வரையில் பல பெரிய இடங்களிலும், சிறிய இடங்களிலும், பல நூற்றாண்டு களாகத் தனியார் நன்கொடைகளைக் கொண்டு நிறுவப்பெற்ற பள்ளிகள் எழுந்தன. அதே சமயத்தில் ஒருவகையான தொழிற் கல்வியைப் பணிபயில்வோர் திட்டமொன்று அளித்துவந்தது. பாரிஷ் குழந்தைகளுக்கு பாரிஷே பணிப்பயிற்சி அளிக்க முடிந்தது.[32] ஆயின், தொழிற்புரட்சியின் விளைவாக இத் திட்டம் பெரிதும் தடுமாறியது. பள்ளிகளே இல்லாத இடங் களுக்குப் பெருங் கூட்டமாக மக்கள் சென்று குடியேறினர். நகர ஆட்சி விளங்கிய பட்டினங்களிலும் யாவும் சீராக இல்லை. நகராண்மைக் கழகத்தில் இருந்த ஊழல் காரணமாக, அக்கறை யின்மையும், திறமையற்ற ஆட்சியும், கல்வி நன்கொடைகளைக் கையாடுதலும் சாதாரணமாக இருந்தன. அதுவரையில் நெடுந்தொலைவில் இருந்த இடங்களிலும் நீர்ச்சக்தியின் விளை வாகத் தோன்றிய ஆலைகளில் கட்டாயமாகப் பணிபயில்வோராக இரவலர் சட்டத்தின்கீழ் வந்த குழந்தைகள் சேர்க்கப்பெற்றனர். அவர்களுடைய அவலநிலையே மற்றவற்றைக் காட்டிலும் மிகத் தீவிரமாக இருந்தது.

தாமே பெரிய ஆலை அதிபராக இருந்த சர் ராபர்ட் பீல், 1802ஆம் ஆண்டில் முதலாவது ஆலைச் சட்டத்தின் மூலமாகவும், முதலாவது பணிபயில்வோர் உடல் நலம், பழக்க நடைமுறை பற்றிய சட்டத்தின் மூலமாகவும்,[33] பணிபயில்வோருக்குச் சிறிதளவேனும் கல்வி புகட்டவேண்டுமென்பதை ஆரம்பித்து வைத்தார். அச் சட்டம் பயனற்றதாய்விட்டபோதிலும் அப் பிரச்சினைமீது மக்கள் கவனத்தைத் திருப்ப அது பயன்பட்டது. ஆங்கிலத் திருச்சபை அங்கத்தினர்கள் சந்தாக்கள் மூலமாகத் தேசிய சங்கமொன்றை, 1811ஆம் ஆண்டில் நிறுவினர். எந்தச் சமயப் பிரிவையும் சேராத பிரிட்டிஷ், அன்னியப் பள்ளிச் சங்கம் ஒன்று 1814ஆம் ஆண்டில் உருவாகியது. பள்ளிகளுக்கு ஆன கட்டடத்திற்கு என ஆரம்ப முதலீட்டுப் பிரச்சினையை இவ்விரு சங்கங்களும் தீர்த்துவைத்தன. அச் சங்கங்கள்

அளித்த நிதிக்கு ஈடான சிறிய தொகை ஒன்றை 1833ஆம் ஆண்டில் பாராளுமன்றம் அளித்தது. உதவி மானியங்களை நிர்வகிக்கும் பொறுப்பையும், பள்ளிகளை மேற்பார்வையிடும் பொறுப்பையும் 1839ஆம் ஆண்டிலிருந்து பிரிவி கவுன்சிலின் கல்வி ஆணைக்குழுவே ஏற்றுவந்தது. 1856ஆம் ஆண்டு அளவில் அக் குழுவின் உபதலைவர் பாராளுமன்றத்தில் அமைச்சராகவும் இருந்தார். அதனுடைய விதிமுறைகளெல்லாம் 1860ஆம் ஆண்டில் தொகுத்து வெளியிடப்பெற்றன. பெருமளவு கட்டுப்பாடு செலுத்திய மத்திய அரசாங்கம் பள்ளிகளைச் சொந்தமாகக் கொண்டில்லை. அதே சமயத்தில் பள்ளிபோன்ற தலத்தோடு நெருக்கமாக இணைந்த அமைப்பின்மீது தலக் கட்டுப்பாடு சிறிதும் இல்லை. இந் நிலை விந்தையானதே.

பத்தொன்பதாம் நூற்றூண்டின் தொடக்ககாலத்திலிருந்தே, தீர்வைகளின் துணைகொண்டு எழும் தலப் பள்ளிகளை அமைக்கும் முயற்சிகள் எழுந்தன. ஆனல், அவை யாவும் தோல்வியே கண்டன. 1870ஆம் ஆண்டின் கல்விச் சட்டம்[34] வந்த பிறகுதான் இதற்கான தீர்மானமான நடவடிக்கை நனவாகியது. தேர்ந்தெடுக்கப்பெற்றதும், தீர்வை விதிக்கும் அதிகாரம் பெற்றதுமான, தலப் பள்ளி ஆட்சிக் குழுக்கள் தோன்றலாயின. சுயேச்சையாக வந்த பள்ளிகளுக்கு நேரான பள்ளிகள் திட்டமொன்றை அவை அமைத்தன. ஆயின், சுயேச்சையாக வந்த பள்ளிகள் தலத் தீர்வையில் பங்கு கொள்ளவில்லை. 1889ஆம் ஆண்டின் தொழிற் கல்விச் சட்டத்தின் மூலமாக (Technical Instruction Act) வந்த அதிகாரங்களைக் கொண்ட கவுன்டி கவுன்சில்களே முதலில் கல்விப் பொறுப்பை ஏற்றன.[35] அந்த அதிகாரங்களே செகண்டரி கல்விக்கும் பயன்பட்டன. இதற்கிடையில் 'உயர்நிலைப் பள்ளிகளையும்' மாலைப் பள்ளிகளையும் பராமரிப்பதன் மூலமாகச் செகண்டரி கல்வித் துறையிலும் பள்ளி ஆட்சிக் குழுக்கள் புகுந்தன. பிற்காலத்தில் கோகர்டன் (Cockerton) வழக்கு[36] வெளிக்கொணர்ந்ததைப்போல அவ்வாறு செய்ய அவைகளுக்குச் சட்டப்படியான அதிகாரம் இல்லை. பிரிவி கவுன்சிலின் கல்வி ஆணைக் குழுவின் அதிகாரத்தில் ஆரம்பப் பள்ளிகளும் வேறூன 'அறிவியல் கலைத்துறையின்' கட்டுப்பாட்டில் தொழிற் பள்ளிகளும் இருந்ததனல், மத்திய அரசியல் ஒருமைப்பாட்டிற்கான மசோதா ஒன்று தேவை என்பது தெளிவாகியது. இரு வகையான பள்ளிகளுக்குமான கல்வி ஆணைக்குழு என்னும் மத்திய அரசாங்க அமைப்பினை நிறுவும் வழியினை 1899ஆம் ஆண்டின் சட்டம் மேற்கொண்டது.

**1902ஆம் ஆண்டு வந்த கல்விச் சட்டம்:** எவ்வாறெனினும், முழுதுமாகத் திருத்தியமைப்பதற்கான நிலை உருவாகியது. 1902ஆம் ஆண்டின் கல்விச் சட்டத்தின் மூலமாகக் குறிப்பிடத் தகுந்த சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பெற்றன. பள்ளிக் கழகங்களை அழித்த அச் சட்டம் அவற்றின் அதிகாரங்களைக் கவுன்டி கவுன்சில்களுக்கும், பரோக்களுக்கும், பெரிய நகர மாவட்டங்களுக்கும் மாற்றியது. ஆக இத் தல ஆட்சிப் பிரிவுகளே தலக் கல்வி அமைப்புகளாகப் பணியாற்ற முடிந்தது. செகண்டரி கல்விக்கு ஊக்கம் அளிக்கப்பெற்றது. கல்வி அதிகாரக் குழுக்கள் தலத் தீர்வையைக் கொண்டு சுயேச்சையாக வந்த பள்ளிகளுக்கும் ஆதரவு தரவேண்டுமென்றும் அச் சட்டம் வகுத்தது.

பொது ஆரம்பப் பள்ளிகளின் திறமைக்குத் தலக் கல்வி அதிகாரக் குழுவே பொறுப்பாகும். அது அமைத்த பள்ளிகளின் மீது கட்டற்ற அதிகாரங்களை அது கொண்டிருந்தது. ஆயின், கழகப் பள்ளிகளின் வாரிசாக வந்ததும், தலக் கல்வி அதிகாரக் குழு அமைத்த பள்ளிகளும், அவ்வாறு அது அமைக்காது நிர்வாகப் பொறுப்பை மட்டும் ஏற்ற பள்ளிகளும் வேறுபடுத்திக் காட்டப்பெற்றன. அக் குழு அமைக்காத பள்ளிகளின் நிர்வாகிகளில் பெரும்பாலோரை நியமிக்கும் அதிகாரம் சமய ஸ்தாபனங்கள் கையிலேயே இருந்துவந்தன. இங்ஙனம் சுயேச்சையாக எழுந்த பள்ளிகளின் சமயப் பிரிவு சார்ந்த தன்மை மாறாமல் இருந்து வந்தது. அவற்றில் சமயம் சாராக் கல்வியை மட்டுமே தலக் கல்வி அதிகாரக்குழு கட்டுப்படுத்த முடியும். எவ்வாறெனினும், அதுவரையில் தனிப்பட்ட நன்கொடையாளர் தாங்கிய சுமை இப்போது தீர்வை செலுத்துவோரிடம் மாறியது. ஆயின், அத்தகைய தனிப்பட்ட நன்கொடையாளரும் இப்போது தலக் கல்வித் தீர்வை செலுத்த வேண்டி வந்தது. தனியார் நிர்வாகத்திலுள்ள சமயப் பள்ளிகளையும் தீர்வை செலுத்துவோர் கட்டாயமாக ஆதரிக்கவேண்டி வந்ததை, இணங்காதார் கடுமையாக எதிர்த்தனர்.

1902ஆம் ஆண்டுச் சட்டம் வகுத்த கல்வித் திட்டம், 1944ஆம் ஆண்டுவரை தொடர்ந்து வந்தது. இதற்கிடையில் 1918ஆம் ஆண்டு வந்த சட்டத்தினால் பள்ளிகளில் சேர்ந்து படிக்கவேண்டிய வயது பதினான்காக உயர்ந்தது. ஐந்தாம் ஜார்ஜின் 8, 9ஆம் ஆட்சியாண்டுச் சட்டமாகிய அது, ஆரம்பப் பள்ளிகளில் செயல்முறைக் கல்வி அல்லது உயர்தரக் கல்வி வழங்குவதற்கும் வழி செய்தது. அதற்கு முன் வந்த கல்விச்

சட்டங்களெல்லாம் 1921ஆம் ஆண்டில் வந்த கல்விச் சட்டத்தில் இணைந்தன.

**1944ஆம் ஆண்டின் கல்விச் சட்டம்:** சட்டப்படியான கல்வித் திட்டத்தில் முன்னேக்கிச்செல்லும் மூன்று கட்டங்களை 1944ஆம் ஆண்டு நிறைவேறிய கல்விச் சட்டம் வகுத்தது. அவையாவன : பன்னிரண்டு வயதிற்குட்பட்ட சிறுவருக்கான ஆரம்பக்கல்வி ; பதினைந்து வயதுமுதல் பத்தொன்பது வயது வரையுள்ள சிறுவருக்கான செகண்டரி கல்வி ; கட்டாயமாகப் பள்ளியில் சேர்ந்து படிக்கவேண்டிய வயதிற்கு மேற்பட்ட சிறுவருக்கான உயர் கல்வி ஆகியவையே. கல்வி அமைச்சகமே மத்திய அதிகாரக் குழுவாக விளங்கியது. கல்வியை வளர்ப்பதும், ஒவ்வொரு பகுதியிலும் பல்திறப்பட்ட, பல்வகைப் பயிற்சி நல்கும் கல்விப் பணியைப் பெருக்கவேண்டுமென்ற நாட்டுக் கொள்கையை நிறைவேற்றுவதும் அமைச்சரின் கடமைகளாகும். இங்கிலாந்திற்கு ஒன்றும், வேல்சிற்கு என்று ஒன்றும் என இருந்த மத்திய ஆலோசனைக் குழுக்கள் அவருக்கு உதவிபுரிந்தன. தங்கள் தங்கள் எல்லையில் உள்ள எல்லாக் கல்விப் பொறுப்புகளையும் ஏற்ற தலக் கல்வி அதிகாரக் குழுக்களாக விளங்கியவை கவுன்டி கவுன்சில்களும், கவுன்டி சார்ந்த பரோ கவுன்சில்களும்தான். தலக் கல்வி அதிகாரக் குழுக்கள் அமைத்த பள்ளிகளில் நுழைவுக் கட்டணம் இல்லை. அத்தகைய பள்ளிகள் அனைத்திலும் சமயக் கல்வி அளிக்கப் படுதல்வேண்டும். பள்ளிக் கட்டடம் இடந்தராது இருந்தால் ஒழிய தலக் கல்வி அதிகாரக் குழுக்களின் பள்ளிகள் யாவற்றிலும் ஒரேமாதிரியாகக் கூட்டுத் தொழுகை நடத்தியபிறகே, அன்றாட பள்ளிப் பணிகள் துவங்கின. கட்டாயமாகப் பள்ளியில் சேர்ந்து படிக்கவேண்டிய வயது பதினைந்தாக உயர்ந்தது. நடைமுறைக்கு ஒத்துவரும்போது அதனைப் பதினறாக உயர்த்த வேண்டும். இப்போது கவுன்டி பள்ளிகள் என வழங்கும் சமயம்சாராப் பள்ளிகளுக்கும், சுயேச்சைப் பள்ளிகள் என வழங்கும் சமயம்சார்ந்த பள்ளிகளுக்குமிடையே இருந்த வேறுபாடு தொடர்ந்துவந்தது. ஆயினும், கவுன்டி பள்ளிகளின் தரத்திற்குச் சுயேச்சைப் பள்ளிகளின் கட்டடங்களை அமைப்பதற்கு அவற்றின் நிர்வாகிகளுக்குப் பொதுப் பணத்திலிருந்து உதவி அளிக்கலாம் என்று ஆகியது. பள்ளிகளில் இலவச மருத்துவ உதவி அளிக்கப்பட்டது. ஆடைகள், காலணிகள் ஆகியவை வழங்குவதற்கும் உதவி கிடைத்தது. பதினெட்டு வயதிற்குட்பட்ட இளைஞர்களுக்கு என கவுன்டி கல்லூரிகளில் கட்டாயக் குறைநேரக் கல்வித் திட்டத்தையும் அச் சட்டம் வகுத்தது. சுயேச்சைப் பள்ளிகள் தங்களைப் பதிவு

செய்துகொள்ளவேண்டும். ஆட்சியாளரின் மேற்பார்வைக்கு அவை உட்பட்டன. அவை திருப்தியற்றவையாக இருந்தால், கட்டுப்படுத்தவும் ஆட்சியாளருக்கு அதிகாரம் உண்டு.

**நெடுஞ்சாலைகள் :** தனது எல்லைக்குள் இருக்கும் நெடுஞ் சாலையைச் செப்பனிடுவது பாரிஷின் பொறுப்பு எனப் பொதுச் சட்டம் வகுத்தது. சில பிரிவுகளின் மரபாக வந்த பொறுப் பாகவும் அது விளங்கியது. பாரிஷின் நெடுஞ்சாலை மேற்பார்வை யாளர் அந்தப் பொறுப்பினை ஏற்றார். கூட்டமாக இருந்த பாரிஷுகளில் மாவட்ட மேற்பார்வையாளரும், மக்கள் தொகை மிகுந்த பாரிஷ்களில் நெடுஞ்சாலைக் குழுவினரும் அப் பொறுப் பினை ஏற்றனர். சாதாரண நெடுஞ்சாலைகளை மேற்பார்வை செய்யும் அதிகாரியின் அலுவலகம், பரோ கவுன்சில்களுடனும், நகர மாவட்டக் கவுன்சில்களுடனும் இணைந்திருந்தன. நாட்டுப் புற மாவட்டங்களில் அவை கவுன்டிக் கவுன்சில்களோடு இணைந்தன.

லண்டன் நகரத்திலும், கவுன்டி சார்ந்த பரோவிலும் உள்ள பிரதான சாலைகள் நீங்கலாக நேர் போக்குவரத்திற்கு ஆன தேசியத் திட்டத்தின் கீழ்வந்த நெடுஞ்சாலைகள் பெருவழி களாயின. அவற்றின் பொறுப்பினைப் போக்குவரவு அமைச் சகமே ஏற்றது. 1936ஆம் ஆண்டுவந்த பெருவழிகள் சட்டம் (Trunk Roads Act) கவனிக்கத்தக்கது. மற்ற முக்கிய சாலைகளைக் கவுன்டிக் கவுன்சிலும், கவுன்டி சார்ந்த பரோ சபை களும் பராமரித்தன. இங்கே 1929ஆம் ஆண்டுவந்த தல ஆட்சிச் சட்டம் உன்னுதற்குரியது.

**தீர்வை விதிக்கும் திட்டம் :** இரவலர் துணை உதவிக்கென்று வேண்டிய நிதி திரட்டும் திட்டம் ஒன்றை, 1603ஆம் ஆண்டு வந்த இரவலர் துணையுதவிச் சட்டமும் அதைத் திருத்தவந்த பிற்காலச் சட்டங்களும் ஏற்படுத்தின. நிலங்கள், வீடுகள், நிலக்கரிச் சுரங்கங்கள், பிற சுரங்கங்கள், கானகங்கள், பந்தய உரிமைகள் வைத்திருப்போரிடமிருந்தும் கோவின் மகன்மைகளை நிர்வகித்தவரிடமிருந்தும், அவற்றிற்கு உரிமை கொண்டாடியவ ரிடமிருந்தும் வரிமூலமாக நிதி திரட்டும் உரிமையைப் பாரிஷில் இருந்த இரவலர் கண்காணிகளுக்கு அச் சட்டம் அளித்தது. நாளடைவில் இரவலர் தீர்வை மூலமாகவே தல ஆட்சிக்குத் தேவையான நிதியின் பெரும்பகுதி கிடைத்தது.

1925ஆம் ஆண்டு வந்த தீர்வை, மதிப்பீட்டுச் சட்டத்தின் படி தீர்வை விதிப்பது சம்பந்தமான இரவலர் கண்காணிகளுக் கிருந்த அதிகாரங்கள், கவுன்டி பரோக்கள் உள்ளிட்ட

பரோ கவுன்சில்களிடமும், நகர, நாட்டுப்புற மாவட்டச் சபைகளிடமும் மாறிச் சென்றன. தீர்வை விதிக்கும் அதிகாரக்குழு விதிக்கக்கூடிய இரவலர் தீர்வையையும், மற்றெல்லாத் தீர்வைகளையும் ஒன்றாக இணைத்துப் பொதுத்தீர்வை ஒன்று விதிக்கவும் அச் சட்டம் வகை செய்தது. நாட்டுப்புறப் பகுதிகளில் விளக்கெரித்தல், காவல் செய்தல், மற்றத் தனிப்பட்ட செலவினங்களை மேற்கொள்ளுதல் ஆகியவற்றிற்காகத் தனித் தீர்வை விதிக்கும் அதிகாரம் அப்பகுதிகளில் வரி கொள்ளும் அதிகாரிகளுக்கு இருந்தது.

1899ஆம் ஆண்டின் லண்டன் நகர ஆட்சிச் சட்டம் வந்ததிலிருந்து, நகரம் சார்ந்த பரோ கவுன்சில்கள்தான் லண்டன் மா நகரத்தில் இரவலர் கண்காணிகளின் கடமைகளைச் செய்தன. பொதுத் தீர்வை யென்னும் பெயரில் இரவலர் தீர்வையையும் பொது வரியையும் விதிக்கும் அதிகாரத்தையும் கவுன்சில் சபைகளே கொண்டிருந்தன.

**தீர்வைத் தள்ளுபடி :** தீர்வை விதிக்கும் திட்டத்தில் தோன்றிய சில குறைபாடுகளை, 1929ஆம் ஆண்டு ஏற்பட்ட கடுமையான பொருளாதார மந்தநிலை, தீவிரமாக்கியது. மக்களுக்கு ஏற்பட்ட துயரம் முக்கியமாகப் பயிர்த் தொழில் சார்ந்ததாக இருக்கும் வரை, அது நாடு முழுவதும்பரவி இருந்த ஒன்று எனக் கொள்ளுதல் நியாயமானதே. தீர்வை விதிக்கும் ஒவ்வொரு பிரிவும் அதன் எல்லைக்குட்பட்ட இரவலரை ஆதரிக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பதால், சுமையை நியாயமாகப் பகிர்ந்துகொள்வதாக அமையும். ஆயின், இப்போது இங்கிலாந்தின் பொருளாதாரம் சார்ந்த நில இயல் மிகவும் மாறுபட்டிருந்தது. இரவலரை ஆதரிப்பதற்காகத் தீர்வை விதிக்க முயலும் 'பொருளாதார மந்தம்' தோன்றிய பகுதி சொத்துகளை அழிக்கும் அளவிற்கு அளவு கடந்த தீர்வை விதிக்க வேண்டியதாயிற்று. வேறு வகையாகக் கூறுவதானால், பொருளாதார மந்தமென்பது தலப் பிரச்சினை என்பது போய், அது தேசியப் பிரச்சினையாக மாறிவிட்டது. மேலும் நிலத்தின் பரப்பைக் கொண்டு வரி கொடுக்கும் தகுதியைத் தோராயமாகக் கொள்ள முடியும் எனப் பழைய தீர்வை முறை மேற்கொண்டது. பெரும்பாலும் பயிர்த் தொழிலையே சார்ந்திருக்கும் நாட்டில் அது உண்மையாக இருக்கலாம். ஆனால், நீண்ட காலமாகவே அது சரிசம நிலையிலிருந்து பிறழ்ந்துவிட்டது. இப் பிரச்சினையைச் சமாளிப்பதற்கென்று பயிர்த் தொழில் சார்ந்த தீர்வைச் சுமைத் தணிவுச் சட்டங்கள் பல 1896ஆம் ஆண்டிலிருந்து வரத் தொடங்கின.

சொந்த முறையிலான வீடுகள், குடில்கள் ஆகியவற்றின் மீது இருந்த தீர்வை தவிர, மற்றவற்றிலிருந்து குடியானவருக்கு விலக்கு அளித்த தல ஆட்சிச் சட்டம் 1929ஆம் ஆண்டில் நிறைவேறியது. அந்தத் தீர்வையும் சாதாரண குடியிருப்பு வீடுகள் என்ற முறையில் அல்லாது பயிரிடுவதற்குப் பயன்பட்ட வீடுகள் என்ற முறையில்தான் கொள்ளப்பெற்றது. உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் தொழிற்சாலைகளும், கப்பற்சரக்கு, போக்குவரத்துச் சாதனங்களை மரபுரிமையால் பெற்றோரும் கால் தீர்வை கட்ட வேண்டும். ஆனால், தீர்வைகள் மூலமாக ரயில்வே கம்பெனிகள் சேர்த்த பணத்தை, சில குறிப்பிட்ட பொருள்களை ஏற்றிச் செல்வதற்கான குறைந்த கட்டணம் பெறும் வகையில் உற்பத்தியாளருக்கே அளித்துவிடவேண்டும். தீர்வை, மதிப்பீடு (நிதி அளிப்புச்) சட்டத்தின் கீழ் தனிப்பட்ட பட்டியல்கள் தயாரிப்பதன் மூலம் இத்தகைய சுமைக் குறைப்பிற்கான முன்னேற்பாடு நடைபெற்றது. தல ஆட்சிக் குழுக்களிடையே சுமையைத் திருத்தி அமைப்பதன் மூலமாகவும், அரசாங்கத்திடமிருந்தும், தல ஆட்சியில் ஏற்பட்ட மாறுதல்களிலிருந்தும் வந்த கூடுதலான நிதியுதவியின் மூலமாகவும், உதவித் தொகைத் திட்டத்தைத் திருத்தி அமைத்ததன் மூலமாகவும், வருவாயில் ஏற்பட்ட இழப்பினைச் சரிக்கட்ட முடிந்தது.

தொழிலாளர்கள் வேண்டுமென்று விரும்பிய தொழில் அதிபர்கள் பற்றியும், தொழிலைத் தேடிச் செல்லும் தொழிலாளர் பற்றித் தொழிலதிபர்களிடமும் செய்தி தருகின்ற தகுதியினை வாணிப ஆட்சிக் கழகத்திற்கு 1909ஆம் ஆண்டின் உழைப்புத் தேவைப்படும் இடங்களுக்குத் தொழிலாளர்களை அனுப்பும் உள்நாட்டுத் தொழில் அமைப்பு அலுவலகச் சட்டம் (Labour Exchange Act) அளித்தது. அத்தகைய அலுவலகங்கள் இன்று வேலை வாய்ப்புத் தேடித்தரும் அலுவலகங்கள் (Employment Exchanges) எனப் பெயர்பெறும்.

தொழில் மந்தத்தினால் இடருற்ற பகுதிகளின் பிரச்சினையை 1934ஆம் ஆண்டு வந்த தனிப்பட்ட பகுதிகள் (முன்னேற்ற, மேம்பாட்டு) சட்டம் தீர்க்க முயன்றது. அத்தகைய பகுதிகளின் பொருளாதார, சமுதாய மேம்பாட்டிற்கு உகந்த நடவடிக்கைகளைக் கொண்டுவரவும், அவற்றை முறையாக அமைக்கவும், செயற்படுத்தவும், உதவி செய்யவும் அச் சட்டம் வகை செய்தது.

எப்போதுமே பொதுமக்களால் விரும்பப்படாத ஒன்றாகவே இரவலர் சட்டம் இருந்துவந்தது. அதனுடைய உதவியின்றியே

தங்களுக்குத் தாங்களே உதவி கொள்ளும் பெருமுயற்சியைத் தொழிலாளர்கள் பத்தொன்பதாம் நூற்றுண்டில் மேற்கொண்டனர். சிக்கனத்தை வளர்க்கும் பல அமைப்புகள் தோன்றலாயின. அவற்றில் வீடு கட்டித்தரும் சங்கங்களை முக்கியமாகக் குறிப்பிடலாம். திடீரென்று வரும் நோய், வேலையின்மை ஆகியவை நட்புரிமைச் சங்கங்கள் உருவாவதற்கு வழி வகுத்தன. இரவலர் சட்டத்தை நம்பியிராமல், முன்னறிவின் திறம் கொண்டே காப்புறுதி அளிக்கக்கூடிய இடர்களை அவைகள் என்ற கருத்தும் வளர்ச்சியுற்றது. இத்தகைய சங்கங்களின் செவ்வையான நிர்வாகத்திற்கென பல சட்டங்கள் வந்தன.[37] இறுதியாக, தொழிலாளர், முதலாளிகள், அரசாங்க நிதித்துறை ஆகிய மூன்று பிரிவுகளின் தொடர்பும் கொண்ட பங்களித்து உதவுகிற திட்டங்களை வகுக்கும் கொள்கையை அரசாங்கம் ஏற்றுக்கொண்டது.

**வேலையற்றோர் காப்புறுதி (Unemployment Insurance):** 1911ஆம் ஆண்டு வந்த தேசியக் காப்புறுதிச் சட்டத்தின் இரண்டாம் பகுதிதான் வேலையற்று இருப்பதற்கெதிராகக் கட்டாயக் காப்புறுதி செய்துகொள்ள வேண்டுமென்பதை முதன் முறையாகப் புகுத்தியது. இத் திட்டத்தில் அடங்கும் வகுப்பாரின் எண்ணிக்கையை, 1920ஆம் ஆண்டின் வேலையற்றோர் காப்புறுதிச் சட்டம் பெருக்கியது. 1935ஆம் ஆண்டின் வேலையற்றோர் காப்புறுதிச் சட்டத்தினுல் அச் சட்டம் உறுதியடைந்தது. 1936ஆம் ஆண்டில் நிறைவேறிய வேலையற்றோர் காப்புறுதி (பயிர்த்தொழில்) சட்டத்தினுல் விவசாயத்தில் ஈடுபட்டிருந்த தொழிலாளரும் இத் திட்டத்தின்கீழ் வந்தனர். 1938ஆம் ஆண்டு வந்த வேலையற்றோர் காப்புறுதிச் சட்டத்தின் கீழ் வந்த ஆணைகளின்படி வீட்டு வேலைகள் செய்த சில வகையான தொழிலாளர்களும் இத் திட்டத்தின்கீழ் வந்தனர்.

**சமுதாயப் பாதுகாப்பு :** 1914 முதல் 1918 வரை நடைபெற்ற பெரும் போரைத் தொடர்ந்து கடுமையான வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்பட்ட காரணத்தால், இரவலர் சட்டத்தின் மூலமாகவும், வேலையற்றோர் காப்புறுதித் திட்டத்தின் மூலமாகவும், அன்றி வேறுவகையிலும் வேலையற்றோருக்கு உதவுவதற்கான வழி வகைகள் தேவையாயின. வேலையற்றோர் காப்புறுதித் திட்டத்தையும், பொருளாதார மந்தம் தோன்றிய பகுதிகளில் வாழ்ந்த தல ஆட்சிச் சபைகளின் நிதி நிலைமையையும், வேலையற்றோருக்கு அளித்த துணையுதவி, வெகுவாக பாதித்தது. 1934ஆம் ஆண்டின் வேலையற்றோர் உதவிச் சட்டத்தினுல் வேலையற்றவர்களுக்கு உதவி அளிக்கும் முறை

தோன்றியது. 1934ஆம் ஆண்டின் வேலையற்றோர் சட்டத்தின் இரண்டாம் பகுதியாகத் திகழ்ந்த இச் சட்டம் வேலையற்றோர் உதவிக் கழகங்களை நிறுவியது. வேலையின்றித் தவிக்கும் தொழிலாளர்களுக்கு உதவி வழங்குதல், மறுபயிற்சி அளித்தல், புது வாழ்வளித்தல் போன்ற பொறுப்புகளை அக் கழகம் ஏற்றது.

1911ஆம் ஆண்டின் தேசியக் காப்புறுதிச் சட்டத்தின் முதலாம் பகுதியின் மூலமாகக் கட்டாயச் சுகாதாரக் காப்புறுதி நடைமுறைக்கு வந்தது. 1946ஆம் ஆண்டு வந்த சமுதாயச் சட்டத்தோடு இச் சட்டம் இணைந்தது.

**சமுதாயச் சேவைகளுக்கான புதுநோக்கு:** அரசாங்கத்தின் பொறுப்புகள் பற்றியும், சமுதாயப் பிரச்சினைகளை அணுகும் முறைகள் பற்றியும் சென்ற தலைமுறையில் தோன்றிய முழு மாற்றத்தின் ஒரு கூறுகவே, 1929ஆம் ஆண்டு நிறைவேறிய தல ஆட்சிச் சட்டம் உண்மையில் அமைந்தது. அதற்கு முன்பே புதிய அமைச்சகங்கள் தோன்றுதற்குக் காரணமான மாறுதல்கள் மத்திய அரசாங்கத்தில் புகுந்தன.

மத்திய அரசியல் விரிவாக அதிகாரவர்க்க ஆட்சி ஏற்படுவதையே இத்தகைய நடவடிக்கைகள் சுட்டிக்காட்டின. எவ்வாறெனின், அதுபோன்ற அமைப்பு இல்லையானல், இத்தகைய திட்டங்கள் வாழமுடியாது. ஏழ்மையைப் போலவே பிற பிரச்சினைகளும் தலத்திற்குரியவையாயிராமல் தேசியப் பிரச்சினைகளாயின. உதாரணமாகச் சாலைத் திட்டத்தைக் குறிப்பிடலாம். அதன் விளைவாகப் புதிய நோக்கத்தை உள்ளடக்கியும், புதிய செயல்முறையை வளர்க்கும் வகையிலும் பல புதிய அமைச்சகங்கள் முதல் உலகப் போருடன் தோன்றலாயின. பழைய தல ஆட்சிக் கழகம், 1919ஆம் ஆண்டில் சுகாதார அமைச்சாக மாறியது. 1917ஆம் ஆண்டில் தேசிய சேவை அமைச்சிலிருந்து தொழிலாளர் அமைச்சு உருவாகியது. 1919ஆம் ஆண்டில் உருவான போக்குவரத்து அமைச்சு, குறிப்பிடத் தகுந்த இரு கழகங்களைத் தோற்றுவித்தது. அவற்றில் மத்திய மின்சாரக் குழு 1927ஆம் ஆண்டில் தோன்றியது. லண்டன் நகரப் பிரயாணிகள் போக்குவரத்துக் கழகம் (London Passenger Transport Board) 1933ஆம் ஆண்டில் உருவெடுத்தது. இன்று அது லண்டன் நகரப் போக்குவரத்து அதிகாரக் குழுவாக விளங்குகிறது.

இரண்டாவது உலகப்போரின்போது, தொழிலாளர் அமைச்சு, தொழிலாளர், தேசிய சேவை அமைச்சாக மாறியது. மேலும் நகர, நாட்டுப்புற அமைப்புத் திட்ட அமைச்சு (Ministry

of Town and Country Planning) தேசியக் காப்புறுதி அமைச்சு (1944) என்னும் இரு முக்கிய அமைச்சுகளும் தோன்றின. அவற்றில் முதலாவது இன்று வீட்டு வசதி, தல ஆட்சி அமைச்சாக (Housing and Local Government) விளங்குகிறது. இரண்டாவதோவெனின் ஓய்வூதியங்கள், தேசியக் காப்புறுதி அமைச்சாக (Ministry of Pensions and National Insurance) உருவெடுத்துள்ளது. கல்வி ஆட்சிக் கழகமும் 1944ஆம் ஆண்டு முதல் கல்வி அமைச்சாகத் திகழ்கின்றது.

இவை யாவற்றுடனும், சில முக்கியத் தொழில்கள் தேசியமயமாக்கப்பெற்றதையும், அவற்றை நிர்வகிப்பதற்கென்று இருக்கும் 'அதிகாரக் குழுக்கள்', 'ஆணைக் குழுக்கள்', 'கழகங்கள்' போன்றவற்றையும் சேர்க்கவேண்டும். தற்கால அரசியல் அமைப்பைச் சார்ந்த சட்டப் பிரச்சினைகளில் அவற்றிற்கும் பாராளுமன்றத்திற்கும் இடையேயான உறவுநிலை தலையாயதாகும்.

## அடிக்குறிப்புகள்

1. இந்நூலின் முதலாம் தொகுதியைக் காண்க. 1906—1929-ல் ஒன்பது தொகுதிகளாக வெளிவந்ததும், Sidney and Beatrice Webb எழுதியதுமான 'English Local Government from the Revolution to the Municipal Corporations Act' என்னும் நூல், இத்துறையில் ஆதார நூலாக விளங்குகிறது. அரசியல், சமுதாயக் கூறுகளுக்கு மாறாகச் சட்டமுறையிலான, அரசியல் அமைப்பைச் சார்ந்த கூறுகளை Holdsworth எழுதிய நூலின் xஆம் அதிகாரம், 126—339 பக்கங்களில் காணவும்.

2. Pollock and Maitland எழுதிய 'History of English Law', அதி. i, 657; J. Tait எழுதிய 'The Medieval English Borough பக்கம், 286.

3. Tait எழுதிய அதே நூல், பக்கங்கள் 302.

4. அதாவது, 'பரோ பண்ணை சுங்க வரியிலிருந்து விடுதலை, உரிமை ஆணைகளைத் திருப்புதல், குத்தகையில் தனிப்பட்ட பண்புகளையும் வாரிசுரிமைச் சட்டத்தையும் கொண்டிருத்தல், வழக்குகளில் ஜூரர்களின் தீர்ப்பிற்கு மாறாகச் சார்புச் சான்றாளர், சான்றாளரைக் கொண்டு முடிவு செய்தல், இன்ன பிற உரிமைகள்.

5. J. H. Thomas எழுதிய, 'Town Government in the Sixteenth Century' (1933) என்னும் நூலில் இத்தகைய மாதிரிகளைக் காணலாம்.

6. நான்காம் வில்லியத்தின் 5, 6ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

7. J. Redlich and F. W. Hirst எழுதிய, 'Local Government in England', அதி. i, பக்கங்கள் 132.

8. விக்டோரியா அரசியாரின் 45, 46ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

9. இரண்டாம் ஜார்ஜின் 23ஆம் ஆட்சியாண்டுச் சட்டம். Holdsworth எழுதிய நூல், அதி. i, பக்கங்கள் 191: 'Law Quarterly Review', அதி. lii, பக்கங்கள் 369-ல் Winder எழுதிய, 'Courts of Requests' என்னும் கட்டுரையில் பிற இடங்களில் இருந்த இதுபோன்ற முறைமன்றங்களைக் காணலாம்.

10. விக்டோரியா அரசியாரின் 9, 10ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

11. இந்நூலின் முதலாம் தொகுதியைக் காண்க.

12. Webb எழுதிய, 'Local Government', அதி. i, பக்கங்கள் 555. அதனால் தல ஆட்சியைப் பாதித்த மசோதாக்களின் தலைவிதி ஷயரில் வாழ்ந்த வீரத்திருத்தகையினரின் கருத்தை ஒட்டியே அநேகமாக அமைந்தன.

13. முதலாம் ஜேம்சின் காலத்திலிருந்து நூற்றுக்கு மேற்பட்ட சட்டங்களினால் ஓரளவு கழிவு ஏற்பட்டது என்றாலும், தங்களுடைய அதிகாரங்களைத் தவருகப் பயன்படுத்தும் நடுவர்கள் அவற்றிற்குச் சொந்த முறையில் பொறுப்பானவர் என்றிருந்தது. அது அவர்கட்குப் பேரிடராக அமைந்தது. மேலே குறிப்பிட்ட சட்டங்களெல்லாம் பிற்காலத்தில் அதாவது, 1893ஆம் ஆண்டில் பொது அரசாங்க அதிகாரிகள் பாதுகாப்புச் சட்டத்தில் இணைந்தன. அச் சட்டத்தின் ஒரு பகுதியை மாற்றியும், மற்றொரு பகுதிக்கு மாற்றீடாகவும் அமைந்தது. '1939ஆம் ஆண்டின் வரையறைச் சட்டம்' (Limitaion Act), Holdsworth எழுதிய நூல், அதி. x, பக்கங்கள் 155—158.

14. Webb எழுதிய, 'Local Government', அதி. i, பக்கங்கள் 605—607.

15. இந் நூலின் பின்வரும் பக்கங்களில் காண்க.

16. 'Constitutional History', அதி. i, பக்கங்கள் 248.

17. VII எதல்ரெட் அளித்த உரிமைப் பத்திரம் 6.

18. Stubbs எழுதிய, 'Constitutional History', அதி. i, பக்கம் 250.

19. Whittaker (Selden Society) வெளியிட்டது. J. de Laplanche எழுதிய, 'La Soutenance' என்னும் நூலில் வரும் விளக்கத்தையும் காண்க. 'Mirror'-ல் வரும் கருத்துகள் ஆசிரியரின் தனிப்பட்ட தீவிரக் கருத்துகளே. சமயச் செய்திகளில் அவர் விஞேதமான கருத்திணைக் கொண்டிருந்தவர்.

20. A. E. Bland, P. A. Brown and R. H. Tawney எழுதிய, 'Select Documents', பக்கம் 380-ல் மூல வாசகத்தைக் காணலாம்.

21. May எழுதிய, 'Constitutional History', அதி. iii, பக்கம் 276. Webb எழுதிய, 'Local Government', அதி. i-ல் தேர்ந்தெடுக்கப்பெற்ற வரி கொடுப்போர் சங்கங்களைக் காணலாம்.

22. 'Constitutional History', அதி. iii, பக்கம் 405.

23. May எழுதிய, 'Constitutional History', அதி. iii, பக்கம் 407. Redlich and Hirst எழுதிய 'Local Government', அதி. i, பக்கம் 105-ல் இச் சட்டம்பற்றிய சிறந்த விளக்கவுரையைக் காணலாம்.

24. 1934ஆம் ஆண்டின் இரவலர் சட்டத்தையும், 1938ஆம் ஆண்டைய இரவலர் சட்ட (திருத்த) மசோதாவையும் காண்க.

25. நான்காம் வில்லியத்தின் 6, 7ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்; அதாவது, 1836ஆம் ஆண்டின் பிறப்பு, இறப்புப் பதிவுச் சட்டம். காப்பாளர் குழுக்களைச் சார்ந்த தல அதிகாரிகள்

சேகரித்த செய்திகளை வைத்துக்கொண்டு உயர் தலைமைப் பதிவாளர் புள்ளிவிவரங்களைத் தொகுத்தளித்தார். டியூடர் காலத்திலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டுவரையிலும் பாரிஷ் கணக்கரே 'மரணச் சீட்டுகளை'ச் சேகரித்து வைத்தனர். ஆயின், அவை முறையாக இருந்தன என்று கூறுவதற்கில்லை.

26. இவ்வியக்கத்தை விளக்கவந்த Redlich and Hirst எழுதிய நூலின் முதலாம் அதிகாரத்தில், 145ஆம் பக்கத்தில் இப் பெயரைக் காணலாம்.

27. விக்டோரியா அரசியாரின் 21, 22ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

28. விக்டோரியா அரசியாரின் 34, 35ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

29. விக்டோரியா அரசியாரின் 38, 39ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

30. அமைதிகாண் நடுவரின் நிர்வாகப் பொறுப்புகளை 'கவுன்டி ஆட்சிக் கழகங்களுக்கு' மாற்றுதற்கான மசோதா ஒன்றனை ஜோசப் ஹியூம் என்பார் 1836ஆம் ஆண்டிலேயே கொண்டு வந்தார். 1849, 1850, 1851, 1852, 1860, 1868 ஆகிய ஆண்டுகளிலும் அம் முயற்சி மீண்டும் மீண்டும் தோன்றியது. Redlich and Hirst எழுதிய நூல், அதி. i, பக்கங்கள் 164—168.

31. இரவலர் சட்டம் பற்றி இந்நூலின் பின்வரும் பக்கங்களில் காண்க; கல்விபற்றியும் பின்வரும் பக்கங்களில் காணலாம்.

32. இந்த அமைப்புப் பழமையானது. Selden Society-ன் 'Year Book Series', அதி. xxii, பக்கங்கள் 126-128-ல் 1309ஆம் ஆண்டு வந்த தொழில்முறைக் கட்டுப்பாட்டு ஒப்பந்தம் ஒன்றனைக் காணலாம். 1563ஆம் ஆண்டைய பொறிவலர் சட்டத்தின் (Statute of Artificers) மூலமாக இவ் வமைப்பு ஒழுங்குபட்டது. 1601ஆம் ஆண்டு வந்த இரவலர் சட்டத்தில் பிச்சைக்காரர்களுக்கும் தொழிற் பயிற்சி அளிக்கும் திட்டம் இடம்பெற்றது.

33. மூன்றும் ஜார்ஜின் 42ஆம் ஆண்டைய சட்டம்.

34. விக்டோரியா அரசியாரின் 33, 34ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

35. விக்டோரியா அரசியாரின் 52, 53ஆம் ஆட்சியாண்டுச் சட்டம்.

36. (1901) K. B. 322, 726.

37. H. E. Raynes எழுதிய, 'Social Security in England : A History' (1957).

# பொருட்குறிப்பு அகராதி

தொ



ந



நா



நி



நீ



நெ



ப

ர



ரா



ரி



ரு



ரே



ரோ



ல

**லா**



**வி**



**லீ**



**லூ**



**லோ**



**வா**

வி

